15 6

# முரண் தர்க்கப் பொருள் முதல் வாதம் என்றால் என்ன?



NCBH

**இந்நூல் :**

சோவியத் அறிஞர் ஒ. யாக்கோத் அவர்கள் எழுதிய **'முரண் தர்க்கப் பொருள் முதல் வாதம் என்றால் என்ன!'** எனும் இந்நூல், மார்க்ஸீய தத்துவவியலின் அடிப்படைப் பிரச்சினைகள் பற்றி விளக்குகிறது மார்க்ஸியத்தின் பொருளை இது விவரிப்பதோடு, பிற விஞ்ஞானங்களிலிருந்து இது எவ்வாறு வேறுபடுகிறதென்பதையும் விளக்குகிறது. தத்துவார்த்தத்தின் அடிப்படைப் பிரச்சினையையும். பொருள், தன்னுணர்வு ஆகியவற்றின் பொருளையும் இது வெளிப்படுத்துகிறது. முரண்தர்க்கத்தின் அடிப்படை விதிகளையும், அதாவது, எண்ணியலான மாற்றங்கள் பண்பியலான மாற்றங்கள் ஆவதையும், எதிர்நிலைகளின் ஐக்கியமும், போராட்டமும், மறுப்பின் மறுப்பு ஆகியவற்றையும் பற்றிக் கூறுகிறது. முரண் தர்க்க வகைகளுக்கும், அவற்றின் தத்துவத்திற்கும் நடைமுறையின் பங்கிற்கும், உண்மையின் பிரச்சினைகளுக்கும் பெருங்கவனம் அளிக்கப் பட்டுள்ளது.

முரண் தர்க்கப் பொருள் முதல் வாதத்தின் நடைமுறைப் பலனை இதன் ஆசிரியர் வலியுறுத்துவதோடு, அதன் விதிகள், இனங்கள் குறித்தும் விளக்கியுள்ளார். நல்ல ஓட்டத்துடன் எழுதப்பட்டுள்ள இந்நூல், மார்க்சிஸ்ட் தத்துவஇயலைக் கற்க ஆரம்பிப்பவர்கள் அனைவரும் அவசியம் படிக்க வேண்டிய ஒரு நூலாகும்.




**விலை : ரூ. 3-50**

# முரண் தர்க்கப் பொருள் முதல் வாதம் என்றால் என்ன ?

ஓ. யாக்கோத்

நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிமிட்.,
6/30, மவுண்ட் ரோடு,
சென்னை-2.

NCBH

## பதிப்பகத்தார் குறிப்பு

மார்க்ஸீய தத்துவயியலின் அடிப்படைப் பிரச்சினைகள் பற்றிய புத்தகம் இது. மார்க்சீசத்தின் பொருளை இது விவரிப்பதோடு, பிற விஞ்ஞானங்களிலிருந்து இது எவ்வாறு வேறுபடுகிறதென்பதையும் விளக்குகிறது. தத்துவார்த்தத்தின் அடிப்படைப் பிரச்சினையையும், பொருள், தன்னுணர்வு ஆகியவற்றின் பொருளையும் இது வெளிப்படுத்துகிறது. முரண்தர்க்கத்தின் அடிப்படை விதிகளையும், அதாவது. எண்ணியலான மாற்றங்கள் பண்பியலான மாற்றங்கள் ஆவதையும், எதிர்நிலைகளின் ஐக்கியமும், போராட்டமும், மறுப்பின் மறுப்பு ஆகியவற்றையும்பற்றிக் கூறுகிறது. முரண்தர்க்க வகைகளுக்கும், அறிவின் தத்துவத்திற்கும் நடைமுறையின் பங்கிற்கும், உண்மையின் பிரச்சினைகளுக்கும் பெருங் கவனம் அளிக்கப்பட்டுள்ளது.

முரண்தர்க்கப் பொருள் முதல் வாதத்தின் நடைமுறைப் பலனை இதன் ஆசிரியர் வலியுறுத்துவதோடு, அதன் விதிகள், இனங்கள் குறித்தும் விளக்கியுள்ளார். நல்ல ஓட்டத்துடன் எழுதப்பட்டுள்ள இந்நூல், மார்க்சிஸ்ட் தத்துவஇயலைக் கற்க ஆரம்பிப்பவர்கள் அனைவரும் அவசியம் படிக்க வேண்டிய ஒரு நூலாகும்.

# பொருளடக்கம்

—o—

முதல் உரை

# மார்க்ஸீய தத்துவத்தின் உட்பொருள்

தத்துவ ஞானம் என்பது என்ன?

இதைப்பற்றி மக்களுக்குப் பல தரப்பட்ட கருத்துக்கள் உள்ளன "அது சுவைமிக்க, உயிர்த் துடிப்புள்ள, விரிவான விஞ்ஞானம்'' என்று பலர் கூறுவர். ஆனால் வேறு சிலர், "அது இல்லாமலே நான் வாழமுடியும்'' என்று எதிர் மொழி பகர்வர். அது தங்களுக்குத் தேவை இல்லை என்று அவர்கள் நம்புகின்றனர். இந்தக் கருத்து தற்செயலாகத் தோன்றியது அல்ல. தத்துவ ஞானமென்பது மேதாவிகளுக்கும், அடிமை-எஜமானர்களுக்கும், பூர்ஷுவாக்குகளுக்கும் மட்டுமே ஏற்பட்டது என்று பல நூற்றாண்டுகளாக எண்ணப் பட்டு வந்தது. இவ்விதமாக, தத்துவ ஞானம் வாழ்விற்கு அப்பாற்பட்டது, புரிந்து கொள்ளக் கடினமானது, தேவையற்றது என்ற கருத்துத் தோன்றியது. ஆனால் அது இல்லாமல் நாம் வாழ முடியுமா என்று ஒரு கணம் சிந்தித்துப் பார்ப்போம்.

உங்களது அறிவார்ந்த வாழ்க்கை முழுவதிலும் நீங்கள் ஒரு தத்துவ ஞானத்தைக் கடைப்பிடிக்கிறீர்கள், அதனுல் வழி நடத்தப் படுகிறீர்கள் என்று நான் கூறினுல், உங்களில் சிலர் ஒரு வேளை வியப்படைய லாம். ஆனுல் உண்மை அதுவே. ஒரு குறிப்பிட்ட சமூகத்தில் வாழும் ஒரு நபர் நூற்றுக் கணக்கான, ஆயிரக் கணக்கான நிகழ்வுகளைக் காண்கிருர். தனது நாட்டிலும், தொலைவிலுள்ள மற்ற நாடுகளிலும் நடைபெறும் நிகழ்ச்சிகளைப் பற்றி எண்ணுகிருர். பிரபஞ்சத்தின் "இரகசியங்களை"த் தெரிந்து கொள்ள விரும்பும் அவர், இயற்கை நிகழ்வுகளைப் பற்றியும் எண்ணிப் பார்க்காமல் இருக்க முடியாது. கிரகங்களும், நட்சத்திரங்களும், பூமியும், அதன்கண் உள்ளதனைத்தும் எங்கிருந்து வந்தன ? மரணத்திற்குப் பின் மக்களுக்கு என்ன நேரிடுகிறது? மகிழ்ச்சி என்ருல் என்ன? வாழ்க்கையின் உட்பொருள் என்ன? இது போன்ற கேள்விகளைப் பற்றி அவர் சிந்திக்கும்போது, தன்னை அறியாமலேயே அவர் தத்துவ ஞானத்தின் பிரச்சனைகளைப் பற்றியே சிந்திக்கிருர். இது ஒரு அவசியமற்ற ஆர்வமல்ல. இதுபோன்ற பிரச்சனைகள் எப்போதும், எல்லா இடத்திலும் அவர் முன் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. அவர் இந்தக் கேள்விகளுக்கு எந்த விடை அளித்த போதிலும், அதற்கு ஒரு தத்துவஞான உட்பொருள் இருக்கும்.

ஒரு உதாரணத்தைப் பார்ப்போம். சென்ற காலத்தில் வறட்சி ஏற்பட்டபோது, விவசாயிகள் மழைக்காக பிரார்த்தனை செய்தார்கள் என்ருல், அவர்களுக்கு அத்தகைய நிகழ்ச்சியைப் பற்றிய ஒரு திட்டவட்டமான "கருத்து" இருந்தது என்பது பொருள்.

இந்தக் கருத்து மிகவும் தவருனது என்பதை நான் எடுத்துக் காட்ட வேண்டிய அவசியமில்லை. ஆனுல்

வறட்சியின் பயங்கர விளைவுகளைத் தடுக்கும் முறையில் நீர்ப்பாசன வசதிகளைச் செய்து கொண்டார்கள், அல்லது பூமியின் ஈரப் பதனத்தைக் காப்பாற்றக்கூடிய வழியில் நிலத்தை உழுதார்கள் என்ருல், அவர்களுக்கு, மழை, உலகம், உலகத்தில் நடக்கும் நிகழ்ச்சிகள் இவை பற்றிய ஒரு கருத்து இருந்தது என்பது தெளிவாகத் தெரிகிறது அல்லவா? இயற்கை நிகழ்வுகள் தெய்வீக உதவி எதுவுமின்றி இயற்கையாகவே தோன்றுகின்றன என்பதை அவர்கள் உணர்கிருர்கள். இது உலகைப் பற்றிய உண்மையான கருத்தாகும்.

சமூக, அரசியல் வாழ்வின் நிகழ்வுகளைக் கூடப் பல்வேறு வழிகளில் காணமுடியும்.

வாழ்க்கை, முழுமையான உலகம், தனிப்பட்ட நிகழ்வுகள் நிகழ்ச்சிகள், இவை பற்றிய கருத்துக்களின் ஒட்டு மொத்தமான, ஒரு குறிப்பிட்ட உலகக் கண்ணேட்டத்தின் உதவியுடன்தான் நாம், நம்மைச் சுற்றி என்ன நிகழ்கிறது என்பதைப் புரிந்து கொள்ள முடியும் என்ற முடிவுக்கு நாம் வந்து தானுக வேண்டும்.

உலகைப் பற்றிய ஒரு பொதுக் கருத்து நமக்குத் தேவை. அதில் நடைபெறும் நிகழ்ச்சிகளுடன், செயலற்ற முறையிலே தொடர்பு கொள்வதற்காக அல்லாது, அவற்றின் மேல் ஆதிக்கம் செலுத்துவதற்கே இந்தக் கருத்து தேவைப் படுகிறது. அறிவு, ஆழ்ந்த சித்தாந்த நம்பிக்கை இவ்விரண்டின் சேர்க்கையே ஒரு இணைந்த உலகக் கண்ணேட்டத்தைத் தோற்றுவிக்கின்றது. எனவே சித்தாந்த நம்பிக்கை நமது வாழ்க்கையில் மிக முக்கியமானதொரு பங்கு வகிக்கிறது.

ஒரு குறிப்பிட்ட மதக்குழுவில் சேரும்படி இருவர் கேட்டுக் கொள்ளப்படுகிருர்கள் என்று வைத்துக் கொள்வோம். ஒருவர் சம்மதிக்கிருர், மற்றெருவர்

மறுத்து விடுகிறுர். ஒருவர் போதகர்களின் பொய்யான வாதங்களால் ஏமாற்றப்படுகிறுர். ஆனுல் மற்ரெருவரோ அது அனைத்தும் பித்தலாட்டம் என்று உணர்கிறுர். இவ்விதம் அவர்கள் வெவ்வேறு வகையில் நடந்து கொள்கிறுர்கள். ஏனென்ருல் யதார்த்தத்தைப் புரிந்து கொண்டதில், அதாவது உலகைப் பற்றிய அவர்களது கண்ணேட்டத்தில் அவர்கள் இருவரும் வேறுபடுகிறுர்கள். மனிதனே தனது மகிழ்ச்சியை சிருஷ்டி செய்து கொள்கிறுன் என்பதை ஒருவர் உணர்ந்து விட்டார். ஆனுல் மற்றவருக்கோ அத்தகைய உறுதியான நம்பிக்கை இல்லாத காரணத்தால், அவர் ஒரு உயர்ந்த சக்தியிடமிருந்து உதவியை எதிர் நோக்கி நிற்கிறுர். அவர்கள் இருவரும் வாழ்க்கையை வெவ்வேறு வழிகளில் காண்கிறுர்கள். ஒருவர் சரியாகக் காண்கிறுர். மற்றவர் தவருகக் காண்கிறுர். ஏனெனில் அவருக்கு உலகைப் பற்றிய ஒரு உண்மையான கருத்து, அல்லது ஒரு சரியான உலகக் கண்ணேட்டம் இல்லை.

நாம் சில சமயங்களில் நினைப்பதைக் காட்டிலும், அதிகமான சந்தர்ப்பங்களில் நாம் தத்துவ ஞானத்தின் உதவியை நாடுகிறேம் என்று தோன்றுகிறது. இது வேறெந்த முறையிலும் இருக்க முடியாது. "நிகழ்ச்சிகளை அவன் கட்டுப்படுத்தி, அவற்ருல் அவன் கட்டுப்படுத்தப் படாமல் இருக்க வேண்டுமாஞல், ஒரு சோஷலிஸ்டுக்கு, நன்கு சிந்திக்கப் பட்டதும், உறுதியுடன் கடைப்பிடிக்கப் படுவதுமான உலகக் கண்ணேட்டம் தேவை" என்று லெனின் எழுதிஞர். §

பௌதிகம், இரசாயனம், உயிரியல், வானியல், வரலாறு. ஆகியவற்றைப் படிப்பதன் மூலம், உலகைப் பற்

§ லெனின், தொகுப்பு நூல்கள்: பாகம் 8, பக் 316.

றிய விஞ்ஞான ரீதியான கருத்தை அதாவது, ஒரு உண்மையான உலகக் கண்ணேட்டத்தை நாம் பெற வில்லையா? தத்துவ ஞானத்தையும் நாம் ஏன் படிக்க வேண்டும்? இந்தக் கேள்விகள் இந்த சந்தர்ப்பத்தில் கேட்கப் படலாம். இந்த விஞ்ஞானங்களைப் படிப்பதன் மூலம் நாம் திட்டவட்டமான அறிவைப் பெறுகிருேம் என்பது உண்மையே. ஆனுல் அவை ஒரு இணைந்த உல கக் கண்ணேட்டத்தை, அதாவது அக ஒற்றுமையைக் கொண்ட ஒரு கண்ணேட்டத்தை, நமக்குக் கொடுப்ப தில்லை.

அன்ருட வாழ்வில் உலகைப் பற்றிய ஒரு சரியான கருத்துத் தேவை. மார்க்ஸிஸ-லெனினிஸ உலகக் கண் ணேட்டம் அந்தக் கருத்தை நமக்குக் கொடுக்கிறது. அக்கண்ணேட்டத்தின் அடிப்படையாக இருப்பது மார்க்ஸீயத் தத்துவஞானம். அப்படியானுல் தத்துவ ஞானம் என்பது என்ன?

தத்துவஞானத்தின் ஆங்கிலப் பெயராகிய "பிலாஸபி" என்ற சொல் "பிலீயின்", "ஸோபியா" என்ற இரண்டு கிரேக்கச் சொற்களிலிருந்து தோன்றி யது. "பிலியீன்" என்ருல் நேசிப்பது என்றும், "ஸோபியா" என்ருல் ஞானம், அறிவு என்றும் பொருள். (எனவே "பிலாஸபி" என்ருல் அறிவை நேசிப்பது என்று கொள்ளலாம்—மொ.ர்.) ஒவ்வொரு விஞ்ஞான மும் அறிவைக் கொடுக்கிறது என்ற வழியில் பார்க்கும் போது, அவை ஒவ்வொன்றும் ஞானமே என்று நீங்கள் கூறலாம். அப்படியானுல் ஒவ்வொரு விஞ்ஞானமும் தத்துவஞானமே என்று கூறலாம். இது உண்மை தானு?

ஒவ்வொரு விஞ்ஞானமும் அறிவைக் கொடுக்கிறது என்பது உண்மையே. ஆனுல் இந்த அறிவின் தன்மை

வேறுபடுகிறது. ஒவ்வொரு விஞ்ஞானமும் யதார்த்தத்தின் ஒரு குறிப்பிட்ட துறையைப் பற்றிய அறிவையே நமக்குக் கொடுக்கின்றது. உதாரணமாக வானியல், அண்டப் பொருள்களைப் பற்றிய அறிவையும் உயிரியல் தாவரங்கள், பிராணிகள், மனிதன், இவர்களைப் பற்றிய அறிவையும், வரலாறு, சமூக நிகழ்ச்சிகளைப் பற்றிய அறிவையும் கொடுக்கின்றன. இயற்கை முழுவதையும் பற்றிய அறிவை, உலகம் முழுவதையும் பற்றிய அறிவை, இந்த விஞ்ஞானங்களால் நமக்குக் கொடுக்க முடியாது. ஆனால் அத்தகைய அறிவு இன்றியமையாதது ஒன்றாகும்.

உதாரணமாக, உலகைப் பற்றிய பல பொதுப் பிரச்சனைகள் நம் முன்னே அடிக்கடி தோன்றுகின்றன. அது "சிருஷ்டிக்கப்பட்டதா" அல்லது அனாதி காலமாக இருந்து வந்துள்ளதா? இயற்கை, இயற்கையாகவே, அதாவது அறிவிற்கு அப்பாற்பட்ட, தெய்வீக சக்திகளின் குறுக்கீடு இல்லாமல், வளர்ச்சி அடைய முடியுமா? தனது ஆராய்ச்சித்துறையில் தெய்வீக சக்தி எதுவும் இல்லை என்பது பௌதீகவியலாளருக்குத் தெரியும். ஆனால் இந்த அறிவு அவரது சொந்த ஆராய்ச்சித் துறைக்கு மட்டுமே பொருந்தும். ஆனால் நமக்குத் தேவையானதோ, எத்தகைய விதிவிலக்குமின்றி எல்லா இயற்கை நிகழ்வுகளையும் தழுவிய ஒரு அறிவு. இதைக் குறிப்பிட்ட விஞ்ஞானங்கள் என்று கூறப்படுபவை, நமக்குக் கொடுக்க முடியாது. அத்தகைய அறிவு தத்துவ ஞானத்தால் கொடுக்கப்படுகிறது. அது மட்டுமே, இயற்கை, சமூகம் இவற்றின் வளர்ச்சி பற்றிய பொதுப் பிரச்சனைகளை எழுப்பி அவற்றிற்கு விடை காண முயற்சிக்கிறது. தத்துவ ஞானத்தின் உட்பொருளை இப்பொழுது வரையறுக்கலாம்: அது ஆரா

யும் பிரச்சனைகள் அனைத்தும் அதனுள் அடங்கும், என்பதே அந்த வரையறை.

எனவே, யதார்த்தத்தின் குறிப்பிட்ட துறைகளைப் பற்றிக் கூறும், குறிப்பிட்ட விஞ்ஞானங்களின் உட்பொருளிலிருந்து, தத்துவ ஞானத்தின் உட்பொருள் வேறுபடுகிறது, இந்த வேறுபாடு என்ன?

பௌதீகம், கணிதம், உயிரியல் முதலிய விஞ்ஞானங்கள், இயற்கை நிகழ்வுகளது ஒருபகுதியின் வளர்ச்சியைக் கட்டுப்படுத்தும் குறிப்பிட்ட விதிகளை ஆராய்கின்றன ஆனால் தத்துவ ஞானமோ, ஏதாவது ஒரு பகுதியை மட்டுமல்லாது, இயற்கை நிகழ்வுகள், சமூகம் சிந்தனை இவையனைத்தையும் கட்டுப்படுத்தும் மிகப் பொதுவான விதிகளை ஆராய்கிறது. எனவே, **"இயற்கை சமூகம், சிந்தனை இவற்றுடைய வளர்ச்சியின் மிகப் பொதுவான விதிகளைப் பற்றிய விஞ்ஞானம்"** என்று தத்துவஞானத்தைக் கூறலாம். இதனால் அது மனிதர்களுக்கு ஒரு திட்டவட்டமான உலகக் கண்ணோட்டத்தை அவர்களைச் சுற்றிய உலகைப்பற்றிய ஒரு கருத்தைக் கொடுக்கிறது. ஆனால் வெவ்வேறு மக்களிடையே தத்துவ ஞானம் இந்த அளவிற்கு வேறுபடுவானேன்?

### தத்துவஞானத்தின் ஒருதலைச் சார்பு

"நான் விரும்பியதை எல்லாம் செய்ய முடியுமானால் நான் என்ன செய்வேன்" — என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதும்படி மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த பள்ளிக் குழந்தைகள் கேட்டுக் கொள்ளப் பட்டார்கள். அவர்கள் எழுதிய விடைகள் என்ன? "உலகில் உள்ள பள்ளிக்கூடங்களை எல்லாம் நான் வெடிவைத்துத் தகர்ப்பேன்", என்று ஒரு குழந்தை எழுதியது. "நான் எல்லா இடங்களிலும் வெடி குண்டுகளை வீசுவேன்; வீட்டிற்குத் தீ வைத்து

விட்டு ஆற்றிலே குதித்து விடுவேன்'', என்று இன்னொரு குழந்தை எழுதியது. சோவியத் பள்ளிக் குழந்தைகள் அதே கேள்விக்கு எழுதிய விடைகள் இவைதான். ''முதலாளிகளாலும், தொழிற்சாலை முதலாளிகளாலும் அடிமைப் படுத்தப்பட்ட நீக்ரோக்களை நான் விடுதலை செய்வேன்,'' என்று ஒரு குழந்தை எழுதியது. ''அணு குண்டுகளையும், ஹைட்ரஜன் குண்டுகளையும் தடை செய்வது தான் நான் செய்யும் முதல் காரியமாக இருக்கும்,'' என்று மற்றொரு குழந்தை எழுதியது.

குழந்தைகளின் விடைகள் இந்த அளவிற்கு வேறுபடுவானேன்? மக்களிடத்தில் வெறுப்புணர்ச்சியுடன் வளர்க்கப்பட்டு, பூர்ஷுவா உலகக் கண்ணோட்டத்தில் ஊறிய குழந்தைகளின் மத்தியிலிருந்து வந்தவர் முன்னவர். தங்கள் தாய்நாட்டை நேசிக்கும்படியும், உலகெங்கிலும் சமாதானத்தை நிலைநாட்டும்படியும் பள்ளிகளில் போதிக்கப்பட்ட குழந்தைகளின் மத்தியிலிருந்து வந்தவர் இரண்டாமவர். கம்யூனிஸ உலகக் கண்ணோட்ட உணர்ச்சியுடன் தங்கள் குழந்தைகளை சோவியத் பள்ளிகள் வளர்க்கின்றன.

வாழ்க்கையின் பொருள் என்ன, மகிழ்ச்சி என்பது என்ன, என்பன போன்ற கேள்விகளுக்கு சோஷலிஸ சமூகத்திலும், பூர்ஷுவா சமூகத்திலும் வெவ்வேறு விடைகள் கிடைக்கின்றன. எதையும் பணத்தால் வாங்கி, பணத்திற்கே விற்கும், பூர்ஷுவா சமூகத்தில் மகிழ்ச்சி என்பது முதன்மையாகச் செல்வமேயாகும் அதுவே வாழ்க்கையின் பொருள் என்று பலர் கருதுகின்றனர். சிறு மனம் படைத்தவர்களின் பண்பற்ற தத்துவ ஞானத்தின் வேர்கள் அதில்தான் ஓடுகின்றன. ஆனால் சோஷலிஸ சமூகத்தில் வாழும் மக்கள் இந்தப் பண்பற்ற தத்துவ ஞானத்தை மறுதலித்து விட்டனர்.

தாங்கள் யாருடன் உழைக்கிறார்களோ அந்தத் தொழிலாளர்களால், எந்த சமூகத்திற்காக வாழ்கிறார்களோ அந்த சமூகத்தால் மதிக்கப்படுவதிலேயே அவர்களது மகிழ்ச்சி அடங்கியுள்ளது. தங்கள் கூட்டு நிறுவனத்திற்குத், தங்கள் நாட்டிற்கு, ஒரு புதிய மகிழ்ச்சிகரமான வாழ்வைக் கட்டுவதற்காக உழைத்துக் கொண்டிருக்கும் தங்கள் மக்களுக்கு, உபயோகமானவர்களாக இருக்கிறோம் என்ற உணர்வே அவர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சி அளிக்கிறது. "எவனொருவன் மிக அதிகமான மக்களுக்கு மகிழ்ச்சியை அளித்திருக்கிறானோ, அவனையே, மிகவும் மகிழ்ச்சி உடையவன் என்று அனுபவம் புகழ்கிறது," என்று தனது ஆரம்பக் காலக் கட்டுரை ஒன்றில் மார்க்ஸ் எழுதினார்.

இவ்விதமாகப் பிரச்சினைக்கு இரண்டு அணுகல் முறைகள் இருப்பதை, பூர்ஷ்வா கண்ணோட்டம், பாட்டாளி வர்க்கக் கண்ணோட்டம் என்ற இரு உலகக் கண்ணோட்டங்கள் இருப்பதை நாம் மீண்டும் காண்கிறோம்.

சமூகம் பகைக்கும் வர்க்கங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தால், எந்தப் பொதுவானதொரு உலகக் கண்ணோட்டமும் இருக்க முடியாது. ஒரு வர்க்கத்திற்கு ஒரு தத்துவ ஞானமும், மற்றொன்றிற்கு வேறொரு தத்துவ ஞானமும் உள்ளன. இது புரிந்து கொள்ளக்கூடியதே. பாட்டாளிகள், உழைக்கும் மக்கள் இவர்களது வாழ்க்கையும், அந்தஸ்தும், பூர்ஷ்வாக்கள், சுரண்டுபவர்கள் இவர்களது வாழ்க்கையிலிருந்தும், அந்தஸ்திலிருந்தும் வேறுபடுகின்றன. உலகில் நடைபெறும் நிகழ்ச்சிகளுக்கு அவர்கள் வெவ்வேறு வழிகளில் மறுவினை புரிகிறார்கள். ஒவ்வொரு வர்க்கமும் தனக்கே உரித்தான வழியில் அவற்றைப் புரிந்து கொள்கின்றது. எனவே அவர்கள் தங்கள் உலகக் கண்ணோட்டத்தில், அல்லது

தத்துவ ஞானத்தில் வேறுபடுகிருர்கள். பாட்டாளி வர்க்கத்தின் தத்துவ ஞானம், பூர்ஷுவா வர்க்கத்தின் தத்துவ ஞானத்திலிருந்து வேறுபட்டது. நடுநிலைத் தத்துவ ஞானம் என்று, அதாவது ஒரு குறிப்பிட்ட வர்க்கத்திற்குத் தொண்டு செய்யாத தத்துவ ஞானம் என்று, ஒன்றுமே இல்லை.

லெனின் போதித்தது போல, தத்துவஞானம் எப்பொழுதும் ஒருதலைச் சார்புடையதுதான். அதாவது அது ஒருதலைச் சார்பான, வர்க்க நலன்களைப் பாதுகாக்கிறது. எனவே ஒவ்வொரு வரலாற்றுக் காலத்திலும் தத்துவஞானத்தில் போட்டியிடும் இரண்டு கட்சிகள் இருப்பதைக் காண்கிறோம். தத்துவ ஞானத்தில், பொருள் முதல் வாதமும், கருத்து முதல் வாதமும் அத்தகைய இரண்டு கட்சிகளாகும்.

இந்த இரு கருத்தோட்டங்களின்
பொருள் முதல் வாதமும் பொருள் என்ன? உலகிலுள்ள
கருத்து முதல்வாதமும் பொருள்களையும், நிகழ்வுகளையும் பாருங்கள். அவற்றில் சிலவற்றை, உதாரணமாகக் கல், மரம், உயிர்ப்பொருள், தண்ணீர் முதலியவற்றை, நாம் கைகளால் தொட முடியும், கண்ணால் பார்க்க முடியும், நிறுக்கவும், அளவெடுக்கவும் முடியும். அவை மனிதனது தன்னறிவுக்கு வெளியே, அதனின்றும் சுயேச்சையாக இருக்கின்றன. பார்வை, கேள்வி, ஸ்பரிசம், மோப்பம், சுவை, ஆகிய புலன் உறுப்புக்களால் நாம் அவற்றை உணர்கிறோம். ஆனால் மற்றொரு வகையான நிகழ்வுகளும் உண்டு. உதாரணமாக நமது எண்ணங்கள், விருப்பங்கள், இவற்றை நாம் அளவிடவோ, நிறுக்கவோ, பார்க்கவோ, கேட்கவோ முடியாது. அவை மனிதனது தன்னறிவினுள் இருக்கின்றன.

நமது தன்னறிவிற்குள் அல்லாது, வெளியே இருக்கும் பொருள்களும், நிகழ்வுகளும், பருப்பொருள்களாகும். அவை மனிதர்களைச் சார்ந்து இல்லை. அவை புறவயமாக, அதாவது யதார்த்தத்திலே இருக்கின்றன. மனிதன் இல்லாவிட்டாலுங்கூட அவை இருக்கும். ஆனால் மற்றொரு தொகுதி நிகழ்வுகள் தன்னறிவைச் சேர்ந்தவை. கருத்து ரீதியான நிகழ்வுகள், எண்ணங்கள், உணர்ச்சிகள், இச்சைகள், விருப்பாற்றல்கள், முதலியவை அவற்றுள் அடங்கும். அவை மனிதனுக்கு வெளியே, அவனிடமிருந்து பிரிந்து இருப்பதில்லை. நிகழ்வுகளின் ஒரு தொகுதி, முழுமையாகச் சேர்ந்து இயற்கையாகிறது; பொருளாகிறது. மற்றொரு தொகுதி, தன்னறிவு அல்லது மனமாகிறது.

இயற்கை, பொருள் — இது உரு என்றும் அழைக்கப்படுகிறது. பருப்பொருள் நிகழ்வுகளுக்கும், உள் நிகழ்வுகளுக்குமிடையே உள்ள தொடர்பு என்ன? இந்தக் கேள்வி தொடர்ந்து நம் கண் முன்னே எழுகிறது. உலகின் எல்லா நிகழ்வுகளையும் பொருத்து அதைப் பின்வரும் முறையிலே கூறலாம்: எது முதன்மையானது? அதாவது முதலில் வருவது இயற்கை, பொருளா, அல்லது எண்ணம், பகுத்தறிவு, தன்னறிவா? சில சமயங்களில் இந்தக் கேள்வி மற்றொரு முறையிலும் கேட்கப்படுகிறது: மனம், தன்னறிவு, இவை இயற்கை, பொருளைத் தோற்றுவிக்கிறதா, அல்லது இயற்கை, பொருள், உரு இவை மனம், தன்னறிவைத் தோற்றுவிக்கிறதா? இக் கேள்வி தத்துவஞானத்தின் அடிப்படைக் கேள்வி, என்று கூறப்படுகிறது. வெவ்வேறு தத்துவ ஞானிகள், இந்தக் கேள்விக்கு வெவ்வேறு வகைகளில் விடை அளிக்கிறார்கள்.

பொருளே முதன்மையானது, தொடக்கமானது; அது மனதைத், தன்னறிவைத், தோற்றுவிக்கிறது என்று அவர்களில் சிலர் கூறுகிறார்கள். அத்தகைய தத்துவஞானிகள் பொருள் முதல் வாதிகள் என்று அழைக்கப்படுகிறார்கள். ஏனெனில், இருப்பவை அனைத்திற்கும் அடிப்படையாக இருப்பது பொருளே என்ற நிலையிலிருந்து அவர்கள் தொடங்குகிறார்கள். மற்றவர்கள், தன்னறிவு, மனமே முதன்மையானது. பொருள் அதிலிருந்து பெறப்பட்ட இரண்டாவதானது, என்று கூறுகிறார்கள். அவர்கள் கருத்துப்படி தன்னறிவு, பொருளுக்கு முன் தோன்றுகிறது, இயற்கை ஏதோ ஒரு ஆன்மீக அடிப்படையில் தோன்றியது. அத்தகைய தத்துவ ஞானிகள் கருத்து முதல் வாதிகள் என்று அழைக்கப்படுகின்றனர். உள்ளவை யனைத்திற்கும் அடிப்படையாக இருப்பது கருத்து, அதாவது எண்ணம், ஆன்மா என்று அவர்கள் கூறுகிறார்கள். இவ்விதமாகத் தத்துவ ஞானிகள், பொருள் முதல் வாதிகள், கருத்து முதல் வாதிகள் என்று இரண்டு முகாம்களாகப் பிரிந்து நிற்கின்றனர், தத்துவ ஞானத்தின் வரலாறு முழுவதிலும் அவர்கள் ஒருவரை ஒருவர் எதிர்த்து வந்துள்ளனர்.

எனவே, அடிப்படைப் பிரச்சனையை எப்படி அணுகுவது என்பதைப் பொருத்து, தத்துவ ஞானிகள் இரண்டு குழுக்களாகப் பிரிக்கப்பட்டுள்ளனர் ஆனால் உலகை ஆராய்வதும், புரிந்து கொள்வதும், ஒரு குறிப்பிட்ட தத்துவ ஞானி, அறிவைப் பெறுவதற்கு எந்த முறையைப் பின்பற்றுகிறார் என்பதையும் சார்ந்துள்ளது.

**யதார்த்தத்தை ஆராயும் முறை என்ன?**

யதார்த்த நிகழ்ச்சிகளை ஆராய்வதற்குக் கைக்கொள்ளப்படும் முறை மிக முக்கியமானதொரு பங்கு வகிக்கிறது. முறை என்ப

தன் ஆங்கிலப் பெயராகிய "மெதேட்" (Method) இதைக் காட்டுகிறது, இச்சொல் "மெதோடாஸ்" எனும் கிரேக்கச் சொல்லிலிருந்து தோன்றியது. இந்த கிரேக்கச் சொல்லின் பொருள் பாதை, அல்லது திசை என்பதாகும். நாம் சரியான பாதையில் சென்ருல் நமது குறிக்கோளை அடைய முடியும். இல்லையெனில் வழி தவறிப் போய், நாம் போக வேண்டிய இடத்திற்குப் போய் சேர மாட்டோம்.

இரசாயனம், பௌதிகம், வானியல் முதலிய விஞ்ஞானங்களுக்குத் தனிப்பட்ட ஆய்வு முறைகள் உண்டு. ஆனுல், அறிவின் குறிப்பிட்ட துறைகளின் தனிப்பட்ட நிகழ்வுகளை மட்டும் அன்றி, நம்மைச் சுற்றியுள்ள உலகின் எல்லா நிகழ்வுகளையும் ஆராய்வதற்குத் தகுந்த முறை எது என்பதைத் தெரிந்து கொள்வது அவசியமாகும். இது உலகக் கண்ணோட்டத்தைப் பற்றிய பிரச்னையாகும். "புதிய பயிர் சுழற்சி முறைகளைத் தேடுவானேன்? நம் முதாதையர் செய்ததையே நாமும் செய்வோம்" என்று ஒருவர் கூறுவதாக வைத்துக் கொள்ளுங்கள். இது தவருன அணுகல் முறை என்று மக்கள் நிச்சயமாகக் கூறுவார்கள். அந்த நாளிலிருந்து நிலமும், அதன் அமைப்பும் மாறியுள்ளன. நிலத்தை உழுவதற்குப் பலவகையான இயந்திரங்கள் புனையப்பட்டுள்ளன. எனவே மத்திய காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட பயிர் சுழற்சி முறை, இன்று நமக்குத் திருப்தி அளிக்காது. எனவே கழனிகளின் உற்பத்தித் திறனை உயர்த்தும் புதிய வழிகளை நாம் தொடர்ந்து கண்டு பிடிக்க வேண்டும். உலகைப் பற்றிய ஒவ்வொரு கருத்தின் அடிப்படையாகவும், அக்கருத்தின் வழி, இயற்கை நிகழ்ச்சிகளை அது அணுகும் முறை, உள்ளது. உலகை, மாறுதலற்றதாக, இறுக்கமடைந்ததாகக்

காண்பது முதல் முறை. இது அப்பாலைt முறை என்று கூறப்படுகிறது. மற்றொரு முறை பொருள்களும், நிகழ்ச்சிகளும் வளர்கின்றன; மாறுதலடைகின்றன என்று கருதுகிறது. இது இயங்கு இயல் முறை அல்லது முரண்தருக்கtt முறை என்று அழைக்கப்படுகிறது.

இவ்விரண்டு முறைகளில் எது விஞ்ஞான ரீதியானது? சூரியனும், மலைகளும், ஆறுகளும், கடல்களும், பல கோடிக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் எப்படியிருந்தனவோ, அப்படியே இன்றும் இருக்கின்றன என்று அப்பாலை முறை கருதிக் கொள்கிறது.

---

† அப்பாலை முறை என்பது ஆங்கிலத்தில் "மெட்டா பிசிக்ஸ்" (Meta Physics) என்று சொல்லப்படுகிறது. இது மெட்டா டா-பிஸிகா (Metata physika) என்ற கிரேக்கச் சொற்களிலிருந்து தோன்றியது. "பௌதீகத்திற்கு அப்பால்" என்பதே இதன் பொருள். அரிஸ்டாடில், தனது தத்துவஞான நூலில் பௌதீகத்திற்குப் பின், யூக எண்ணங்களைப் பற்றிக் கூறும் இந்தப் பகுதியை எழுதியதால் அதற்கு இப்பெயரைக் கொடுத்தார். பின்னர், உலகை அறிவதில் முரண்தருக்க முறைக்கு எதிரான ஒரு முறையைக் குறிக்க இந்தத் துறைச்சொல் உபயோகிக்கப்பட்டது. (இதுவே மறைபொருள் வாதமென்றும், அடிப்படைத் தத்துவ நிலை இயல் என்றும் தமிழில் கூறப்படுகிறது. மொர்).

†† முரண் தருக்க முறை (Dialectics) இந்த ஆங்கிலத் துறைச் சொல் "டையலேகோ" (Dialego) என்ற கிரேக்கச் சொல்லிலிருந்து தோன்றியது. "உரையாடல் அல்லது விவாதித்தல்" என்பதே இச்சொல்லின் பொருள். எதிராளியின் வாதங்களிலுள்ள முரண்பாடுகளைக் கண்டுபிடித்து, அவற்றைச் சமாளித்து, உண்மையைப் பெறுதல், என்ற கருத்திலேயே, இந்தச் சொல் ஆதிகாலத்தில் பயன்படுத்தப்பட்டது. பிற்காலத்தில், யதார்த்தத்தைப் புரிந்துகொள்வதற்கான ஒரு முறைக்கு இந்தப் பெயர் சூட்டப்பட்டது.

அது நிகழ்ச்சிகளைத் தனிமைப் படுத்தி ஒன்றோ டொன்று தொடர்பற்றதாகக் காண்கிறது. அப்பாலை முறையின் சாரம் இதுதான். இந்த முறையைப் பின் பற்றிய, சென்ற காலத்தியப் பொருள் முதல் வாதம் "அப்பாலைப் பொருள் முதல் வாதம்" என்று அழைக்கப் பட்டது.

19-வது நூற்றாண்டிலே ஏற்பட்ட விஞ்ஞான வளர்ச்சி, உலகைப்பற்றிய இந்தக் கருத்துக்கு மேன் மேலும் முரண்பட்டு வந்தது. அப்பாலை முறைக் கோட்டையில் ஏற்பட்ட முதல் பிளவிற்குக் காரணம், ஜெர்மன் தத்துவ ஞானி கான்ட் (Kant) பிரெஞ்சு வானியலாளர் லாப்லாஸ் (Laplace) இவர்களின் "பிர பஞ்சக் கோட்பாடே" ஆகும். பொருளில் ஏற்பட்ட ஒரு நீண்ட வளர்ச்சிச் செயலின் விளைவாகவே பூமியும், சூரிய மண்டலமும் தோன்றின என்று இவர்கள் எடுத் துக் காட்டினார்கள். பின்னர், புவி இயலும், பூமியின் பரிணாமக் கருத்தை உறுதிப்படுத்தியது. வரலாற்று ரீதியான வளர்ச்சியின் விளைவாகத் தோன்றிய உலகம் நன்கு இணைந்த ஒரு முழுமை என்னுங் கருத்தை மூன்று பெருங் கண்டுபிடிப்புக்கள், முன்னணிக்குக் கொண்டு வந்தன. இன்று உலகில் உள்ள பிராணிகள் தாவரங் கள், இவற்றின் சிறப்பினங்கள் இன்று இருப்பது போலவே என்றும் இருந்ததில்லை என்று, ஆங்கில இயற்கையியலாளர் சார்லஸ் டார்வின் எடுத்துக் காட்டி னார். ஒரு நீண்ட பரிணாம நிகழ்ச்சியின் விளைவாக அவை தோன்றின. இரண்டாவதாகத் தாவரங்கள் பிராணிகள், இவற்றின் உடல், சிக்கலான பல உயிர் கிரியைகள் நடைபெறும் சிறிய அலகுகளால்-செல்களால்—ஆனது என்று விஞ்ஞானிகள் கண்டு பிடித்தனர். இந்த வழியில், உயிரினங்களின் பரிணா

மத்தைப் புரிந்து கொள்வதற்கு ஒரு அடிப்படை அமைக்கப் பட்டது. மூன்றாவதாக சக்தியின் அழி வின்மையும் மாற்றமும், பற்றிய விதியை விஞ்ஞானி கள் கண்டுபிடித்தனர். ஏதுமற்றதிலிருந்து இயக்கம் தோன்றமுடியாது என்றும் அதுபோலவே இயக்கம் ஏதுமற்றதாக முடியாது என்றும் நிலைநாட்டப்பட்டது. இயக்கத்தின் வகைகள் ஒன்றிலிருந்து மற்றொன்றாக மாறுகின்றன. இவ்விதமாக இயக்கை நிலையிலே இருக் கும் பொருள் நிரந்தரமானது. அழிக்கப்பட முடியாதது என்று எடுத்துக் காட்டப்பட்டது. வளர்ச்சிக் கோட் பாட்டிற்கு இது ஒரு மாபெரும் வெற்றியாகும்.

இவ்விதமாக, கார்ல் மார்க்ஸ் (1818—1883) பிரெ டெரிக் எங்கெல்ஸ் (1820—1895) ஆகிய இருவரும் தோற்றுவித்த உலகைப்பற்றிய முரண்தருக்கப் பொருள் முதல் வாதக் கருத்தின் வெற்றிக்குத் தேவையான முன் நிலைகளை, விஞ்ஞான வளர்ச்சி, இயற்கை விஞ்ஞானத் துறையில் ஏற்படுத்தியது.

உலகைப் பற்றி முரண்தருக்கக் கருத்து வெற்றி மேல் வெற்றி அடைந்தது. வளர்ச்சிக் கொள்கையை மறுதலிப்பது, அப்பாலைத் தத்துவத்திற்கு மேலும் மேலும் கடினமாகியது. எனவே, 19-வது நூற்றாண் டின் அப்பாலைத் தத்துவத்தில் வளர்ச்சி மேலுக்கேனும் "ஏற்றுக் கொள்ளப்பட்டிருப்பதைக்" காண்கிறோம். எனினும், அடிப்படையில் வளர்ச்சிக் கொள்கையை அப்பாலை, எப்பொழுதும் மறுதலிக்கிறது. புதியது எதை யும் தோற்றுவிக்காது, திரும்பத் திரும்ப நடைபெறும் ஒரு நிகழ்ச்சியாகவே, வளர்ச்சியை அது காண்கிறது. வளர்ச்சியின் மூலங்கள் வளர்ச்சியிலேயே உள்ளார்ந் துள்ளன என்பதை அது மறுக்கிறது. வளரும் பொருள் கள் அல்லது நிகழ்வுகளுக்கு வெளியே - கடவுள்,

ஆன்மா, கருத்து இவற்றில் - அந்த மூலங்களைக் காண் கிறது. எனவே முரண் தர்க்கமும், அப்பாலையும் ஒன்றுக் கொன்று ஒவ்வாதவை.

முரண் தர்க்கம், வளர்ச்சியை, உண்மையான மாற் றங்களை விளைவிக்கும் நிகழ்ச்சி என்று கருதுகிறது. அதில் பழையன கழிகின்றன, புதியன புகுகின்றன. நிகழ்ச்சிகளின் போக்கு சகடம் போலச் சுற்றிச் சுற்றி வருவதில்லை. நிகழ்வுகளில், புதிய பண்புகள் தோன்று கின்றன.

தற்செயலான வஸ்துக்கள், நிகழ்ச்சிகள் இவற்றின் தொகுப்பு உலகம் என்று அப்பாலை முறை கருதுகிறது. ஆனால் முரண்தர்க்கம் உலகை இணைந்த ஒரு முழுமை யாகக் காண்கிறது. இந்த இணைப்புக்களை ஆராய்ந்து, அவற்றில் அவசியமானவற்றை, அவசியமற்றவையி லிருந்தும், அடிப்படையானவற்றை, தற்செயலானவற் றிலிருந்தும் பிரிக்கிறது.

பொருள் முதல்வாத முரண்தர்க்கத்தின் வகைகளை யும், விதிகளையும் பற்றிக் கூறும் சொற்பொழிவுகளில் இதைப் பற்றி விரிவாகக் காண்போம். நிகழ்வுகள் தனி மைப்பட்டு இருப்பதில்லை, அவை எப்போதும் பரஸ்பரத் தொடர்புடையவை, பரஸ்பரக்கிரியைப் புரிபவை என் பதை நீங்கள் அங்கு காண்பீர்கள். அப்பாலைவாதிகளைப் போல் நாமும், நிகழ்வுகள் ஒன்றோடொன்று தொடர்பற் றவை என்று கருதுவோமானால், உலகைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியாது.

முரண்நிலை தர்க்கம் என்பது இயற்கை, மனித சமூகம் சிந்தனை இவற்றின் இயக்கம் வளர்ச்சி, பற்றிய மிகப் பொது வான விதிகளின் விஞ்ஞானம் என்று—உலகின் நிகழ்வுகளின் சர்வவியாபகத் தொடர்புகளின் விஞ்ஞானம் என்று, மேலே கூறிய விஷயங்களிலிருந்து நமக்குத் தெரிகிறது. இங்

தக் காரணத்தினுல், அது அப்பாலையிலிருந்து முற்றிலும் மாறுபடுகிறது.

பொருள்முதல்வாதத்திற்கும் கருத்து முதல்வாதத்திற்கும் உள்ள போராட்டம் தவிர்க்கமுடியாததாக இருப்பது ஏன்?

பொருள் முதல் வாதத்திற்கும், கருத்து முதல் வாதத்திற்கும் இடையேயுள்ள போராட்டம், அவை அடிப்படைப் பிரச்சனைகளை அணுகும் முறையிலேயே வெளிப்படுகிறது. மதத்தைப் பற்றிய அவற்றின் கருத்து என்ன? தத்துவ ஞானத்தின் அடிப்படைக் கேள்வியைப் பின்வருமாறு கூறலாம் என்று எங்கெல்ஸ் சொன்னுர். கடவுள் இந்த உலகை சிருஷ்டித்தாரா, அல்லது அது நிரந்தரமாக இருந்து வந்துள்ளதா? இந்தக் கேள்விக்குப் பொருள் முதல் வாதிகளும் கருத்து முதல் வாதிகளும் முற்றிலும் மாருன விடைகளைக் கொடுக்கிருர்கள்.

கருத்தால், எண்ணத்தால், சிருஷ்டி செய்யப்பட்டு, உலகம் தோன்றியது என்று கருத்து முதல் வாதிகள் கூறுகின்றனர். கடவுளால் சிருஷ்டிக்கப்படும் வரையில் இந்த உலகம் இருந்ததில்லை என்பது மதத்தின் கருத்து. இந்த இரண்டு கருத்துக்களும் அடிப்படையில் ஒன்று தான் என்பது தெளிவு. கருத்து முதல் வாதம் 'கடவுள்' என்ற சொல்லுக்குப் பதிலாகக் 'கருத்து' என்ற சொல்லை உபயோகித்துள்ளது. கருத்து முதல் வாதமும், மதமும் ஒன்றல்ல என்பது உண்மையே. அவற்றிற்கிடையே சில வேறுபாடுகள் உள்ளன. அவற்றிற்குப் பொதுவாக இருப்பது என்னவென்ருல், இரண்டும், ஒரு கருத்தை, ஒரு ஆன்மீகதத்துவத்தை உள்ளதனைத்திற்கும் அடிப்படையாக வைக்கின்றன. எனவே அவை

நெருங்கிய தொடர்புடையன. ''கருத்து முதல் வாதம், மத போதனு வாதமே'' என்று லெனின்எழுதினர். மதத்தின் அடிப்படையாக, மதத்தை நியாயப் படுத்துவதற்காகக் கருத்து முதல் வாதம் தோன்றுகிறது.

ஆனுல் பொருள் முதல் வாதம் பொருள், இயற்கை, அனுதி காலமாய் இருந்து வந்துள்ளது என்று போதிக்கிறது. அதற்கு சிருஷ்டி கர்த்தா என்று யாரும் கிடையாது. உலகின் வளர்ச்சி பற்றிய அத்தகைய கோட்பாட்டில் உயர்ந்த ஒரு தெய்வீக சக்திக்கு, கடவுளுக்கு—இடமில்லே. கடவுள் ஒருவர் இருக்க வேண்டிய தேவையுமில்லே. அவரது குறுக்கீடு இல்லாமலேயே உலக வளர்ச்சி நடைபெற்றுள்ளது. எந்தக் கடவுளேயும் மறுதலிப்பது பொருள் முதல் வாதத்தில் உள்ளார்ந்துள்ளது. எனவே அது நாத்திகத்துடன் தவிர்க்க முடியாதபடி இணேந்துள்ளது. ஒரு பொருள் முதல் வாதி, ஒரு நாத்திகன் தான். மக்கள் ஒரு சரியான பொருள் முதல் வாத உலகக் கண்ணேட்டத்தைப் பெறுவதை மத குரோதங்கள் தடைசெய்கின்றன.

மற்ற எல்லா முக்கியமான பிரச்சனேகளேயுங்கூடப் பொருள் முதல் வாதமும், கருத்து முதல் வாதமும் மாறுபட்ட முறைகளிலேயே அணுகுகின்றன. சுரண்டலின் அடிப்படையில் அமைந்த ஒரு சமூகம் பகைமையுள்ள வர்க்கங்களேக் கொண்டது என்பது நமக்குத் தெரியும். இதைப்பற்றி பொருள் முதல் வாதிகள் கருத்து முதல் வாதிகள், இவர்களின் மனப்பான்மை என்ன? மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்போது. ''உலகப் பகட்டுக்கு'' அப்பாற்பட்ட, கட்சிகள் வர்க்கங்கள் இவற்றின் போராட்டத்திற்கு அப்பாற்பட்ட, தத்துவஞான நூல்களே கருத்து முதல் வாதிகள எழுதுவது போல காணப்படுகிறது. ஆனுல் இது உண்மையல்ல. உதாரணமாக

தற்கால அமெரிக்கத் தத்துவார்த்தி வில்லியம் வோக்ட் என்பவரைப் பாருங்கள். உலகத்தில் தற்போது பல கோடி "மிகையான" மக்கள் இருக்கிறுர்கள் என்று அவர் கூறுகிறுர். எனவே அவர்களைப் பைசல் செய்வ தற்கு ஒரு அணுகுண்டு யுத்தம் தேவை எனக் கூறி குருதி வெள்ளம் பெருக்கெடுத்து ஓடும் யுத்தத்தைக் கட்டவிழ்த்துவிட விரும்புபவர்களுடன் அவர் அணி வகுத்து நிற்கிறுர்.

மற்ற கருத்து முதல்வாதத் தத்துவ ஞானிகள், கம்யூனிஸ்டுகளுக்கு எதிராகப் புனித யுத்தம் நடத்த வேண்டுமென்று அறைகூவல் விடுக்கின்றனர். இவ்வி தம், சமூகத்தின் முற்போக்கு சக்திகளை எதிர்ப்பதற்கு முதலாளிகளுக்கு அவர்கள் உதவுகின்றனர். அரசியல் இயக்கங்களில் பங்கெடுத்துக் கொள்ளாதீர்கள் என்று உழைக்கும் மக்களுக்கு எடுத்துச் சொல்லும் தத்து வார்த்திகள் இருக்கிறுர்கள். அவர்கள், தங்கள் கோட் பாடுகள் அரசியல் சார்பற்றது என்று உரிமை கொண் டாடுவதுடன், "எங்களுக்கும் அரசியலுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை", என்றும் கூறுகிறுர்கள். முதற் பார்வையில், இந்தக் கருத்து முதல் வாதத் தத்துவார்த்திகள், வர்க்கங்கள், கட்சிகள் இவற்றி டையே நடைபெறும் போராட்டங்களிலிருந்து ஒதுங்கி நிற்பது போலத் தோன்றும். ஆனுல் அவர்களது உண் மையான குறிக்கோள்களுக்கு இது ஒரு திரையே என்று கண்டுபிடிப்பது எளிது. உண்மையில் இந்தக் கருத்து முதல் வாதிகள் "பாரபக்ஷமற்றவர்கள்" "கட்சிகளுக்கு அப்பாற்பட்டவர்கள்" என்றெல்லாம் கூறும் போது, உழைக்கும் மக்களைப் பார்த்து, முதலாளித்துவத்திற்கு, ஏழ்மைக்கு, எதிரான போராட்டங்களிலிருந்து விலகி நில்லுங்கள்", என்றுதான் கூறுகிறுர்கள். முதலாளி

களுக்கும், சுரண்டுபவர்களுக்கும் இன்றி, வேறு யாருக்கு இது உதவுகிறது? சுரண்டல் முதல், மதம், மத போதனுவாதம்ஈருக, பிற்போக்கானவைஅனைத்தையும், காலங்கடந்தவையனைத்தையும், கருத்து முதல் வாதம் ஆதரிக்கிறது என்று தெரிகிறது.

கருத்து முதல் வாதத்திற்கு மாருகப் பொருள் முதல் வாதம், புரட்சிகரமான, முற்போக்கான வர்க்கங்களின் நலன்களை வெளியிட்டு, பிற்போக்கான, காலங் கடந்த, வர்க்கங்களை எதிர்க்கிறது. கருத்து முதல் வாதம் பிற்போக்கு வர்க்கங்களின் பதாகையானுல், பொருள் முதல் வாதம், முற்போக்கான, முன்னேற்றமடைந்த வர்க்கங்களின் பதாகையாகும். எனினும், எல்லா நிலைகளின் கீழும் கருத்து முதல் வாதிகள், பிற்போக்கானவற்றையும், காலங்கடந்தனவற்றையும் மட்டுமே ஆதரிக்கிருர்கள் என்றும், பொருள் முதல் வாதிகள் எப்போதும் முற்போக்கு வர்க்கங்களின் நலன்களையே வெளியிடுகிருர்கள் என்றும் பொருள் கொள்ளக்கூடிய வகையில் மேற்கூறிய வாசகத்தை எளிமைப்படுத்தி விடக் கூடாது என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். உதாரணமாக, ஆதிகாலத்துப் பொருள் முதல் வாதியாகிய ஹெராக்லீடஸ், அடிமை—எஜமானர்களின் நலன்களை ஆதரித்து, ஏதெனிய ஜன நாயகத்தை எதிர்த்ததோடு, போருக்கும் ஆதரவாக இருந்தார். ஆனுல் தற்கால ஆங்கிலத் தத்துவ ஞானியாகிய பெர்ட்ரென்ட் ரஸ்ஸல்—அவரது தத்துவ ஞானம், கருத்து முதல் வாத வகையைச் சேர்ந்ததாக இருந்த போதிலுங் கூட—உலக அமைதியின் செயலூக்கமுள்ள ஆதரவாளராக இருக்கிருர்,

கருத்து முதல் வாதம் காலங்கடந்த பிற்போக்கு வர்க்கங்களின் நலன்களை வெளியிடுகிறது என்றும்,

பொருள் முதல் வாதம் முற்போக்கு வர்க்கங்களின் நலன் களை வெளியிடுகிறது என்றும் நாம் கூறும்போது தத்துவ ஞானத்தின் வளர்ச்சியில் காணப்படும் ஒரு அடிப்படை வரலாற்றுப் போக்கையே குறிப்பிடுகிறோம். இந்த வகையில், பொருள் முதல் வாதிகள் யதார்த் தத்தை, உண்மை வாழ்க்கையை, தங்கள் கோட்பாடு களின் அடிப்படையாக எடுத்துக் கொள்ளும்போது, அவர்கள் முன்னேற்றமடைந்த, முற்போக்கு வர்க்கங் களுக்குத் தொண்டு செய்கிறார்கள். ஆனால் கருத்து முதல் வாதம் தனது கோட்பாடுகளில் உண்மைகளைத் திரித்துக் கூறும்போது—தனிப்பட்ட கருத்து முதல் வாதிகளின் எண்ணம் எப்படி இருந்த போதிலும், அது காலங்கடந்த பிற்போக்கு வர்க்கங்களுக்கே தொண் டாற்றுகிறது. இந்த முறையில் பார்க்கும் போது பொருள் முதல் வாதத்திற்கும், கருத்து முதல் வாதத் திற்குமிடையே நடைபெறும் போராட்டம், வர்க்கப் போராட்டத்தின் ஒரு வெளிப்பாடேயாகும்.

இந்தப் போராட்டத்தில் இரண்டு பக்கங்களையும், கட்சிகளையும் ஆதரிக்காமல் நடுநிலைமை வகிப்பது தத்துவார்த்திகளுக்குச் சாத்தியமில்லை. "நாங்கள் பொருள் முதல் வாதிகளுமல்ல, கருத்து முதல் வாதி களுமல்ல. நாங்கள் இந்தக் கட்சிகளுக்கெல்லாம் "அப்பாற்பட்டவர்கள்" என்று வலியுறுத்தியவர்களை லெனின் அம்பலப்படுத்தினார் அவர் அந்தத் தத்துவ ஞானிகளை "ஏளனத்திற்குரிய நடுக் கட்சியினர்" என்று குறிப்பிட்டார். பொருள் முதல் வாதத்திற்கும், கருத்து முதல் வாதத்திற்கும் இடையேயான போராட்டம் காலங் கடந்தது என்றும், எனவே தத்துவார்த்திகளைப்பொருள் முதல் வாதிகள், கருத்து முதல் வாதிகள் என்று இரண்டு பிரிவுகளாக இனிப் பிரிக்க முடியாது என்றும்

அவர்கள் நிலைநாட்ட முயற்சித்ததை அவர் எதிர்த்தார். தற்காலத் திருத்தல்வாதிகள் † இந்தக் கருத்தின் ஆர்வ மிக்க ஆதரவாளர்களாக இருக்கின்றனர். தத்துவ ஞானத்தின் ஒருதலைச் சார்பு என்ற 'மார்க்ஸிஸக் கொள் கையை' பொருள் முதல் வாதத்திற்கும், கருத்து முதல் வாதத்திற்கும் இடையே சமரசமற்ற போராட்டம் என்ற அதன் கருத்தை, அவர்கள் மூர்க்கமாக எதிர்த்து, பொருள் முதல் வாதத்திற்கும், கருத்து முதல் வாதத் திற்கும் இடையேயுள்ள வேறுபாடுகள் மறைந்து வரு கின்றன என்று வலியுறுத்துகிறார்கள். ஒன்றை யொன்று உறுதியுடன் எதிர்த்துப் போராடும், பகைமை மிக்க வர்க்கங்களைக் கொண்டது பூர்ஷுவா சமுகம் என்பதை நாம் மனதிலிறுத்திக் கொண்டோமானால், இக்கருத்தின் பொய்மை புலனாகும். இந்தப் போராட்டம் முடிவடைய முடியாது. பொருள் முதல் வாதத்திற்கும், கருத்து முதல் வாதத்திற்கும் இடையே உள்ள போராட்டமும் முடிவடைய முடியாதது. அது வர்க்கப் போராட்டத்திலிருந்து தோன்றுகிறது.

எனவே ஒவ்வொரு தத்துவ ஞானமும் ஒரு குறிப் பிட்ட வர்க்க நலன்களை வெளியிடுகிறது. இது மார்க்ஸிஸத்துக்கு எவ்வாறு பொருந்தும்?

**மார்க்ஸிஸம் என்பது என்ன? அது யாருடைய நலன்களை வெளியிடுகிறது?**

மார்க்ஸிஸம் தோன்றிய காலத் தின் (19-வது நூற்றாண்டில் 1840-'50) முதன்மையான நிகழ்ச்சி என்னவென்றால், ஒரு புதிய புரட்சிகரமான வர்க்கம்,— பாட்டாளி வர்க்கம் — தோன்

† பூர்ஷுவாக்களின் நலன்களுக்கு உகந்த முறையில் மார்க்ஸிஸத்தின் முக்கியமான கொள்கைகளைத் திருத்தி அதைத் திரிப்பதே திருத்தல் வாதம் எனப்படும்.

றியதேயாகும். பாட்டாளி வர்க்கம் அதற்கு முன்னரே பிறந்து விட்டது. ஆனால் இந்தக் காலகட்டத்தில்தான் அது பலம் மிக்க புரட்சிகர சக்தியாகச் செயல்பட ஆரம்பித்தது. ஏற்கனவே அது தன் உரிமைக் குரலை உயர்த்த ஆரம்பித்து விட்டது. அந்தக் காலத்தில் அது கைக்கொண்ட இயக்கங்களிலிருந்து இதை நாம் தெரிந்து கொள்ளலாம். பிரிட்டனில் நடந்த சாசன இயக்கமும், § பிரான்ஸ்நாட்டில் நடந்த லயான்ஸ் நெசவாளர்களது எழுச்சியும், பாட்டாளி வர்க்கம் நடத்திய பெரும் இயக்கங்களில் முதலானவை ஆகும். ஜெர்மன் தேசத்துப் பாட்டாளிகளும் தொடர்ச்சியாகப் பல போராட்டங்களை நடத்தினர்.

புதிதாகத் தோன்றிக் கொண்டிருந்த வர்க்கத்தின்—பாட்டாளி வர்க்கத்தின்—மகத்தான சக்திக்கு இந்த இபக்கங்கள் சான்று பகன்றன. பூதம் விழித்துக் கொண்டு விட்டது. ஆனால் வெற்றிக்கு இது மட்டும் போதுமானதாக இல்லை. இந்த ராக்ஷஸ சக்தியைச் சரியான வழியிலே செலுத்த வேண்டி இருந்தது. பாட்டாளி வர்க்கம் சரியான பாதையின் வழியே செல்ல வேண்டி இருந்தது. ஆனால் சரியான பாதை எது?

முதலாளித்துவத்துடன் சிறு பூசல்கள் இடுவது; ஒரு தெளிவான குறிக்கோளோ, தலைமையோ இல்லாது கட்டுப்பாடற்ற, திடீர் இயக்கங்களை நடத்துவது இதுவே பாட்டாளி வர்க்கம் செல்லக்கூடிய ஒரு பாதையாக இருந்தது.

---

§ சாசன இயக்கம்: தொழிலாளி வர்க்கத்தின் பொருளாதார நிலையை அபிவிருத்தி செய்யவும், அரசியல் உரிமைகளைப் பெறவும், 1836—48-ல் பிரிட்டிஷ் தொழிலாளர்கள் நடத்திய இயக்கம்.

பாட்டாளி வர்க்கத்தின் போராட்டங்களுக்கு ஒரு கட்டுப்பாடான தன்மையைக் கொடுக்கக்கூடியதும், அதன் முன்னால் உள்ள வாய்ப்புகளைப் பற்றி ஒரு தெளிவான கருத்தைக் கொடுக்கக் கூடியதுமான எந்த அம்சம் பாட்டாளி வர்க்கத்திடம் இல்லை? ஒரு புரட்சிகரமான கோட்பாடு!—ஆம்! அந்தக் காலத்தில் பாட்டாளி வர்க்கத்திடம் இல்லாதிருந்தது அது ஒன்றுதான். "ஒரு புரட்சிகரமான கோட்பாடு இல்லாமல், ஒரு புரட்சிகரமான இயக்கம் இருக்க முடியாது" என்ற லெனினின் வார்த்தைகளை நினைவு படுத்திக் கொள்வோம். முதலாளித்துவ அடிமைத்தனத்தின் நுகத்தடியை பாட்டாளி வர்க்கம் தூக்கி எறிய விரும்புகிறது. எல்லாச் சுரண்டலிலிருந்தும் விடுவிக்கப்பெற்ற ஒரு புதிய சோஷலிஸ சமூகத்தை சிருஷ்டிக்க விரும்புகிறது. ஆனால் அந்தக் குறிக்கோள் நிறைவேறுவதற்கான பாதை கண்டுபிடிக்கப்பட வேண்டும். பாட்டாளி வர்க்கத்திற்கும், உழைக்கும் மக்களுக்கும் மார்க்ஸிஸம் அந்தக் கோட்பாட்டைக் கொடுத்தது.

பாட்டாளி வர்க்கத்தின் உலகக் கண்ணோட்டம், என்ற முறையில் ஒரு சோஷலிஸக் கோட்பாட்டைத் தோற்றுவிக்க வேண்டியிருந்தது. ஒரு புதிய கோட்பாட்டை—தத்துவ ஞான அரசியல் பொருளாதாரம், விஞ்ஞான ரீதியான கம்யூனிஸம், என்ற மூன்றும் இணைந்த அங்கமாகிய ஒரு புதிய கோட்பாட்டை—சிருஷ்டிக்க வேண்டியிருந்தது. மார்க்ஸிஸத்திற்கு முன்பும், பல்வேறு தத்துவ ஞான, பொருளாதார சோஷலிஸக் கோட்பாடுகள் இருந்தன. ஆனால் முதலாவதாக அவை, என்றும் இணைந்த ஒரு முழுமையாக இருக்கவில்லை. இரண்டாவதாக, அவை பாட்டாளி வர்க்கத்தின் நலன்களை வெளியிடவில்லை, எனவே, அந்த வர்க்கத்

தின் விமோசனத்திற்கான போராட்டத்தின் தத்துவார்த்த அடிப்படையாக அவை பயன்பட முடியவில்லை.

மார்க்ஸிஸத்தின் தோற்றத்திற்கு முன்பு முற்போக்கான தத்துவஞான, பொருளாதார அமைப்புக்களோ, அல்லது சோஷலிஸக் கோட்பாடுகளோ, இல்லை என்று கூறுவதாகக் கொள்ளக்கூடாது. உண்மையில் லெனின் எடுத்துக் காட்டியது போல மார்க்ஸிஸத்தின் மூன்று பகுதிகளுக்கும் இயைந்த மூன்று மூலங்கள் உள்ளன: ஜெர்மன் நாட்டு சாஸ்த்ரீயத் தத்துவ ஞானம், இங்கிலாந்து நாட்டு சாஸ்த்ரீய அரசியல் பொருளாதாரம், பிரான்ஸ் நாட்டு கற்பனு சமதர்மம், ஆகிய மூன்றுமே அந்த மூலங்கள். ஆனுல் இந்தக் கோட்பாடுகளை சிருஷ்டித்தவர்களின் கருத்துக்கள் விஞ்ஞான ரீதியில் அமைந்திருக்கவில்லை. உதாரணமாக பிரான்ஸ் நாட்டுக் கற்பனு சமதர்மத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அது ஒரு கற்பனு சுவர்க்கம்; அடைய முடியாத ஒரு விசித்திரக் கனவு; அவர்களது கோட்பாட்டின் தன்மை இதுதான். உதாரணமாகத் தங்கள் தொழிற்சாலைகளைத் தொழிலாளர்களுக்குக் கொடுத்துவிடும்படி அவர்கள் சில தொழிற்சாலையின் சொந்தக்காரர்களைக் கேட்டுக் கொண்டார்கள். எனவே அவர்களது சோஷலிஸக் கோட்பாடு அடைய முடியாததாகவே இருந்தது.

ஒரு உண்மையான விஞ்ஞான ரீதியான கோட்பாட்டை, பாட்டாளி வர்க்கத்திற்கு, அதன் மாபெரும் ஆசிரியர்களான மார்க்ஸுும், எங்கெல்ஸுும் அளித்தனர். அதுவே மார்க்ஸிஸம் எனக் கூறப்படுகிறது. மார்க்ஸிஸம் பாட்டாளி வர்க்கத்தின் நலன்களை வெளியிடுகிறது. அவ்வர்க்கத்தின் தத்துவார்த்த ஆயுதம் அது. தத்துவஞான, பொருளாதார, சமூக - அரசியல் கருத்துக்களின் இணைந்த இயைந்த அமைப்பு அது. மார்க்ஸிஸம்

மூன்று பகுதிகளைக் கொண்டது என்று லெனின் எடுத்துக் காட்டினர். அவையாவன : தத்துவஞானம், அரசியல் - பொருளாதாரம்; விஞ்ஞான ரீதியான கம்யூனிஸம்.

மார்க்ஸிஸத்தின் வர்க்க அடிப்படையை நாம் ஏற்கனவே தெளிவு படுத்தி இருக்கிருேமாகையால், அதன் ஆதாரம், பொருள் முதல்வாதத் தத்துவ ஞானமாகத்தான் இருக்க முடியும் என்பதை உணர்ந்து கொள்வது எளிது.

**முரண்தர்க்க பொருள் முதல்வாதமே மார்க்ஸிஸத்தின் தத்துவஞானம்.**

கருத்து முதல் வாதிகள், உலகைப் பற்றி அளிக்கும் விளக்கம் முற்றிலும் பொய்யானது என்றும், உலகில் நடைபெறுபவனவற்றை அது திரித்துக் கூறுகிறது என்றும் நீங்கள் ஏற்கனவே பார்த்துள்ளீர்கள். பாட்டாளி வர்க்கம், அத்தகைய தத்துவஞானத்துடன் எந்தத் தொடர்பும் வைத்துக் கொள்ள முடியாது. உழைக்கும் மக்கள் அனைவருக்கும் சிறந்த வாழ்க்கையைக் கட்ட, அது விரும்புகிறது. உலகை எத்தகைய கற்பனைக் கனவுகளும், திரிபுகளும் இன்றி, அது உண்மையில் எப்படி இருக்கிறதோ, அப்படியே ஆராய வேண்டியது, பாட்டாளி வர்க்கத்திற்கு அவசியம். இந்த இடத்தில் கருத்து முதல் வாதம் சரியான வழியைக் காட்ட முடியாது. ஆனல் பொருள் முதல் வாதம், உலகு எப்படி இருக்கிறதோ, அப்படியே அதை ஆராய்கிறது. மார்க்ஸிஸமும், கலப்படம் எதுவுமற்ற உண்மை வாழ்க்கையிலிருந்தே தொடங்குகிறது. எனவே அதன் தத்துவார்த்த அடிப்படை, பொருள் முதல் வாதத் தத்துவ ஞானமாகத்தான் இருக்க முடியும்.

மார்க்ஸிஸம் தோன்றுவதற்கு முன்பே பொருள் முதல் வாதம் இருந்தது. எனினும், இது அப்பாலைப் பொருள் முதல் வாதமாகவே இருந்தது. மார்க்ஸும், எங்கெல்ஸும், ஒரு புதிய கோட்பாட்டை-முரண் தர்க்கப் பொருள் முதல் வாதத்தை-தோற்றுவித்தனர். உலகம் நிலையானது, மாறுதலற்றது, என்ற அப்பாலை அணுகல் முறையை மார்க்ஸிஸம் ஏற்றுக் கொள்ள முடியாது. யதார்த்தம் முடிவின்றி வளர்ந்து கொண்டும், மாறிக்கொண்டும் இருக்கிறது. மார்க்ஸிஸம், அதன் கோட்பாடுகளிலும், செயல்முறை நடவடிக்கைகளிலும், வாழ்வின் மாறுந் தன்மையையே பிரதிபலிக்கிறது. மார்க்ஸிஸம், சுபாவத்திலேயே ஒரு புரட்சிகரக் கோட்பாடு. ஆனால் பூர்ஷுவா தத்துவஞானிகள் இன்று அப்பாலையைப் பிடித்துத் தொங்கிக்கொண்டிருக்கிறார்கள். ஏனெனில் அவர்கள் வரலாற்று ரீதியான வளர்ச்சியைத் தடைசெய்து, முதலாளித்துவ ஒழுங்கு முறையை நிலைநிறுத்த விரும்புகிறார்கள். எனவேதான் பொருள் முதல்வாத முரண் தர்க்கம்-அதாவது வளர்ச்சி விஞ்ஞானம், யதார்த்தத்தை அறிந்து மாற்றுவதற்கான மார்க்ஸிஸ முறையாகத் திகழ்கிறது.

இவ்விதமாகப் பொருள் முதல் வாதமும், முரண் தர்க்கமும், அவற்றின் ஐக்கியத்தால், பிரிக்க முடியாத இணைப்பால், மார்க்ஸிஸத்தின் தத்துவார்த்தமாகவும், முறையாகவும் உள்ளன. எனவேதான் மார்க்ஸிஸத் தத்துவஞானம் முரண் தர்க்கப் பொருள் முதல் வாதம் என்று அழைக்கப்படுகிறது. அது ஒரு தத்துவ ஞான, உலகக் கண்ணோட்டமாக இருக்கும் அதே சமயத்தில் ஒரு முறையாகவும் இருக்கிறது. பாட்டாளி மக்களது கட்சியின் செயல் முறை நடவடிக்கைகளில் அது திசை காட்டியாகவும், துருவ தாரகையாகவும் திகழ்கிறது.

மார்க்ஸிஸம் உழைக்கும் மக்களின் திசைகாட்டி யாகவும் துருவ தாரகை யாகவும் திகழ்வது ஏன்?

ஒரு காலத்தில் மாலுமிகள் துருவ நட்சத்திரத்தைக் கொண்டே தங்கள் திசையை அறிந்து கொண்டார்கள். எனவேதான் "வழிகாட்டும் நட்சத்திரம்" "துருவ தாரகை" என்ற சொற்ருெடர் தோன்றியது. திசைகாட்டி கண்டு பிடிக்கப்பட்ட பின்பு திசையைக் காட்டுவதற்கு அக் கருவி பயன்படுத்தப்பட்டது. பாட்டாளி வர்க்கத்திற்கும் கம்யூனிஸ்டுக் கட்சிக்கும், உலக மக்கள் அனைவருக் கும், அவர்களது செயல்முறை நடவடிக்கைகளுக்கான பாதையை மார்க்ஸிஸத் தத்துவ ஞானம் காட்டுவதால் அதை ஒரு திசைகாட்டிக்கு, துருவ தாரகைக்கு ஒப்பிட லாம். ஆனுல் திசை காட்டுங் கருவி நல்லதாக இருக்க வேண்டும். இல்லையெனில் அது நம்மை வழி தவறி அழைத்துச் சென்று விடும். சமூக விஷயங்களில் வழி காட்டுவதற்கு துல்லியமான திசைகாட்டுங் கருவியை வைத்துக் கொள்வது மேலும் அவசியமானதாகும். பிரபல நீக்ரோ பாடகர் பால்ரோப்ஸன், தான் ஒரு காலத் தில் ஒரு மாணவர் சங்கத்தில் அங்கத்தினராக இருந்த தாகக் கூறுகிருர். "தத்துவஞானமே வாழ்வின் வழி காட்டி" என்பதே அந்தச் சங்கத்தின் இலக்கு உரை யாக இருந்தது. ஆனுல், 'பல்கலைக் கழகத்தில் போதிக் கப்பட்ட தத்துவ ஞானம் வாழ்வில் தகுதியற்ற திசை காட்டியாக இருந்தது......... இந்த மொட்டைச் சந்தி லிருந்து வெளியேறுவதற்கான வழியை நான் தேடி னேன், ஆனுல் காணவில்லை மார்க்ஸ், லெனின் இவர் களது போதனைகளுடன் நான் தொடர்பு கொண்ட போதுதான் "தத்துவஞானச் சாவி"யை நான் கண்

டேன். அதுவே உண்மையில் என் வாழ்க்கையை வழி நடத்தி வந்துள்ளது'', என்று அவர் எழுதுகிறார்.

கம்யூனிஸ்டுக் கட்சி தனது செயல்முறை நடவடிக்கைகளில் எப்பொழுதும் மார்க்ஸிஸத் தத்துவத்தின் புரட்சிகரமான கோட்பாடுகளாலேயே வழி நடத்தப்படுகிறது என்ற பொருளில், அந்தத் தத்துவத்தை ஒரு திசைகாட்டி, துருவதாரகை என்று கூறலாம். உதாரணமாக ஒன்றைப் பார்ப்போம். வரலாற்றின் முதல் சோஷலிஸப் புரட்சி 1917 ல், ரஷ்யாவில் நடந்தது. சோஷலிஸத்தைக் கட்டுவதைத் தொடங்குவது எப்படி என்ற கஷ்டமான, முக்கியமான பிரச்சினை அதன் முன் உடனடியாகத் தோன்றியது. இந்தக் கேள்விக்கு விடை காண்பதில, கட்சி மார்க்ஸிஸக் கோட்பாட்டின் முக்கியமான கொள்கை ஒன்றால் வழி நடத்தப்பட்டது. ஒரு நாட்டின் வளர்ச்சிக்கு நிர்ணயமான அம்சம் பொருளாதாரம், என்பதே அந்தக் கொள்கை. நாட்டில் போதுமான தொழிற்சாலைகள் இல்லாவிட்டால், கிராமங்களில் சிறு நில வேளாண்மை நிலவி வந்தால் சோஷலிஸத்தைக் கட்ட முடியாது. இக்கொள்கையின் உதவியால் சரியான பாதை கண்டுபிடிக்கப்பட்டது.

நாட்டைத் தொழில்மயமாக்கல், கூட்டுப் பண்ணைகளை அமைத்தல், சுரண்டும் வர்க்கங்களை அழித்தல் இதுவே சோஷலிஸத்திற்கான சோவியத் மக்களின் பாதையாக இருந்தது - 1919ல் நடந்த கம்யூனிஸ்டுக் கட்சியின் 8-வது காங்கிரசின் இரண்டாவது திட்டத்தில் சோஷலிஸ நிர்மானத்திற்கான இந்தப் பாதை வகுக்கப்பட்டது.

கம்யூனிசத்தைக் கட்டும் இன்றையக் கால கட்டத்திற்கும் அது பொருந்தும். கம்யூனிஸ நிர்மாணத்தின் முன்னேடிகளாகத் திகழவேண்டிய மாபெரும் வரலாற்

றுப் பணி, சமூக வளர்ச்சியில் ஒரு புதிய பாதையைத் தோற்றுவிக்க வேண்டிய பணி, சோவியத் மக்களுக்கு உள்ளது. இங்கும் மார்க்ஸிஸக் கோட்பாடே வழி காட்டும்

ஏழாவது நூற்றுண்டில் வாழ்ந்த, ஆங்கிலப்பொருள் முதல் வாதியாகிய பிரான்ஸிஸ் பேக்கன் சரியான கோட்பாட்டை இருண்ட பாதையிலே செல்லும் பிரயாணியின் வழிக்கு ஒளியூட்டும். விளக்குக்கு ஒப்பிட்டார். ஒரு சரியான கோட்பாடு இல்லாத விஞ்ஞானியை, இருளிலே துழாவிக் கொண்டு முன் செல்லும் வழிப்போக்கனுக்கு ஒப்பிட்டார்.

கம்யூனிஸ்டுக் கட்சி, சோவியத் மக்களை ஒரே சரியான வழியில் தலைமை தாங்கி நடத்திச் செல்கிறது. சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் 22 வது காங்கிரசில் எடுத்துக் கொள்ளப்பட்ட வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த முடிவுகள் இதற்குச் சான்று பகர்கின்றன. கம்யூனிசத்தை நிர்மாணிப்பதற்கு முதற்படியாக அதற்குத் தேவையான பொருளாயத தொழில் நுணுக்க அடிப்படையை அமைத்தாக வேண்டும். நாட்டின் பொருளாதாரம், தொழில், விவசாயம், இவற்றை அபிவிருத்தி செய்து, கம்யூனிஸக் கொள்கையை,— "சக்திக்கேற்ற உழைப்பு, தேவைக்கேற்ற கூலி" — என்ற கொள்கையை, நடைமுறையில் கொண்டுவருவதற்குத் தேவையான தனத்தும் சோவியத் மக்களுக்குக் கிடைக்கும்படி செய்ய வேண்டுமென்பதே, இதன் பொருள். 1961 ல் சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சி, தனது 22-வது காங்கிரசில் நிறைவேற்றிய புதிய திட்டத்தின், முக்கியமான பகுதிகள் அனைத்திலும் இழையோடுவது இந்த எளிய, ஆனால் ஆழ்ந்த கருத்துத்தான அது முற்றிலும் முழுமையாக மார்க்ஸிஸக் கோட்பாட்டின் அடிப்

படையிலேயே அமைத்துள்ளது. இந்த சந்தர்ப்பத்தில் அந்தக் கோட்பாடு ஒரு சாதாரண விளக்கு அல்ல. ஒரு பிரகாசமான நீடொளி விளக்கு! கலங்கரை விளக்கு! திசைகாட்டி!

நாம் மேலே கூறியதனைத்தும் மார்க்ஸிஸம் காலம் கடந்தது எனப் பழித்துக் கூறும் திருத்தல் வாதிகளின் முகமூடிகளைக் கிழித்தெறிகிறது. கம்யூனிஸ்டுக் கட்சியின், பாட்டாளி வர்க்கத்தின், உழைக்கும் மக்களின், கம்யூனிசத்திற்கான போராட்டத்தில் மார்க்ஸிஸம் ஒரு சக்தி வாய்ந்த ஆயுதம். அதன் தோற்றம் விஞ்ஞானத்தில் ஒரு உண்மையான புரட்சியைக் குறிக்கிறது.

இரண்டாவது உரை

## மார்க்ஸிஸத்திற்கு முந்திய தத்துவ ஞானங்களைப் பற்றிய சுருக்கமான விவரம் மார்க்ஸிஸத்தின் தோற்றம்—தத்துவ ஞானத்தில் ஒரு புரட்சி

சமூக விஞ்ஞானத்தில் மார்க்ஸிஸம் விளைவித்த புரட்சியின் தன்மையைப் புரிந்துகொள்வதற்கு, தத்துவ ஞானத்தின் வளர்ச்சியில் முக்கியமான நிலைகளைப் பற்றிச் சுருக்கமாகவேனும் நாம் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம். ஏனெனில், லெனின் எடுத்துக் காட்டியது போல மார்க்ஸிஸம், உலகத் தத்துவஞான சிந்தனையெனும் ராஜபாட்டையில், ஏதோ ஒரு இடத்தில் திடீரென்று தோன்றி விடவில்லை. அதற்கு முன் இருந்த தத்துவ ஞானங்களின் மிகச் சிறந்த அம்சங்களையும், மற்ற சமூக விஞ்ஞானங்களின் சாதனைகளையும் அது சுவீகரித்துக் கொண்டுள்ளது.

## அடிமைச் சமூகத்தில் பொருள்முதல் வாதத்திற்கும், கருத்து முதல் வாதத்திற்கும் இடையேயான போராட்டம்

உலகை ஒரு முழுமையாகக் காண்பதற்கான முதல் முயற்சிகள் ஆதிக்கால கீழை நாடுகளின் (சைனு, இந்தியா, எகிப்து) அடிமைச் சமூகங்களில் செய்யப்பட்டன. இவையே முதல் தத்துவஞானக் கோட்பாடுகள். பொருள்முதல் வாதக் கண்ணேட்டத்திலோ, கருத்து முதல் வாதக் கண்ணேட்டத்திலோ, இவ்வுலகைக்காண முடியுமாதலால், தொடக்கத்திலிருந்தே இவ்விரு போக்குகளுக்குமிடையே உறுதியான போராட்டம் நிகழ்ந்து வந்துள்ளது. இவை முற்றிலும் மாறுபட்ட நலன்களை வெளியிடுகின்றன என்று முன்னரே நாம் காட்டியுள்ளோம். தத்துவ ஞானத்தின் வரலாற்று ரீதியான வளர்ச்சியின் ஒவவொரு கட்டத்திலும் இந்தப் போராட்டம் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டு வந்துள்ளது.

அடிமைச் சமூக காலத்தில், ஆதிகாலத்து கிரீஸ் நாட்டில்தான் தத்துவ ஞானம் மிக உயர்ந்த வளர்ச்சி அடைந்தது. "தொடக்கநிலை இயற்கைப் பொருள் முதல் வாதம் என்று எங்கெல்ஸால் குறிப்பிடப்பட்ட ஒரு தத்துவம் கி. மு. ஆருவது நூற்ருண்டிலேயே அங்கு தோன்றிவிட்டது. உலகக் கொள்கைக்கு அடிப்படையாக, ஏதோ ஒரு பருப்பொருள் இருக்கிறது என்று அதைத் தோற்றுவித்தவர்கள் கருதினுர்கள். உதாரணமாக தேல்ஸ் எனும் தத்துவஞானி (சிக்கா கி.மு.624—527) தண்ணீரை அத்தகைய பருப்பொருள் "அடிப்படையாகக்" கருதினுர். ஆனல் அவரது மாணவராகிய அனக்ஸிமீனெஸ் (கி.மு 6வது நூற்ருண்டு) காற்றே அடிப்படை என்று கருதினர். இந்தக் கருத்துக்கள் அப்பாவித்தனமானவையாக இருந்தன. ஆனல், உலகம் ஒரு தெய்

வீக சக்தியால் சிருஷ்டி செய்யப்படவில்லை என்றும், அதற்கு ஒரு இயற்கையான பருப்பொருள் அடிப்படை இருக்கிறது என்றும், இந்தத் தத்துவஞானிகள் கூறியமையால், அந்த அளவிற்கு அவை அடிப்படையில் சரியானவையே.

ஹெராக்ளீடஸ் (சிக்கா 540—480கி.மு.) என்ற தத்துவ ஞானி இந்தக் கருத்தை மேலும் செம்மைப் படுத்தினர். உலகம் கடவுளாலோ, மனிதனுலோ சிருஷ்டிக்கப் படவில்லை என்றும், அது எப்பொழுதும் இருந்தது, இனியும் முடிவற்று இருக்குமென்றும் அவர் எழுதினர் உள்ளது அனைத்திற்கும் "அடிப்படை"யாக இருப்பது "முடிவற்று வாழும் நெருப்பு" என்று அவர் கூறினர். "அனைத்தினின்றும், தோன்றிய முழுமையான இந்த உலகம் கடவுளாலோ மனிதர்களாலோ சிருஷ்டிக்கப்படவில்லை. அது முடிவற்று வாழும் நெருப்பாக இருந்தது; இருக்கிறது; இனியும் இருக்கும். அது ஒழுங்காக ஏற்றப் பட்டு, ஒழுங்காக அணைக்கப் படுகிறது," என்று அவர் எழுதினர். ஹெராக்ளீடஸின் இந்தக் கருத்தை முரண் தர்க்கப் பொருள் முதல் வாதக் கொள்கைகளின் சிறந்த விளக்கம் என்று லெனின் கருதினர். *

முரண் தர்க்க முறையைத் தோற்றுவித்தவர்களில் ஹெராக்ளீடஸும் ஒருவர். "எல்லாம் பாய்கின்றன, எல்லாம் மாறுகின்றன," என்ற புகழ்பெற்ற வாசகத்தை கூறியவர் அவர்தான். உலகம் நிலைத்து நிற்பதில்லை. அது முடிவற்று வளர்ச்சி அடைகிறது. மாறுபாடுகளின் போராட்டமே வளர்ச்சியின் மூலஸ்தானம் என்ற அற்புதமான யூகத்தையும் ஹெராக்ளீடஸ் செய்தார். மார்க்ஸிஸ—லெனினிஸத்தின் ஆதிகர்த்தாக்கள்

---

* லெனின், கட்டுரைத் தொகுதி பாகம் 38, பக் 349.

ஹெராக்ளீடஸின் கருத்துக்களுக்கு உயர்ந்த மதிப்பு அளித்தனர்.

ஆதிகாலப் பொருள்முதல் வாதத்தின் மாபெரும் சாதனை டெமாக்ரீடஸ் என்பவரின் (சிக்கா 460—370 கி.மு) தத்துவஞானமேயாகும். இவர் கோட்பாட்டைப் பற்றி இப்புத்தகத்தில் நாம் பன்முறை குறிப்பிடுவோம். பொருள்களின் அணு அமைப்புப் பற்றிய அற்புதமான கோட்பாட்டை அவர்முன் வைத்தார். அதற்கு 2500 ஆண்டுகட்குப் பின்பு விஞ்ஞான ரீதியிலும், செயல் முறை ரீதியிலும் அது உறுதிப் படுத்தப் பட்டது.

டெமாக்ரிடஸின் கருத்துப்படி உள்ளதனைத்தின் அடிப்படையாக இருப்பது அணுக்களும், சூன்யமுமே (ஏதுமற்ற வெளி) ஆகும். அணுக்கள் பகுக்க முடியாத பொருள் துகள்கள் என்று அவர் கருதினர். அவை பண்பில் ஒரே மாதிரியாக இருக்கின்றன. ஆனால்அமைப்பில் வேறுபடுகின்றன. அவை சூன்யத்தில முடிவற்றுஇயங்கிக் கொண்டிருக்கின்றன. அவை சேருகின்றன அல்லது பிரிகின்றன. இந்த வழியில் உலகத்தின் பல்வேறு வகையானநிகழ்வுகளையும் அவை தோற்றுவிக்கின்றன. அணுக்களின் சட்டத்திற்குட்பட்ட இயக்கங்களின் பயனுக, உலகில் உள்ளது அனைத்தும் இயற்கையாகத் தோன்றுகின்றன.

"எதுவுமே காரணமிலலாமல் தோன்றுவதில்லை. அனைத்தும் ஏதோ ஒரு அடிப்படையில், தேவையின் விளைவாகத் தோன்றுகின்றன" என்பது டெமாக்ரடீஸின் கருத்து. அத்தகைய கருத்தமைப்பின்படி இயற்கைக்கு அப்பாற்பட்ட, ஒரு தெய்வீக சக்தி உலகிலே இருப்பதற்கு வாய்ப்பில்லை. அனைத்திற்கும் அதன் பருப்பொருள் காரணம் உண்டு. எனவே, டெமாக்ரடீஸின் தத்துவ ஞானம் கருத்து முதல் வாதிகளின்—

குறிப்பாக ஆதிகாலத்து கிரேக்கத் தத்துஞானி பிளேட்டோவின் (கி.மு. 427—347)—சிற்றத்தைக் கிளறி யது என்பதில் வியப்பில்லை. தத்துவஞானத்தின் வரலாறு முழுவதிலும் பொருள் முதல் வாதத்திற்கும், கருத்து முதல் வாதத்திற்கும் இடையே நடைபெற்று வரும் போராட்டத்தை “டெமாக்ரிடீஸின் வழிக்கும்” (பொருள் முதல் வாதம்) “பிளேட்டோவின் வழிக்கும்” (கருத்து முதல் வாதம்) இடையே நடைபெறும் போராட்டமா கவே கருதலாம் என்று லெனின் எடுத்துக் காட்டினர்.

பிளேட்டோ உலகை ‘முடிவற்ற சாரங்களின் (எண்ணங்கள்) உலகம்” என்றும், “மாறும் பொருள் களின் உலகம்” என்றும் இரண்டாகப் பிரித்தார். அவரது கருத்துப்படி எண்ணங்களே “உண்மையான உருவங் கள்”. அவை முதன்மையானவை. நம்மைச் சுற்றியுள் ளவை அனைத்தும் “எண்ணங்களின் சாயைகளே.” தனது கருத்தை விளக்குவதற்கு அவர் பின்வரும் உவ மானத்தைக் கூறினர். குகையிலே வசிக்கும் ஒரு சந்நி யாசி வெளியில் நடப்பனவற்றை, சூரிய வெளிச்சத்தில் மனிதர்கள் அங்குமிங்கும் நடந்து கொண்டிருக்கும் அந்தத் திறந்த வெளியில் நடப்பனவற்றைப் பார்க்க முடியாது. அவர் குகையின் சுவற்றில் அவற்றின் சாயை களையே காண்பார். உலகில் வாழும் மக்களின் நிலைமை யும் இதுதான். சந்நியாசியைப்போல அவர்களும் காணும் பொருள் எல்லாம், “உண்மை” உலகத்தின், எண்ணங் களின் உலகத்தின், சாயைகளே. இக்கருத்தை அபத்த மான மறைபொருள் வாதம். இந்த கிரேக்கச் சொல், புதர் அல்லது மறைபொருள் என்று பொருள்படும்.

---

Mysticism : மிஸ்டிஸிஸம் என்ற இந்த ஆங்கிலப் பெயர் “மிஸ்டிகோஸ்” Mystikos எனும் கிரேக்கச் சொல்லிலி ருந்து தோன்றியது.

கடவுளுடன் மனிதன் நேரடியாகத் தொடர்பு கொள்ள முடியுமென்ற மத நம்பிக்கைக்கு இப்பெயர் சூட்டப்பட்டது. ஆனால் மறைபொருளான, விளக்க முடியாத ஒரு அடிப்படையில் அமைந்த கருத்துக்களைக் குறிக்க இப்போது இச்சொல் பயன்படுத்தப் படுகிறது, என்று லெனின் கூறியது நியாயம்தான் என்பதை நீங்களே காண முடியும்.

''புறவய கருத்து முதல்வாதம்'' என்ற தத்துவஞானத்திற்கு பிளேட்டோ அடிப்படை அமைத்தார். இந்தச் சொற்றொடரைப் புரிந்துகொள்ள, நாம், ''பொருள்'' என்றால் பொதுவாக மனிதனுக்கு வெளியே, அவனது தன்னறிவிலிருந்து தனித்து இருப்பதை, அவன் எதன் மேல் செயல் புரிகிறானோ அதைக் குறிக்கும் என்பதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். உலகம் புறவய ரீதியில், புறவய யதார்த்தமாக இருக்கிறது என்று, பொருள் முதல் வாதம் கருதுகிறது. பிளேட்டோவின் வகையைச் சேர்ந்த கருத்து முதல் வாதம், கருத்து புறவயமாக இருக்கிறது என்று வலியுறுத்துகிறது.

பொருள் முதல் வாதிகளைக், குறிப்பாக டெமாக்ரடஸை, பிளேட்டோ மூர்க்கமாகத் தாக்கினார். டெமாக்ரடஸின் கருத்து ''தெய்வபக்தி அற்றது'' என்று கூறி, அவருக்கு மரண தண்டனை விதிக்க வேண்டுமென்று கோரினார்.

பிளேட்டோவின் சமூக, அரசியல் கருத்துக்களும் இதே அளவில் பிற்போக்கானவையாக இருந்தன. அடிமை முறையின் அடிப்படையில் அமைந்த உயர் குடிமைக் குடியரசே ''மிகச் சிறந்த அரசாங்க அமைப்பு'' என்று அவர் கருதினார். அடிமை முறை இயற்கையானது, தேவையானது. சிலர் அடிமைகளாகவும்,

வேறுசிலர் ஆண்டான்களாகவும், அடிமை எஜமானர் களாகவும் இருக்கவேண்டுமென்று ஆண்டவன் நிய மித்துள்ளார். இவை அவரது கருத்துக்கள். எனவே, எல்லாக் காலங்களிலும் பிற்போக்காளர்கள் ஏன் பிளேட் டோவைத் தங்கள் கருத்துக்களுக்கு ஆதரவாக மேற் கோள் காட்டி வந்துள்ளனர் என்பதைப் புரிந்துகொள் வது சுலபம்.

கிரேக்கத் தத்துவஞானிகளில் தலைசிறந்தவர்களில் ஒருவர் அரிஸ்டாடில் (கி. மு. 384-322) அவர் பிளேட்டோ வின் மாணவர். ஆனால் தனது ஆசிரியரின் தத்துவ ஞானத்தின் பிற்போக்கான பகுதியை—''எண்ணங் களின்'' கோட்பாட்டை—அவர் வன்மையாக விமர்சித் தார். அதற்கு எதிராக வலுவான பல வாதங்களைக் காட்டி, கருத்து முதல்வாத விமர்சனத்திற்கு அவர் பெரும் பங்கு ஆற்றியுள்ளார். பொருள்களின் சாரம் ''எண்ணங்களில்'' இருக்கிறது என்ற பிளேட்டோவின் கருத்துக்கு, சாரம், பொருள்களுக்கு வெளியே எங்கேயோ ஓரிடத்தில் இருக்கமுடியாது, அது பொருள்களுக்கு உள்ளேதான் இருக்கவேண்டுமென்று சரியான மறு மொழி உரைத்தார். எனவே தத்துவஞானம், யதார்த் தப் பொருள்களின் உலகத்தை ஆராயவேண்டும். பிளேட்டோவின் "எண்ணங்களின் மறைபொருள் வாதத்தை'' மறுதலிக்க வேண்டும்.

பொருள்கள், பண்டம், புறவயமாக இருப்பதை அரிஸ்டாடில் ஒப்புக்கொண்டார். ஆனால் அவற்றை அவர் சடத்துவமாக, அதாவது இயக்கமற்றதாகக், கருதினார். ''உருவமே'' செயலூக்க அடிப்படையாக இருக்கிறது என்று அவர் கருதினார். "எல்லா உருவங் களின் உருவமான'' ஒன்று "முதன்மையான இயக்கி'' ஒன்று, அதாவது முடிவான சிருஷ்டிக் காரணம் ஒன்று

—கடவுள் ஒன்று—இருக்கிறது என்று அவர் வலியுறுத்தினர். பொருள் முதல் வாதத்திற்கும், கருத்து முதல் வாதத்திற்குமிடையே அரிஸ்டாடில் ஊசலாடினர் என்று லெனின் எடுத்துக் காட்டியுள்ளார்.

ஆதிகாலத்து கிரீஸ், ரோம் ஆகிய நாடுகளின் தத்துவார்த்திகளைப் பற்றிய முழுவிவரத்தையும், இந்தச் சிறு விளக்கத்தில் எடுத்துக்கூறுவது சாத்தியமில்லை. ஆனல் ஆதிகாலத்துச் சிந்தனையாளர்கள், பொருள் முதல் வாதத்தின் முதல் உருவத்தைத் (இயற்கைப் பொருள் முதல் வாதம், யதார்த்தம் பற்றிய ஒரு எளிய முரண்தர்க்கமுறை ஆகியவற்றை) தோற்றுவித்தார்கள் என்பதைப் புரிந்துகொள்வது அவசியமாகும். அந்தக் காலத்தில் விஞ்ஞானம், ஆரம்ப நிலையிலேயே இருந்ததாலும், பொருள் முதல் வாதிகளுக்குக் கிடைத்த விஞ்ஞானப் புள்ளி விவரங்கள் போதுமான அளவில் இல்லாதிருந்ததாலும், அவர்களது கருத்துக்கள் உள்ளூக்கமான யூகங்களாகவே இருந்திருக்க முடியும். அது உலகைப் பற்றிய எளிய, ஆனல் அடிப்படையில் சரியான கருத்து.

## 17, 18வது நூற்ருண்டின் பொருள் முதல் வாதமும், மதத்திற்கும் கருத்து முதல் வாதத்திற்கும் எதிரான அதன் போராட்டமும்.

அடிமைச் சமூகம், நிலப்பிரபுத்துவ சமூகத்திற்கு வழிவிட்டது. இதில் நிலப்பிரபுக்களும், திருச்சபையும் ஆதிக்கம் செலுத்தினர். இந்தக காலகட்டத்தில் தத துவ ஞானம் சமயசித்தாந்தத்தின் ஊழியனுகியது. ஆதிகாலச் சிந்தனையாளர்களின் பொருள் முதல்வாதக் கோட்பாடுகள், மறக்கப்பட்டன அல்லது திரித்துக்

கூறப்பட்டன. மதச்சார்புடைய கருத்து முதல்வாத உலகக் கண்ணோட்டம் ஆட்சி புரிந்தது. திருச்சபையின் பிடிப்பையும் மீறி, தத்துவஞானச் சிந்தனை வளர்ந்தது. ஆனால் இந்த வளர்ச்சி மெதுவாகவே நடைபெற்றது. அந்தக் காலத்தில் தான் சைனு, இந்தியா, அரபு நாடுகள் முதலிய தேசங்களில் அனேக பொருள் முதல் வாதக் கோட்பாடுகள் முன்வைக்கப்பட்டன. 15-வது நூற்றாண்டின் இரண்டாவது பகுதியிலிருந்து தத்துவ ஞானம் இயற்கை விஞ்ஞானத்துடன் நெருங்கிப் பிணைந்து வளர ஆரம்பித்தது.

அப்பாலைப்பொருள் முதல் வாதம் விரிவாகப் பரவிய 17, 18வது நூற்றாண்டுகளுக்கு இக்கூற்று மிகவும் பொருந்தும். எங்கெல்ஸ் எடுத்துக்காட்டியது போல, இயற்கை விஞ்ஞான வளர்ச்சியின் விளைவே அப்பாலைப் பொருள் முதல வாதம், 17—18-வது நூற்றாண்டின் பொருள் முதல் வாதத்தைப் புரிந்து கொள்வதற்கு அந்தக் காலத்து இயற்கை விஞ்ஞானத்தின் விசேஷமான பண்பு ஒன்றைத் தெரிந்துகொள்ள வேண்டும். தனிப்பட்ட பொருள்கள், நிகழ்வுகள், இவற்றைப் பரிசோதனைக்கு உட்படுத்தி ஆராய்வதே தனது முக்கியமான பணி என்று இயற்கை விஞ்ஞானம் கருதியது. ஆதிகாலத்து உலகின் விஞ்ஞானம் தனிப்பட்டபொருள்களையும் நிகழ்வுகளையும் ஆராய்வதில் அக்கறை செலுத்தவில்லை. அதோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது மேலே கண்ட போக்கு ஒரு முக்கியமான முன்னேற்றமாகும். ஆனால் அதில் சில எதிர்மறை அம்சங்களும் இருந்தன. பொருள்களுக்கு இடையேயுள்ள தொடர்புகளைப் புறக்கணிக்கும் ஒரு பழக்கத்தை விஞ்ஞானிகளிடையே அத்தகைய ஆய்வு தோற்றுவித்தது. உலகம் இணைந்து வளர்ச்சி அடையும் ஒரு முழுமையாகக் கருதப்

படாமல் தனிப்பட்ட பொருள்கள் நிகழ்வுகள் இவற்றின் கலவையாகவே கருதப்பட்டது. இதுவே அப்பாலே முறையின் தனிப்பட்டபண்பு என்றுநாம்முன்னரேகூறியுள்ளோம், அந்தக் காலத்தில் மிகுந்த வளர்ச்சியடைந்திருந்த விஞ்ஞானம் இயந்திரவியலேயாகும். எனவே இயற்கையின் நிகழ்ச்சிகள் அனைத்தையும், இயந்திரவியல் ஒன்றை மட்டுமே கொண்டு விளக்க, பொருள் முதல் வாதிகள் முயற்சித்தனர். இவ்விதமாக இயற்கை விஞ்ஞானத்தின் வளர்ச்சிப் பாதையே அது இயற்கை நிகழ்வுகளை அப்பாலே முறை மூலம் அணுகுவதற்குக் காரணமாக இருந்தது. எங்கெல்ஸ் எடுத்துக்காட்டிய படி இயற்கை விஞ்ஞானத்திலிருந்து இந்த முறை தத்துவ ஞானத்திற்கும் பரவியது.

**17-வது நூற்ருண்டின் பொருள் முதல் வாதம்**

17-18 வது நூற்ருண்டின் பொருள் முதல் வாதத்தை முதலில் எடுத்துக் கூறியவர் பிரான்ஸிஸ் பேக்கன் (1561–1626) எனும் ஆங்கிலத் தத்துவார்த்தியாகும். அவர் மத்திய காலத் தத்துவ ஞானத்தை வன்மையாகக் கண்டித்தார். ஏனெனில் அது மதத்தின் ஊழியனுக இருந்ததோடு, மதத்தை நியாயப்படுத்தவும் முயற்சித்தது. அத்தகைய தத்துவ ஞானம் கடவுளுக்குத் தன்னை அர்ப்பணம் செய்து கொள்ளும் கன்னிகாஸ்திரீயைப் போன்று மலட்டுத் தனம் கொண்டது என்று பேக்கன் கூறினர். உண்மையான தத்துவ ஞானம் இயற்கையை ஆராய்ந்து, இயற்கையில் நிகழும், நிகழ்வுகளிலிருந்து முடிவுகளை எடுக்க வேண்டும். பேக்கனின் விளக்கத்தில் கிளர்ச்சியூட்டும் கவிதா உணர்ச்சிப் பிரகாசத்துடன் பொருள் மனிதனைப் பார்த்துப் புன்னகைக்கிறது என்று மார்க்ஸ் கூறுகிருர்.

பரிசோதனைக்கு பேக்கன் மிகுந்த முக்கியத்துவம் அளித்தார். இயற்கையைப் பரிசோதனைகள் மூலம் ஆராயும் முறையைப் புறக்கணித்த மத்திய காலத் தத்துவார்த்திகளை அவர் வன்மையாகக் கண்டித்து அவர்களை யதார்த்த வாழ்வுடன் தொடர்பற்ற பண்பியலான கருத்துக்களால், வலை பின்னும் சிலந்திகளுக்கு ஒப்பிட்டார்- உண்மைத் தத்துவ ஞானியை அவர் மலர்களிலிருந்து மதுவைச் சேகரித்து, உண்மை யதார்த்தத் தேனாக மாற்றும் தேனீக்களுக்கு ஒப்பிட்டார். பேக்கன் ஒரு எளிய,— ஆனால் அந்தக் காலத்தில் மிக அற்புதமான— ஒரு கருத்தை வெளியிட்டார். விவரங்களை சேகரித்து ஆராய்வதில் அடிப்படையிலேயே முடிவுகளைப் பெற முடியும் என்பதே அந்தக் கருத்து. எனவே ஆழ்ந்து கவனிப்பதன் மூலமும், பரிசோதனைகளின் மூலமும் இயற்கையின் நிகழ்வுகள் ஆராயப்பட வேண்டும். யதார்த்தத்தை ஆராய்வதற்கு ஒரு செயலாராய்ச்சி (அதாவது பரிசோதனை) முறையை அவர் தோற்றுவித்தார். விஞ்ஞான வளர்ச்சிக்கும், தத்துவஞானச் சிந்தனையின் பிற்காலத்தில், இது முக்கியத்துவம் வாய்ந்ததாகத் திகழ்ந்தது.

17-வது நூற்றாண்டுப் பொருள் முதல்வாதிகளில் முக்கியமான ஒருவர் ஆங்கிலத் தத்துவ ஞானியாகிய ஹாப்ஸ் (1588-1679) என்பார். பேக்கனின் பொருள் முதல் வாதத்தை ஒழுங்கமைத்தவர் என்று இவரை மார்க்ஸ் குறிப்பிடுகிறார். யாந்திரீகப் பொருள் முதல் வாதத்தின் தனிப்பட்ட பண்புகள் அனைத்தும் அவரது தத்துவஞானத்தில் காணப்படுகின்றன. உதாரணமாக அவர் எல்லா இயற்கைப் பொருள்களையும்—மனிதன் உள்பட—இயந்திரங்களுக்கு ஒப்பிட்டார். யாந்திரீக இயக்கம் ஒன்றையே அவர் ஒப்புக்கொண்டார். உணர்ச்

சிகள், புலனறிவுகள் முதலியவற்றை இதன் மூலம் விளக்கினார். நாம், மணியின் ஓசையைக் கேட்கிறோம். ஏனெனில் அதன் இயக்கம் காற்றில் அலைகளை உண்டாக்குகிறது. அவை நம் காதிலும். பின்னர் நரம்புகளிலும் இயக்கத்தைத் தோற்றுவிக்கின்றன. அதன்மூலம் நாம் கேட்கிறோம்; இயந்திரங்களில் நடைபெறுவது போலவே வரிசையான இயக்க மாற்றங்களால் அனைத்தும் நிகழ்கின்றன. அரசாங்கத்தைக் கூட அவர் ஒரு ராக்ஷஸ இயந்திரமாகவே உருவகித்தார். பைபிளில் வரும் ராக்ஷஸக் கடல் மிருகத்தின் பெயரால் இதை "லெவாதியான்" என்று அழைத்தார். இயந்திரவியல் அடிப்படையில் அனைத்தையும் விளக்குவது சாத்தியமில்லை என்பது இன்று நமக்குத் தெரியும். ஆனால் அந்தக் காலத்தில் இவை முற்போக்கான கருத்துக்களாக இருந்தன.

தனது பொருள் முதல் வாதக் கருத்துக்களிலிருந்து நாத்திக முடிவுகளைப் பெற்றதே ஹாப்ஸின் தனிச் சிறப்பு. பருப்பொருள் காரணங்களால் வளர்ச்சியடையும் உலகிற்கு இயற்கைக்கு மேற்பட்ட ஒரு சக்தி தேவையில்லை என்று அவர் எடுத்துக் காட்டினார். பேக்கனின் தத்துவத்தோடு ஒப்பிடும்போது இது ஒரு முன்னேற்றமாகும்,

இந்தக் கால கட்டத்தில் பிரான்ஸ் நாட்டில் புகழ் பெற்ற தத்துவார்த்தியும், கணித மேதையுமான டெஸ்கார்டீஸ் (1596—1650) தனது தத்துவ ஞானக் கோட்பாட்டை வளர்த்துக் கொண்டு வந்தார். டெஸ்கார்டீஸ் ஒரு இரு பொருள் வாதி (துவைதி) இரண்டு தனித்தனி மூல மெய்மைகள்—பண்டமும், தன்னறிவும்—உலகின் அடிப்படையாக உள்ளன என்று அவர் கூறினார். இயற்கையின் நிகழ்ச்சிகளை விளக்கும் போது டெஸ்கார்டீஸ்

பொருள் முதல் வாதியாக உள்ளார். இந்தத் துறையில் பருப்பொருளற்ற ஒரு வெளிச் சக்திக்கு அவசியமில்லை என்பதை அவர் உணர்கிறார், "அவரது பௌதீகத்தினுள் பண்டம் ஒன்றே பொருளாக உருவத்திற்கும் அறிவிற்கும் அடிப்படையாக உள்ளது",‡ என்று மார்க்ஸ் எழுதினார். இயற்கையில் உள்ளது அனைத்தும் பண்டம் இயக்கத்தின் அடிப்படையிலேயே நடைபெறுகிறது. (இந்த இயக்கத்தை ஒரு வெளியில் ஏற்படும் பொருளின் எளிய இடப் பெயர்ச்சி என்று டெஸ்கார்டீஸ் கருதினார்.) யாந்திரீகப் பொருள் முதல் வாதத்தின் கண்ணோட்டம் இதுதான் என்று நாம் பார்த்தோம். என்னும் தன்னறிவு உணர்ச்சிகள், இன்ன பிற உள நிகழ்ச்சிகளை விளக்கும்போது டெஸ்கார்டீஸ் ஒரு கருத்து முதல்வாதியாகி விடுகிறார். இந்த சந்தர்ப்பத்தில் அவர் இயற்கையுடன் தொடர்பற்று, பகுத்தறிவுக்கு நிர்ணயமான முக்கியத்துவம் அளிக்கிறார்.

பகுத்தறிவுவாதத்தின் சிருஷ்டி கர்த்தா டெஸ்கார்டீஸ். நமது அறிவின் ஒரே மூலஸ்தானம் பகுத்தறிவே என்று அவர் கருதினார். இது ஒரு தலை நோக்கான கண்ணோட்டமே. எனினும் அந்தக் காலத்தில் இதற்கு ஒரு முற்போக்கு முக்கியத்துவம் இருந்தது. ஏனெனில் திருச்சபைக்குக் கண்மூடித்தனமாகக் கீழ்படிய வேண்டும் என்று போதித்த மதத்திற்கு எதிராக இது மனிதனின் பகுத்தறிவை உயர்த்தியது. மதத்திற்கு எதிராக ஒரு ஜீவ மரணப் போராட்டத்தை நடத்தி, விஞ்ஞானம் தனக்கென ஒரு இடத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்த

---

‡ மார்க்ஸ், ஏங்கெல்ஸ், "புனிதக் குடும்பம் அல்லது, விமர்சன ஆராய்ச்சிக் கட்டுரையின் நுண்ணாய்வு", மாஸ்கோ 1956. பக். 169.

அந்தக் காலத்தில், இது மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது.

17-வது நூற்றுண்டில், முன்னணியிலிருந்த பொருள் முதல் வாதிகளில் புகழ்பெற்ற டச்சுக்காரரான ஸ்பைநோஸா (1632-1677) எனும் சிந்தனையாளரும் ஒருவர். டெஸ்கார்டீஸின் இருபொருள் வாதத்திலிருந்து விடுபட்டு அவர், உலகத்திலுள்ளவை அனைத்தும் ஒரே பொருளை, அதாவது இயற்கையை அடிப்படையாகக் கொண்டது என்று கூறினர். அது நிரந்தரமானது. அது சிருஷ்டிக்கப்படுவதுமில்லை, முடிவுமற்றது.

இயற்கைக்கு தெய்வீக சக்தி ஒன்றும் தேவை இல்லை. ஏனெனில் அது தன்னிடத்தில் உள்ளார்ந்துள்ள விதிகளின் அடிப்படையிலேயே வளர்ச்சி அடைகிறது. உலகமே உலகத்தின் காரணம் என்று கூறியதின் மூலம் அவர் இதை வெளியிட்டார்.

ஸ்பைநோஸா பொருள் முதல் வாதி மட்டுமல்ல; அவர் ஒரு பெரும் நாத்திகர் என்பது இதிலிருந்து தெளிவாகிறது. ஏனெனில், கடவுள் ஒருவருக்கே உரித்தானது என்று திருச்சபை கூறும் சிருஷ்டிசக்தி, இயற்கையிடத்திலேயே இருக்கிறது என்று அவர் எடுத்துக் காட்டினர். 17-வது நூற்றுண்டில் "ஸ்பைநோஸிஸ்டு" என்ற வார்த்தை "நாத்திகர்" என்ற வார்த்தைக்குச் சமமாகக் கருதப் பட்டதில் வியப்பில்லை. எனவே ஸ்பைநோஸாவின் தத்துவ ஞானம் திருச்சபையின் மூர்க்கமான வெறுப்பைக் கிளறி விட்டது. அவர் மேல் அவதூறு பொழியப்பட்டது. பல வகைகளிலும் அவர் துன்புறுத்தப் பட்டார். ஆனல் அவர் உறுதியுடன் தனது பொருள் முதல் வாதத்தையும், நாத்திக வாதத்தையும் கடைப்பிடித்தார்.

18-வதுநூற்றுண்டின் பிரஞ்சுபொருள் முதல் வாதம்

18-வது நூற்றுண்டின் பிரஞ்சு பொருள் முதல் வாதத்தின் தோற்றம், நாம் இப்போது விவாதித்துக் கொண்டிருக்கும் காலகட்டத்தில் பொருள் முதல் வாத வளர்ச்சியின் ஒரு மிக முக்கியமான நிலையாகும். டிடெரோட் (1713-1784) ஹோல்பாச், (1723-1789) ஹெல்வீஷியஸ் (1715 -1771) ஆகியோர் அதை உபதேசித்தார்கள். 1789-ல் நடந்த பிரஞ்சு பூர்ஷுவா புரட்சியின் போது, நிலப் பிரபுத்துவத்திற்கும், அதன் மத-கருத்துவாத சித்தாந்தத்திற்கும் எதிரான போராட்டத்தில், இந்தத் தத்துவ ஞானம் புரட்சிகர பூர்ஷுவாக்களுக்கு ஒரு தத்துவார்த்த ஆயுதத்தை அளித்தது. பிரான்ஸில் நடந்த தத்துவ ஞானப் புரட்சி; அரசியல் புரட்சிக்கு ஓர் அறிமுகமாக இருந்தது என்றும், முழு முதற் கொள்கைக்கும் திருச் சபைக்கும் எதிரான போராட்டததில், புரட்சிகர பூர்ஷுவாக்களுக்கு, நம்பிக்கையின் சின்னத்தை, ஒரு தத்துவார்த்தப் பதாகையை, பிரஞ்சுப் பொருள் முதல்வாதிகள் அளித்தனர் என்றும் எங்கெல்ஸ் எழுதினுர். லெனின் கூறியது போல "கூர்மையான, எழுச்சியுள்ள, திறமை மிக்க அவர்களது நூல்கள் சொல் நயத்தோடும், அப்பட்டமாகவும், அன்றிருந்த மதபோதனு வாதத்தைத் தாக்கின' *

பிரஞ்சு பொருள் முதல்வாதிகளின் நூல்களை சமயக் குழப்ப வாதத்திற்கு எதிரான போராட்டத்தின் ஆயுதசாலை, வெடி மருந்துச் சாலை என்று லெனின் கருதினுர்.

---

* லெனின்,— "மார்க்ஸ் ஏங்கெல்ஸ்-மார்க்ஸிஸம்", பக். 573

17-வது நூற்ருண்டின் பொருள் முதல்வாதத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது, டிடிரோட், ஹோல்பாச், ஹெல்வீஷியா ஆகியோரின் பொருள் முதல் வாதம் கணிசமான அளவு முன்னேற்ற முடையதாகத் திகழ்ந்தத. இயற்கை, தனது சொந்த விதிகளின் அடிப்படையில் இயற்கையாகவே வளர்ச்சியடையும் ஒரு ஒருமை அமைப்பு என்ற பிரஞ்சு பொருள் முதல் வாதிகளின் கருத்தில் இதை நாம் நன்கு காண்கிருேம். "இயற்கையின் அமைப்பு" என்று ஹோல்பாச் பெயரிட்டது ஒரு தற்செயல் நிகழ்ச்சி அல்ல. "இயற்கையே அனைத்திற்கும் காரணம். அது தாளுகவே இருக்கிறது. அது முடிவற்று இருக்கும், செயல்படும். அதுவே அதன் காரணம். அதன் இயக்கம் அதன் அவசியமான இருப்பின், அவசியமான விளைவு," என்று அவர் எழுதினுர்.

பண்டம் இயக்கம் இவற்றின் ஒருமையை உணர்ந்தது பிரஞ்சுப் பொருள் முதல் வாதத்தின் முக்கியமான சாதனையாகும். ஆனுல், இயக்கமென்பது, ஒரு வெளியில் நடைபெறும் யாந்திரீகமான இடப்பெயர்ச்சியே என்றும் இயற்கையின் விதிகள் நிரந்தரமானவை மாற்ற முடியாதவை என்றும், கருதியதன் மூலம் அவர்கள் அப்பாலைப் பொருள் முதல் வாதத்தைச் சார்ந்து இருந்தார்கள்.

**18-வதுநூற்ருண்டின் ரஷ்யப் பொருள் முதல் வாதம்.**

ரஷ்யப் பொருள் முதல் வாதவிஞ்ஞானத்தின் பிறப்பும், வளர்ச்சியும், மிக்ஹெயில் லோமோனேஸோவ் (1711—1765); அலெக்சாந்தர்ராதிஷ்சேவ் (1749—1802) ஆகிய இருவரின் பெயருடன் இணைந்துள்ளன. முன்னவர் மாபெரும் மேதைகளில் ஒருவர் எனப் புகழ்பெற்றவர். அவர் ஒரு பௌதிகவாதி, இரசாயனவாதி. புவி இயலாளர், கவிஞர்; இரண்டாமவரும், புரட்சியாளர், எழுத்தாளர் என்ற

முறையிலே பிரபலமானவர்தான். தத்துவஞானச் சிந்தனையின் வளர்ச்சிக்கு இருவரும் பெருந்தொண்டாற்றியுள்ளனர். தனது திறமைக் களஞ்சியத்தால் பல்வேறு விஞ்ஞானத் துறைகளிலும், ஆராய்ச்சி செய்த லோமோனேஸோவ் அவற்றிலிருந்து கிடைத்த புள்ளி விவரங்களின் அடிப்படையில் தன் பொருள் முதல் வாதக் கருத்தை முன்வைத்தார். பண்டத்தின் அழியாத்தன்மை விதியை அவர் கண்டுபிடித்தது குறிப்பிட்ட முக்கியத்துவம் வாய்ந்ததாகும், பொருள் முதல்வாதத்திற்கு விஞ்ஞானரீதியான ஊர்ஜிதத்தை இந்த விதி அளித்தது. ஏனெனில் இந்த விதியின்படி பண்டத்தை சிருஷ்டிக்கவும் முடியாது, முற்றிலும் அழிக்கவும் முடியாது என்ற முடிவு தோன்றுகிறது.§

பொருள்களின், அணு, மூலக்கூறு அமைப்புக் கோட்பாட்டை லோமோனேஸோவ் வளர்ச்சி அடையச் செய்தார். பண்டத்தின் இயக்கம் பற்றிய புறவயமான விதிகளையும், உலகில் நடைபெறும் நிகழ்ச்சிகளின் காரணங்களையும், ஆராய வேண்டியதன் அவசியத்தை அவர் எடுத்துக் காட்டியது விஞ்ஞானத்திற்கும், தத்துவ ஞானத்திற்கும் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது.

அவரது காலத்துச் சமூகச் சிந்தனையாளர்களில் முதன்மையானவர்களில் லோமோனேஸோவ் ஒருவர். மக்களிடமிருந்து தோன்றிய அவர் பண்ணை அடிமை ¶

§ இந்த விதியின் தத்துவஞான முக்கியத்துவத்தைத் தெரிந்துகொள்ள மூன்றாவது சொற்பொழிவைப் பார்க்கவும்.

¶ பண்ணை அடிமை முறை : உடனடி உற்பத்தியாளர்களான உழவர்கள், நிலப்பிரபுக்களை நேரடியாகச் சார்ந்திருந்த இந்த முறை ஆளும் வர்க்கத்தின் நலன்களுக்காக, நிலப்பிரபுத்துவ அரசாங்கத்தால் நடைமுறைக்குக்கொண்டு வரப்பட்டது.

முறையைக் கண்டனம் செய்தார். ரஷ்ய மக்களுக்கு அறிவொளி ஊட்டவும், அவர்களுக்கு விமோசனம் கொடுக்கவும், விஞ்ஞானம் தொண்டு செய்ய வேண்டு மென்று அவர் வற்புறுத்தினர். ரஷ்யத் தததுவ ஞானத் தில் பொருள்முதல் வாதப்போக்கின் தந்தை அவரே.

ராதிஷ்சேவ் முதன்மையான பொருள்முதல்வாதியா கவும், புரட்சிகரமான சிந்தனையாளராகவும் இருந்தார். பண்ணை அடிமை முறைக்கும், ஜாரின் தன்முனைப்பாட் சிக்கும், கொடுங்கோன்மைக்கும், எதிரான போராட்டத் திற்குத் தன் திறமைகள் அனைத்தையும் அர்ப்பணித் தார். லொமோனோஸோவைப் பின்பற்றி ரஷ்யாவில் பொருள் முதல்வாத மரபைத் தொடர்ந்து வளர்த்தார். அவர்·தனது தத்துவஞான நூல்களில், தத்துவஞானத் தின் அடிப்படைப் பிரச்சினைக்குப் பொருள் முதல்வாத விடையைக் கொடுத்ததோடு மனித ஆன்மா என்னும் கருத்தையும் மறுதலித்தார். எனவே, மறைபொருள் வாதத்திற்கும், சமயசித்தாந்தத்திற்கும் எதிரான போராட்டத்திற்கு அவரது நூல்கள் மிகுந்த முக்கியத் துவம் வாய்ந்தவையாக இருந்தன. ஒரு சிந்தனையாளர், என்ற முறையிலும், புரட்சியாளர் என்ற முறையிலும் அவர் செய்த சேவைகளை லெனின் பெரிதும் பாராட்டினர்.

**பெர்க்லி, ஹியூம் ஆகியோரது கருத்து முதல்வாதம்.**

18-வது நூற்றுண்டின் தொடக் கத்தில், இங்கிலாந்து நாட்டில், பெர்க்லி (1684—1753) ஹியூம் (1711—1776) ஆகியோரால் தோற்றுவிக்கப்பட்ட தன்வயக் கருத்து முதல் வாதம் விரிவாகப் பரவி இருந்தது. பிஷப் பெர்க்லி, புற உலகம் இருக்கிறது என்பதையே மறுத்தார். மனிதன் மட்டுமே (தன்னிலை) அவனது

தன்னறிவு மட்டுமே உண்மையில் இருப்பது. மனிதன் பார்த்தோ, கேட்டோ, தொட்டோ, உணர்ந்தறியும் போதுதான் பொருள் இருக்கிறது. மனிதன் அவைகளை உணர்ந்தறியவில்லையானால் பொருள்கள் இருப்பதில்லை. உலகம் தன்னிலையின் தன்னறிவிலும், புலன் உணர்வுகளிலுந்தான் இருக்கிறது. ''இருத்தல் என்பதற்கு உணர்ந்தறியப் படுதல் என்று அர்த்தம். பொருள்கள் புலன் உணர்வுகளின் தொகுப்பே.'' தன்னிலை (அதாவது மனிதன்) இவ்வுலகைச் சிருஷ்டிக்கிறது என்று கூறுவதை இது ஒக்கும். எனவே இத்தகைய கருத்து முதல் வாதத்திற்கு ஏன் தன் வயக் கருத்து முதல் வாதம் என்று பெயர் கொடுக்கப் பட்டது என்பது விளங்கும். இதைத் தொடர்ந்து செல்வோமானால், தவறாது நம்மை அது ஒரு தனி வாதத்தில் கொண்டு போய் விடும். அதாவது ஒரு மனித உயிர் (தன்னிலை) மட்டுமே இருக்கிறது; உலகனைத்தும் அதனால் தோற்றுவிக்கப் படுகிறது என்ற முடிவுக்குக் கொண்டு செல்லும்.

பெர்க்லி, பொருள் முதல் வாதத்திற்கும், நாத்திக வாதத்திற்கும், பெரும் பகைவராக இருந்தார். எனவே பொருள் முதல் வாதிகள், அவரது கொள்கைகளைக் கடுமையாக விமரிசித்ததுடன், அவற்றை உறுதியுடன் எதிர்த்தனர். உதாரணமாக டிடெரோட், பெர்க்லியைப் பற்றி, ''பித்தம் தலைக்கேறிய ஒரு நேரத்தில், புலனுணர்ச்சியுள்ள ஒரு பியானோ வாத்தியம், இந்த உலகிலேயே தான் ஒரு பியானோ மட்டுந்தான் இருப்பதாகவும் உலகிலுள்ள இசையனைத்தையும் தானேதோற்றுவித்ததாகவும் எண்ணியது''‡ என்று எழுதினார்.

---

‡ டிடரோட் Entretein entre Alemhent et Didenct பாரிஸ் மார்ஸல் டிடியர் நூலகம், 1951 பக். 30.

உலகம் நம் தன்னறிவில் தான் இருக்கிறது என்ற, தன்வயக் கருத்து முதல்வாதக் கொள்கையை வாழ்க்கையும், நமது செயல்முறை நடவடிக்கைகளும் மறுதலிக்கின்றன. உணர்ந்து அறிகின்ற ஒரு மனித ஜீவன் (தன்னிலை) மட்டுமல்லாது, பொருள்களையும், நிகழ்வுகளையும் மக்களையுங்கொண்ட உலகம் அனைத்தும் இருக்கிறது என்று, நமது அன்ருடச் செயல்களும், ஆக்கக் கிரியைகளும், நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. சமூகச் செயல்களுக்கு முன்னுல் தன்வயக் கருத்து முதல்வாதம் சக்தியற்றுப் போகிறது.

மற்ருெரு ஆங்கிலத் தத்துவஞானியாகிய டேவிட் ஹியூம், மனிதனின் மனம், புலன் உணர்வுகளுடன் தான் தொடர்பு கொள்கிறதே தவிர உண்மையான பொருள்களுடன் அல்ல என்ற நிலையிலிருந்து தொடங்கினுர். ஹியூமின் கருத்துப்படி, மனிதன் தன் புலன் உணர்வுகளை மட்டுமே அறிவான், புற உலகம் உண்மையிலேயே இருக்கிறதா அல்லது உண்மையில் அது என்ன என்ற கேள்விக்கு அவனுல் விடையளிக்க முடியாது.

உண்மையான பொருள்கள் இருப்பதை பெர்க்லி மறுத்தார். ஆனுல் ஹியூம், அவை இருக்கின்றனவா என்று சந்தேகப்பட்டார். எனவே அவர் சந்தேக வாதத்தை மேற்கொண்டார். உலகத்தின் இருப்பு, அதை ஆராய்தல், அறிதல் ஆகியவற்றைப்பற்றி சந்தேகம் தெரிவிக்கும் தத்துவஞானப் போக்கு சந்தேகவாதம் எனப்படும்.

பெர்க்லி, ஹியூம், இவர்களது தன்வயக் கருத்து முதல் வாதம், லெனினுல் அவரது "பொருள் முதல்வாதமும், அனுபவவாத விமர்சனமும்" எனும் நூலில் கடுமையாக விமரிசிக்கப் பட்டது.

## 18-வது நூற்றுண்டின் முடிவிலும், 19-வது நூற்றுண்டின் தொடக்கத்திலும் ஜெர்மானியத் தத்துவ ஞானத்தில் பொருள் முதல் வாதத்திற்கும் கருத்துமுதல் வாதத்திற்கும் போராட்டம்.

நாம் மேலே கூறியனவற்றிலிருந்து, 17, 18-வது நூற்றுண்டுகளின் பொருள் முதல் வாதம், ஆதிகாலத்துப் பொருள் முதல் வாதத்தை விட முன்னேற்ற மடைதது என்பது தெளிவாகிறது. விரிவான பல தத்துவ ஞானப் பிரச்சனைகளுக்கு அது விடை கண்டது. அது விஞ்ஞானத்துடன் மேலும் நெருக்கமாக இணைக்கப்பட்டது. இந்தக் காலக் கட்டத்தில் கருத்து முதல் வாதத்திற்கும், மதத்திற்கும் பெரும் அடி கொடுக்கப்பட்டது.

18-வது நூற்றுண்டின் முடிவிலும், 19-வது நூற்றுண்டின் தொடக்கத்திலும், விஞ்ஞானம், சமூக வாழ்வு, இவற்றிலே ஏற்பட்ட வளர்ச்சியால் அந்தக் காலத்தில் பழக்கத்தில் இருந்த அப்பாலை முறைச் சிந்தனையை நீக்கவேண்டியது அவசியமாயிற்று. ஜெர்மன் நாட்டு சாஸ்திரீய தத்துவஞானம், குறிப்பாக ஹெகல் (1770—1831) ப்யூர்பாக் (1804-1872) இவர்களின் தத்துவஞானம் இதில் பெரும் பங்காற்றியது.

ஹெகல் தோற்றுவித்த தத்துவஞான முறை புறவயக் கருத்து முதல் வாதத்தைச் சேர்ந்தது. இயற்கை சமூகம், இவற்றின் அடிப்படையாக இருப்பது ஒரு முழுமுதற் கருத்து அல்லது உலக ஆன்மா, என்றும், அது இயற்கையிடமிருந்தும், மனிதனிடமிருந்தும் தனித்து சுயேச்சையாக நிரந்தரமாக இருக்கிறது என்றும் புறவயக் கருத்து முதல் வாதம் கருதுகிறது.

ஆன்மாவின் மற்ருெரு உருவே இயற்கை என்று அவர் வலியுறுத்திஞர். இயற்கையினிடத்தில்

ஆன்மா மற்ருெரு உருவத்தில், அதாவது உண்மை யான பொருள்களின் உருவத்தில் இருக்கிறது என்ற கருத்து இதில் உள்ளார்ந்துள்ளது. முழுமுதல் கருத்தே யதார்த்தத்தின் சிருஷ்டி கர்த்தா. யதார்த்தம் கருத்தின் புறவெளிப்பாடே தவிர வேருென்றும் இல்லை. உலகம் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டது என்ற மதக் கருத்தை மூடிமறைத்து, இங்கே ஹெகல் புகுத்துகிருர் என்பதை நீங்கள் கவனித்திருப்பீர்கள். எனினும் ஹெகலின் தத்துவஞானத்தில் மதிப்புமிக்க பல கருத் துக்கள் உள்ளன. உலக ஆன்மா முடிவற்று இயங்கு கிறது, வளர்ச்சி அடைகிறது என்ற கோட்பாட்டில் இவற்றைக் காண்கிருேம். இதுவே அவரது புகழ் பெற்ற முரண் தர்க்கமாகும். மார்க்ஸும், எங்கெல்ஸும் இந்தக் கோட்பாட்டிற்கு மிகுந்த முக்கியத்துவம் அளித் தார்கள் என்பதைப் பின்னுல் காண்போம்.

ஹெகலின் முரண்தர்க்க முறை, கருத்து முதல் வாத அடிப்படையில் அமைக்கப்பட்டிருந்த போதிலுங்கூட மனித சிந்தனையின் பெரும் சாதனைகளில் ஒன்ருகும். தத்துவஞானத்தின் வரலாற்றில் முதல் முறையாக ஹெகல் முரண்தர்க்கத்தின் அடிப்படை விதிகளையும் வகைகளை யும் வரையறை செய்தார் எனினும் உண்மையில், விஞ்ஞான ரீதியான ஒரு முறையைத் தோற்றுவிப்பதில் அவர் வெற்றியடையவில்லை. உலக ஆன்மா, தத்துவ ஞானக் கருத்துக்கள், வகைகள், இவையே இந்த விதி களின்படி வளர்ச்சியடைகின்றனவேயன்றி, சமூகம் அல்ல என்று அவர் கருதினுர். அவரது முரண்தர்க்கம் இயற்கையின் முரண்தர்க்கம் அல்ல, ஆனுல் "தூய சிந்தனை"யில் நிகழும் கருத்துக்களின் முரண்தர்க்கமே யாகும்.

இதன் விளைவாகத் தனது சொந்த, ''வளர்ச்சிக் கோட்பாட்டிலிருந்து'' முரண்தர்க்கத்திலிருந்து ஹெகல் ஓரளவு விலகிச் சென்றார். அவர் முரண்தர்க்க முறையைக் கைக்கொண்ட போதிலுங்கூட இயற்கையைப் பற்றிக் கூறும்போது, அதில் வளர்ச்சியே இல்லை என்று கருதினார். உலகிலே புதியதென்று எதுவுமே இல்லை. ஒரே வகையான கிரியைகளை முடிவற்றுத் திரும்பத் திரும்பச் செய்வதே இயற்கைக்கு விதிக்கப் பட்டுள்ளது, என்று அவர் கூறினார்.

மனித வரலாற்றைப் பொருத்த மட்டில், சென்ற காலத்தில்தான் வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது என்று ஹெகல் கருதினார். சமூக ஆதீனங்களின் அடிப்படையில் அமைந்த பிரஷ்ய சட்டமுறை முடியாட்சியின் தோற்றத்தோடு சமூக முன்னேற்றத்தின் எல்லை அடையப்பட்டுவிட்டது என்று அவர் எண்ணினார்.

நீங்கள் இந்த சமயத்தில் ஒரு கேள்வியைக் கேட்கலாம் முரண்தர்க்கம் எதையுமே நிரந்தரமானது, மாறுதலடையாதது, இறுக்கமானது என்று ஏற்றுக்கொள்வதில்லை. ஹெகல் ஒரு முரண்தர்க்கவாதி. எனினும் அவர் இயற்கையின் வளர்ச்சியை மறுக்கிறார். சமூகத்தின் வளர்ச்சிக்கு வரம்பிடுகிறார். இது எப்படி நேர்ந்தது? இது முரண்பாடு இல்லையா? ஆம்! ஹெகலின் தத்துவஞானத்தில், கருத்து முதல் வாத அமைப்புக்கும் (அதாவது ''முழுமுதல் கருத்தின்'' இருப்பின் உருவங்களே இயற்கையும், சமூகமும் என்ற அவருடைய கோட்பாடு) முரண்தர்க்க முறைக்கும் இடையே, முடிவற்ற வளர்ச்சி எனும் கோட்பாட்டிற்கும் அந்த வளர்ச்சிக்கு முற்றுப்புள்ளி வைக்கும் அப்பாலை முறைக்கும் இடையே, ஒரு முரண்பாடு இருக்கத்தான் செய்கிறது. ஹெகலின் முரண்தர்க்க முறை அவரது அப்பாலை

அமைப்புக்கு வளைந்து கொடுத்தது என்பதை நீங்கள் ஏற்கனவே கவனித்து இருப்பீர்கள். இதோடு இணைந்து ஹெகலின் பிற்போக்கான சமூக அரசியல் கருத்துக் களும் உள்ளன, அவர் போரைப் புகழ்ந்து, சமா தானத்தை எதிர்த்தார். ''தேர்ந்தெடுக்கப்பட்ட ஜெர்மன் மக்களை''ப் பற்றிச் சில இனவெறிக் கருத்துக்களுக்கும் அவர் பொறுப்பாளியாவார். இவற்றையும், இன்னபிற கருத்துக்களையும், பிற்காலத்தில் ஏகாதிபத்தியக் கருத்து முதல் வாதிகள் பற்றிக் கொண்டார்கள். எனி னும் ஹெகலின் முரண்தர்க்க முறை அதற்குப் பின் வந்த முற்போக்கான தத்துவஞானச் சிந்தனையின் வளர்ச்சியின் மேல் மகத்தான ஆதிக்கம் செலுத்தியது. அது மார்க்ஸிஸத்தின் தத்துவார்த்த மூலங்களில் ஒன்ருயிற்று. ஆனுல் அவரது கருத்து முதல் வாதத் தத்துவஞானம், எல்லாக் கருத்து முதல் வாதங்களைப் போலவே, மனித அறிவு எனும் மாபெரும் மரத்தில் ஒரு மலட்டு மலராகவே இருந்தது.

ஹெகலின் கருத்து முதல் வாதம், லுட்விக் ப்யூர் பாச்சின் தாக்குதலுக்கு உள்ளாயிற்று. ஜெர்மானிய, யூக தத்துவஞானத்தின் நீண்ட நெடுங்கால ஆதிக்கத் திற்குப்பின், 17, 18-வது நூற்ருண்டுகளின் பொருள் முதல் வாத மரபுகளை மீண்டும் தோற்றுவித்ததே ப்யூர் பாக்கின் முதன்மையான சிறப்பாகும். உள்ளதனைத் திற்கும் இயற்கையே அடிப்படை என்பதே அவரது தத்துவஞானத்தின் தொடக்கம். இயற்கையே மனிதனை யும், அவனது தன்னறிவையும் தோற்றுவித்தது. விஞ் ஞானத்திற்கும், தனி ஒரு அடிப்படையாக இருப்பது பருப்பொருள் உலகமே. இயற்கையுடன் தொடர்பற்ற தத்துவஞானம் காலியானது, பயனற்றது.

மானிடப் பொருள் முதல் வாதம் என்று கூறப்படும் பொருள் முதல் வாதத்தைத் தோற்றுவித்தவர் ப்யூர்பாக். ப்யூர்பாக்கின் கருத்துப்படி, இயற்கையின் ஒரு பகுதி என்ற வகையில் மனிதனே தத்துவ ஞானத்தின் முக்கியமான உட்பொருளாக வேண்டும். தத்துவ ஞானம் மனிதனை ஆராய வேண்டும். ஆனால் மனிதனை இரண்டு தனித்தனிக் கூறுகளாகப் (உடல், ஆன்மா) பிரிக்கும் கருத்து முதல் வாதிகளின் வழியில் அல்ல. ப்யூர்பாக்கின் கருத்துப்படி மனிதன் பருப்பொருள், ஆன்மீகப் பொருள் இவற்றின் ஐக்கியமாகும். இந்த ஐக்கியத்தில் உடல்—மூளையின் செயல்—தன்னறிவைத் தோற்றுவிக்கிறது. ப்யூர்பாக்கின் மானிட வாதத்தின் பொருள் முதல் வாத அடிப்படை இதுதான். மதத்திற்கும், கருத்து முதல் வாதத்திற்கும் எதிரான போராட்டத்தில் இது ஒரு கூரிய ஆயுதமாகப் பயன்பட்டது. ஆனால் லெனின் எடுத்துக் காட்டியது போல, அது குறுகியதாக, போதாததாக இருந்தது. ஏனெனில் அது மனிதனை ஒரு உயிரியல் பொருளாகத்தான் காண்கிறது. ஆனால் மனிதன் சமூகத்தில் வசிக்கிறான். குறிப்பிட்ட சமூக உறவுகளின், வரலாற்று ரீதியாக வளர்ச்சி அடைந்த நிலைகளின் விளைவே மனிதன். இந்த அடிப்படையில்தான் நாம் மனிதனைப் புரிந்து கொள்ள முடியும். எனினும் "பொதுவாக மனிதனைப்" பற்றிய ஒரு கோட்பாட்டைத் தோற்றுவிக்க ப்யூர்பாக் விரும்பினார். ஸ்தூலமான சமூக உறவுகளுடன் தொடர்பற்ற, பண்பியலான மனிதனைப் பற்றிய கோட்பாடாகவே இது இருந்தது என்பதில் வியப்பில்லை. மனிதன் வசிக்கக் கூடிய சமூக, வரலாற்றுச் சூழ்நிலையைப் பற்றி ப்யூர்பாக்கின் கோட்பாடு யாதொன்றும் கூறவில்லை. முடி

வாகக் கொடுக்கப்பட்டு விட்ட ஒரு அப்பாலைச் சார மாகவே மனிதன் சித்திரிக்கப்படுகிருன்.

ப்யூர்பாக்கின் நாத்திக வாதம் முக்கியமானதாக இருந்தது. அவர் மதத்தின் திறமையுள்ள விமர்சகராக இருந்தார். தங்களது சொந்த உணர்ச்சிகளைத் தெய் வீகமாக்கி, மனிதர்களே கடவுளை சிருஷ்டிக்கிருர்கள் என்று அவர் எடுத்துக் காட்டினுர். மனிதனிடத்தில் உள்ளார்ந்துள்ள பீதி, அன்பு, நன்றி முதலிய உணர்ச்சிகளே கடவுளுக்கு ஏற்றிக் கூறப்படுகின்றன. ஆனுல் எல்லா மதங்களையும் விமர்சித்துப் புறக்கணிப்ப தற்குப் பதிலாக, ப்யூர்பாக் ஒரு புதிய மதத்தை, ''கடவு ளற்ற'' ஒரு மதத்தை, அன்பு மதத்தைத் தோற்றுவிக்க முயற்சித்தார். அவர் மதத்தை எதிர்த்துப் போரிட்டார். ஆனுல் ''மதம்'' என்ற சொல்லைக் கைவிட அவரால் முடியவில்லை. மக்களிடையே உள்ள உறவுகளைக் குறிக்க அச்சொல்லைப் பயன்படுத்தினுர். ப்யூர்பாக்கின் நாத்திக வாதத்தில் உள்ள முரண்பாடு இது.

அவரது பொதுவான தத்துவ ஞானம், விஞ்ஞான ரீதியான பொருள் முதல் வாத உலகக் கண்ணேட்டத் தின் வளர்ச்சியில் பெரும் பங்காற்றியது. அவரது பொருள் முதல் வாதக் கருத்துக்களும், ஹெகலின் முரண் தர்க்கமும், மார்க்ஸ், எங்கெல்ஸ் இவர்களால், தங்கள் தத்துவ ஞானத்தைத் தோற்றுவிக்கப் பயன் படுத்திக் கொள்ளப்பட்டன.

மேலே கூறியனவற்றிலிருந்து, முரண் தர்க்கமுறை (ஹெகல்), பொருள் முதல் வாதக் கருத்து. (ப்யூர்பாக்), இவற்றின் வளர்ச்சியில், 18-வது நூற்றுண்டின் முடி விலும், 19-வது நூற்றுண்டின் தொடக்கத்திலும், ஜெர்மனியிலிருந்த சாஸ்திரீயத் தத்துவ ஞானம் முக்கிய மான பங்கு வகித்தது என்பது தெளிவாகிறது. எனி

னும் அன்றிருந்த வரலாற்று நிலைகளின் கீழ், ஒரு விஞ்ஞான ரீதியான, தத்துவ ஞானக் கோட்பாட்டைத் தோற்றுவிக்க, இந்தத் தத்துவார்த்திகளால் முடியவில்லை.

## 19-வது நூற்றுண்டின், ரஷ்ய பொருள் முதல் வாதத் தத்துவ ஞானம்

ரஷ்யாவின் புரட்சிகர ஜனநாயகத்தில், பொருள் முதல் வாத உலகக் கண்ணேட்டம், சென்ற நூற்றுண்டின் இடைப்பகுதியில் (1840-1850) உருப்பெற ஆரம்பித்தது. பண்ணை அடிமை முறைக்கும், ஜாரிஸத்திற்கும் எதிரான போராட்டத்தில், புரட்சி ஜனநாயக இயக்கத்தின் தத்துவார்த்தப் பதாகையாக அது விளங்கியது. 1860-80 இடைப்பட்ட காலத்தில் இந்தப் போராட்டம் உச்ச கட்டத்தை அடைந்தது. ரஷ்ய புரட்சிகர ஜனநாயகவாதிகளான விஸ்ஸேரியோன்பெலின்ஸ்கி (1811-1848) அலெக்ஸாந்தர் ஹெர்ஸென் 1812–1870) நிகோலாய் செர்னிஷெவ்ஸ்கி (1828-1889) நிக்கோலாய் தோப்ரோலையூபோவ் (1836-1861) ஆகியோர், அதன் தத்துவார்த்த வாதிகளாகவும், ஆதர்ஷ கர்த்தாக்களாகவும் விளங்கினர்.

ஹெகலின் முரண் தர்க்கமும், ப்யூர்பாக்கின். பொருள் முதல் வாதமும், மார்க்ஸுக்கு முந்திய காலத்தில் மேலை நாட்டுத் தத்துவ ஞானம் அடைந்த ஓர் உயர் நிலையாகும். ரஷ்ய புரட்சிகர ஜனநாயகவாதிகளின் உலகக் கண்ணேட்டம், பொருள் முதல் தத்துவ ஞானத்தின் வளர்ச்சியில் அதைவிட உயர்ந்த ஒரு புதிய நிலையைக் குறித்தது. விவசாயிகளின் புரட்சிகர ஜனநாயகம் என்பதே அந்த உலகக் கண்ணேட்டம். அதன் தனிப்பட்ட பண்புகளை ஹெர்ஸென், செர்னிஷெவ்ஸ்கி, இவர்களின் நூல்களில் காணலாம்.

1840—50 காலகட்டத்தில், நிலப்பிரபுத்துவ ரஷ்யா விலிருந்த நிலைகளின் கீழ் ஹெர்ஸென், அவரது காலத்து மாபெரும் சிந்தனையாளர்களின் மட்டத்திற்கு உயர்வதில் வெற்றி கண்டார் என்று லெனின் எழுதினார். ஹெர்ஸென், ஹெகலின் முரண் தர்க்கத்தில், முதிர் திறம் பெற்றார். அதுவே "புரட்சியின் குறிக்கணக்கு" என்பதை அவர் உணர்ந்தார். சிந்தனையாளர் என்ற முறையில் மேலை நாட்டுக் கருத்து முதல் வாதிகளின் நடுவே அவர் குன்றெமென உயர்ந்து நின்றார் என்று லெனின் எடுத்துக் காட்டினார். "ஹெர்ஸென் முரண் தர்க்கப் பொருள் முதல் வாதம் வரை வந்தார். வரலாற்று ரீதியான பொருள் முதல் வாதத்தை அடைவதற்கு முன் நின்று விட்டார்," என்று லெனின் எழுதினார்.§

ஹெர்ஸெனின் கருத்துப்படி, இயற்கையும், பொருளும் 'சுய தேவைப் பூர்த்தியுடன்" அதாவது மனிதனிடமிருந்து தனித்து, சுயேச்சையாக உள்ளன. அவை மனிதனுக்கு முன் இருந்தன. "அவன் தோன்றிய பின் அவை அவனிடம் அக்கறை காட்டவில்லை." பொருள் முதல் வாதத்தை எடுத்துக் கூறிய போது, ஹெர்ஸென் முரண் தர்க்கத்தையும் ஆதரித்தார். இயற்கை இடைவிடாத இயக்கமும் வளர்ச்சியுமுடையதாக இருக்கிறது என்று அவர் கூறினார். 'அதை (இயற்கையை) அது இருப்பது போலவே ஆராய்ந்து பாருங்கள். அது இயங்குகிறது என்பதைக் காண்பீர்கள். அதை முழுவதாகப் பாருங்கள். அதன் வாழ்க்கை வரலாற்றையும், வளர்ச்சி வரலாற்றையும் உற்று நோக்குங்கள். அப்பொழுதுதான் அதைப் பற்றிய ஒரு இணைந்த கருத்து உங்களுக்குப் புலனாகும். சிந்தனையின் வரலாறு, இயற்கையின் வர

---

§ லெனின் தொகுப்பு நூல்கள் பாகம் 18. பக் 26

லாற்றின் தொடர்ச்சி, மனித குலத்தையோ இயற்கையையோ, அவற்றின் வளர்ச்சி வரலாற்றிலிருந்து பிரித்துப் புரிந்து கொள்ள முடியாது,'' என்று அவர் எழுச்சி மிக்க, கவிதை மொழியிலே எழுதினர்.

பொருள் முதல்வாத உலகக் கண்ணோட்டத்தை, முரண் தர்க்கத்துடன் இணைக்க வேண்டிய காலம் வந்து விட்டது என்று புரிந்து கொண்ட முதன்மையான சிந்தனையாளர்களில் ஹெர்ஸென் ஒருவர். பொருள் முதல்வாதத்தை முரண் தர்க்கத்தால் செழுமைப்படுத்துவதில் அவர் பெரும் பங்காற்றினர். ஆனல் அவரது காலத்தின் நிலைகளால் அவர் கட்டுப்பட்டிருந்ததால் அவரால் அவை இரண்டையும் இணைத்து ஒரே உலகக் கண்ணோட்டத்தை ஏற்படுத்த முடியவில்லை. இதே காரணத்தினுல்தான், வரலாற்று ரீதியான பொருள் முதல்வாதத்தைப் புரிந்து கொள்ளும் மட்டத்திற்கு அவரால் உயர முடியவில்லை.

1860ம் ஆண்டுகளில் நடந்த புரட்சி இயக்கத்தின் தலைவராகவும், ஆதர்ஸக் கர்த்தாவாகவும், செர்னிஷெவ்ஸ்கி கருதப்படுகிருர். "ஹெர்ஸெனுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது செர்னிஷெவ்ஸ்கி, முன்னேற்றப் பாதையில் மாபெரும் அடி எடுத்து வைத்துள்ளார் என்று கூற வேண்டும். ஹெர்ஸெனைக் காட்டிலும் செர்னிஷெவ்ஸ்கி, உறுதிப்பாடும், போராட்ட ஆர்வமும் பெற்ற ஜனநாயகவாதி. அவரது எழுத்துக்களில் வர்க்கப் போராட்ட உணர்ச்சி மிளிர்வதைக் காண்கிருேம்'' என்று லெனின் எழுதினர். §

செர்னிஷெவ்ஸ்கியின் புரட்சிகர ஜனநாயகக் கருத்துக்களின் அடிப்படையாக இருந்தது, அவரது பொருள்

§ லெனின், கட்டுரைத் தொகுப்பு, பாகம் 20 பக் 246.

முதல் வாதத் தத்துவஞானமே. அவரது பொருள் முதல் வாதம், மானிடவாத வகையைச் சேர்ந்தது. ப்யூர்பாக்கைப் பின்பற்றி அவர் மனிதனைத் தனது தத்துவஞான அமைப்பின் மையமாக வைத்தார். மனித உடலின் ஒருமை, முழுமை என்ற அவரது கருத்தினுல் அவர் ப்யூர்பாக்கினின்றும் வேறுபட்டார். இந்த ஒருமையின் அடித்தளமாக இருப்பது பருப்பொருள் அடிப்படையான உடல். மனிதனின் சாராம்சத்தை ஆராயும் போது, ''உடலை', முதன்மையானதாகவும், தன்னறிவை, சிந்தனையை இரண்டாம் பட்சமானதாகவும். மதித்ததன் மூலம் செர்னிஷெவ்ஸ்கி தத்துவஞானத்தின் அடிப்படைக் கேள்விக்கு பொருள் முதல்வாத விடையொன்றை கொடுத்தார்.

செர்னிஷெவ்ஸ்கியின் மானிடவாதக் கொள்கை, ப்யூர்பாக்கினுடையதைப் போலவே, குறுகியதாகவும், போதாததாகவும் இருந்தது. ஆனுல் ப்யூர்பாக்குடன் ஒப்பிடும் போது, மனிதன் வாழும், சமூக, வரலாற்று நிலைகளைப் புரிந்து கொள்வதில் அவர் முன்னேற்றங் காட்டினுர். அவரது கருத்துப்படி மனிதன் வெறும் உயிரியல் பொருள் அல்ல. மனிதனது வாழ்விலும், மகிழ்ச்சியிலும் ''பருப்பொருள் பகுதி (பொருளாதார வாழ்க்கை முறை) மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தது'' என்று அவர் எழுதினுர்.

செர்னிஷெவ்ஸ்கி ஒரு பெரிய பொருள் முதல் வாதி மட்டுமல்ல, முதன்மையான முரண் தர்க்க வாதியுமாவார். ''வரலாறு மெதுவாக நகர்கிறது. எனினும் அதன் முழுதான நகர்ச்சி தாண்டித் தாண்டிச் செல்கிறது'' என்ற குறிப்பிடத்தக்க சிந்தனையை அவர் வெளியிட்டார். மற்ருெரு பகுதியில், முரண் தர்க்க விதிகளில்

மிக முக்கியமானதொன்றை அவர் வரையறுத்தார். ''எண்ணியலான மாற்றங்கள் பண்பியலான மாற்றங்களாகின்றன'' என்று அவர் எழுதினுர்.

19-வது நூற்ருண்டின் ரஷ்யச் சிந்தனையாளர்களது எண்ணங்களின் புரட்சிகர ஜனநாயகப் பண்பு, அவர்கள் சமூக நிகழ்ச்சிகளைப் பற்றிக் கொண்டிருந்த கருத்துக்களில் வெளிப்படுகிறது. அவர்கள் சோஷலிஸக் கொள்கைகளைப் போதித்தனர். எனினும் அவர்களது கருத்துக்கள் கற்பனு சோஷலிஸ வகையைச் சேர்ந்தவையாக இருந்தன. ஏனெனில் விவசாயக் கம்யூன்கள் மூலம் ரஷ்யா சோஷலிஸத்தை அடையும் என்று அவர்கள் நம்பினர். இதன் விளைவாக சோஷலிஸத்தின் வெற்றிக்கான போராட்டத்தில், விவசாயிகளுக்குத் தலைமை தாங்கிச் செல்லத் தகுதி வாய்ந்த சமூக சக்தியை—பாட்டாளி வர்க்கத்தை—ரஷ்ய புரட்சிகர ஜனநாயக வாதிகள் காணுந்திறமையற்றிருந்தனர். விவசாயிகளின் கம்யூன்கள் மட்டுமே சோஷலிஸத்தின் உட்கரு ஆக முடியாது என்பதை அவர்கள் உணரவில்லை.

19-வது நூற்ருண்டின் ரஷ்யச் சிந்தனையாளர்களின் கற்பனு சோஷலிஸம், மேற்கு ஐரோப்பிய வகையிலிருந்து கணிசமான அளவு வேறுபட்டது. புரட்சிகரமான போராட்டத்தின் மூலமே, புரட்சிகரமான பொது ஜன எழுச்சியின் மூலமே சோஷலிஸத்தை அடைய முடியுமென்பதை அவர்கள் உணர்ந்திருந்தனர். எனவே ''கோடாரிகளைத் தூக்கிக் கொண்டு'' புரட்சிகரப் போராட்டத்தில் ஈடுபடும்படி அவர்கள் விவசாயிகளை அறைகூவி அழைத்தனர்.

19-வது நூற்ருண்டின் இரண்டாவது பகுதியில் ரஷ்யாவில் புரட்சிகர ஜனநாயக சிந்தனையின் வளர்ச்

சிக்கு ரஷ்ய பொருள் முதல் வாதத் தத்துவஞானம் பெரும் தொண்டாற்றியது. ஆனால் ரஷ்ய வாழ்க்கையின் பின் தங்கிய நிலையின் காரணமாக அந்தப் பொருள் முதல் வாதிகளால், மார்க்ஸ், எங்கெல்ஸ் இவர்களது முரண் தர்க்கப் பொருள் முதல் வாத மட்டத்தை எட்ட முடியவில்லை. இதன் தோற்றம் தத்துவ ஞானத்தின் வரலாற்றிலே, ஒரு உண்மையான புரட்சியைக் குறிக்கிறது.

## மார்க்ஸிஸத்தின் தோற்றம்-தத்துவஞானத்தில் புரட்சி

19-வது நூற்றாண்டில் (1840—1850) பாட்டாளி வர்க்கத்தின் உலகக் கண்ணோட்டமாக மார்க்ஸிஸம் தோன்றியது. குறிப்பிட்ட சமூக பொருளாதார நிலைகள் (மிகப் புரட்சிகரமான வர்க்கத்தை, பாட்டாளி வர்க்கத்தைத் தோற்றுவித்த முதலாளித்துவ உறவுகள்) அதைத் தோற்றுவித்தன. முரண்தர்க்க முறையைப் பற்றிக் கூறியபோது முன்னரே எடுத்துக் காட்டியது போல, அதன் தோற்றம், இயற்கை விஞ்ஞானத் துறையில் சில முன்னடி நிலைகளின் தோற்றத்தைச் சார்ந்திருந்தது. மார்க்ஸிஸத் தத்துவ ஞானத்திற்கேற்ற தத்துவார்த்த முன் நிலைகளைத் தோற்றுவித்ததில் ஹெகல், ப்யூர்பாக் இவர்கள் ஆற்றிய பங்கைப் பற்றியும் முன்னரே கூறியுள்ளோம். மார்க்ஸிஸம், அதற்கு முன்னால் இருந்த தத்துவஞான அமைப்புகளின் சாதாரணத் தொடர்ச்சியல்ல என்பதை எடுத்துக் காட்டினோம். அது அடிப்படையான ஒரு புதிய கோட்பாடு, ஒரு புதிய தத்துவ ஞானம்.

மார்க்ஸிஸத் தத்துவஞானத்திற்கு முன்பு இருந்த மிக முற்போக்கான தத்துவஞானத்திலகூட சில குறை

பாடுகள் இருந்தன. அவை யாவை? அவற்றைப் பற்றி நாம் கூறியவற்றை சற்று நினைவு கூர்வோம். முதலாவதாக மார்க்ஸிஸத்திற்கு முந்திய பொருள்முதல் வாதம் யாந்திரீக வாதமாக இருந்தது. வேறு வழியில் சொன்னால் யதார்த்தத்தின், நிகழ்வுகள் அனைத்தையும், இயந்திரவியல் விதிகளைக் கொண்டு அது விளக்க முயற்சித்தது. மார்க்ஸிஸத்திற்கு முந்திய தத்துவஞான உபதேசகர்கள் மனிதனைக்கூட இயந்திரமாகக் கண்டனர். இரண்டாவதாக அது அப்பாலை முறையைச் சார்ந்து இருந்தது. முரண்தர்க்க வளர்ச்சிக் கோட்பாட்டின் அடிப்படையில் அது அமைக்கப்படவில்லை. மேலும் முந்திய தத்துவார்த்திகள் இயற்கையை மட்டுமே பொருள்முதல் வாதக் கருத்துக்களால் விளக்கினர். ஆனால் சமூக வாழ்வின் நிகழ்வுகளை அவர்கள் கருத்துமுதல் வாதத்தால் விளக்கினர். மார்க்ஸிஸத்திற்கு முந்திய பொருள் முதல் வாதத்தின் மற்றொரு குறையென்னவெனில், அது சிந்தனார்த்தமாக இருந்தது. அதன் உபதேசகர்கள் சமூகச் செயலின் பங்கைப் புரிந்து கொள்ளவில்லை.

இந்தக் குறைபாடுகளுக்குக் காரணங்கள் யாவை?

நாம் முன்னரே பார்த்தபடி, சென்ற காலத்தில் பொருள்முதல் வாதம் முற்போக்கான வர்க்கங்களின் நலன்களை வெளியிட்டது. உதாரணமாக பூர்ஷுவா வர்க்கம், அது தோன்றிய காலத்தில் முற்போக்கானதாக இருந்தது. அது அரசர்கள், நிலப்பிரபுக்கள், இவர்களின் அதிகாரத்தை எதிர்த்துப் போரிட்டது ஆனால் அதுவே ஒரு சுரண்டும் வர்க்கமாக இருந்தது. எனவே அது முற்றிலும் முற்போக்கான வர்க்கமாக இருக்க முடியவில்லை. அதன் நலன்களை வெளியிட்ட தத்துவஞானத்தில் இது பிரதிபலித்தது. 18-வது நூற்றாண்டின் பிரஞ்சு பொருள் முதல்வாதிகள் இதற்கு ஒரு உதாரண

மாகத் திகழ்கிறார்கள். பூர்ஷுவா முறை நிரந்தரமானதும் மாற்றமடைய முடியாதது என்று அவர்கள் கருதினர். இது மனித சமூகத்தின் வரலாறு பற்றிய ஒரு அப்பா லைக் கருத்தாகும். எனவே மார்க்ஸிஸத்திற்கு முந்திய பொருள்முதல் வாதத்தின் குறைபாடுகள் சமூக வேர் களைக் கொண்டிருந்தன.

மார்க்ஸிஸம் புதிய சமூக நிலைகளில் தோன்றியது என்று முன்னரே கூறப்பட்டுள்ளது. சமூக உறவு களில் அடிப்படை மாறுதல்களை உண்டாக்குவதற்கான போராட்டத்தில் பாட்டாளி வர்க்கத்திற்கு ஒரு புதிய உலகக் கண்ணோட்டம் தேவைப்பட்டது. பௌதீகம். உயிரியல், இரசாயனம், புவி இயல் ஆகிய விஞ்ஞானங் களின் வளர்ச்சி, இக்கண்ணோட்டத்தின் தோற்றத் திற்கு உதவியது. விஞ்ஞானங்கள் அளித்த புதிய புள்ளி விவரங்கள், சமூக உறவுகளின் வளர்ச்சி இவற் றின் விளைவாக மார்க்ஸும், எங்கெல்ஸும், முரண் தர்க்கப் பொருள் முதல் வாதத்தைத் தோற்றுவித்தனர். மார்க்ஸிஸத்திற்கு முந்திய பொருள்முதல் வாதத்தின் குறைபாடுகள் நீக்கப்பட்டன. மார்க்ஸிஸத்தின் ஆதி கர்த்தாக்கள், மனித சிந்தனையின் பெரும் சாதனையால், —முரண்தர்க்கத்தால் — பொருள்முதல் வாதத்தைச் செழுமைப் படுத்தினர். முரண்தர்க்கமும் அடிப்படை மாறுதல்களை அடைந்தது. மார்க்ஸும், எங்கெல்ஸும், பொருள்முதல்வாத முரண்தர்க்கத்தைத் தோற்றுவித்தனர். முரண்தர்க்கப் பொருள்முதல் வாதத்தின் அடிப்படை யில் அவர்கள் சமூகத்தின் வளர்ச்சியையும் விளக்கி வரலாற்றுரீதியான பொருள்முதல் வாதத்தை சிருஷ்டித்தார் கள். இவ்விதமாக முற்றிலும் புதிய ஒரு தத்துவ ஞானம் தோன்றியது. தத்துவஞானத்தின் வளர்ச்சி யில் இது ஒரு உண்மையான புரட்சியாகும். அத்

தோடு, மார்க்ஸும் எங்கெல்ஸும், தத்துவஞானத்திற்குப் புதிய கடமைகளை உண்டாக்கினார்கள். அவர்களது தத்துவஞானம், உலகை மாற்றி அமைப்பதற்கு ஒரு ஆயுதமாகியது. இது மார்க்ஸிஸத் தத்துவ ஞானத்தின் தனிப்பட்ட பண்புகளில் ஒன்றாகும். அதன் புரட்சிகரப் பண்பாகும்.

இதைப்பற்றி நாம் சற்று விரிவாகக் காண்போம்.

**உலகை மாற்றி அமைப்பதற்கான கருவி**

தத்துவ ஞானத்தைப் பற்றி இரண்டு கருத்துக்கள் உண்டு. அதை இரண்டு வழிகளில் அணுகலாம். தத்துவஞானம் உலகை விளக்க வேண்டுமே தவிர அதை மாற்றுவதைப் பற்றிக் கவலைப்படக் கூடாது, என்ற ஒரு கருத்து நெடுநாட்களாக நிலவிவந்தது. உதாரணமாகச் சென்ற காலப் பொருள் முதல் வாதிகளின் கருத்து இதுவாகத்தான் இருந்தது. எனவேதான் மார்க்ஸ் அவர்களது பொருள்முதல்வாதம் சிந்தனார்த்தமானது அதாவது செயலூக்கமற்றது, முனைப்பற்றது என்று கூறினார். புரட்சிகரச் செயல்முறையையும், சமூக நிலைமைகளை மாற்றுவதற்கான சாத்தியக் கூறுகள் இருப்பதையும் மறுதலிப்பதில், இது தவிர்க்க முடியாதபடி சென்று முடிவடையும். ஆனால் புரட்சியாளர்கள் இத்தகைய கருத்தை வைத்துக் கொள்ள முடியாது. அதனால்தான் மார்க்ஸியத் தத்துவஞானம், வாழ்க்கையை மாற்றும் வகையில், மாற்றி அமைக்கும் வகையில் வாழ்க்கையில் செயலூக்கத்துடன் தலையிட வேண்டுமென்று போதிக்கிறது. மார்க்ஸ் இந்தக் கருத்தை, ''தத்துவஞானிகள் உலகை விளக்கித்தான் வந்திருக்கிறார்கள். ஆனால் அதை மாற்றுவதே முக்கியமானது''. என்ற வார்த்தைகளில் சொன்னார்.

மார்க்ஸீஸத் தத்துவ ஞானத்தின் போராட்ட ஆர்வ புரட்சிகரப் பண்பு, அதன் முக்கியமான தனிப்பட்ட தன்மைகளில் ஒன்றாகும். சிறப்பாக, அது செயல்முறைக்கு ஒரு வழிகாட்டி. பாட்டாளி வர்க்கத்தின் பலமான ஆயுதம். புரட்சிகரமான கோட்பாடு எனும் ஆயுதமேந்திய பாட்டாளி வர்க்கம், மார்க்ஸிஸக் குறிக்கோள்களை—அதன் மூலம் முற்போக்கான மனித குலத்தின் குறிக்கோள்களை—அடைவதற்கான போராட்டத்தில், அச்சமற்றுப் போர்புரியும் அற்புத சக்தியாகிறது. அதனால்தான் மார்க்ஸிஸம் தோன்றிய கணத்திலிருந்து மார்க்ஸிஸ சோஷலிஸக் கோட்பாட்டை பாட்டாளி வர்க்கத்தின் இயக்கத்தோடு இணைப்பது, தத்துவார்த்த ஆயுதத்தைக் கையாளக்கூடிய திறமை வாய்ந்த பருப்பொருள் சக்தியுடன், பாட்டாளி வர்க்கத்துடன், மக்களுடன் இணைப்பது, முதன்மையான வரலாற்றுக் கடமையாயிற்று.

**லெனினிஸமே நமதுகாலத்தின் மார்க்ஸிஸம்.**

இந்த வரலாற்றுக் கடமைக்கு விளாதீமிர் லெனின் தன்னை அர்ப்பணித்துக் கொண்டார். ஒரு பெரும் தத்துவார்த்த வாதி, புரட்சியாளர், என்ற முறையில் அவர் எடுத்துக் கொண்ட முதல் நடவடிக்கைகள் மார்க்ஸிஸத்தை, புரட்சி இயக்கத்துடன் இணைப்பதை ஒட்டியே இருந்தன. இது ஒரு எளிதான காரியமாக இருக்கவில்லை. மார்க்ஸ், எங்கெல்ஸ், இவர்களின் மறைவுக்குப் பின் மேலை நாட்டுத் தொழிற் கட்சிகளைச் சேர்ந்த திருத்தல் வாதிகள் மார்க்ஸிஸத்தின் புரட்சிகரமான உணர்ச்சிகளைக் கைவிட்டு விட்டனர். மற்றக் கோட்பாடுகளுக்கும், தத்துவஞான சித்தாந்தங்களுக்கும் சமமான ஒரு சாதாரணக் கோட்பாடாக அதை மாற்ற விரும்பினர். மார்க்ஸிஸக் கொடியை லெனின் உயர்த்திப் பிடித்தார்.

புயல்களினூடும், புரட்சிகளினூடும் அதைச சுமந்து சென்று அதன் முடிவான வெற்றியைக்கண்டார். ரஷ்யாவில், சோஷலிஸத்தை தொழிற் சங்க இயக்கத்துடன் இணைக்கும் வரலாற்றுப் பணியில், கம்யூனிஸ்டுக் கட்சியும், லெனினும் வெற்றி கண்டனர். லெனினிஸம், கோடிக்கணக்கான உழைக்கும் மக்களின் தத்துவார்த்த ஆயுதமாகியது.

லெனின் மார்க்ஸிஸத்தின் தூய்மையைக் காத்தது டன், அதன் முக்கியமான கொள்கைகளை மேலும் வளர்ச்சி அடையச் செய்தார். ஏனெனில் லெனின் ஒரு புதிய வரலாற்றுக் காலத்தில், ஏகாதிபத்தியக் காலத்தில் வாழ்ந்தார். இந்தக் காலத்தில் சமூகத்தில் ஏற்பட்டிருந்த மாறுதல்களுக்கு ஏற்ப, மார்க்ஸிஸத்தின் முதன்மையான, அடிப்படைப் பண்புகளை, அதன் புரட்சி உணர்ச்சியை அப்படியே வைத்துக் கொண்டு அதன் முக்கியமான கொள்கைகளை மேலும் வளர்ச்சி அடையச் செய்ய வேண்டியது அவசியமாயிற்று. லெனின் இந்தக் கடமையை நிறைவேற்றினர். லெனினிஸம் என்று கூறப்படும் புதியபோதனையை அவர் தோற்றுவித்தார். ஏகாதிபத்திய காலத்தின். பாட்டாளிவர்க்கப் புரட்சிகளின் காலத்தின், முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்திற்கு மாறுங்காலத்தின், கம்யூனிஸ நிர்மாண காலத்தின், மார்க்ஸிஸமே லெனினிஸம்.

லெனின் ஆற்றிய புதிய, பெரிய பங்குகளைக் கொண்டிராத மார்க்ஸிஸம் நமது காலத்தில் இருக்க முடியாது. எனவே மார்க்ஸிஸத்தை, லெனினிஸத்திலிருந்து பிரிப்பதற்குச் செய்யப்படும் முயற்சிகள் எல்லாம் –ஒன்றை மற்ருென்றிற்கு எதிராக வைப்பதற்குச் செய்யப்படும் முயற்சிகள் எல்லாம்-(அனேக பூர்ஷுவா தத்துவார்த்திகளும், திருத்தல் வாதிகளும் இதைத்தான் செய்யமுயற்சித்துக்கொண்டிருக்கின்றனர்.) ஒரே ஒரு நோக்கத்திற்கு

தான்; இன்றைய சகாப்தத்தின் மிகப் புரட்சிகரமான கோட்பாட்டிலிருந்து மக்களை விலக்கி வைக்கும் நோக்கத்திற்குத்தான் உதவும். அத்தகைய முயற்சிகளை மார்க்ஸிஸ்டுகள் புறக்கணிப்பது பொருத்தமானதே.

தத்துவஞானத் துறையில் லெனின் ஆற்றிய தொண்டு, தத்துவஞானச் சிந்தனையின் வளர்ச்சியில் ஒரு முழுநிலையை, ஒரு சகாப்தத்தைக் குறிக்கிறது. இந்த சகாப்தம் 19-வது நூற்றாண்டின் முடிவிலிருந்து, இன்றைய நாள் வரை பரந்துள்ளது. மார்க்ஸிஸத் தத்துவஞானத்தில் லெனின் புகுத்திய புதுமைகள் என்ன?

முதலாவதாக, முரண் தர்க்கப் பொருள் முதல் வாதத்தின் தத்துவார்த்தத்தை லெனின் பெரும் அளவிற்குச் செழுமைப் படுத்தினார். 19-வது நூற்றாண்டின் முடிவிலும், 20-வது நூற்றாண்டின் தொடக்கத்திலும் விஞ்ஞானம் பல புதுமைகளைக் கண்டுபிடித்தது. இவற்றைப் பற்றி விரிவாக அடுத்த சொற்பொழிவில் காண்போம். இந்தக் கண்டுபிடிப்புகளின் அடிப்படையில், கருத்து முதல் வாதிகளின் தாக்குதல்களிலிருந்து மார்க்ஸிஸத்தைத் தற்காத்தது மட்டுமல்லாமல், லெனின், மார்க்ஸிஸத் தத்துவஞானத்தின் முக்கியமான பகுதிகளை—பொருள், அறிவு, கோட்பாடுகளை—மேலும் வளர்ச்சி அடையச் செய்தார். முரண் தர்க்கத்தின் விதிகளையும், வகைகளையும் விரிந்த அளவில் அபிவிருத்தி செய்தார்.

வரலாற்று ரீதியான பொருள் முதல் வாதக் கோட்பாட்டிற்கு, லெனின், பெரும் பங்கு ஒன்றை ஆற்றியுள்ளார். இந்தத் துறையில், அவர் புதிய வரலாற்றுக் காலத்திற்கு ஏற்ப, மார்க்ஸிஸத்தின் முக்கியமான கொள்கைகளை மேலும் துல்லியமாக வரையறை செய்யவேண்டி இருந்தது. இவ்விதமாக லெனின் ஒரு புதிய சோஷலிஸப்

புரட்சிக் கோட்பாட்டைத் தோற்றுவித்தார். உலகைப் புரட்சிகரமான முறையில் மாற்றுவதற்கும் சோவியத்துகளின் நாட்டிலே சோஷலிஸத்தைக் கட்டுவதற்கும் ஆன போராட்டத்தில், உழைக்கும் மக்களுக்கு இந்தக் கோட்பாடு ஒரு வழிகாட்டியாக இருந்தது. பாட்டாளி வர்க்கத்திற்கும், அதன் முன்னணிப் படையாகிய உலகக் கம்யூனிஸ்டு, தொழிலாளர் கட்சிகளுக்கும், அது இன்றுவரை ஒரு வழிகாட்டியாகத் திகழ்கிறது.

லெனின் மார்க்ஸிஸத்தின் வர்க்கப் போராட்டக் கோட்பாட்டைச் செழுமைப் படுத்தியதோடு, வர்க்கம் என்பதற்கு ஒரு வரைவறையுங் கொடுத்தார். அவர், மார்க்ஸினுடைய பாட்டாளி வர்க்கத்தின் சர்வாதிகாரம் எனும் போதனையை மேலும் அபிவிருத்தி செய்ததோடு, அதை திருத்தல் வாதிகளின் தாக்குதல்களிலிருந்து காத்தார். சோஷலிஸ அரசாங்கம் பற்றிய ஒரு புதிய கோட்பாட்டை அவர் தோற்றுவித்து பாட்டாளிவர்க்க சர்வாதிகாரத்தின் ஒரு புதிய உருவமாக, சோவியத்துக்களை அமைத்தார்.

சோவியத் ரஷ்யாவில் சோஷலிஸத்தையும் கம்யூனிஸத்தையும் கட்டுவதற்கான அவரது திட்டம் மகத்தான முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது. "சோவியத் அதிகாரமும், நாடுமுழுவதையும் மின்மயமாக்குவதும், சேர்ந்ததே கம்யூனிஸம்" என்ற அவரது வாசகம், சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் 22-வது காங்கிரஸில் கம்யூனிஸத்தின், பொருளாயத தொழில் நுணுக்க அடிப்படையைக் கட்டுவதற்கென, நிறைவேற்றப்பட்ட பிரம்மாண்டமான திட்டத்தின் அடித்தளமாக உள்ளது.

லெனினின் மறைவிற்குப்பின், சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் முன்னணித் தலைவர்களாலும் சகோதரக் கம்யூனிஸ்டு, தொழிலாளர் கட்சிகளாலும்,

மார்க்ஸிஸம் தொடர்ந்து வளர்க்கப்படுகிறது. அவர்களது தத்துவார்த்த நூல்களும் கட்சிக் காங்கிரஸ் மத்தியக் கமிட்டியின் பிளீனம் கூட்டங்கள் இவற்றில் அவர்கள் சமர்ப்பிக்கும் அறிக்கைகளும், ஆற்றும் சொற்பொழிவுகளும், அவர்களது செயல முறை நடவடிக்கைகளும், மார்க்ஸிஸம்—லெனினிஸம் நடை முறையில் இயங்குவதற்கு உதாரணங்களாகும். கம்யூனிஸத்திற்கான போராட்டத்தின் புதிய சூழ் நிலைகளில் அதன் வளர்ச்சிக்கு உதாரணங்களாகும்.

சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் 20, 21, 22-வது காங்கிரஸ்கள் மார்க்ஸிஸ-லெனினிஸக் கோட்பாட்டிற்கு ஆற்றியுள்ள தொண்டு குறிப்பிட்ட முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இன்றைய நாளில் பாட்டாளிவர்க்க சர்வாதிகாரம், சோஷலிஸம் கம்யூனிஸமாக மாறுவதைச் சார்ந்தவிதிகள், சோஷலிஸ நாடுகள் ஏறத்தாழ ஒரே சமயத்தில் கம்யூனிஸத்தை அடைவதற்கான வாய்ப்புக்கள், கம்யூனிஸத்தின் பொருளாயத, தொழில் நுணுக்க அடிப்படையைத் தோற்றுவிப்பதற்கான வழிகள், கம்யூனிஸ சமூக உறவுகளை உருவப்படுத்தல், புதிய மனிதனின் கல்வி, முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்திற்கு மாறுவதற்கான பலதரப்பட்ட வழிகள், இந்த சகாப்தத்தின் தன்மை, நமது காலத்தில் உலகப் போரைத் தவிர்ப்பதற்கான சாத்தியக் கூறுகள்—போன்ற பல முக்கியமான பிரச்சினைகளுக்கு ஆக்க ரீதியான விடைகளை இந்தக் காங்கிரஸுகளின் தஸ்தாவேஜுகளில் காண்கிறோம். சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் 22வது காங்கிரஸ், கம்யூனிஸ நிர்மாணத்திற்கான மாபெரும் திட்டத்தை நிறைவேற்றியுள்ளது. இந்தத் திட்டம் நமது காலத்தின் "கம்யூனிஸ்டு அறிக்கை" என்று கூறப்பட்டுள்ளது.

மார்க்ஸிஸத்தின் ஆக்கப் பண்பு

எனவே மார்க்ஸிஸக் கோட்பாடு தொடர்ந்து வளர்ச்சி அடைகிறது என்பது தெளிவாகிறது. ஒரே மாதிரியான வழங்கித் தேய்ந்த சூத்திரங்களை அது ஏற்றுக் கொள்ளாது.

வாழ்வின் எல்லா சந்தர்ப்பங்களிலும் ஒரே ஒரு ஆயத்தமான முறையைக் கைக்கொண்டு ஒழுகுபவனைப் பற்றி என்ன கூறுவது? அவன் மாறுதல் விரும்பாதவன் என்றுதான் கூறமுடியும். அத்தகைய அணுகல் முறை வரட்டுத் தத்துவவாதம் எனப்படுகிறது. அத்தகைய ஒருவனுக்கு எந்த ஒருகருத்தும் ஒரு வரட்டுத் தத்துவம் தான். அதாவது, வாழ்க்கை அதை மறுதலித்துவிட்ட போதிலுங்கூட, அது அவனுக்கு நிரந்தரமான மாற்ற முடியாத கொள்கைதான். எல்லா மதங்களும் இத்தகைய வரட்டுத் தத்துவத்தையே போதிக்கின்றன. திருச் சபையின் வரட்டுத்தத்துவங்களில் மறுக்கமுடியாதவை என்று அவை கூறும் உண்மைகளில், (விஞ்ஞானத்திற்கும், பகுத்தறிவுக்கும் அவை முரண்பட்டவையாக இருந்த போதிலுங்கூட) நம்பிக்கை வைக்க வேண்டுமென்று அவை வற்புறுத்துகின்றன.

மார்க்ஸிஸத்திற்கு எந்தவகையான வரட்டுத் தத்துவவாதமும் ஒவ்வாது. யதார்த்தத்தில் என்ன இருக்கிறது என்பதைப் பற்றி வரட்டுத் தத்துவவாதிக்குக் கவலை இல்லை. "புத்தகத்திலிருந்து" படித்தவற்றிலேயே, எந்த வரட்டுத்தத்துவங்களின் உண்மையை அவர் பரிசோதித்துப் பார்க்க விரும்பவில்லையோ, அந்த வரட்டுத் தத்துவத்திலேயே, அவர் ஆர்வங்காட்டுகிறார். வாழ்வின் நிகழ்வுகளனைத்தையும், உயிரற்ற ஒரு சட்டத்திற்குள் அடக்கிவிட, வரட்டுத் தத்துவவாதம் விரும்புகிறது. இதன் மூலம் ஆக்க முன்முயற்

சிக்கு, புரட்சிகரமான சிந்தனைக்கு, தளை இடுகிறது. யதார்த்தத்தை ஆக்க ரீதியில் அணுக வேண்டுமென்று மார்க்ஸிஸம் கூறுகிறது. புத்தகத்தில் கண்டுள்ள விஷயங்களால் ஒருவர் வழி நடத்தப்படக்கூடாது; ஆனால் வாழ்க்கையின், செயல் முறையின், குறிப்பாக இன்றையச் செயல் முறையின் அடிப்படையில் ஒருவரது செய்கைகள் அமைய வேண்டுமென்பதே இதன் பொருள்

"புத்தகங்களைப் பார்த்து, புத்தகங்களிலிருந்து கற்று, புத்தகங்களிலுள்ள வாசகங்களைப்பற்றி எதுவும் புரிந்து கொள்ளாமலே, அதைத் திரும்பத் திரும்பக் கூறும்"* வறட்டுத் தத்துவவாதிகளை லெனின் பரிகசித்தார் "அவர் தலைக்குள்ளே ஒரு கூடை மேற்கோள்கள் இருக்கும். அடிக்கடி அவற்றை எடுத்து முன்வைப்பார். புத்தகத்தில் விவரிக்கப்படாத ஒரு சந்தர்ப்பம் ஏற்படும் போது அவர் குழப்பமடைந்து, அதற்குப் பொருந்தாத ஒரு மேற்கோளை எடுத்துவைப்பார்," *இந்த வகையைச் சேர்ந்த தலைவர்களை லெனின் கடுமையாக விமரிசித்தார்.

ஆக்கரீதியான அணுகல் முறை, வறட்டுத்தத்துவ வாதத்திற்கு முற்றிலும் மாறானது. மிகச் சமீபத்திய நிலையுடன் அது நெருங்கிய தொடர்புடையது. எவர், தேக்கத்தையும், ஒரே மாதிரியான சூத்திரங்களையும் சகித்துக் கொள்வதில்லையோ அவரே ஆக்கரீதியான சிந்தனையாளர். "நிரந்தரமான" உண்மைகளையும், வறட்டுத் தத்துவங்களையும் மாறாத சந்தர்ப்பங்களையும் ஒப்புக்கொள்ள மறுப்பவரே ஆக்கரீதியான சிந்தனையாளர், தத்துவார்த்தத்திலும் அன்றாடச் செயல்முறை நடவடிக்கைகளிலும், புதுமைகளையும், முற்போக்கான

* லெனின் தொகுப்புக் கட்டுரைகள் பாகம் 29, ரஷ்யப் பதிப்பு பக், 332, 335.

வற்றையும் இடைவிடாது தேடுபவரே, உண்மையான மார்க்ஸிஸவாதி. உழைப்பிலே உயிர் துடிப்பைக் காண் பிப்பதும் புதுமையை ஆக்கரீதியில் தேடுவதும் அவரது தனிப்பட்ட பண்புகள்.

சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் வரலாற்றுப் புகழ்வாய்ந்த 22-வது காங்கிரஸின் தஸ்தாவேஜுகளும், முடிவுகளும், மார்க்ஸிஸ-லெனினிஸக் கோட்பாட்டை ஆக்கரீதியில் அணுகுவது எப்படி என்பதற்குச் சிறந்த உதாரணங்களாக உள்ளன.

சோவியத் ரஷ்யாவில் இன்று வளர்ச்சி அடைந்துள்ள புதிய நிலைகளின் விளைவாக, சோவியத் அரசாங்கம், பாட்டாளிவர்க்கத்தின் சர்வாதிகாரம் தேசங்களின் வளர்ச்சியும் அவற்றிடையே சமரசமும், நகரங்களுக்கும் கிராமங்களுக்குமிடையேயும் உள, உடல், உழைப்புக்கு இடையேயும் உள்ள சமூக-பொருளாதார, கலாசார இந்நல வேற்றுமைகளை நீக்கல், கம்யூனிஸ நிர்மாணத்திற்கான முறைகள்,-ஆகிய பல முக்கியமான பிரச்சனைகளைப் பற்றிய தத்துவார்த்தக் கருத்துக்களையும் முடிவுகளையும் மேலும் அபிவிருத்தி செய்ய வேண்டியதாயிற்று. மார்க்ஸிஸ—லெனினிஸக் கோட்பாட்டின் இந்த முக்கியமான பிரச்சனைகளை இன்றைய நிலைகளுக்கு ஏற்ப கட்சி கையாண்டு வருகிறது. சோவியத் சமூகத்தில் உழைப்பவர் அனைவருக்கும், தங்கள் உழைப்பால், கம்யூனிஸம் எனும் மாபெரும் மாளிகையைக் கட்டும் வேலையை விரைவுபடுத்தி, முடிக்க விரும்புபவர் அனைவருக்கும், 22-வது காங்கிரஸின் முடிவுகள் உற்சாக மூட்டி உள்ளன.

அத்தகைய ஆக்கரீதியான அணுகல் முறைக்கு எத்தகைய உலகக் கண்ணோட்டம் வேண்டும்? அது அப்பாலே முறையாக இருக்க முடியாது. ஏனெனில் நாம்

முன்னரே காட்டியபடி, அது வளர்ச்சியை மறுத்து, அதன் மூலம் வறட்டுத் தத்துவ வாதத்திற்கு நம்மை அழைத்துச் செல்கிறது. ஆனுல் பொருள் முதல் வாத முரண் தர்க்கம், உலகை, இடைவிடாத இயக்கமுடைய தாக, மாறுதலுடையதாக, வளர்ச்சியுடையதாகக் காண் கிறது. எனவே அது, ''நிரந்தரமான'' ''மாற்ற முடி யாத'' வறட்டுத் தத்துவங்களை அனுமதிப்பதில்லை. அது புதுமைப் புனைவை ஊக்குவிக்கிறது. லெனி னுடைய வார்த்தையில் சொன்னுல், முரண் தர்க்கம், மார்க்ஸிஸத்தின் புரட்சிகரமான ஆன்மாவாகும். எனவே அது ஆக்கரீதியானதுதான்.

மார்க்ஸிஸத்தில் முதிர் திறன் பெறுவது என்ருல், அதன் போராட்ட ஆர்வத்தில், புரட்சிகர உணர்ச்சியில் தோய்ந்து விடுவது என்று, உண்மை யான வரலாற்று நிலைகளுக்கு ஏற்ப அதை எப்படி உபயோகிப்பது என்பதைத் தெரிந்து கொள்வது என்று பொருள். மார்க்ஸிஸக் கோட்பாட்டின் மாற்றும் முக்கியத் தன்மையைப் புரிந்துகொள்வது, என்பது, மேற்கோள்களை மனப்பாடம் செய்வதோ, அல்லது மார்க்ஸிஸத்தை வறட்டு வாதங்களின் தொகுதியாக மாற்றுவதோ அல்ல. நடைமுறைச் செயல்களுக்கு, முக் கியமான செயல்முறைக் காரியங்களை நிறைவேற்று வதற்கு, ஒரு வழிகாட்டியென அதைப் புரிந்து கொள்வ தேயாகும்.




உரை மூன்று

## பொருள் என்பது என்ன?
## அது எந்த வகைகளில் இருக்கிறது?

உலகம் புறவயமாக இருக்கிறது. அது பொருள் தன்மை யுடையது.

உலகம் புறவயமாக, மனிதனிட மிருந்து, அவனது தன்னறிவி லிருந்து, புலன் உணர்வுகளிலி ருந்து, இச்சைகளிலிருந்து தனித்து சுயேச்சையாக நிற் கிறது என்பதை, வாழ்க்கையும், அன்றுடச் செயல் முறைகளும் நமக்குக் காட்டுகின் றன. மனிதனோ, அல்லது ஏதேனும் ஒரு உயிர் பொருளோ, தோன்றுவதற்கு முன்பே, உலகம் இருந் தது என்று நிரூபித்ததன் மூலம், விஞ்ஞானம் இதற்குச் சான்று பகர்கிறது. அதாவது, அது தனித்து இருந் தது என்பதற்குச் சான்று பகர்கிறது. உலகின் புற வயத் தன்மையில் (அதாவது நமது தன்னறிவிலிருந்து பிரிந்து, அது தனித்து சுயேச்சையாக இருத்தலில்) அது

பொருள் தன்மையுடையது என்ற கருத்து உள்ளார்ந்துள்ளது.

மனிதனது தன்னறிவிலிருந்து பிரிந்து உலகம் இருக்கிறது என்பதைப் புறவயக் கருத்து முதல் வாதிகள் ஏற்றுக்கொள்வதால், அவர்கள் உலகின் பொருள் தன்மையை ஏற்றுக்கொள்கிறார்கள் என்று ஆகவில்லையா என நீங்கள் கேட்கலாம். இல்லவே இல்லை! தன்வயக் கருத்து முதல் வாதிகளுக்கு மாறாக, புறவயக் கருத்து முதல் வாதிகள், உலகம் மனிதனின் தன்னறிவிலிருந்து பிரிந்து உள்ளது என்று ஒப்புக்கொள்கிறார்கள் என்பது உண்மைதான். ஆனால் அது தன்னறிவிலிருந்து தனித்து சுயேச்சையாக நிற்கிறது என்பதை அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. அவர்கள் அதைத் தன்னறிவின் ஒரு விளைவாகவே காண்கிறார்கள். உலகின் பொருள் தன்மையை, அதாவது அது தன்னறிவிலிருந்து பிரிந்து, தனித்து சுயேச்சையாக இருக்கிறது என்பதை, ஏற்றுக் கொள்வது பொருள் முதல் வாதக் கோட்பாட்டின் தனிப்பட்ட பண்பாகும். இந்த விஞ்ஞான ரீதியான கருத்தே, லெனினுடைய "பொருள் விதியின்" அடிப்படையாக உள்ளது.

பொருள் பற்றி லெனின் கொண்டிருந்த கருத்து

நம்மைச் சுற்றி எண்ணற்ற பொருள்களும், நிகழ்வுகளும் உள்ளன. கல், மரங்கள், மணல், சூரியன், பிராணிகள், தன்னியங்கு கடைசல் இயந்திரங்கள், கடல்கள், பெருங்கடல்கள், நட்சத்திரங்கள், கிரஹங்கள் இன்னும் எத்தனையோ விஷயங்களை நாம் பொருள் என்னும் ஒரே சொல்லால் குறிப்பிடுகிறோம். ஒன்றோடொன்று தொடர்பற்றதும், ஒன்றிலிருந்து ஒன்று வேறுபட்டதுமான எண்ணற்ற பொருள்களையும்,

நிகழ்வுகளையும், குறிக்க ஒரு சொல்லை உபயோகப் படுத்த முடியும் என்று பார்க்கும்போது உங்களுக்கு திகைப்பு ஏற்படலாம். சிறிது யோசித்துப் பார்த்தோமானால் இது எப்படி சாத்தியமாகிறது என்பதைப் புரிந்து கொள்வது சுலபம்.

உலகிலே எத்தனை பூக்கள் இருக்கின்றன என்பதைச் சற்று எண்ணிப் பாருங்கள். அவை எண்ணற்றவை. அவை கோடிக்கணக்கில் இருக்க வேண்டும். ஆனால் நமக்கு 'பூ' என்ற ஒரு வார்த்தைதான் இருக்கிறது. ரோஜா, டியூலிப், போன்ற எல்லா வகைப் பூக்களையும் குறிக்க நாம் அந்த ஒரு சொல்லைத்தான் உபயோகிக்கிறோம். இன்னும் சற்று சிக்கலான உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். நீங்கள் ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்கள் கையிலே ஒரு பென்ஸில் இருக்கிறது. பேனா, மை, காகிதம் முதலியவை உங்கள் அருகில் இருக்கின்றன. மேஜையின் மேல் ஒரு விளக்கு இருக்கிறது. அருகிலே ஒரு புத்தக அலமாரி இருக்கிறது. புத்தகம், பென்ஸில், மேஜை, முதலியவை அனைத்தையும் குறிக்க ஒரு சொல்லைப் பயன்படுத்த முடியுமா? முடியும்; ஏனெனில் அவை அனைத்தும் வஸ்துக்களே. "வஸ்து" (அஃறிணைப் பொருள்—மொ-ர்) என்ற சொல் அவை அனைத்திற்கும் பொருந்தும். அளவை இயல் (Logic) இந்தச் சொல்லைக் கருத்து என்கிறது.

அத்தகைய கருத்துக்கள் எப்படி அமைக்கப்படுகின்றன. பூக்கள் ஒன்றிலிருந்து ஒன்று வேறுபட்ட போதிலும், அவற்றிற்கு அனேக பொதுப் பண்புகள் உள. அவற்றிற்குள்ள பொதுப் பண்புகளே அவையனைத்தையும், "பூ" என்னும் கருத்துக்குள் அடக்கு

வதை சாத்தியமாக்குகிறது. ஒரு பூவை மற்ருென்றி லிருந்து வேறுபடுத்தும் பண்புகள் இதில் அடங்க வில்லை, அதற்கு மாருக அவை அனைத்திற்கும் பொது வாக உள்ள பண்புகள் மட்டுமே அடங்கியுள்ளன. ஒரு பூவை மற்ருென்றிலிருந்து வேறுபடுத்தும் பண்பு களை ஒதுக்கி விடுகிருேம்; (புறக்கணித்து விடுகிருேம்) அல்லது அவற்றிலிருந்து பொதுவானவற்றைப் பிரித் தெடுக்கிருேம். இத்தகைய கருத்துக்கள் **பண்பி லானவை** என்று கூறப்படுகின்றன. ஆகவே மாறுபட்ட வஸ்துக்களுக்கும், நிகழ்வுகளுக்கும் உரிய — அவை ஒவ்வொன் றின் தனிப்பட்ட விசேஷ குணும்சங்களுக்கு அப்பாற்பட்டு — பொதுவான இன்றியமையாத அம்சங்களைப் பிரதிபலிப்பனவே கருத்துக்கள் ஆகும்.

சில கருத்துக்கள் மற்றவற்றைக் காட்டிலும் அதிகமாகப் பொருள்களையும், நிகழ்வுகளையும் குறிக் கின்றன என்பதை நீங்கள் கவனித்திருப்பீர்கள். உதா ரணமாக ''வஸ்து'' எனும் கருத்து ''பேஞ'', ''மேஜை'' முதலிய கருத்துக்களைக் காட்டிலும் விரிவுடையது. பின்னவை இரண்டும் ''வஸ்து'' எனும் கருத்துக்குள் அடங்கியுள்ளன.

மிகுந்த விரிவுடைய கருத்துக்கள், எவ்வளவு சாத் தியமோ, அவ்வளவு வீச்சுடைய கருத்துக்கள் உண்டா என்று நீங்கள் கேட்கலாம். அவையும் உள்ளன. ஒரு கருத்து எல்லாப் பொருள்களையும்–மணலிலிருந்து, மனித மூளை வரை-எல்லா நிகழ்வுகளையும் தழுவுமே யாஞல் அதை அதிகபட்ச வீச்சுடையது என்று கூற லாம்.

''பொருள்'' என்னுங் கருத்து இந்த வகையைச் சேர்ந்தது. எனவே ''பூ'' அல்லது ''வஸ்து'' என்பதைப் போலவே, ''பொருள்'' என்பதும் ஒரு கருத்துத்தான்

என்று ஆகிறது. ஆனால் இது மிகுந்த விரிவுடையது. எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு விரிவுடையது. வஸ்துக்களின் ஒரு தொகுதியின் அவசியமான, முக்கிய மான பண்புகளை மட்டும் அல்லாது, உலகிலுள்ள எல்லா வஸ்துக்கள், நிகழ்வுகள் இவற்றின் (நம்மைச் சுற்றியுள்ளவை அனைத்தின் அவசியமான, முக்கிய மான பண்புகளை அது வெளியிடுவதால், மற்ற கருத் துக்களிலிருந்து அது வேறுபடுகிறது. அதிகபக்ஷ வீச்சுடைய கருத்துக்களையே தத்துவஞானம் ஆராய் கிறது. அவற்றிற்குத் தத்துவஞான இனங்கள் என்று பெயர். பொருள் என்பது ஒரு தத்துவஞான இனம்.

எல்லா வஸ்துக்களுக்கும் உரித்தான, ஒற்றுமை கள், முக்கியமான அவசியமான பண்புகள், என்ன? முதலாவதாக அவை அனைத்தும், புறவயமாக (அதா வது மனிதனது தன்னறிவிலிருந்து பிரிந்து, அத னின்று தனித்து) பொருள் தன்மையுடன் இருப்பவை. அவை எல்லாவற்றிற்கும் இந்த ஒரு அஸ்திவாரம் உண்டு.

உலகிலுள்ளனவற்றிற்கெல்லாம் பொதுவான பண்பு இது ஒன்றுதானா? இல்லை. அவற்றிற்கு மற்று மொரு முக்கியமான பண்பு உண்டு உதாரணமாகச் சுடு நீரிலே நாம் கை கழுவும்போது நாம் சூட்டை உணர் கிறோம். காட்டிலுள்ள மரங்களை நோக்கும்போது, பல் வேறு வண்ணங்களை,—பிர்ச் மர தண்டின் வெண்மை, இலைகளின் பசுமை முதலியவற்றை—நாம் உணர் கிறோம்; பார்க்கிறோம். எனவே நம்மை விட்டுத் தனித்து நிற்கும் வஸ்துக்களுக்கு, நமது புலன் உறுப்புகளின் மேல் செயல் புரிந்து, அதற்கியைந்த உணர்வுகளைத் தூண்டும் பண்பு இருக்கிறது.

வஸ்துக்கள், நிகழ்வுகள் இவற்றின் பொதுவான பண்புகளைப் பற்றி, நமக்கு ஒரு தெளிவு ஏற்பட்டுவிட்ட தால், இனி, பொருள் எனும் கருத்துக்கு ஒரு வரையறை யைக் கொடுப்போம். பொருள் முதல் வாதமும் அநுபவ வாத விமரிசனமும் என்ற தனது நூலில் லெனின், "மனிதனுக்கு,அவனது புலன் உணர்வுகளால் அளிக்கப் படும் புறவய யதார்த்தத்தைக் குறிக்கும் தத்துவஞான இனமே, பொருள்" என்றும், "நமது புலன் உறுப்புக் களின் மேல் செயல் புரிந்து புலன் உணர்வுகளைத் தோற்றுவிப்பது எதுவோ, அதுவே பொருள்" என் றும், "புலன் உணர்வுகளில் நமக்கு அளிக்கப்படும் புறவய யதார்த்தமே பொருள்," என்றும் பலவகையாக எழுதினார்.

நம்மைச் சுற்றியுள்ளது, புறவயமாய் இருப்பது வரம்பற்ற புற பருப்பொருள் உலகம்—நமது புலன் உறுப்புக்களின் மேல் செயல் புரிந்து, புலன் உணர்வுகளைத் தோற்றுவிக் கும். இவையே பொருள் என்பதை நீங்கள் காணலாம்.

ஆதி காலத்தில் (சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன்புங்கூட) பொருள் என்பது எல்லா வஸ்துக்களிலு முள்ள "அடிப்படையான தொன்று" என்று சில பொருள் முதல் வாதிகள் கருதினார்கள் என்பதை முந்திய சொற்பொழிவுகளிலிருந்து நீங்கள் தெரிந்து கொண் டுள்ளீர்கள். உதாரணமாக, எல்லாப் பொருள்களின் முதன்மையான அடிப்படையாக இருப்பது அணு என்று டெமாக்ரிடஸ் கருதினார்.

17, 18 - வது நூற்றாண்டுகளில், அணுக்கள் பகுக்க முடியாதவை, அழிக்க முடியாதவை, நிரந்தர மானவை என்று விஞ்ஞானிகள் கருதினார்கள். அவையே பிரபஞ்சத்தின் "முடிவான செங்கல்கள்". உலகம் முழு வதும் அவற்றால் கட்டப்பட்டுள்ளன. இந்தக் கருத்து

19-வது நூற்றுண்டிலும் நிலவியது. ஆனல் முன்னரே கூறியபடி 19-வது நூற்றுண்டின் முடிவில் செய்யப் பட்ட சில கண்டுபிடிப்புகள், பொருளின் முதன்மை யான அடிப்படை பற்றி அத்தகைய கருத்துக்களைப் பற்றி சந்தேகத்தைக் கிளப்பின.

அந்தக் கண்டுபிடிப்புகள் யாவை?

**இயற்கை விஞ்ஞானத்தில் ஏற்பட்ட புரட்சியைப் பற்றி லெனினுடைய கருத்து**

1896-ம் ஆண்டில் பிரஞ்சு பௌதிகவாதியாகிய பெக் யூரெல், தற்செயலாகச் சிறிது உரோனியம் தாதுவை மூடிய உரைக்குள் இருந்த புகைப்படச் சுருளின் அருகே வைத்து விட்டார். சிறிது நேரம் கழித்துப் புகைப்படச் சுருள் கருப் பாகி இருந்ததை அவர் கண்டார். எனவே, உரேனியம் தாது, கண்ணுக்குப் புலனுகாத கதிர்களை வெளியிடு கிறது என்றும், அவற்ருல் அட்டையைத் துளைத்துக் கொண்டு போய்ப் புகைப்படச் சுருளைக் கருப்பாக்க முடியுமென்றும், அவர் முடிவெடுத்தார். இவ்விதமாக, கதிரியக்கம் என்று அழைக்கப்படும் இந்த நிகழ்ச்சி யைப் பற்றிய ஆராய்ச்சி தொடங்கியது.

சிறிது காலத்திற்குள் ஒரு புதிய இரசாயன மூலகம் கண்டுபிடிக்கப்பட்டு ரேடியம் என்று பெயரிடப்பட்டது. பிற்காலத்தில், இந்தப் "புரட்சிகரமான" ரேடி யம், உலகில் பெரும் சலசலப்பை உண்டாக்கியது.

ரேடியத்தால் வெளியிடப்பட்ட கதிர்கள், அன்று வரை அணுவைப் பற்றி நாம் கொண்டிருந்த கருத்துக்கு முற்றிலும் மாருன ஒன்று இருக்கிறது என்பதற்குச் சான்று பகன்றன இந்தக் கதிர்கள், நேர்மின்னேற்ற முடைய ஆல்பா ($\alpha$) துகள்கள், எதிர் மின்னேற்ற முடைய பீட்டா துகள்கள் ($\beta$) அல்லது எலெக்ட்ரான்

கள், மின்னேற்றமற்ற காமா கதிர்கள் (γ) ஆகிய மூன்று வகையான நுண்ணிய துகள்களாலானவை என்று தெரிந்தது. யுரேனியம் தாது இந்தத் துகள்களாகச் சிதைவடைந்து இருக்கவேண்டும். ஆனால் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக அணு பகுக்கப் பட முடியாதது என்று கருதப்பட்டு வந்துள்ளது. விஞ்ஞானிகள் ஏதோ தவறு நேர்ந்துவிட்டது என்று தான் முதலில் நினைத்தார்கள்.

ஆனால் தவறு ஒன்றும் நிகழவில்லை. அணு பகுக்கப்பட முடியாதது என்ற கருத்தைக் கைவிட்டு விட வேண்டியதுதான் என்று 19-வது நூற்றாண்டின் முடிவில் உறுதியாக நிலைநாட்டப்பட்டது. அணு பகுக்கப் படக்கூடியதே. அது சிதைந்தது. அதேசமயத்தில் பல பழங்காலக் கருத்துக்களும் சிதைந்தன.

பொருள் பற்றியும் அதன் பண்புகள் பற்றியும் முன்னர் நிலவிவந்த பழைய கருத்துக்கள் தகர்வடையும் என்பதற்குச் சூசகமான வேறு கண்டுபிடிப்புகளும் நிகழ்ந்தன. உதாரணமாக, கலிலியோ, நியூடன் இவர்களது காலங்களிலிருந்து பௌதீகத்தில், இடத்தையும், காலத்தையும் பற்றி நிலவி வந்த கருத்துக்களை அடிப்படையாக மாற்றிக்கொள்ள வேண்டியது அவசியம் என்று புகழ்பெற்ற பௌதீகவாதியான ஆல்பர்ட் எயின்ஸ்டீன், இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் எடுத்துக் காட்டினார். எயின்ஸ்டீனின் புதிய கருத்துக்கள் அவரது சார்புக் கோட்பாட்டிற்கு அடிப்படையாக இருந்தன.

நிலைப்பு நிலையிலோ, அல்லது தனது சீரான இயக்க நிலையிலோ இருக்கும் ஒரு பண்டத்தின் நிறை நிலையானது, மாறாதது என்று நியூட்டன் காலத்தி லிருந்து விஞ்ஞானிகள் கருதி வந்துள்ளனர். ஆனால்

எலெக்ட்ரானின் நிறை நிலையாக இருப்பதில்லை என்றும், அது அதன் 'கதி'க்கு ஏற்ப மாறுகிறது என்றும் தற்கால ஆராய்ச்சிகள் எடுத்துக் காட்டியுள்ளன.

இவ்விதமாகத் தற்கால விஞ்ஞான ஆராய்ச்சிகள், அணுவின் பகுக்கப்படாத் தன்மை, நிறையின் நிலைத்துவம், இடம், காலம் இவற்றின் மாருத்தன்மை, முதலிய பழைய கருத்துக்களைத் தூக்கி எறிந்து விட்டன. லெனின் கூறியது போல, இயற்கை விஞ்ஞானத்திலே ஒரு புரட்சி ஆரம்பித்தது.

இந்தக் கண்டுபிடிப்புகளைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள பூர்ஷ்வா கருத்து முதல் வாதிகள் தயங்கவில்லை. அவர்கள் பின்வருமாறு வாதித்தார்கள்: பொருளின் அடிப்படை என்று கருதப்பட்ட, பகுக்க முடியாத அணு, சிறு துண்டுகளாகப் பகுபடுகிறது என்று தெரிகிறது. எனவே, பொருள் முதல் வாதம் எனும் மாளிகையின் அஸ்திவாரமும், அதன் மையக் கருத்துமாகிய "பொருள்" தகர்ந்து விட்டது!

மேலும், நிறையே எல்லாப் பண்டங்களின், பொருள்களின், அவசியமான பண்பு என்று கருதப்பட்டு வந்தது. ஆனல் எலெக்ட்ரானின் நிறை கதிக்கு ஏற்ப மாறுகிறது என்று தெரிகிறது. எனவே அதன் நிறையின் ஒரு பகுதி "மறைந்து விட்டது". எனவே "பொருளும் மறைகிறது". ஆகவே, இந்தத் தத்துவார்த்திகள் பொருள் முதல் வாதம் திவாலாகி விட்டது என்ற முடிவுக்கு வந்தனர். இந்த நூற்ருண்டின் தொடக்கத்தில் சேகரிக்கப்பட்ட புதிய பௌதீகப் புள்ளி விவரங்களின் அடிப்படையில் இந்த முடிவு பெறப்பட்டதால், கருத்து முதல் வாதத் தத்துவ ஞானத்தின் இந்தப் போக்கு "பௌதீகக் கருத்து முதல் வாதம்" என்று அழைக்கப்பட்டது. 1909-ம் ஆண்டில் வெளியிடப்பட்ட 'பொருள்

முதல் வாதமும்—அநுபவவாத விமரிசனமும்,' என்ற தனது புத்தகத்தில் லெனின் இந்தப் பெயரை உபயோகித்தார். கருத்து முதல் வாதிகளின் புனைவுகளை லெனின் தகர்த்தெறிந்தார்.

**உலகத்தின் இயற்கை விஞ்ஞானச் சித்திரம்**

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் உண்மையில் விஞ்ஞானத்திற்கு ஏற்பட்டது என்ன? புதிய அறிவு பெறப்பட்டது. எலெக்ட்ரான்கள், புரோடான்கள்' அணு உட்கரு, இவை இருந்தது, முன்னர் தெரியாதிருந்தது. உலகம் பற்றிய நமது இயற்கை விஞ்ஞானச் சித்திரமும் பொருளின் அமைப்பு பற்றிய நமது கருத்துக்களும் மாறி விட்டன என்பதையே இந்தப் புள்ளி விவரங்கள் எடுத்துக் காட்டின. ஆனால் எலெக்ட்ரான்கள், அணு உட்கரு முதலியவை பொருள் தன்மை உடையவை அல்ல, என்ற முடிவை, இந்தப் புள்ளி விவரங்கள் நியாயப்படுத்துகின்றனவா? அதையும் பார்ப்போம்.

எலெக்ட்ரான்கள், புறவயமாக, மனிதனிடமிருந்து தனித்து இருக்கின்றனவா இல்லையா? ஆம்! அவை இருக்கின்றன. உதாரணமாக மின்னலை எடுத்துக் கொள்ளுங்கள். அது எலெக்ட்ரான்களின் சக்தி வாய்ந்த ஓட்டமே யாகும். மனிதன் தோன்றுவதற்கு முன்பே மின்னல் இருந்தது என்பது நமக்குத் தெரியும்.

எலெக்ட்ரான்கள் நமது புலன் உறுப்புக்களின் மேல் செயல் புரிவதில்லை. அவற்றைப் பார்க்க முடியாது. எனவே அவை பொருள் தன்மையுடையன அல்ல என்று சில கருத்து முதல் வாதத் தத்துவ ஞானிகள் வாதிக்கிறார்கள். இது உண்மையல்ல. எலெக்ட்ரான்களும், மற்ற நுண்ணிய துகள்களும், மிக நுட்பமான கருவிகளின் உதவியால் ஆராயப்படுகின்றன. அவற்

றின் இயக்கப் பாதைகளைப் புகைப்படம் எடுக்கவும் முடியும். எனவே அவை நமது புலன்களின் மேல் செயல் புரியத்தான் செய்கின்றன. ஆனால் இந்தச் செயல் விசேஷமான கருவிகளின் மூலம் நடைபெறுகிறது. இவ்விதமாக, இந்தத் துகள்கள் புறவயமாக இருக்கின்றன. நமது புலன் உறுப்புக்களின் மேல் செயல் புரிகின்றன. எனவே அவை பொருள் தன்மையுடையவை.

எனவே, லெனின், பொருள் “மறைந்து விடவில்லை’ என்ற முடிவுக்கு வருகிறார். அதைப்பற்றிய நமது அறிவுதான் மாற்றமடைந்திருக்கிறது. உலகம் அணுக்கள் எனும் சிறுதுகள்களால் ஆனது என்று முன்னர் கருதப்பட்டது. இன்று நமக்கு அதைவிட அதிகமாகத் தெரியும். நாம் நமது அறிவை விரிவாக்கிக் கொண்டு, அணுவை விடச் சிறிய துகள்கள்—எலெக்ட்ரான்கள்-உள்ளன என்று கண்டு பிடித்துள்ளோம். ஆனால் அணுக்களைப் போலவே எலெக்ட்ரான்களும் அழிவில்லாதவைதான். உலகைப் பற்றிய மேலும் விரிவான இயற்கை விஞ்ஞானச் சித்திரத்தை விஞ்ஞானம் நமக்கு அளிக்கும் என்பதே இதன் பொருள். ஏனெனில் பொருளின் ஸ்தூலமான வகைகளின் அமைப்பு, நிலை பண்புகள், இவற்றைப் பற்றி மேலும் மேலும் அதிகமாகத் தெரிந்து கொள்ளப்படும். லெனினின் வாக்கு ஊர்ஜிதப் படுத்தப்பட்டு விட்டது.

பொருளின் அமைப்பைப் பற்றி பல புதிய விஷயங்களை தற்கால விஞ்ஞானம் கண்டு பிடித்துள்ளது. முதலில் எலெக்ட்ரான்களும், புரோட்டான்களுந்தான் தெரிந்திருந்தன. ஆனால் இப்போது 30 வெவ்வேறு வகையான ‘‘அடிப்படை’’த் துகள்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. எனவே, அணுக்கள் மட்டுமல்ல, எலெக்ட்ரான்களும், மற்ற

துகள்களும் கூட பொருள் தன்மையுடையவைதான். பொருள் முதல் வாதம் ''முறியடிக்கப்பட்டு விடவில்லை.''

பொருளில் இரண்டு அடிப்படை வகைகள் - கருப் பொருளும், வெளியும் - உள்ளன என்ற விஞ்ஞானக் கொள்கைக்கு லெனினின் கருத்துக்கள் தத்துவஞான ஊர்ஜிதம் அளித்துள்ளன.

தற்கால பௌதீகத்தின் கருத்துப்படி கருப்பொருள் என்பது பொருளின் ஒரு வகை. அது தனக்கென்ற நிறையுடைய துகள்களால் ஆனது (நிலைத்துவ நிலை நிறை); அடிப்படைத் துகள்கள் என்று அழைக்கப்படும் துகள்களும் அதில் அடங்கும்.

பண்டங்களை ஒன்றோடொன்று இணைத்து, ஒன் றின் செயலை மற்றொன்றிற்கு மாற்றும் கருப் பொருள் அமைப்பே, வெளி எனப்படுகிறது. மின்காந்த வெளி, (இதன் ஒரு வகையே ஒளி) புவி ஈர்ப்பு வெளி, அணு உட்கருவின் துகள்களை இணைக்கும் அணுவெளி, முத லியவை உள்ளன.

பொருளின் இவ்விரு வகைகளும், கருப்பொருளும், வெளியும், ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்க முடி யாதவை. சில நிலைகளின் கீழ் ஒன்று மற்றொன்ருக மாறுகிறது.உதாரணமாக, பொருளின் இரண்டு துகள்க ளாகிய எலெக்ட்ரான்,பாஸிட்ரான் இவற்றின் ஒருஜோடி சில நிலைகளின் கீழ்''ஒரு போடானுக'', மின்காந்த வெளி யின் ஒரு துகளாக மாறுதலடைகிறது. அதாவது பொருளின் ஒரு வகையாகிய கருப் பொருள், மற்றொரு வகையாகிய ஒளியாக, மின்காந்த அதிர்வுகளாக, (அதா வது மின்காந்த வெளியாக) மாற்றப்படுகிறது. எனவே இயற்கையில் நிறை மறைவதில்லை.

விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளில் முக்கியத்து வத்தை ஆராய்ந்து பொருள் முதல் வாதத்தை ஆதரித்த

தோடு, அப்பாலைப் பொருள் முதல் வாதத்தை, முரண் தர்க்கப் பொருள் முதல்வாதத்தோடு குழப்பிக் கொள்ளக் கூடாது என்று தெளிவாக எடுத்துக் காட்டியதே லெனின் ஆற்றிய வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த தொண்டாகும். பொருள் மாற்ற முடியாத, அழிக்க முடியாத அணுக்களைக் கொண்டது என்று அப்பாலைப் பொருள் முதல் வாதம் கருதுகிறது. பொருளை ''முடிவான செங்கல்லான'' அணுவாகவோ, ஏதோ ஒரு வகையான நிரந்தரப் பண்பாகவோ, குறைத்து விட முடியாது என்பதே முரண் தர்க்கப் பொருள் முதல் வாதத்தின் தொடக்க நிலை. பொருளுக்கு ஒன்றல்ல, பல பண்புகள் உண்டு. உலகிலுள்ள பொருள்கள் பல்வேறு வகைகளாக வேறுபடுவது போலவே, அவற்றின் பண்புகளும் வேறுபடுகின்றன. விஞ்ஞானக் கண்டு பிடிப்புக்கள் இதை நிரூபித்துள்ளன. எனவேதான் லெனின், ''விஞ்ஞானம் பிரசவ வேதனையில இருக்கிறது; அது முரண் தர்க்கப் பொருள் முதல் வாதத்தைப் பெற்றுக் கொண்டிருக்கிறது'',* என்று எழுதினார்.

மேலும், பொருளின் அமைப்பு பற்றிய கோட்பாட்டை, புறவயமான யதார்த்தம் என்ற பொருளின் தத்துவஞான வரையறையோடு குழப்பிக் கொள்ளக் கூடாது என்பதையும் லெனின் எடுத்துக் காட்டினார். விஞ்ஞானக் கண்டு பிடிப்புக்கள், பொருளின் அமைப்பு பற்றிய பிரச்சனையை—அது அணுக்களால் ஆனதா, எலெக்ட்ரான்களால் ஆனதா, அல்லது மற்ற துகள்கள் உள்ளனவா, என்ற பிரச்சனையை—நிர்ணயிக்கின்றன. தத்துவஞானம் வேறொரு பிரச்சனையைக் கையாள்கிறது உலகம். அதாவது இந்தத் துகள்கள், மனிதனது தன்னறிவிலிருந்து, பிரிந்து புறவயமாக இருக்கின்றன

* லெனின் தொகுப்பு நூல்கள், பாகம் 14 பக்கம் 313

வா? எனவே விஞ்ஞானம் எத்தனை புதிய ‘துகள்களைக்’ கண்டுபிடித்தாலும் சரி (அது தொடர்ந்து புதியன வற்றைக் கண்டுபிடித்துக் கொண்டுதான் இருக்கிறது) பொருள் முதல் வாதத்தை முறியடிக்க முடியாது. ஏனெனில் இந்தத் துகள்களே பொருள் தன்மை உடையவைதான். மனிதனிடமிருந்தும், மனித குலத்தினிடமிருந்தும் தனித்துப் புறவயமாக உள்ளவை.

எனவே பொருள் பற்றிய தத்துவ ஞானக்கருத்தை உலகத்தின் இயற்கை விஞ்ஞானச் சித்திரத்தோடு குழப்பிக் கொள்ளக் கூடாது. பொருளின் ஸ்தூலமான வகைகளின் அமைப்பு நிலை, பண்புகள் இவைபற்றிய நமது கருத்துக்கள் உலகைப் பற்றிய இயற்கை விஞ்ஞானச் சித்திரம், மாறிக் கொண்டே இருக்கின்றன. ஏனெனில் உலகைப் பற்றியும், அதன் அமைப்பைப் பற்றியும் மேலும்மேலும் விரிவான அறிவை விஞ்ஞானிகள் பெற்று வருகின்றனர். உலகின் இயற்கை விஞ்ஞானச் சித்திரம் பற்றிய நமது பழைய அறிவை புதிய கண்டுபிடிப்புகள் மறுதலித்து விட்டனவே தவிர, பொருள் பற்றிய தத்துவஞானக் கருத்தை அல்ல. அது உலகின் புறவயமான இருப்பில் அக்கறை காட்டுகிறதே தவிர அதன் அமைப்பில் அல்ல. உலகின் இந்தச் சித்திரம் பற்றிய நமது கருத்துக்கள் எவ்வளவுதான் மாறினாலும், பொருள் மறைந்து விடுவதற்கு அவை சான்று கூற முடியாது. லெனின் கூறியது போல, பொருள்பற்றிய நமது அறிவின் எல்லைகளே மாறுகின்றது. ஆனால் உலகின் பொருள்மயமான தன்மை, ஒரு புறவயமான யதார்த்தம் என்ற முறையில் பொருளின் இருப்பு, மேலும் மேலும் உறுதிப்படுத்தப் படுகிறது.

பொருள் எனும் கருத்தை, ஏன் இவ்வளவு ஆக்ரோஷத்துடன் கருத்து முதல் வாதிகள் எதிர்க்கிறார்கள் ?

பொருள் கோட்பாடு தெய்வ நம்பிக்கையை மறுதலிக்கிறது.

மார்க்ஸிஸத்தில் தனக்கு மிகவும் பிடிக்காத பகுதி, 'பொருள் பற்றிய முரண் தர்க்கக் கோட்பாடே'' என்று, பிரான்ஸ் நாட்டுக் கத்தோலிக்கத் தத்துவஞானியாகிய ஆல்ப்ரெட் ஆன்ஸெல் கூறினார். ''உலகத்தின் தோற்ற, வளர்ச்சியில், கடவுளின் பங்கை, மார்க்ஸிஸம் தன்னிச்சையாக மறுக்காதிருக்குமானால் திருச்சபை அதைக் கண்டிக்காது. மார்க்ஸிஸத்தைக் கண்டிப்பதனால், அதன் பொருள் முதல் வாதத்திற்காகத்தான் கண்டிக்க வேண்டுமென்றும்'', அவர் எழுதினார். ஆக, மார்க்ஸிஸத் தத்துவ ஞானத்தின் ''தீமைகளுக்கு வேர்'' அதுதான் என்று தெரிகிறது!

பொருள் கோட்பாடு தெய்வத் தலையீட்டை மறுக்கிறது. உலக சிருஷ்டி பற்றிய மதப்புனைவுகளை அது அபத்தமாக்குகிறது. ''ஏதுமற்றதிலிருந்து'' கடவுள் உலகைத் தோற்றுவித்தார் என்று எல்லா மதங்களும் ஒரு முகமாகக் கூறுகின்றன.

ஆனால் ''ஏதுமற்றதிலிருந்து'' எதுவும் தோன்றுவதில்லையென்றும், எதுவும் சுவடின்றி மறைந்து விடுவதில்லை என்றும் விஞ்ஞானம் உறுதியாக நிலைநாட்டியுள்ளது. விஞ்ஞானத்தில் இதற்கென ஒரு தனிவிதி, நிறையின் நிலைத்துவ விதி, அல்லது வேறு வழியில் சொன்னால் பொருளின் நிலைத்துவ விதி என்ற விதி உண்டு. பொருள் முதல் வாதத்தால் பெறப்படும் முடிவொன்றே சாத்தியமான முடிவு. பொருள் என்றும் தோன்றியதில்லை அது என்றும் இருந்தது; இனி என்றும் இருக்கும். உலகம் ஆதிஅந்தம் அற்றது; அது யாராலும் சிருஷ்டிக்கப்படவில்லை. பொருளின் நிரந்தரத்துவம், எனும் விஞ்ஞானக்

கொள்கை, உலக சிருஷ்டி பற்றிய மத நம்பிக்கையை அடிப்படையில் தகர்க்கிறது.

பொருளின் நிரந்தரத்துவம் எனும் கொள்கை மார்க்ஸிஸத்தைக் கற்பவர்களிடம், சில கேள்விகளை எழுப்புகிறது. பொருள் என்றும் இருந்தது என்பது எப்படி சாத்தியமாகும்? அது எப்பொழுதாவதுதோன்றிஇருக்க வேண்டாமா? இந்தக் கேள்விகளைப் பற்றி வியப்படைய வேண்டியதில்லை. எல்லாப் பொருள்களுக்கும், ஒரு தோற்றமும், ஒரு முடிவும் இருப்பதைத் தனது ஆயுட் காலத்தில் ஒருவர் காண்கிறார். எனவேதான் பொருளைத் தோற்றுவித்தது யார், என்ற கேள்வியைக் கேட்கிறார். அது என்றும் இருந்தது என்று விஞ்ஞானம் விடை பகர்கிறது.

ஆதிகாலத்திலேயே, கிரேக்கர்கள் காலத்திலேயே, உலகம் எந்தக் கடவுளாலோ, மனிதனாலோ, சிருஷ்டி செய்யப்படவில்லை என்றும், ஆனால் இருந்தது, இருக்கிறது: முடிவற்று இருக்கும், என்றும் ஹெராக்ளிடஸ் எழுதினார்.

இந்த முக்கியமான முடிவுக்கு என்ன அத்தாட்சி இருக்கிறது?

ஏராளமான உண்மைகள் அதற்கு ஆதரவாக உள்ளன. உதாரணமாக பொருள்களின் அழிவின்மை விதியை எடுத்துக் கொள்ளுங்கள்.

நம் வீட்டிலிருந்தே ஒரு உதாரணத்தைப் பார்ப்போம். அடுப்பில் விறகை வைத்து எரிக்கிறீர்கள். முதலில் பார்க்கும் போது, அது மறைந்து விட்டது போலக் காண்கிறது. சிறிது சாம்பல் மட்டுமே மிஞ்சியுள்ளது. ஆனால் எரிதலால் தோன்றும் விளைபொருள்களைக் கவனமாக நிறுத்தால் எடை கூடி இருக்கிறதே தவிரக் குறையவில்லை என்று தெரிகிறது. ஏனெனில் அவற்

றில், விறகு எரிவதற்கு முன்னுல் அதில் என்ன பொருள் கள் இருந்தனவோ அவையும், அவற்ருேடு, அது எரிந்த போது காற்றிலிருந்து எடுத்துக் கொண்ட பொருள் களும் உள்ளன.

மாபெரும் ரஷ்ய விஞ்ஞானியான லொமொனே ஸோவ், இந்த உண்மையைக் குறிப்பிட்டுக் காட்டினர். எந்தப் பண்டமோ, அல்லது மூலகமோ, நிர்மூலமாக்கப் படமுடியாது என்றும், ஏதுமற்றதினின்றும் அது தோன்ற முடியாது என்றும் அவர் முடிவெடுத்தார். இந்தக் கருத்தை அவர் பொருளின் அழிவின்மை என்ற விதியாக வகுத்தார்.

இயற்கையின் இந்த முக்கிய விதியிலிருந்து கட வுள் உலகைச் சிருஷ்டித்தார் என்ற மதக்கற்பனை பொய் யானது என்பது தெரிகிறது. பிரபஞ்சத்தில் ஒரு காலத் தில் ஒன்றுமே இல்லாதிருந்தது என்று நாம் கருதுவோ மானுல், அதாவது பொருளே இல்லாதிருந்தது என்று கருதுவோமானுல், அது தோன்றுவதற்குக் காரணமான எதுவுமே இருந்திருக்க முடியாது. ஆனுல் பொருள் இருக்கிறது. எனவே அது எதிலிருந்தும் தோன்றவில்லை என்றும், என்றும் இருந்தது, இனியும் இருக்கும் என் றும் ஆகிறது. அது நிரந்தரமானது. அழியாதது. பொருளின் நிரந்தரத்துவம் எனும் விஞ்ஞானக் கருத்து, உலக சிருஷ்டி பற்றிய மத நம்பிக்கையை அடிப்படை யில் தகர்க்கின்றது.

மேலும், இயற்கை நிகழ்வுகள் அனைத்திற்கும் பொருளே அடிப்படையாகவும், மூலமாகவும் இருப்ப தால், புறவயமாக, யதார்த்தத்தில் இல்லாததும், புலன் உருப்புக்களால் அறிய முடியாததும், விஞ்ஞான சாத னங்கள் அல்லது விஞ்ஞான முறைகளால் ஆராய முடி யாததுமான, எந்த நிகழ்வும் இருக்க முடியாது. அப்படி

இருக்கும் போது தேவதைகள், பேய்கள் ஆகிய மதக் கட்டுக் கதைகளுக்கு இடமில்லை. தெய்வத்திற்கு இட மில்லை.

உண்மையிலேயே தேவதைகள் இருக்குமானால் அவை ஏன் எந்த வழியிலும் வெளிப்படுவதில்லை? மிக நுண்ணிய எலெக்ட்ரான்கள் கூட மனிதனால் ஆராயப் படுகின்றன. நமது புலன் உறுப்புக்களாலோ பௌதீக சாதனங்களாலோ, மற்ற விஞ்ஞான முறைகளாலோ ஏன் தேவதைகளைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அவை களது "செயல்களின்" விளைவுகளைக் கூட காண முடிய வில்லையே. உலகிலுள்ள ஒரு பொருளைக் காட்டி, இது தேவதையால் செய்யப்பட்டது என்று சொல்லும்படி யாக ஏதாவது ஒரு பொருள் இருக்கிறதா? இல்லவே இல்லை. எனவே, கடவுளோ, தேவதைகளோ, 'மறு உல கமோ,' இல்லை. இந்த முடிவை மறுதலிக்கத் திருச்சபை சக்தியற்றிருக்கிறது. அதனால்தான், பொருள் பற்றிய பொருள் முதல் வாதக் கருத்தைக் கண்டால், திருச்சபை யின் கருத்து முதல் வாதிகளுக்கு இத்தனை வெறுப்பாக இருக்கிறது. அதனால்தான் அவர்கள், 'பொருள் மறைந்து விட்டது" என்று கூறிப் பொருள் முதல் வாதத்தை மறுதலிக்க முயற்சிக்கின்றனர். அதில் அவர்களால் வெற்றி பெற முடியாததால், பொருள் எனும் கருத்தின் உண்மையான அர்த்தத்தைத் திரித்துக் கூறவாவது முயற்சிக்கின்றனர்.

பொருள் நிரந்தரமாக இருந்து வந்துள்ளது என்றே வைத்துக் கொள்வோம். அதனால் பொருள் முதல் வாதத் திற்கு எந்த இலாபமும் இல்லை என்று அவர்கள் கூறு கின்றனர். அனாதிகாலத்திற்கு முன், இன்றிருக்கும் பிரபஞ்சத்திற்குப் பதிலாக ஏதோ ஒரு உருவற்ற, இயக்கமற்ற, பொருள் இருந்ததாகவே கற்பனை செய்து

கொள்ளுவோம். நீண்ட நெடுங்காலம் வரை, அது அந்த நிலையிலேயே இருந்தது. ஆனால் அது எந்த நிலையிலிருந் ததோ, அந்த நிலையிலிருந்து வெளிவர வேண்டிய காலம் ஒன்று வந்தது. அதுவரை அது இயக்கமற்றிருந்தது. ஆனால், அது திடீரென்று எப்படி இயக்கத்தைப் பெற் றது. இது அவர்கள் கூற்று. அத்தகைய மாற்றத்திற் கான எந்த அடிப்படையும், பொருளுக்குள்ளேயே இருக்க முடியாது என்று கருத்து முதல் வாதிகளும், திருச்சபையும் கூறுகின்றனா. எனவே செத்துக்கிடந்த இந்தப் பொருளை, அதன் "உறக்க நிலையிலிருந்து" வெளிக் கொணர்ந்த ஒரு சக்தி, இயற்கையினின்றும், பொருளினின்றும் தனித்து, அவற்றிற்கு வெளியே. இருக்கவேண்டும். இந்த சக்தியே கடவுள்.

ஆனால் இந்தத் தூண்டலைக் கொடுக்கக்கூடிய ஒரு சக்தி பொருளுக்குத் தேவைதானா?

**பொருள் இயக்கத்தில் இருக்கிறது.**

மார்க்ஸிஸத் தத்துவ ஞானத் தைப் படித்திராத ஒருவரிடம் இயக்கம் என்றால் என்ன வென்று கேளுங்கள் அவர், "இயக்கமென்பது இடம் விட்டு இடம் நகர்வது. ஒரு பொருள் ஒரு இடத்திலேயே இருக்குமானால் அது இயங்கவில்லை. உதாரணமாக, ஒரு கல்லை யாராவது விட்டெறிந்தால் தவிர அது நகர்வதில்லை," என்று கூறுவார். ஆனால் அசையாது இருக்கும் ஒரு கல்லைப் பாருங்கள். அதற்குள்ளாக இயக்கம் நடந்து கொண்டு தான் இருக்கிறது. எல்லாப் பண்டங்களிலும் உள் ளவை. என்று நாம் இப்போது அறிந்த, அணுக்களும், மூலக்கூறுகளும், எலெக்ட்ரான்களும், புரோட்டான்களும் இடைவிடாது இயங்கிக்கொண்டே இருக்கின்றன. வீடு கூட இயக்கமற்று இருக்கவில்லை. அதுவும் பூமியோடு,

சூரியனைச் சுற்றி வருகிறது. நாம் ஒரு கூட்டத்தில், அசையாது உட்கார்ந்து கொண்டிருக்கிறோம் என்று கருதிக் கொள்ளுங்கள். எனினும் நமது இரத்தம் ஓடிக் கொண்டிருக்கிறது; நமது உடலில் சிக்கலான பல இயக்கங்கள் நடந்து கொண்டிருக்கின்றன. புதிய ஸெல்கள் தோன்றிக் கொண்டிருக்கின்றன. பழயவை இறந்து, அழிக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றன. இதுவும் இயக்கந்தான். எனவே நாம் சில சமயங்களில் எண்ணுவதைக் காட்டிலும், இயக்கம் எனும் பிரச்சனை மிகவும் சிக்கலானது என்று தெரிகிறது.

ஒரு கல் தூக்கி எறியப்படும் வரை அது இருந்த இடத்திலேயே இருக்கிறது என்பதையும், ஒரு காரை, டிரைவர் ஓட்டினால் ஒழிய, அது நகர்வதில்லை என்பதையும் மக்கள் பார்க்கிறார்கள். ஏறத்தாழ இது போன்ற வாதங்களின் ஆதாரத்தில்தான், உயர்ந்த சக்தியாகிய கடவுள் ''முதல் தூண்டலைப்'' புகுத்தும் வரை பொருள் இயக்கமற்ற நிலையிலிருந்தது என்ற கருத்தைத் திருச்சபை கைக்கொண்டுள்ளது. பொருளின் இயக்கம் பொருளிலிருந்தே தோன்றுகிறது என்பதை மிகவும் புகழ்பெற்ற விஞ்ஞானியாகிய நியூட்டனால்கூட விளக்க முடியவில்லை. கடவுள் இயற்கைக்கு ''முதல் தூண்டலைக்'' கொடுத்தார் என்றும், ''கடியாரத்திற்குச் சாவி கொடுத்தார்'' என்றும், அதற்குப் பின்தான், இயக்கம், பொருளின் உள்ளார்ந்த பண்பாயிற்று என்றும் அவர் கருதினார். ஆனால் பொருளுக்கு அத்தகைய இயக்கமற்ற மரணநிலை சாத்தியமானதுதானா? வேறு வழியில் சொன்னால், பொருள் மட்டும் இருந்து, இயக்கம் இல்லாத ஒரு காலம் இருந்ததா?

இருநூறு ஆண்டுகளுக்கு முன் விஞ்ஞானம் இயக்கத்தின் ஒரு வகையைப் பற்றித்தான்—இடப்பெயர்ச்சி

யைப் பற்றித்தான் ஆராய்ந்திருந்தது. அந்தக் காலத்தில், ஏதாவது ஒரு வெளிச் சக்தி ஒரு பண்டத்தை அதன் நிலைத்துவ நிலையிலிருந்து வெளிக் கொணரும் வரை, அது அந்த நிலையிலே இருக்கிறது என்று கருதுவது சாத்தியமாக இருந்தது. அப்போது அந்தக் கருத்து இயற்கை முழுவதற்கும் பிரயோகிக்கப்பட்டது. ஆனால் இயக்கம் பல்வேறு முறைகளில் நடைபெறுகிறது என்று, பௌதீகம், இரசாயனம், உயிரியல் இவற்றின் வளர்ச்சி எடுத்துக் காட்டியது.

உதாரணமாக, வெப்பத்தை எடுத்துக் கொள்ளுங்கள். ஏராளமான மூலக்கூறுகளின் இயக்கத்தின் விளைவாகவே வெப்பம் உண்டாகிறது என்று தெரிகிறது; தண்ணீரில் இதுதான் நடைபெறுகிறது. தண்ணீரிலுள்ள மூலக்கூறுகளின் இயக்கத்தின் விளைவாக அது வெப்பம் அடைகிறது. இது யாந்திரீக இயக்கமல்ல. ஆனால் புதிய சிக்கலான, இயக்கம். மின்சாரம் என்பது எலெக்ட்ரான்களின் ஓட்டமேயாகும். இரசாயனச் சேர்க்கை என்பது இயக்கமே. அயனிகளின் இணைப்பால் உண்டாகும் இது, முன்னதை விடச் சிக்கலான கிரியை. முன்னரே கூறியபடி, உயிருள்ள பொருளும் எப்போதும் இயக்க நிலையிலேயே இருக்கிறது. மனித சமூகத்திலும் இடைவிடாத நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. சமூக முறை மாறுகிறது. மக்களே மாற்றமடைகிறார்கள்.

இவை அனைத்திலிருந்தும் பெறவேண்டிய முடிவு என்ன? இயற்கையில் பல்வேறு வகையான இயக்கங்கள் இருக்கின்றன என்பதுதான் பெறவேண்டிய முடிவு. முதலாவதாக, ஒரு இடத்தில், பொருள்கள், பண்டம் இவற்றின் துகள்களின் இடப்பெயர்ச்சி அதாவது யாந்திரீக வகையான இயக்கம் உள்ளது. இரண்டாவதாக

வெப்பம், மின்சாரம், வெப்பம் முதலிய நிகழ்ச்சிகள், அதாவது பௌதீக வகையான இயக்கம் உள்ளது. மூன்றாவதாக, இரசாயனக் கிரியைகள், அயனிகளின் சேர்க்கை, போன்ற இரசாயன வகையான இயக்கம் இருக்கிறது. நான்காவதாக, உயிர் பொருள்களிடத்தே நடைபெறும் உயிரியல் வகை இயக்கம் உள்ளது. ஐந்தாவதாக, சமூக வாழ்விலே ஏற்படும் மாறுபாடுகள், அதாவது சமூக வகையான இயக்கம் உள்ளது.

எனவே, ஒரு இடத்தில் ஏற்படும் பண்டங்களின் இடப்பெயர்ச்சியே இயக்கம் என்று எளிதாகக் கூறிவிட முடியாது. ஏனெனில் இது இயக்கத்தின் ஒரு வகையேயாகும். மிகப் பொதுவாக, அந்தச் சொல்லின் தத்துவார்த்த உட்பொருளில், இயக்கம் என்றால் என்ன என்பதைப் பற்றியே நாம் கவனித்து வந்துள்ளோம். எல்லா வகையான இயக்கங்களின், முக்கியமான, தனிப்பட்ட பண்பு என்ன என்பதை முதன்மையாக நிர்ணயிப்பதே இதன் குறிக்கோள். "சாதாரண இடப்பெயர்ச்சியிலிருந்து, சிந்தனை வரையில், பிரபஞ்சத்தில் நடைபெறும், எல்லா மாற்றங்களையும், நிகழ்வுகளையும் இயக்கம் எனும் சொல் உட்கொண்டுள்ளது" என்று எங்கெல்ஸ் எழுதினார்.† எனவே பொருள்களிலும் நிகழ்வுகளிலும், அதாவது உலகில், பொருளில், ஏற்படும் எல்லா மாற்றங்களையும் தன்னுள் கொண்டதுதான் இயக்கம்; பொதுவான மாற்றமே இயக்கம்.

அதனுள் எந்த மாறுதலும் ஏற்படாத ஒரு நிலையில் பொருள் இருக்க முடியுமா? முடியவே முடியாது! மக்களோ, பிராணிகளோ, உயிருள்ள செல்களோ, இல்லாதிருந்த அந்த அநாதி காலத்தில் கூடப் பொருள்

† எங்கெல்ஸ்: இயற்கையின் முரண் தர்க்கம், பக். 92.

மாறிக் கொண்டிருந்தது. பண்டங்கள் மூலக் கூறுகளை யும், அணுக்களையும் கொண்டுள்ளன. அணுக்கள் இடைவிடாத இயக்கத்தில் இருக்கின்றன. எனவே இறுக்கமான, முழு முதன்மையான இயக்கமற்ற பண்டம் எப்பொழுதுமே இருந்ததில்லை. மேலும் அணுக்களும், மூலக்கூறுகளும், எலெக்ட்ரான்களும் இருந்திருந்தால் இரசாயனக் கிரியைகள் இல்லாமலிருந்திருக்க முடியாது. எனவே பொருளின் இரசாயன வகை இயக்கமும் இருந்தது.

எனவே, இயக்கம் இல்லாதிருந்த ஒரு நிலையில் பொருள் என்றுமே இருந்ததில்லை என்பதைப் புரிந்து கொள்வது சுலபம். எனவே, உரு, பொருள், இருத்தலின் ஒருவகையே இயக்கம் என்று கூறுகிறோம். இயக்கம் பொருளின் பிரிக்க முடியாத ஒரு பண்பு. அல்லது தத்துவார்த்திகள் கூறுவதுபோல அது பொருளின் ஒரு குணாதிசயம். இயக்கம் இல்லாத பொருளே இல்லை. பொருள் இயக்கத்தில்தான் இருக்கிறது.

நமது நடைமுறை அனுபவத்தின், மறுக்க முடியாத சான்றுகளால், இந்த முடிவு ஊர்ஜிதம் செய்யப்படுகிறது. ஒரு கடைசல் இயந்திரம் இயங்கிக் கொண்டிருக்கும் போது, அதன் பாகங்கள் உஷ்ணம் அடைகின்றன. இயந்திரத்தின் யாந்திரீக வகை இயக்கம் (தனிப்பட்ட பாகங்களின் சுழற்சி) உஷ்ண வகையான இயக்கமாக மாற்றப்படுகிறது என்பதே இதன் பொருள். இதற்கு நேர்மாறான நிகழ்ச்சி, எஞ்சினில் நடைபெறுவதை ஒருவர் காணலாம். எரிதலால் உண்டாகும் நீராவி, சக்கரங்களைச் சுற்ற உபயோகப்படுகிறது. இங்கு வெப்ப சக்தி, யந்திர சக்தியாக மாற்றப்படுகிறது

இத்தகைய உண்மைகளைப் பொதுமைப்படுத்தி, இயக்கத்தை "ஏதுமற்றதிலிருந்து" தோற்றுவிக்க முடி

யாது என்றும், அது ஏதுமற்றதில் மறைய முடியாது என்றும், விஞ்ஞானம் முடிவெடுத்தது. ஒரு இயக்கத்தை மற்றொரு வகையான இயக்கமாக மாற்ற மட்டுமே முடியும். இயற்கை விஞ்ஞானத்தின் இந்த முக்கியமான கருத்து "சக்தியின் அழிவின்மை, மாற்ற விதி" என்று கூறப்படுகிறது. (பௌதீகத்தில் சக்தி என்பது பொருள் இயக்கத்தின் ஒரு அளவேயாகும்).

ஏதாவது ஒரு சமயத்தில் பொருள் இயக்கமற்று இருந்திருந்தால், அதில் இயக்கம் தோன்றி இருக்க முடியாது. எனவே இயக்கம் பொருளில் எப்பொழுதும் உள்ளார்ந்துள்ளது. பொருளுக்கு "முதல் தூண்டல்" எந்த வகையிலும் தேவை இல்லை. அத்தகைய "தூண்டல்" என்று இருந்ததே இல்லை.

நிலைத்துவ நிலை (ஓய்வு) இருப்பதை பொருள் முதல் வாதம் மறுக்கிறது என்பதல்ல இதன் பொருள். இயற்கையில் நிலைத்துவ நிலை இருக்கிறது. ஆனால் அது எப்போதும் சார்புடையது. அனைத்தும் நிலைத்துவ நிலையிலுள்ள, எவ்வகை இயக்கமுமற்ற நிகழ்வு ஏதுவுமில்லை என்பதே இதன் பொருள். இது மேலே எடுத்துக் காட்டப்பட்டது.

ஒரு பண்டம் நிலைத்துவ நிலையில் இருக்கிறது என்றால் அது ஏதோ ஒன்றைப் பொருத்தே அந்த நிலையில் உள்ளது. உதாரணமாக, ஒரு காரிலே பயணம் செய்யும் போது ஓடுகின்ற காரைப் பொருத்து நாம் நிலைத்துவ நிலையில இருக்கிறோம்: ஆனால் இது முழு முதன்மையான ஓய்வு அல்ல. ஏனெனில் தமது உடலில் தொடர்ந்து மாற்றங்கள் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன

நிலைத்துவ நிலை பற்றிய முரண்தர்க்கக் கருத்து, அப்பாலைக் கருத்திலிருந்து அடிப்படையாக வேறு

பட்டது. எந்தவகையான இயக்கமும் இல்லாதிருப்பதே நிலைத்துவ நிலை என்று அப்பாலே கருதுகிறது. இந்தக் கருத்தை முரண் தர்க்கப் பொருள் முதல வாதம் எதிர்க்கிறது.

இயற்கையில் நிர்ணயமான முக்கியத்துவம் வகிப்பது நிலைத்துவ நிலை (அது இயற்கையில் இருந்த போதிலுங்கூட) அல்ல. ஆனால் இயக்கம், வளர்ச்சி மாறுபாடே, அத்தகைய முக்கியத்துவம் வாய்ந்தது. பொருளின் குணாதிசயமாக, இயக்கம் எங்கும் இருப்பதை மறுப்பது, கடவுள் கருத்தை ஒப்புக்கொள்வதாகும். எனவேதான், தற்கால பூர்ஷுவா தத்துவஞானிகளால் குறிப்பாகப் "புதிய-தோமிஸ்டுகளால்" ¶ இந்த மறுப்பு விரிவாகக் கைக் கொள்ளப்படுகிறது. உதாரணமாக, பிரான்ஸ் நாட்டுப் புதிய-தோமிஸ்டாகிய கால்வெஸ் பாதிரியார், கடவுள் இயற்கையின் ஊக்க சக்தியாக இருப்பதன் மூலமே வளர்ச்சி சாத்தியமாகும் என்று அறுதியிட்டுக் கூறுகிறார். ஆனால் பொருளுக்கு, இயற்கைக்கு, எந்த "ஊக்க சக்தியும்" தேவையில்லை என்பதை நாம் முன்னரே பார்த்தோம். ஒரு அடிப்படையான பிரிக்கமுடியாத பண்பாக, இயக்கம் அதில் உள்ளார்ந்துள்ளது. நிரந்தரமாக இருந்து வந்திருக்கும் ஒன்றின் ஆரம்பம் எது என்று கேட்பது பொருளற்றது. பொருளுக்கு இயக்கத்தைக் கொடுத்தது யார் என்று கேட்பது அறிவற்றது. ஏனெனில், பொருள் இருத்தலின் ஒருவகையாக, இயக்கம் இருப்பதால், அது, பொருளினின்றும் பிரிக்கப்பட முடியாதது. பொருள் இருத்தலின் வேறுவகைகள் என்ன?

---

¶ புதிய தோமீஸம்: தற்காலக் கத்தோலிக்க மதத்தின் தத்துவஞானம்.

**இடமும் காலமும் பொருள் இருத்தலின் வகைகள்**

எல்லாப் பண்டங்களுக்கும் விரிவு உண்டு. அகலம், தடிமன் உயரம் ஆகிய மூன்று அளவு களில் பரிமாணம் உண்டு. அவை ஒரு குறிப்பிட்ட இடத்தை அடைத்துக் கொண்டுள்ளன. மேலும், அவை இட ரீதி யில் ஒன்ருெடொன்று தொடர்புடையவை. அதாவது ஒன்றுக்கொன்று சேய்மையிலோ, அண்மையிலோ, மேலோ, கீழோ, இட துபக்கமோ, வலதுபக்கமோ உள் ளன. அதாவது அவை இடத்தில் உள்ளன; வேறு எந்த வகையிலும் இருக்கமுடியாது. ஆனல், நாம் முன்னரே பார்த்தது போல, எல்லாப் பண்டங்களிலும், பொருள் என்று நம்மால் கூறப்படுவது இருக்கிறது. எனவே பொருள், இடத்தைத் தவிர வேறு எந்த வகையிலும் இருக்க முடியாது. எனவேதான், பொருள் இருத்தலின் ஒருவகை என்று இடம் வரையறுக்கப்படுகிறது.

மேலும் உலகிலுள்ள எல்லா நிகழ்வுகளும், இடை விடாத மாற்றத்தில், இயக்கத்தில், வளர்ச்சியில் உள்ளன. ஆனல் இந்த மாற்றங்கள் எப்படி நடை பெறுகின்றன. ஒரு எளிய உதாரணம் அதைக்காட்டும். குழந்தைப் பருவத்திலிருந்து, இன்றுவரை எடுக்கப்பட்ட உங்கள் புகைப்படங்களைப் பாருங்கள். ஆண்டுகள் செல்லச் செல்ல மாற்றங்கள் அதிகமாகின்றன என் பதை நீங்கள் காண்பீர்கள். அதாவது எல்லா மாற்றங் களும், காலத்தில் நடைபெறுகின்றன என்பதை நீங்கள் காண்பீர்கள்.

அத்தோடு, உலகத்தில் மாற்றங்கள் அனைத்தும் ஒரு குறிப்பிட்ட வரிசையில் ஏற்படுகின்றன. இரவைத் தொடர்ந்து பகல் வருகிறது. முதலாளித்துவத்தைத் தொடர்ந்து சோஷலிஸமும், கம்யூனிஸமும் வரு

கின்றன. ஒரு நிகழ்ச்சி முன்னதாக நடைபெறுகிறது. மற்றொன்று பின்னர் நடைபெறுகிறது. அவை அனைத்திற்கும் குறிப்பிட்ட கால அளவும் உண்டு. நிகழ்ச்சிகளின் இந்த வரிசையும் கால அளவும், காலத்திலேதான் நடைபெற முடியும்.

இவ்விதமாக, உலகில் நிகழ்வதனைத்தும் காலத்திலேயே நடைபெறுகிறது. எனவே காலமும் பொருள் இருத்தலின் ஒருவகையே யாகும். "இயக்கத்தில் இருக்கும் பொருளைத் தவிர உலகில் வேறு எதுவுமே இல்லை. இயக்கத்தில் உள்ள பொருள் இடத்திலும், காலத்திலுமன்றி வேறு எந்த வகையிலும் அசைய முடியாது," என்று லெனின் எழுதினார்.¶

இடம், காலம், இரண்டுமே பொருள் இருத்தலின் வகைகள் என்று வரையறை செய்தோமானால், அவை இரண்டிற்கும் இடையே, அதிக வேறுபாடு இருக்கமுடியாது என்று நீங்கள் கூறலாம். அது சரியல்ல என்பதை நாம் ஏற்கனவே பார்த்துள்ளோம். இடம் என்பது பருப்பொருள் பண்டம் இருக்கும் ஸ்தானத்தை, அதன் அளவுகளை, அதன் பரிமாணத்தைக் குறிக்கும், பொருள் இருத்தலின் ஒருவகையாகும் ஆனால் காலம், பொருள் இருத்தல், அதன் வளர்ச்சி, இவற்றின் வேறொரு அம்சத்தைக் குறிக்கிறது; பருப்பொருள் பண்டங்களில் ஏற்படும் மாறுபாடுகளின் வரிசையைக் குறிக்கிறது; இந்த வேறுபாடு தெளிவாகத் தெரிகிறது. இடம், காலம் இவற்றின் பண்புகள் வேறுபட்டவை என்பது இதிலிருந்து தெளிவாகிறது. ஆனால், இடம், காலம். இவற்றில் உள்ளார்ந்துள்ள பண்புகள் யாவை?

---

¶ லெனின் தொகுப்பு நூல்கள் பாகம். 14, பக். 175.

இடத்திற்கு மூன்று அளவுகள் உண்டு. நீளம், அகலம், உயரம், இவை மூன்றும் இடத்தை முழுதாக வருணிக்கின்றன என்பது இதன் பொருள். முப்பரிமாணம் உடையதாயிருத்தல். இடத்தின் மிக முக்கியமான அம்சமாகும்.

காலத்தில் நடைபெறும் நிகழ்வுகளின் மாறுதல்கள் ஒரே ஒரு திசையில்தான் அதாவது இறந்த காலத்திலிருந்து, நிகழ் காலத்திற்கும், அதிலிருந்து எதிர் காலத்திற்கும்தான், நடைபெறுகின்றன என்றும், அவை எதிர் திசையில் நடைபெற முடியாது என்பதும் உங்களுக்குத் தெரியும். காலத்தில் பின்னோக்கிப் பயணம் செய்யும் "கால இயந்திரங்கள்" கட்டுக் கதைகளில் தான் வருகின்றன. மீண்டும் உங்கள் புகைப்படங்களைப் பாருங்கள். இளமையிலிருந்து முதுமைக்கான மாற்றம் ஒரே திசையில்தான் நடந்திருக்கிறது. இதைப் பின் நோக்கித் திருப்புவது சாத்தியமில்லை. எனவே திருப்ப முடியாத தன்மையே காலத்தின் மிக முக்கியமான பண்பாகும்.

இடமும் காலமும், வேறுபடுகின்றன என்பதை நீங்கள் காண்கிறீர்கள். அப்படியானால் இரண்டையுமே பொருள் இருத்தலின் வகைகள் என்று நாம் ஏன் கூறுகிறோம்?

பொருள்கள் காலத்தில் இல்லாமல், இடத்தில் இருக்க முடியாது. ஒரு பொருள், வெளியில் ஒரு இடத்தை அடைத்துக் கொண்டிருந்தால், அது ஒரு குறிப்பிட்ட காலத்திலேயே அவ்விதம் அடைத்துக் கொண்டிருக்கிறது. ஒரு பொருள், இடம், காலம் இரண்டிலும் இருக்கிறது. உதாரணமாக ஒரு ரயில்வே கால அட்டவணையை எடுத்துக் கொள்ளுங்கள். ரயில் ஒரு குறிப்பிட்ட இடத்தில், ஒரு குறிப்பிட்ட நேரத்தில் இருக்கிறது. ஒரு ரயில் இருக்கும் இடத்தை, அது அந்த

இடத்தில் இருக்கும் நேரத்திலிருந்து பிரிக்க முடியாது. எங்கே, எப்பொழுது என்ற இந்த இரண்டு கேள்விகளும் பிரிக்க முடியாதபடி இணைந்துள்ளன. ஒரு நிகழ்ச்சியின் காலத்தையும், வெளியில் அதன் இடத்தையும் அவை குறிப்பிடுகின்றன.

இவ்விதமாக இடமும், காலமும் பிரிக்க முடியாதபடி இணைந்துள்ளன. காலம் இல்லாது இடம் இல்லை; இடம் இல்லாது காலம் இல்லை. பொருள் இடத்திலும், காலத்திலும் இருப்பதால் அவை ஒன்றிலிருந்து ஒன்று மட்டுமின்றி, பொருளிலிருந்தும் பிரிக்கப்பட முடியாதவை.

முழு முதன்மையான வெற்றிடமும் இடம் தான் என்று நீங்கள் கூறலாம். அது ஒன்றும் இல்லாத ''இடம்'' என்று, பொருள் இல்லாத இடம் என்று, நீங்கள் கூறலாம்.

அத்தகைய பொருளற்ற வெளியொன்று, ''சூன்யப் பிரதேசம்'' ஒன்று, இருப்பதாகக் கடந்த காலத்தில் கருதப்பட்டது. ஆனால் இயற்கையில் அத்தகைய வெற்றிடம் இல்லை என்ற முடிவுக்கு விஞ்ஞானிகள் இன்று வந்துள்ளனர். உதாரணமாக, ஒரு சூன்யக் குழாயிலிருந்து வாயுக்கள் அனைத்தையும் வெளியேற்றி விட்ட போதிலுங் கூட அதில், தனிப்பட்ட அணுக்களும், எலெக்ட்ரான்களும், மற்ற துகள்களும் உள்ளன. கிரஹ இடைவெளியில், நட்சத்திர இடை வாயுக்களும், தூசியும், சிதைந்து கொண்டிருக்கும் வால் நட்சத்திரங்களும், விண்வீழ் கற்களும், நுண் துகள்களும் நிறைந்துள்ளன. ஒளிக் கதிர்கள் அதன் வழியே செல்கின்றன. ஒளிக் கதிர்களும் பொருள் தான் என்பது நமக்குத் தெரியும்.

எனவே, இடமும், காலமும் புறவயமாக இருக்கின்றன என்பது மேலே கூறியவைவற்றிலிருந்து விளங்கு

கிறது. உலகம் மனிதனிடமிருந்து பிரிந்து இருக்கிறது. அதன் உருவின் வகைகளும் புறவயமானவையே.

இடமும், காலமும், புறவயமாக இருக்கின்றன என்ற கருத்துக்கு லெனின் மிகுந்த முக்கியத்துவம் அளித்தார். இடம், காலம், பற்றிய, தன் வயக் கருத்து முதல் வாதிகளின் கண்ணோட்டத்திற்கு இது முரணானது. அவர்களது கருத்துக்களை, 18-வது நூற்றாண்டைச் சேர்ந்த ஆங்கிலத் தத்துவ ஞானியாகிய ஹியூம் 18—19 வது நூறறாண்டைச் சேர்ந்த ஜெர்மன் தத்துவ ஞானியாகிய கான்ட் இவர்களது நூல்களில் காணலாம். இடத்திற்கும், காலத்திற்கும் புறவயத் தன்மை இல்லை என்ற நிலையிலிருந்து அவர்கள் தொடங்குகிறார்கள். இட—கால தொடர்புகள், அனுபவத்தின் மூலம் பெறப் படுகின்றன என்று ஹியூம் கருதினார். ஆனால் கான்ட் அவை அனுபவத்திற்கு முன்பே நமது மனத்தில் உள்ளன என்று கருதினார். எனவே அவர் அவற்றை "முன்னரே உள்ள வகைகள்" என்று அழைத்தார்.

இடம், காலம் பற்றிய அத்தகைய கருத்தின் பொய்மையை லெனின் தனது பொருள் முதல் வாதமும், அனுபவவாத விமர்சனமும் என்ற புத்தகத்தில் எடுத்துக் காட்டினார். மாசிஸ்டுகளின் § கருத்தும் அடிப்படையில் தவறானதுதான். இவர்கள் ஹியூம், கான்ட் ஆகியோரது தன்வயக் கருத்து முதல் வாதத்திற்குப் புத்துயிர் கொடுத்தனர். இடமும், காலமும் புறவயமானவை என்ற பொருள் முதல் வாதக் கருத்தைத் தற்கால விஞ்ஞானம் உறுதிப்படுத்துகிறது என்று

§ மாசிஸம் : தத்துவஞானத்தில் பிற்போக்கான இந்தக் கருத்துவாதப் போக்கு, 19-வது நூற்றாண்டின் முடிவில் ஆஸ்திரியா தேசத்து பௌதீக வாதியும், தத்துவ ஞானியுமாகிய எர்ன்ஸ்ட் மாச் என்பவரால் தோற்றுவிக்கப்பட்டது.

லெனின் எடுத்துக் காட்டினர். இயற்கை விஞ்ஞானத்தின், குறிப்பாக பௌதீகத்தின், சில முக்கியமான முடிவுகளை நேர்மையற்ற முறையில் மாற்றி, அதன் மூலம், இடம், காலம் இவைபற்றிய தன் வயக் கருத்து முதல் வாதக் கொள்கைகளுக்குப் புத்துயிர் கொடுக்கத் தற்காலக் கருத்து முதல் வாதிகள் முயற்சிக்கின்றனர். இந்த நோக்கத்தோடு, 20-வது நூற்றுண்டின் மிக முக்கியமான கண்டு பிடிப்பாகிய சார்புக் கோட்பாட்டை, அவர்கள் திரித்துக் கூறுகின்றனர்.

**காலம், இடம் இவற்றின் சார்புத் தன்மை**

இருபதாவது நூற்றுண்டின் தொடக்கம் வரை மாபெரும் விஞ்ஞானியாகிய நியூட்டனின் கருத்தே மிகுந்த ஆதிக்கம் வகித்து வந்தது. இடமும், காலமும் பருப்பொருள் பண்டங்களிலிருந்து தனித்து இருக்கின்றன என்று அவர் கருதினர். இடம் என்பது ஒரு மாபெரும் பெட்டியாக அல்லது சுவர்களும், தளமும், கூரையும் அற்ற ஒரு பிரம்மாண்டமான அறையாகக் கருதப்பட்டது. நம்மைச் சுற்றியுள்ள உலகம், இந்தப் "பெட்டிக்குள்", "அறைக்குள்" இருக்கிறது. எனவே இடம் முழு முதன்மையானது, அதாவது பொருளிலிருந்து தனித்து இருப்பது என்று நியூட்டன் முடிவெடுத்தார். அதுபோலவே, காலமும், பொருளோடு தொடர்பற்ற, அதனின்று தனித்த ஒரு முழுமுதன்மையாகக் கருதப்பட்டது. யாந்திரீகப் பொருள் முதல் வாதத்தின் கண்ணோட்டம் இது தான்.

சார்புக் கோட்பாட்டைத் தோற்றுவித்த மாபெரும் பௌதீக வாதியான எயின்ஸ்டீன், இடம் பற்றிய பிரச்சனையை வேறொரு முறையில் அணுகினர். இடமும், காலமும் ஒன்றோடு ஒன்று மட்டுமன்றிப், பொரு

ளுடனும் இணைந்துள்ளன என்றும், அவை பொருளின் பண்புகளைச் சார்ந்துள்ளன என்றும் அவர் எடுத்துக் காட்டினார். பிரபஞ்சத்தில், முழுமுதன்மையான, ஒரே காலம் என்பது இல்லை. பின்வரும் உதாரணத்திலிருந்து இதைத் தெரிந்து கொள்ளலாம்.

பூமியிலும், மிக விரைவாகச் செல்லும் ஒரு ராக் கெட்டிலும், காலம் ஒரே மாதிரியாகக் கழியும் என்று எதிர்பார்ப்பது இயற்கையே. ஆனால் இது உண்மை யல்ல. ராக்கெட் ஒளியின் வேகத்திற்கு ஏறத்தாள சம மான வேகத்தில் சென்று கொண்டிருந்தால், அதில் பூமியைக் காட்டிலும் மெதுவாகவே காலம் கழியும். அத்தகைய ஒரு அண்டக் கப்பலில் நாம் பயணம் செய் வதாக வைத்துக் கொள்வோம். நாம் மூன்று ஆண்டுகள் பறக்கிறோம் என்றும் வைத்துக் கொள்வோம், ஆனால் நாம் பூமிக்குத் திரும்பி வரும்போது, அங்கே 360 ஆண் டுகள் கழிந்திருப்பதைக் கண்டு வியப்பு அடைவோம். இதைக் கற்பனை செய்து கொள்வது கஷ்டம்தான். ஆனால் அதுதான் உண்மை. பூமிக்கும், ராக்கெட்டிற் கும் தனித்தனி நேரம் இருக்கிறது என்பதே இதன் பொருள். காலம் என்பது சார்புடையது. அது இயக் கத்தின் கதியைச் சார்ந்துள்ளது. ஒரு பண்டம் அசை யும் வேகம் அதிகமாக அதிகமாக, அதில் காலம் கழி வது மேலும் மேலும் மெதுவாகும்.

இடமும் சார்புடையதுதான் என்று தெரிகிறது. ஒளியின் வேகத்திற்குச் சமமான வேகத்தில், ஒரு ரயில் பிளாட்பாரத்தை ஒட்டிப் போகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். இஞ்சின் டிரைவர் பிளாட்பாரத்தின் நீளத்தைக் கணக்கிடுகிறார். பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருப்பவரும், அதன் நீளத்தை அளக்கிறார். இரண்டும் ஒன்றாக இருக்குமா? இந்த நீளங்கள் வேறு

படும் என்று, சார்புக் கோட்பாட்டின் அடிப்படையில் செய்யப்பட்ட கணிதக் கணக்கீடுகள் காட்டுகின்றன.

ரயிலில் பிரயாணம் செய்பவர்களுக்குப் பிளாட்பாரம் குட்டையாகி விட்டதைப் போலக் காண்கிறது. பிளாட் பாரத்தில் நிற்பவர்களுக்கு, விரைந்து ஓடும் ரயில் குட்டையாகி விட்டது போலக் காண்கிறது. இது பொய்த் தோற்றம் அல்ல. புறவமயமான உண்மை தான். எனவே இடமும் சார்புடையது.

இந்த விஞ்ஞானக் கண்டுபிடிப்பையும் திரிப்பதற் குத் தற்காலக் கருத்து முதல் வாதிகள் முயற்சிக்கின் றனர். இடமும், காலமும் சார்புடயவை ஆதலால், அவை புறவயமாக இருக்கவில்லை, அவை தன்வய இனங்களே என்று அவர்கள் கூறுகிறார்கள். இது உண்மையல்ல. பொருளைப் பற்றிப் பார்த்தபோது நாம் கண்ட விஷயத்திற்கு இது மற்றுமொரு உதாரண மாகும். புதிய கண்டுபிடிப்புகள், இடம், காலம் பற்றிய பொருள் முதல்வாதக் கருத்தை மறுதலிக்கவில்லை. முன்னர் அவற்றைப் பற்றி நாம் கொண்டிருந்த அப் பாலைக் கருத்தையே மறுதலிக்கின்றன. பௌதீகத்தின் மொழியிலே சொன்னால் ஒவ்வொரு ஓரின அமைப்புக் கும், அதற்கென ஒரு காலம் உண்டு. அது அந்த அமைப்பைச் சார்ந்துள்ளது. ஆனால் காலமும், இடமும் புறவயமாக இருக்கின்றன.

உலகம் இடத்தில் வரம்பற்றது, காலத்தில் முடிவற்றது.

இடம் வரம்பற்றது காலம் முடிவற்றது. எனவே உலகம் எல்லாத் திசைகளிலும் முடிவற்று வியாபிக் கிறது. காலத்தில் அதற்கு ஒரு தோற்றம் இருந்ததில்லை. அதற்கு முடிவு இல்லை. இது ஒரு முக்கிய மான முடிவாகும். உலகம் வரம் பற்றதானால் "உலகின் முடிவு"

பற்றிய மதக் கட்டுக்கதைகள் தரைமட்டமாகின்றன. உலகம் காலத்தில் நிரந்தரமானதானுல், அது ஒரு காலத்தில் இல்லாதிருந்தது என்றும், கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டது என்றும் திருச்சபை கூறுவது அப்பட்டமான பொய்யாகிறது. இந்தக் கருத்து பற்றி தீவிரமான போராட்டம் இருந்து வந்துள்ளது.

உலகம், இடம், இவை வரம்பற்றவை என்ற பொருள் முதல் வாதக் கருத்தை விஞ்ஞானம் முற்றிலும் உறுதிப்படுத்தியுள்ளது. பிரபஞ்சம் எனும் மாபெருங் கடலில், நமது கிரஹமாகிய பூமி ஒரு மணலாகும். பிரபஞ்சத்தில் தூரங்கள் கிலோமீட்டர்களில் அல்லாது ஒளி ஆண்டுகளில் கணக்கிடப்படுகின்றன. ஒரு விணுடிக்கு 3,00,000 கிலோ மீட்டர் வேகத்தில் செல்லும் ஒரு ஒளிக் கதிர் ஓராண்டு செல்லும் தூரமே ஒரு ஒளி ஆண்டாகும்! நமக்குப் பல கோடி ஒளி ஆண்டுகளுக்கு அப்பால் இருக்கும் நட்சத்திரங்களை இப்போது வானியலாளர்கள் ஆராய்ந்து வருகின்றனர். அதாவது ஒரு ராக்கெட், விணுடிக்கு 50,000 கிலோ மீட்டர் வேகத்தில் சென்ருல் கூட அத்தகைய ஒரு நட்சத்திரத்தைச் சென்று அடைவதற்குப் பல கோடி ஆண்டுகளாகும்!

இரவிலே நீங்கள் ஆகாயத்தைப் பார்த்தீர்களானுல், அதில் நட்சத்திரங்கள் இறைந்து கிடப்பது போலக் காணப்படுகிறது. இந்த நட்சத்திரங்களையும், நமது சூரியனையும் கொண்ட நட்சத்திர மண்டலம். ஒரு அண்டம் எனப்படுகிறது. அதில் சுமார் 15 ஆயிரங் கோடி நட்சத்திரங்கள் இருக்கின்றன. ஆனுல் பல லக்ஷக்கணக்கான அண்டங்கள் பிரபஞ்சத்தில் இருக்கின்றன. சக்தி வாய்ந்த தொலை நோக்கிகள், ரேடியோ டெலஸ்கோப்புகள் இவற்றின் உதவியால விஞ்ஞானி

கள் அவற்றை ஆராய்கின்றனர். ஆனால் அப்போது கூட "உலகின் முடிவு" தெரியவில்லை.

எனவே, பிரபஞ்சம் முடிவற்றது, வரம்பற்றது. அதற்குக் காலத்தில தோற்றம் இருந்ததில்லை என்று முன்னரே கூறினோம். எனவே உலகத்திற்கு ஒரு ஆரம்பம் இருந்தது, அதற்கு ஒரு முடிவும் இருக்கும், என்று கருத்து முதல் வாதிகளும், திருச்சபையும் நிலைநாட்ட முயற்சிப்பது பயனற்றதாகும்.

சூரியன், மற்ற நட்சத்திரங்கள், இவற்றின் சக்தி, ஹைட்ரஜன் உட்கருவிலிருந்து இணைப்பின்மூலம் தோன்றுகிறது என்று விஞ்ஞானிகள் முடிவு செய்தனர். உடனே கருத்து முதல் வாதிகள், இயற்கையிலுள்ள ஹைட்ரஜனின் அளவிற்கு ஒரு வரம்பு உண்டு என்றும், இந்த அணு "எரி பொருள்" தீர்ந்து போனவுடன் நட்சத்திரங்கள் அணைந்து விடுமென்றும், அதற்கு நீண்ட காலத்திற்குப் பின் பிரபஞ்சமும் மாண்டு விடுமென்றும் கூற ஆரம்பித்தனர். போப் ஆண்டவரால் கூட்டப்பட்ட வானியலாளர்களின் கூட்டம் ஒன்று, உலகின் அழிவு எப்போது தொடங்குமென்று கூடக் கணக்கிட்டது. சுமார் ஆயிரங்கோடி ஆண்டுகளுக்குப் பின் அழிவு ஆரம்பமாகுமென்று கணக்கிட்டுள்ளனர். ஆனால் இந்த முடிவுகள் விஞ்ஞானத்தால் மறுதலிக்கப்படுகின்றன. ஏனெனில் ஹைட்ரஜன் "எரிக்கப்படும்" அதே சமயத்தில் அதைத் தோற்றுவிக்க, அல்லது புதுப்பிக்கவும் ஒரு கிரியை நடைபெறுகிறது.

புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ள "ஸூபர் நோவே"* நட்சத்திரங்களை, எதிர் காலத்தில் உலகம்

---

* திடிரென்று வெடிக்கும் நட்சத்திரங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள பெயர்.

முடிவடையும் என்பதற்கு ஒரு அத்தாட்சியாகப் பயன் படுத்திக் கொள்ளவும் கருத்து முதல் வாதிகள் முயற்சித்துள்ளனர். வெடிப்பதன் மூலம் இந்த நட்சத்திரங்கள், ஒரு சோப்புக் குமிழியைப் போல பிரம்மாண்டமான அளவில் விரிவடைகின்றன. சூரியனும் ஒரு நட்சத்திரந்தான் என்றும், அதுவும் வெடிக்கலாம் என்றும், அப்போது "உலகின் முடிவு" தோன்றும் என்றும், போப்பாண்டவரின் விஞ்ஞானிகள் கூறுகின்றனர். ஆனல், ஒரு தனிப்பட்ட வகையைச் சேர்ந்த நட்சத்திரங்களே இப்படி வெடிக்கின்றன என்றும், சூரியன் அந்த வகையைச் சேர்ந்ததல்ல என்றும், 1958-ல் மாஸ்கோவில் நடந்த அனைத்துலக வானியல் மகாநாட்டில் எடுத்துக் காட்டப்பட்டது. எனவே ஒரு வெடிப்பு உலகை அச்சுறுத்துவதற்கான வாய்ப்பே இல்லை.

"உலகின் முடிவு' பற்றிய தங்கள் கூற்றுக்களை உறுதிப்படுத்தவதற்கு எந்த வாய்ப்புமற்று நிற்கும் மத போதர்கள், நேரடியான ஆத்திரமூட்டலில் ஈடுபட்டு, அந்த முடிவு ஏற்படப் போகும் காலத்தைக் கணக்கிட்டுச் சொல்ல ஆரம்பித்து விட்டனர். ஆனல் அவர்களது கருத்துக்கள் தவறானவை என்று பல்தடவைகள் நிரூபிக்கப் பட்டு விட்டன. அதன் மூலம் 'உலகின் முடிவு' பற்றி மதம் கொண்டாடும் உரிமை பயனற்றது என்று நிரூபிக்கப் பட்டுவிட்டது.

இடம், காலம், இவற்றின் புறவயத்தன்மையையும், நிரந்தரத்துவத்தையும், ஏற்றுக்கொள்வது, மார்க்ஸிஸத்தின் பிரிக்க முடியாத ஒரு பண்பாகும். பிரபஞ்சத்திற்கு ஒரு எல்லை உண்டு என்று ஏற்றுக் கொள்வோமானல், தவிர்க்க முடியாதபடி மற்றொரு கேள்வி எழுகிறது. பிரபஞ்சத்தின் எல்லைக்கு அப்பால் என்ன இருக்கிறது? அது தெய்வங்களின் ராஜ்யம் என்று

திருச்சபை அறுதியிட்டுக் கூறுகிறது. "ஆசீர்வதிக்கப் பட்டவர்களின்", தேவதைகளின், தெய்வங்களின் இருப்பிடம் சுருங்கச் சொன்னால் "மறு உலகம்" பிரபஞ்சத்தின் எல்லைக்கு அப்பால் இருக்கிறது. பருப்பொருள் உலகைத் தவிர வேறுவகையான "மறு உலகம்" இருக்க முடியுமா?

**உலகின் ஐக்கியம்**

பருப் பொருள் தன்மையற்ற "மறு உலகம்" இல்லை, இருக்கவும் முடியாது என்று விஞ்ஞானம் உறுதியாக நிலைநாட்டியுள்ளது. பொருளைத் தவிர வேறு எதுவுமே இல்லை எனும் போது, பருப்பொருள் தன்மையுடைய உலகம் மட்டுந்தான் இருக்க முடியுமென்றாகிறது. எனவே உலகம் ஒரு ஒருமை என்று மார்க்ஸிஸம் போதிக்கிறது. இதன் மூலம், நாம் வாழும் பூமியைத் தவிர வேறு உலகமே இல்லை என்று கூறுவதாகப் பொருள் கொள்ளக் கூடாது. இத்தாலிய விஞ்ஞானியாகிய கியோர்டானோ ப்ரூனோ (1548-1600) பல உலகங்கள் இருப்பதாக வெகு நாட்களுக்கு முன்பே நிரூபித்தார். ஆனால் அவை அனைத்தும் பருப்பொருள் தன்மை உடையவை. இந்தக் கண்ணோட்டத்தில், அவை ஒரே பருப்பொருள் உலகாகின்றன. மேலும் உலகின் ஒருமை என்னும் போது எல்லாப் பொருள்களும், நிகழ்ச்சிகளும், கிரியைகளும், பரஸ்பரத் தொடர்புடையவை என்றும், அவை தனிப்பட்ட பொருள்களின் குவியல் அல்ல, ஆனால் ஒரு இணைந்த முழுமை என்றும் பொருள் படுகிறது.

உலகின் ஒருமைக்குச் சான்றுகள் எங்கு உள்ளன? தத்துவஞானம், இயற்கை விஞ்ஞானம் இவற்றின் நீண்ட, கடினமான வளர்ச்சியிலேயே சான்றுகள் உள்ளன என்று எங்கெல்ஸ் விடை கூறுகிறார். ஆதிகாலத்

தில், சூரியன், கிரஹங்கள், நட்சத்திரங்கள் இவற்றைப் பற்றி, மக்களுக்கு ஒரு விஞ்ஞான ரீதியான கண்ணோட்டம் இல்லாதிருந்தது. அப்போது அவர்கள், "விண் உலகம்" (நட்சத்திரங்கள், சூரியன், சந்திரன்) நம் மண் உலகத்திலிருந்து முற்றிலும் வேறுபட்டது என்று கருதினார்கள். எனவே இரண்டு உலகங்கள் என்ற கருத்துத் தோன்றியது. ஆனால் விஞ்ஞானம் வளர்ச்சி அடைந்தபோது, மூடுதிரை படிப்படியாக அகற்றப்பட்டது. நாம் வாழும் உலகைப் போலவே "விண் உலகமும்" பருப்பொருள் அடிப்படை உடையது தான் என்று கண்டு பிடிக்கப்பட்டது.

மத, மறைபொருள்வாதக் கருத்துக்களுக்கு நிக்கோலாஸ் கோபர்னிகஸ் (1473—1543) என்பவரால் முதல் அடி கொடுக்கப்பட்டது. பூமி பிரபஞ்சத்தின் மையம் அல்ல வென்றும், அது சூரிய மண்டலத்திலுள்ள கிரஹங்களில் ஒன்று என்றும் அவர் கருத்துத் தெரிவித்தார். பூமியை "விண்உலகுக்கு" முரண்படுத்திக் காணக் கூடாது என்றும், "விண் உலகிற்குத்" தெய்வீகப் பண்பு எதுவும் இல்லையென்றும் எடுத்துக் காட்டப் பட்டது.

சூரியனைச் சுற்றி பூமி சுழல்வதை எந்த சக்தியியல் விதிகள் கட்டுப்படுத்துகின்றனவோ அவையே, பூமியைச் சுற்றிச் சந்திரனையும், சூரியனைச் சுற்றி மற்ற கிரஹங்களையும் சுழலச் செய்கின்றன என்று 18வது நூற்றாண்டில் நியூடன் நிருபித்தார். சோவியத் ராக்கெட் ஒன்று சந்திரனைச் சென்று அடைந்தபோது, ஒரு பொருள் பூமியில் "இறங்குவதற்குக்" காரணமான "சர்வவியாபக ஈர்ப்பு" சக்தியே, ராக்கெட்டைச் சந்திரனில் இறங்கச் செய்தது என்று அற்புதமாக நிரூபிக்கப் பட்டது. உலகின் எல்லா நிகழ்வுகளையும் - அவை மண்

உலகில் நடந்தாலும், விண் உலகில் நடந்தாலும் கட்டுப்படுத்தும் விதிகளின் பொதுத் தன்மைக்கு இது மிகச் சிறந்த ஒரு சான்றல்லவா?

அண்டக் கோள்களிலும், பூமியிலிருக்கும் இரசாயன மூலகங்களே உள்ளன. உதாரணமாக, அண்ட வெளியின் வெகு தொலைவிலுள்ள பகுதிகளிலிருந்து நம் உலகை வந்து அடையும் பொருள்களாகிய விண் வீழ் கற்களிலிருந்து, இது தெளிவாகத் தெரிகிறது. பூமியில் விரிவாகப் பரந்துள்ள இரசாயன மூலகமாகிய இரும்பே, அவற்றில் முக்கியமான பொருளாக இருக்கிறது. ''விண் உலகின் இந்தத் தூதுவர்கள்'' பருப்பொருள் தன்மையற்றவர்கள் அல்ல என்பதை இது உடைத்தெறிகிறது.

பூமியைச் சுற்றி அண்டக்கலன்கள் பறந்து வந்ததைப் பற்றி என்ன கூறுவது? ''விண் உலகம்', ''மறு உலகம்'' எங்கு இருப்பதாக மதம் கருதுகிறதோ, அந்த இடத்திற்கு அவை சென்று வந்துள்ளன. அண்டப் பயணிகள் சுவர்க்கத்தையோ, தேவதைகளையோ, யோகீஸ்வரர்களையோ காணவில்லை. ஏதோ ஒரு வகையான மற்றொரு ''சுவர்க்க'' லோகம் இருக்கிறது என்ற மதத்தின் கட்டுக் கதைக்கு, இதைவிடச் சிறந்த மறுதலிப்பைக் காண்பது கடினம்.

எனினும் உலகின் ஒருமையை உணர்ந்தால் மட்டும் போதாது. அந்த ஒருமையைச் சரியாகப் புரிந்து கொள்ள வேண்டும். இந்தப் பிரச்சினையை எங்கெல்ஸ் பகுத்தாய்ந்ததைப் பற்றிக் குறிப்பிடும் போது, லெனின், உலகின் ஒருமையைச் சிந்தனை மூலமாகவோ, புறவய யதார்த்தத்தின் மூலமாகவோ யூகித்து உணரலாம், என்று எழுதினார். சிந்தனையின் மூலமோ, தன்னறிவின் மூலமோ, உலக ஒருமையை

யூகித்து உணர்பவர்கள் குழப்பங்களுக்குள்ளாகி, கடவுளிடத்தில் நம்பிக்கை வைப்பதில் சென்று முடிவடைகின்றனர். ஜெர்மன் தத்துவஞானியான டூரிங் என்பவரை இதற்கு உதாரணமாகக் காணலாம். உலகை, நாம் ஒரு ஒருமை என்று கருதுவதனுலேயே அது ஒருமையாக இருக்கிறது என்று அவர் கூறினுர். எங்கெல்ஸ் இந்தக் கண்ணேட்டத்தைக் கடுமையாக விமர்சித்தார். நீங்கள் என்ன நினைத்துக்கொண்ட போதிலும் சரி, எது இருப்பதில்லையோ, அது பருப் பொருள் தன்மையுடையதாகாது. உலகின் ஒருமை, சிந்தனையினின்று அல்ல, புறவயமான யதார்த்தத் திலிருந்து, பொருளிலிருந்து யூகித்து அறியப்பட வேண்டும், என்று அவர் கூறினுர்,

பொருளின் இயக்கத்தின், வளர்ச்சியின், விளை வாக இல்லாத எந்த நிகழ்வும் உலகில் இருக்க முடியாது என்ற கருத்து இதில் உள்ளார்ந்துள்ளது. பொருள் அனைத்தையும் தழுவி உள்ளது. அதன் செயல் எங்கும் பரவியுள்ளது. அசைகின்ற, வளர்ச்சி அடைகின்ற பொருள், அதன் விளைபொருள்கள், இவற்றைத் தவிர வேறு எதுவும் இல்லை, இருக்க முடியாது. ஒரே ஒரு பருப்பொருள் உலகம்தான் இருக்கிறது என்பதே இதன் பொருள். இது கொண்டே, எங்கெல்ஸ், உலகின் ஒருமை அதன் பருப்பொருள் தன்மையிலே அடங்கியுள்ளது என்று எடுத்துக் காட்டினுர். வேறு வார்த்தைகளில் சொன் ஞல், உலகம் பருப்பொருள் தன்மையுடையதாய் இருப்பதாலேயே அது ஒருமையாக இருக்கிறது. அது மனிதனின் தன்னறி விலிருந்து பிரிந்து, தனித்து, சுயேச்சையாக இருக் கிறது. எனில், தன்னறிவு என்பது என்ன? இந்தப் பிரச்சனையை இனி நாம் பார்ப்போம்.

உரை நான்கு

# பொருளும், தன்னறிவும்.

**இறவாமையும், ஆன்மாவும்.**

மரணத்திற்குப் பின் ஒருவர் ஏன் சிந்திப்பதில்லை அசைவதில்லை, பேசுவதில்லை என்பதைப் பற்றி பன்னெடுங் காலமாக மக்கள் எண்ணிப் பார்த்து வந்துள்ளனர். "அது ஏனெனில் ஆன்மா உடலை விட்டுப் போய்விட்டது," என்று சிலர் விடையளித்தனர். உடலிலிருந்து ஆன்மா பிரிவதே, சாவு.

உடலும், ஆன்மாவும்! எண்ணற்ற நூற்றுண்டுகளாக, மக்கள், உடலுக்கும், ஆன்மா என்று கூறப்படுவதற்கும், அல்லது இன்னும் சரியாகச் சொன்னுல் மனிதனின் தன்னறிவுக்கும் இடையே உள்ள உறவைப் பற்றி பல யூகங்களைக் கூறிவந்துள்ளனர். ஆனுல் இந்தப் பிரச்சனைக்கு விடை காண்பது நம்ப முடியாத அளவிற்குக் கஷ்டமாக இருந்தது. கண்ணிற்

குத் தெரியாத ஒன்றை, நிறமும் மணமும் அற்ற ஒன்றை, நம்மால் கேட்க முடியாததும், தொடமுடியா ததுமான ஒன்றை, எப்படி ஆராய்வது? நமது தன்ன றிவு, சிந்தனை, புலனுணர்வு, அப்படிப்பட்டதுதான். என்னுடைய வலியை என்னைத் தவிர வேறு யாரும் அனுபவிக்க முடியாது. நான் அதை எடுத்துச் சொன்னால் ஒழிய, நான் என்ன நினைத்துக் கொண்டிருக் கிறேன் என்பது ஒருவருக்கும் தெரியாது. அப்படி யானால் சிந்தனை என்பது என்ன? பல நூற்றாண்டு களாகத் திருச்சபையும், கருத்துமுதல் வாதிகளும், இதைப்பற்றி ஹேஷ்யங்களைக் கூறி வந்துள்ளனர்.

கடவுள், மனிதனைக் களிமண்ணிலிருந்து. உலகத் தூசியிலிருந்து படைத்தார் என்று விவிலிய நூல் கூறு கிறது. கடவுள் அதற்கு ஒரு ஆன்மாவைக் கொடுத் திருக்கவில்லையானால் இந்தத் தூசி உயிர் அற்றதாகவே இருந்திருக்கும். அதற்குப் பின்தான் அது உயிர்வாழ வும், அசையவும், சிந்திக்கவும் ஆரம்பித்தது. உயிர், சிந்தனை இவற்றின் மூலத்தானம், ஆன்மீகப் பகுதி யாகிய ஆன்மாவே என்பது மதபோதனையின் கருத்து. மனிதனிடத்திலுள்ள 'தெய்வீகச் சுடர்" அது. ஆன்மா இல்லாமல் உடல் இருக்கமுடியாது. அது இறந்து விடுகிறது.

ஆனால் ஆன்மா, உடல் இன்றியே சமாளித்துக் கொள்ள முடியும் என்று கூறப்படுகிறது. பிறப்பின் போது அது உடலுக்குள் புகுந்து கொள்கிறது. இறப்பின் போது அதை விட்டுச் செல்கிறது. "சவக் குழிக்கு அப்பால் வாழ்வு" இருக்கிறது என்பதை ஏற்றுக் கொள்ளும் அடிப்படையின் மேலேயே எல்லா மதக் குழுக்களும், இன்றுவரை நம்பிக்கை வைத்து வந்துள் ளன. ஏனெனில், இங்குதான் மதபோதகர்கள் தங்கள்

கற்பனையைக் கட்டவிழ்த்து விட முடியும். "நாம் சொல்வதை எவர் சரிபார்க்க முடியும்? சாட்சிகள் யாரும் இல்லையே." என்று அவர்கள் கருதுகின்றனர். ஒன்பது நூற்றாண்டுகளுக்கு முன், பெர்ஸிய விஞ்ஞானியும், தத்துவஞானியும் கவிஞருமான ஓமர் கய்யா இந்தக் கருத்தைக் கீழ்கண்டவாறு வலியுறுத்தினர்:

இது பெரும் வியப்பே!
இருளின் வாயிலில் நமக்கு முன்பே,
இழிந்தவர் கோடி, கோடி, பல்கோடி.
இருப்பினும் பாதை இதுவெனக் காட்ட
எவரே மீண்டார்? மீண்டிலர் எவரும்.
பாதையைக் காண வேண்டின் நாமும்
பயணம் செல்வோம் அவ்வழியானே!

எனினும் "சாட்சிகள்" கிடைத்து விட்டார்கள்! அதைப்பற்றிப் பின்னர் கூறுவோம்.

பருப்பொருளுக்கும், ஆன்மீகத்திற்கும் இடையேயுள்ள உறவைப் பற்றி கருத்துமுதல் வாத-மதக் கொள்கை என்ன, என்பதைத் தெளிவு படுத்துவதே இங்கு முக்கியமானது. அதில் அடங்கியுள்ளதாவது: 1. ஆன்மா (தன்னறிவு) பருப்பொருளுக்கு முன்னதாகவே இருக்கிறது. 2. அது பொருள் இன்றி அதாவது அதைச் சாராது இருக்கமுடியும். பருப்பொருள் "இறக்கக்" கூடியது அழிக்கப்படக் கூடியது. ஆனால் கருத்து இறப்பற்றது. அழிக்கப்பட முடியாதது.

இது உண்மைதானா என்பதைப் பார்ப்போம்.

**பொருள் இன்றித் தன்னறிவு உண்டா?**

சிந்தனைகள், புலன் உணர்வுகள், கருத்துக்கள், விருப்புக்கள் இவை தன்னறிவினுள் அடங்கும். இவை முதன்மையாக மனிதனுக்கே உரித்தான குணங்கள். புலன் உணர்பவர் ஒருவர் இல்லா

மல் புலன் உணர்வு இல்லை. விரும்புவதற்கு ஒருவர் இல்லாமல், விருப்பங்கள் இல்லை. தன் ஆதிக்கத்தைக் காட்ட ஒருவர் இல்லாமல், தன் ஆக்கமும் இல்லை. மனிதனிலிருந்து பிரிந்து அவனுக்கு வெளியே தன் ஆக்கமோ புலன் உணர்வுகளோ, விருப்புக்களோ, தன்னறிவின், சிந்தனையின் உளத்தின் மற்ற வெளிப்பாடுகளோ நிகழ்வதில்லை.

உங்களுக்கு ஏற்கனவே தெரிந்துள்ளது போல மனிதன், தனது தன்னறிவுடன் மனத்துடன், தோன்றுவதற்கு முன்பே, இயற்கை, பொருள், இருந்தது. எனவே இயற்கை, பொருள், முதன்மையானது. தன்னறிவு, சிந்தனை இரண்டாவதானது. மனிதனுக்கு முன்பே அங்க ஜீவிகள் இருந்தனவே, அவற்றிற்குத் தன்னறிவு இருக்கவில்லையா என்று நீங்கள் கேட்கலாம். சில பிராணிகள் தன்னறிவின் சாயையைப் பெற்றிருந்தன என்பது உண்மையே. உதாரணமாக, அவற்றிற்கு வண்ணங்களைப் பார்க்கும் சக்தியும், மோப்ப சக்தியும், ஓரளவு கற்பனையும் இருந்திருக்கலாம். ஆனால் தன்னறிவின் இந்தச் சாயைகூட அண்மையில்தான், பிராணிகள் உலகில் தோன்றிய பின்தான், தோன்றின.

மனிதனுக்கு முன்னதாக மட்டும் அல்லாது, பொதுவாக. உயிரினங்கள் அனைத்துக்கும் முன்னதாகவே இயற்கை இருந்தது என்றும், எனவே அது தன்னறிவிலிருந்து தனித்து இருந்தது என்றும், மேலே கூறியனவற்றிலிருந்து தெரிகிறது. தத்துவஞானத்தின் அடிப்படை பிரச்சினைக்குப் பொருள் முதல் வாதம் அளிக்கும் முடிவிற்கு, இது ஒரு முக்கியமான சான்றாகும். ஆனால் இது ஒன்று மட்டும் அல்ல. அவற்றில் சிலவற்றை அன்றாட வாழ்க்கை அனுபவத்திலிருந்து நீங்கள் அறிவீர்கள்.

ஒரு அங்கத்திற்குப் படுகாயம் ஏற்படும்போது, மயக்கம், தன்னறிவின் இழப்பு, ஏற்படுகிறது என்று வெகுநாட்களுக்கு முன்பே கவனிக்கப்பட்டது. பெரு மூளைச் சோகை, இருதய—இரத்த ஓட்ட மண்டலத்தின் தீவிர நோய்கள், படுகாயம், இரத்தச்சேதம், இவற்றின் பயனாக, மயக்கம், தன்னறிவின் இழப்பு, ஏற்படுகிறது என்று விஞ்ஞானம் நிலைநாட்டியுள்ளது. எனவே உடல், மூளை அல்லது நரம்புகள் இவற்றின் செயல் களைச் சார்ந்து தன்னறிவு உள்ளது. ஒரு குடிகாரன் தனது உடலைப் படிப்படியாக அழித்துக்கொண்டிருக் கிறான் என்பது நன்கு தெரிந்த விஷயம். அவனது இருதயம் க்ஷீணமடைகிறது. ஈரல் "கைவிட்டு விடு கிறது"; சீரணம் தடைபெறுகிறது. இதன் விளைவாகக் குடிகாரன் தனது மனிதத் தன்மையை இழந்து விடு கிறான்; அவனது சுயநினைவு மறைகிறது. பேச்சுக் குழறுகிறது. சில சமயங்களில் தன்னறிவு முற்றிலும் இழக்கப்படுகிறது. உடலுக்குக் குந்தகம் விளைந்தால், தன்னறிவுக்குக் குந்தகம் விளைகிறது அல்லது அது இழக்கப் படுகிறது.

மற்றொரு உதாரணத்தைப் பார்ப்போம். நீங்கள் களைப்பாக இருந்தாலோ அல்லது உடல்நலக் குறைவாக இருந்தாலோ, சிந்திப்பது கஷ்டமாக இருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியும். சிறிது ஓய்வு எடுத் துக்கொண்டாலோ, அல்லது உடற்பயிற்சிகள் செய் தாலோ, மீண்டும் தெளிவாகச் சிந்திக்க முடிகிறது.

எனவே, பொருள் இன்றித் தன்னறிவு இல்லை, இருக்கமுடியாது என்ற முடிவிற்கே, நாம் மீண்டும் வருகிறோம். ஆனால் எல்லாப் பொருளும் சிந்திக்கும் திறனுடையவையா? உங்களைச் சுற்றியுள்ள உலகை ஒருமுறை பார்த்தாலே போதும். இல்லை என்று விடை

அளிப்பீர்கள். ஒரு கல் சிந்திப்பதில்லை. எந்த உயிரற்ற பொருளும் சிந்திப்பதில்லை. அனேக உயிரினங்கள், தன்னறிவு இருப்பதற்கான அறிகுறிகளையே காட்டுவதில்லை. அப்படியானால் தன்னறிவு எப்போது தோன்றியது?

**உயர்வான ஒழுங்கமைப்புடைய பொருளின் விளைவே தன்னறிவு.**

உயிருள்ள இயற்கை, உயிரற்ற இயற்கையிலிருந்து தோன்றியது என்று தற்கால விஞ்ஞானம் நிரூபித்துள்ளது. இது ஒரு முக்கியமான முடிவாகும். உயிருள்ள இயற்கைக்கும், உயிரற்ற இயற்கைக்கும், பொதுவானது எதுவுமில்லையென்று கருத்து முதல் வாதிகள் கூறுகின்றனர். உயிர்ப் பொருளும், உயிரற்ற பொருளும், ஒன்றுக்கொன்று முற்றிலும் வேறுபட்டவை என்று அவர்கள் கூறினார்கள். உயிர்ப் பொருள்கள் மட்டுமே, அசையவும், இனப் பெருக்கம் செய்யவும், வளரவும் திறனுடையவை. வேறுபாடுகள் விரிவானவையாகத்தான் உள்ளன. அவை இரண்டிற்கும் பொதுவானவற்றிற்கு எந்த ஒரு விளக்கமும் கிடைக்கவில்லை. எனவே, உயிரினம், கடவுளால் ஊன்றப்பட்ட "உயிர் சக்தியால்" ஊக்குவிக்கப் படுகிறது என்றும், இது உயிரற்ற இயற்கையிலிருந்து அதை முற்றிலும் வேறுபடுத்துகிறது என்றும் ஒரு கருத்து தோன்றியது. இது சரியான கருத்துத்தானா?

ஒரு உயிரினம், உயிரற்ற இயற்கையிலிருந்து வேறுபடுகிறது என்பது உண்மைதான். அதே சமயத்தில் அவை இரண்டும் பிரிக்க முடியாதபடி இணைந்துள்ளன. உதாரணமாக, உயிரற்ற இயற்கையில் அடிக்கடி காணப்படும், கார்பன், ஹைட்ரஜன், இரும்பு, ஆக்ஸிஜன், கந்தகம், பாஸ்வரஸ் ஆகிய அதே இரசா

யன மூலகங்களே உயிரினங்களில் உள்ளன. உயிரற்ற இயற்கையில் காணப்படாத எந்த ஒரு மூலகமும், உயிரினத்தில் இல்லை. இரண்டிற்கும் இடையே உள்ள தொடர்பு தெளிவாகத் தெரிகிறது. அத்தகைய உண்மைகளை ஆராய்ந்து, உயிர்ப் பொருள், உயிரற்ற பொருளிலிருந்து தோன்றியது என்று விஞ்ஞானம் நிருபித்துள்ளது.

உயிரற்ற இயற்கையிலிருந்து, உலகில் உயிர் தோன்றியது பற்றி, பொருள் முதல் வாதக் கோட்பாடு ஒன்றை சோவியத் விஞ்ஞானி அகாடெமீஷியன் ஒபாரின் முன் வைத்துள்ளார். ஆனால் உலகில் உயிர் தோன்றியபோதே, முதல் ஸெல் தோன்றியபோதே, தன்னறிவும் தோன்றி விட்டது என்று பொருள் அல்ல. உயிர் தோன்றிய சமயத்தில், தன்னறிவின் முதல் சாயைகளே தோன்றின

தன்னறிவு, பெருமூளை அரைக் கோளங்களின் ஒரு குறிப்பிட்ட பகுதியின் நரம்பு இயக்கத்தோடு இணைந்துள்ளது. சோவியத் விஞ்ஞானிகளான இவான் ஸெசெனோவ் (1829—1905), இவான் பாவ்லோவ் (1849—1936) ஆகியோரால் எடுத்துக் காட்டப்பட்டபடி, தன்னறிவு மூளையின் உயர் பகுதிகளில் நடைபெறும் உயிரியல் இயக்கங்களின் அடிப்படையில் அமைந்துள்ளது. மூளையின் இந்தப் பகுதிகளே, ஒரு நீண்ட பரிணும வரலாற்றின் முடிவாகத் தோன்றியவைதான். அப்போது நரம்பு மண்டலம் வளர்ச்சி அடைந்தது. அதன் இயக்கங்கள் மேலும் மேலும் சிக்கலடைந்தன. பிராணிகளின் நடத்தையும் வளர்ச்சி அடைந்து, மேலும் சிக்கலாயிற்று. கடைசியாக மனித மூளை தோன்றியது. அதனுடன் மனிதனின் தன்னறிவும் தோன்றியது.

நரம்பு இயக்கங்களின் உயர் வெளிப்பாடுகள, பெருமூளை அரைக் கோளங்களின் புறணியுடன் இணைந்துள்ளன. நரம்பு மண்டலத்தின் வளர்ச்சியையும், அதற்கு இயைந்து பிராணிகளின் நடத்தையில் ஏற்பட்டுள்ள சிக்கலான தன்மையையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது இது தெளிவாகத் தெரிகிறது. உதாரணமாக, மீன்களில், பெருமூளைப் புறணி இல்லாததால், அவற்றிடம் நாம் மிக எளிய மறுவினைகளையே* காண்கிறோம். பறவைகளின் மறுவினைகள் அதைவிடச் சிக்கலானவை. ஏனெனில் அவற்றிற்கு ஆரம்ப நிலையிலுள்ள ஒரு புறணி உண்டு. நாய்களின் மறுவினைகள் அதைவிடச் சிக்கலானவையாக உள்ளன. அவற்றின் புறணி மேலும் வளர்ச்சி அடைந்துள்ளது. மனிதக் குரங்குகளில் ஒவ்வொரு தன்னிச்சையான செயலும் பெருமூளைப் புறணியைச் சார்ந்துள்ளது. ஆனால் பிராணிகளைப் பொருத்துச் சிந்தனை என்ற சொல்லை, அதன் உண்மையான பொருளில் பயன்படுத்த முடியாது. சிந்தனை என்பது மனித சிந்தனையே. பரிணாமத்தின் போது, பொருள் இயக்கத்தின் மிக உயர்ந்த வகையாகிய மனித மூளையின் இயக்கம் தோன்றியதோடு, அது இணைந்துள்ளது.

எனவே, தன்னறிவு, உயர்வான ஒழுங்கமைப்பு உடைய பொருளின் விளைவே. மனித மூளையின் இயக்கத்தின் விளைவே. தன்னறிவு என்பது மூளையின் ஒரு செயல். மூளை இல்லாமல் அது இருக்க முடியாது. மூளையே அதன் பருப்பொருள் அடிப்படை. ஸெசெனோவ், 'மனிதனது தன்னறிவு, உணர்ச்சி, சிந்தனைகளின் வரம்பற்ற உலகம்,

---

* மறுவினை : சூழ்நிலையின் தூண்டலுக்கு ஒரு உயிரினம் புரியும், இந்த மறுவினை, நரம்பு மண்டலத்தின் உதவியுடன் நடைபெறுகிறது.

பெருமூளை அரைக் கோளத்தின் செயல்களால் கட்டுப் படுத்தப்பட்டுள்ளது.'' என்று எழுதினுர். ஸெசெனுே வின் பணியைத் தொடர்ந்து செய்த பாவ்லோவ், உளச் செயல்கள் மனித மூளையில் நடைபெறும் பருப்பொருள் கிரியைகளின் அடிப்படையில் அமைந்துள்ளன என்பதை எடுத்துக் காட்டினுர். பெருமூளை அரைக் கோளங்களில் நடைபெறும் உடலியல் கிரியைகளே அவை. ''மூளையின் ஒரு குறிப்பிட்ட பகுதியினுடைய இயக்கத்தின் விளைவே, உளச் செய்கை'', என்று பாவ்லோவ் எழுதினுர்

ஆன்மா இல்லை என்பதற்கு மற்றுமொரு சான்று.

கதாநாயகனது பேச்சுடனேயே சுவையான நமது கதையைத் தொடங்குவோம். ''நான் இறந்து சில நாட்களுக்குப் பின் நான் வீட்டிற்குத் திரும்பி வந்தேன். பின்னர் தொழில் பள்ளி ஒன்றில் சேர்ந்தேன்,'' என்று, தனது சுய சரிதையின் ஒரு முக்கியமான நிகழ்ச்சியைப் பற்றி, வி.தி. செரெபெனுேவ் கூறினுர். அது நிகழ்ந்த வகை இதுதான்.

சோவியத் படை வீரராகிய செரெபெனுேவ், சென்ற யுத்தத்தில் படுகாயமடைந்தார். ''அபரிமிதமான இரத்தச் சேதம் மூன்ருவது அடுக்கைச் சேர்ந்த அதிர்ச்சி'', என்று டாக்டர்கள் கூறினுர்கள். ஆஸ்பத்திரியில் அவரது நிலை மேலும் மோசமாயிற்று. சிறிது நேரத்திற்குப் பின் குறிப்புப் புத்தகத்தில் பின் வரும் குறிப்பைக் காண்கிருேம். ''அபரிமிதமான இரத்தச் சேதத்தாலும், அதிர்ச்சியாலும், மரணம் 19 மணி 41 நிமிடம், மார்ச்—3, 1944.'' நோயாளி இறந்து விட்டார். ஆனுல் இரண சிகிச்சையாளர் பேராசிரியர் நெகோவ்ஸ்கி, ஆஸ்பத்திரிக்கு

வந்தார். டாக்டர்கள் குழு ஒன்றோடு அவர், போர்முனை ஆஸ்பத்திரிகளைப் பார்வையிட்டுக் கொண்டிருந்தார். சில தனிப்பட்ட, சிக்கலான முறைகள் மூலம் அவர்கள் செரெபெனோவிற்கு மீண்டும் உயிர் கொடுத்தார்கள். அவரது இருதயம் இயங்க ஆரம்பித்தது. சுவாசமும், மீண்டும் தோன்றியது.

உனக்கு என்ன நேர்ந்தது என்று உனக்குத் தெரியுமா? என்று இந்த மாஜி-பிணத்தை அவர்கள் கேட்டபோது அவர், "ஆம்! நான் மறு உலகிலிருந்து மீண்டும் அழைத்து வரப்பட்டேன். ஏனெனில் நான் இறந்து போயிருந்தேன்," என்று கூறினார். "அந்த மறு உலகத்தில் நீ என்ன பார்த்தாய்?" "சாவதற்கு முன் நான் தன்னறிவை இழந்து விட்டேன். இரண சிகிச்சை முடியும்வரை எனக்கு சுய நினைவு வர வில்லை......என் மரணத்தின்போது, நான் தூங்கிக் கொண்டிருந்தேன்".

ஆம், மறு உலகிலிருந்து ஒரு சாட்சி, திரும்பி வந்து விட்டார்! அவர் அங்கு எதையுமே காணவில்லை. மரணம் என்பது, ஆன்மாவின் "மறு உலக" விஜயம் என்று கொள்வோமானால், செரெபெனோவின் ஆன்மா அந்த மறு உலகிலிருந்து "திரும்பி" வந்திருக்கிறது என்பது அவரது புனர்வாழ்வின் பொருள். ஆனால் அப்படி ஒன்றும் நேரிடவில்லை.

இந்த உதாரணத்தைச் சற்றுக் கவனமாகப் பாருங்கள். நடந்ததுதான் என்ன? உடல் உயிரோடு, இயங்கிக் கொண்டிருந்தது. தன்னறிவும் சுருசுருப்பாக இயங்கிக் கொண்டிருந்தது. பின்னர் அபரிமிதமான இரத்த இழப்பின் விளைவாக, உடல் பல முக்கியமான உயிர் கிரியைகளை இழந்து விட்டது. அதைத் தொடர்ந்து தன்னறிவும் மறைந்து விட்டது. மனிதன் இறந்து

விட்டான். ஆனால் அவனது தன்னறிவு "மறு உலகிற்கு" மாற்றப்படவில்லை. உயிர் முக்கியத்துவம் வாய்ந்த கிரியைகள் மறைந்த போது, அதுவும் மறைந்து விட்டது. பின்னர் டாக்டர்கள், சுத்த சுடம் பிரகாச பருப்பொருள் கருவிகள் மூலம் உடலில் இரண சிகிச்சை செய்தார்கள். தன்னறிவு மீண்டும் தோற்று விக்கப்பட்டது.

தன்னறிவு, உடலை, குறிப்பாக மூளையைச் சார்ந் துள்ளது என்பதற்கு இது ஒரு சான்று என்பதை ஏற் றுக் கொள்ளாமலிருக்க முடியாது. மரணம் 5–7 நிமிடங் களுக்குள் சம்பவித்திருந்தால் உயிரை மீண்டும் தோற்றுவிக்க முடியுமென்பது, இதை மேலும் உறுதிப் படுத்துகிறது. அதைவிட அதிகமான நேரம் ஆகிவிட் டால் மூளையில் சில கிரியைகள் நடைபெறுகின்றன. அவை மூளையில் திட்டவட்டமான அழிவைத் தோற்று விக்கின்றன. அந்த மாதிரியான சந்தர்ப்பத்தில் இருத யத்தின் இயக்கத்தை மீண்டும் தோற்றுவிக்கலாம். ஆனால் மூளையை இயங்கச் செய்ய முடியாது. அதில் திருப்ப முடியாதவை என்று கூறப்படும் கிரியைகள் நடந்தேறிவிட்டன. தன்னறிவு திரும்பப் பெற முடியா தபடி இழக்கப்பட்டு விட்டது, ஏனெனில் மூளையின் வேலை நிரந்தரமாக நின்று விட்டது. இவ்விதமாக, தன் னறிவு பொருளைச் சார்ந்துள்ளது என்பதற்கு விஞ் ஞானம் மற்றுமொரு சான்று அளித்துள்ளது.

ஆன்மா, உடலில்லாமல் இருக்க முடியுமென்று கூறுவது, ஒரு கருப்புப் பூனை தனது கருப்பு நிறத்தை பின்னால் விட்டு விட்டு அறையை விட்டுச் செல்ல முடி யும் என்று கூறுவதற்கு ஒப்பாகும், என்று ரஷ்ய புரட்சி கர ஜனநாயக வாதி ஹெர்ஸன் எழுதினார். எப்படி ஒரு சிட்டுக் குருவி தனது இறக்கைகளின்றிப் பறக்க முடி

யாதோ, அதுபோல, ஆன்மா உடலின்றி வாழ முடியாது. உடல் அழிகிறது. அதோடு "ஆன்மா" அதாவது தன்னறிவு அழிகிறது.

மூளையால் உண்டாக்கப்படும் சிந்தனையின் தன்மை என்ன?

யதார்த்தத்தின் பிரதிபலிப்பே சிந்தனை.

"நான் ஒரு பிர்ச் மரத்தைப் பார்க்கிறேன்", அல்லது "திட்டம் 107 சதவிகிதம் நிறைவேற்றப்பட்டது", என்பன போன்ற எந்தச் சிந்தனையையும், எந்தக் கூற்றையும் எடுத்துக் கொண்டு பாருங்கள். நம் மனதிலிருப்பது பிர்ச் மரமல்ல, அதுபற்றிய எண்ணமே. திட்டமல்ல, அதுபற்றிய எண்ணமே என்பது தெரிகிறது. வேறொரு வழியில் சொன்னால், உலகில் நாம் காணும் பண்டங்கள், நிகழ்வுகள் பற்றிய கருத்து நமது மனதில் இருக்கிறது. எல்லா எண்ணங்களும் அத்தகைய கருத்துக்களைக் கொண்டவை. உதாரணமாக, "உறைபனி வெண்மையாக இருக்கிறது", என்ற வாசகத்தில், "உறைபனி" "வெண்மை" என்ற சொற்களில் உள்ளார்ந்துள்ள கருத்துக்களின் மூலம் நமது சிந்தனை வெளிப்படுத்தப் படுகிறது. இந்தக் கருத்துக்கள் எங்கிருந்து வருகின்றன. அவை வாழ்விலிருந்து யதார்த்தத்திலிருந்து வருகின்றன. உறைபனி உண்மையில் வெண்மையாகவே இருக்கிறது. பண்டங்கள் புறவயமாக உள்ளன. அவை, அவற்றைப் பற்றி நாம் கொள்ளும் கருத்துக்களுக்கு அடிப்படையாக உள்ளன. முதலில் பிர்ச் மரம் இருக்கிறது. பிறகு அது பற்றிய எனது கருத்து தோன்றுகிறது. எனவே கருத்துக்கள் இரண்டாம் பட்சமானவை யதார்த்தம் முதலில் வருகிறது. பிறகு சிந்தனையில் அதன் பிரதிபலிப்பு வருகிறது எனவேதான், சிந்

தனையை யதார்த்தத்தின் பிரதிபலிப்பு, அல்லது புகைப் படம் என்று லெனின் கூறினுர். யதார்த்தம், சிந்தனையில் பிரதி செய்யப் படுகிறது; அல்லது புகைப் படம் எடுக்கப்படுகிறது.

தன்னறிவு இல்லாதிருந்த ஒரு காலத்தில் இயற்கை பொருள், இருந்தது என்றும் அப்போது தன்னறிவு தோன்றியிருக்கவில்லை என்றும் நாம் விளக்கியுள் ளோம். மனிதனது தன்னறிவு அவனது உடலின் நிலை யை, நரம்பு மண்டலத்தின் நிலையைப் பொருத்துள்ளது. சிந்தனையின் உறுப்பாகிய மூளையால், சிந்திக்கும் செயல் செய்யப்படுகிறது. மூளையின் ஒரு செயலே தன் னறிவு. தன்னறிவு உருவைப் பிரதிபலிக்கிறது. எனவே உரு முதன்மையானது; தன்னறிவு இரண்டாவதானது. முதன்மையானதிலிருந்து பெறப்படுவது.

**கொச்சைப் பொருள் முதல் வாதத்தைப் பற்றிய விமரிசனம்**

தன்னறிவின் இரண்டாம் பட்ச மான தன்மையை ஏற்றுக் கொண்டால் மட்டும் போதாது என்பதை எடுத்துக் காட்ட வேண்டும். அதன் உண்மை யான தன்மையைப் புரிந்து கொள்வதும் அவசிய மாகும் ஏனெனில், தன்னறிவின் இரண்டாவதான தன் மையை ஒப்புக் கொள்ளும் பொருள் முதல் வாதிகள் இருக்கிறுர்கள். ஆனுல் அதன் உண்மையான தன்மை யைச் சரியாக விளக்க அவர்களுக்குத் தெரியாது. ஈரல், பித்த நீரைச் சுரப்பது போல மூளை சிந்தனையைச் சுரக் கிறது என்று அவர்கள் கூறுகிறுர்கள். உடலின் உட லியல செய்கைகளுக்குத் தேவையான பொருள்களை உள் உறுப்புச் சுரப்பிகள் உண்டாக்கிச் சுரப்பது போல, மூளை சிந்தனையை உண்டாக்கிச் சுரக்கிறது என்பது

அவர்கள் கருத்து. இத்தகைய கண்ணோட்டத்தைக் கொண்டுள்ள தத்துவ ஞானிகள் கொச்சைப் பொருள் முதல் வாதிகள் எனப்படுவர். ஏனெனில், அவர்கள் சிந்தனையைப் பற்றிய, பண்படாத, கொச்சையான, எளிமைப் படுத்தப் பட்ட கருத்தைக் கொண்டுள்ளனர். இந்தக் கண்ணோட் டம், 19-வது நூற்றாண்டில், ஜெர்மன் தத்துவ ஞானி களான கார்ல் வோக்ட், லுட்விக் புக்னெர் என்பவர் களாலும், டச்சுத் தத்துவஞானி ஜாகோப் மோலெஸ் சோட், என்பவராலும் போதிக்கப் பட்டது. பொருள் முதல் வாதத்தை விலை கூவி விற்பவர்கள் என்று எங் கெல்ஸ் அவர்களைப் பற்றிக் கூறினார்.

தற்கால பூர்ஷுவா தத்துவ ஞானிகள் சிலர் அவர் களை அடியொற்றிச் செல்கின்றனர். அவர்கள் மட்டு மல்ல! உதாரணமாக, சில பிரிட்டிஷ் டாக்டர்கள், தாங் கள் 'ஆன்மாவை நிறுப்பதிலே'' வெற்றி கண்டு விட்ட தாகக் கூறுகின்றனர். அது 30 கிராம் எடையுள்ளது என்று அவர்கள் கூறுகிறார்கள். இது ஒரு கொச்சை யான கருத்தேயாகும். ஏனெனில் சிந்தனை எனும் சிக்க லான செய்கை முழுவதும், 30 கிராம் எடையுள்ள பொரு ளாகக் குறைக்கப்பட்டுள்ளது. தன்னறிவும் பொருளும் ஒன்றென இங்கு கருதப்பட்டுள்ளது. அது உண்மை யானால் அதை ஏன் பார்க்க முடிவதில்லை? அத்தகைய கண்ணோட்டத்திலிருந்து தொடங்குவோமானால் நமது ஆசைகள், தன்னூக்கம், சிந்தனை என்பவை என்ன என்பதைப் புரிந்து கொள்ளவே முடியாது. ஏனெனில் அவை கருத்துத் தன்மை உடையனவே அல்லாது பருப் பொருள் தன்மை உடையவை அல்ல. கற்பனை என்பது பருப்பொருள் தன்மையுற்றது என்பதோடு மட்டுமல் லாமல் இயற்கையிலேயே இல்லாத பொருள்களைப் பற்றிக் கூட இருக்கலாம் கொச்சைப் பொருள் முதல்

வாதம் இந்தக் கேள்விகளுக்கு விடை அளிக்க முடியாது.

கொச்சைப் பொருள் முதல் வாதிகளின் முக்கியத் துவத்தைப் பயன்படுத்திக் கொண்டு, பொருள் முதல் வாதம் முழுவதையுமே, கேவலப்படுத்தக் கருத்து முதல் வாதிகள் முயற்சிக்கின்றனர். உதாரணமாக, தற்கால பூர்ஷுவா தத்துவஞானிகளான, வீல்ரைட், ஹாஸ்பெர்ஸ், ஆகியோர், எது பருப்பொருளாக இருக்கிறதோ, அதைத்தான் பொருள் முதல் வாதம் ஒப்புக் கொள்கிறது என்றும், ஆன்மீகம், தன்னறிவு, மனிதத் துணிவாற்றல் இவை இருப்பதை மறுக்கிறது என்றும் கூறிவருகின்றனர். வேறு வார்த்தைகளில் சொன்னால், வோக்ட், புச்னெர், மோலெஸ்கோட், இவர்களின் கொச்சைப் பொருள் முதல் வாதமும், மார்க்ஸிஸ, லெனினிஸக் கோட்பாடும் ஒன்று என்று அவர்கள் கருதுகிறார்கள். அவர்கள் கருத்து மிகவும் தவறான தாகும். கொச்சைப் பொருள் முதல் வாதத்திற்கும், முரண் தர்க்கப் பொருள் முதல் வாதத்திற்கும் பொது வானது ஒன்றுமே இல்லை. மனதின், தன்னறிவின் சாரம், முக்கியத்துவம், இவை பற்றிய அதன் கருத்து, கருத்து முதல் வாதிகளுக்கு எதிராக மட்டுமன்றி, கொச்சைப் பொருள் முதல் வாதிகளுக்கு எதிராகவும் பயன்படுத்தப் படுகிறது.

தன்னறிவையும், பொருளையும் ஒன்றெனக் கொண்ட கருத்துக்காகக், கொச்சைப் பொருள் முதல் வாதிகளை லெனின் கடுமையாக விமர்சித்தார். தன்னறிவு, பருப்பொருள் தன்மையானதல்ல என்பதை அவர் எடுத்துக் காட்டினார். அது யதார்த்தத்தின் ஒரு பிரதி; ஒரு பிம்பம். ஆனால் மூளை, ஒரு சாதாரணப் புகைப் படக் கருவியைப் போல, யதார்த்தத்தைப் பிரதிபலிப்ப

தில்லே. அல்லது படம் எடுப்பதில்லே. மனித மூளையில் யதார்த்தம் மாற்றப்படுகிறது. அதாவது அங்கு பொருள்கள் அப்படியே காணப்படுவதில்லே, ஆனுல் அவற்றின் கருத்து பிம்பமே காணப்படுகிறது. நமது சிந்தனையைப் பற்றி எழுதும்போது மார்க்ஸ், ''கருத்து என்பது மனித மனத்தால் பிரதிபலிக்கப்பட்டு, சிந்தனே உருவங்களாக மாற்றப்பட்ட பருப்பொருள் உலகமே யன்றி வேருென்றும் இல்லே,'' என்று சொன்னுர் §

உயர்வான ஒழுங்கமைப்புடைய பொருளுக்கு, மூளேக்கு உள்ள, யதார்த்தத்தைப் பிரதிபலிக்கும் பண்பே, தன்னறிவு என்று நாம் பார்த்தோம். மூளேயில் நடைபெறும் கிரியைகளோடு, சிந்தனேயைக் குழப்பிக் கொள்ளக் கூடாது. இந்தக் கிரியைகள் சிந்தனேயின் பருப்பொருள் அடிப்படையாகும். ஆனுல் சிந்தனே, என்பது மூளேயில் நடைபெறும், உடலியல் கிரியை களேக் காட்டிலும், மிகவும் சிக்கலானது. பொருள் இயக்கத்தின் ஒரு உயர்ந்த வகையே தன்னறிவு, சிந்தனே.

**சிந்தனேயும் பேச்சும்.**

பிராணிகளிடத்தில் சில சமயங்களில் இருப்பதாகக் கூறப்படும் ''சிந்தனே'' யிலிருந்து, மனித சிந்தனே, அடிப்படையில் வேறுபட்டது. குரங்குகளுடன் செய்யப்பட்ட சோதனேகள், சில சுவையான முடிவுகளேக் கொடுத்துள்ளன. குரங்குக்கு ஒரு ஆப்பிள் பழம் கொடுக்கப்படுகிறது. ஆனுல் நடுவிலே தீ எரிந்துகொண்டிருப்பதால் குரங்கால் பழத்தை வாங்கிக் கொள்ள முடிவதில்லே. எனினும், அருகில் உள்ள பிப்பாயிலிருந்து தண்ணீரை எடுத்து,

---

§ மார்க்ஸ். மூலதனம், பாகம். 1 பக். 19.

நெருப்பை அணைத்து விட்டு, ஆப்பிளை எடுத்துக் கொள்ள அதற்குக் ''கற்பிக்கப்'' படுகிறது. குரங்கும் அவ்விதமே செய்து ஆப்பிளைப் பெற்றுக்கொள்கிறது. பிறகு குரங்குக்குப் புதிய நிலைகள் உண்டாக்கப்படுகின்றன. ஆப்பிள், ஒரு குளத்தில் மிதக்கும் பலகையின் மேல் வைக்கப்படுகிறது. தண்ணீர் பீப்பாய் சற்று தள்ளி வைக்கப்படுகிறது. குரங்கு செய்ய வேண்டிய பணி அதே தான்: நெருப்பை அணைத்து விட்டுப் பழத்தை எடுத்துக் கொள்ள வேண்டியதுதான். பலகையைச் சுற்றித் தண்ணீர் இருக்கிறது. குரங்கு அருகிலிருந்தே தண்ணீரை எடுத்துக் கொள்ளலாம். ஆனால் குரங்கு மிகவும் கஷ்டப்பட்டுப் பீப்பாயில் உள்ள ''அந்தத்'' தண்ணீரைத்தான் கொண்டு வருகிறது.

இந்தப் பரிசோதனை காட்டுவது என்ன? குரங்குகள் 'தண்ணீர்' என்ற கருத்தை உண்டாக்கிக் கொள்வதில்லை என்பதையே இது காட்டுகிறது. அதன் பொதுப் பண்புகள் அவற்றிற்குத் தெரியாது. குரங்கின் சிந்தனை, சுற்றியுள்ள பொருள்களுடன் நேரடியாகத் தொடர்பு கொண்டுள்ளது. மேலும் அவற்றோடு நேரடித் தொடர்பு கொள்ளாது சிந்திக்க அதனால் முடியாது. எனவே, பொருள்கள் குரங்கின் முன்னால் இருந்தால் தான் அது சிந்திக்கிறது. அப்போது அவற்றிடையேயுள்ள சில ஆரம்பத் தொடர்புகளை அது தெரிந்து கொள்கிறது. ஆனால் பொருள்கள் அதன் முன் இல்லாவிட்டால், அதனால் ''சிந்திக்க'' முடியாது.

ஆனால் மனிதனின் சிந்தனை, பண்பு ரீதியில் வேறுபட்டது. உழைப்பின் போதும், விஞ்ஞானச் செயல்களின் போதும் அவன் பொருள்களுடன் தொடர்பு கொண்டு, அவற்றின் பண்புகளை ஆராய்

கிருன். பீப்பாய், குளம், கிணறு, ஆறு, இவற்றிலுள்ள எல்லாத் தண்ணீருக்கும் ஒரே மாதிரியான பண்புகள் இருக்கின்றன என்பதை, உதாரணமாக அவையனைத்திற்கும் நெருப்பை அணைக்கும் திறன் உண்டு என்பதைத் தெரிந்து கொள்கிருன் அவன் "தண்ணீர்" எனும் கருத்தைத் தோற்றுவித்துக் கொள்கிருன். இது ஒரு குறிப்பிட்ட இடத்திலுள்ள தண்ணீரை மட்டும் அல்லாது, பொதுவாகத் "தண்ணீர்" அனைத்தையும் குறிக்கும். இது ஒரு பண்பியலான கருத்து. உண்மையான உருவங்களிலிருந்து, ஸ்தூலமான பண்டங்களிலிருந்து, அவற்றின் பொதுவான பண்புகளைப் பிரித்துத் தனிமைப் படுத்துகிருன். குறிப்பிட்ட கருத்தில் உள்ளடங்கியுள்ள பண்டத்தை இவை குறிப்பிட்டுக் காட்டுகின்றன.

"மரம்" எனும் கருத்தைப் பற்றி நாம் பேசும்போது, எந்த ஒரு மரத்திற்கும் பொருந்தக் கூடிய, பொதுவான பண்புகளில் நாம் அக்கரை காட்டுகிறோமே தவிர, ஒரு ஜன்னலின் வழியாகத் தெரியக் கூடிய ஒரு குறிப்பிட்ட மரத்துக்கு மட்டும் உரித்தான பண்புகளில் அல்ல. உண்மையான மரங்களிலிருந்து பொதுவான பண்புகளை நாம் பிரித்து எடுக்கிறோம். இத்தகைய கருத்துக்கள் பண்பியலானவை என்று கூறப்படுகின்றன, மனித சிந்தனையின் இந்தத் தனிப்பட்ட தன்மை, அதன் பண்பியலான தன்மை, மிருகங்களால் அடையப் பட முடியாதது. ஏன்?

குழந்தைப் பருவத்திலிருந்தே மனித மூளையின் வளர்ச்சி பேச்சின் நிர்ணயமான ஆதிக்கத்தின் கீழ் நடைபெறுகிறது. குழந்தைக்கு ஒன்பது மாதங்கள் ஆனவுடன் அது "அம்மா! அம்மா," என்று திரும்பத் திரும்பக் கூறுகிறது. உலகில் என்ன நடைபெறு

கிறது என்பதை அது தெரிந்து கொள்ள ஆரம்பித்து விட்டது என்பதற்கு இது ஒரு அறிகுறி. இது எப்படி நிகழ்கிறது? குழந்தையின் மிகக் குறைவான வாழ்க்கை அனுபவம், சுற்றியுள்ள மக்களின் பேச்சு, இவை இரண்டின் அடிப்படையிலேயே இது நிகழ் கிறது.

ஒரு குழந்தை பந்தை வைத்துக் கொண்டு விளை யாடுகிறது. அது உருண்டையாகவும். மென்மையா கவும் இருக்கிறது என்பதை அது தெரிந்து கொள் கிறது. மஞ்சள், பச்சை, முதலிய பல வகையான பந்துகளுடன் அது விளையாடுகிறது. ஆனால் ஒவ் வொரு தடவையும் "இந்தப் பந்தை" உணர்கிறது. காலப்போக்கில் 'பந்து' என்ற சொல், 'பொதுவாக பந்து களைப்" பற்றிய ஒரு எண்ணத்தை அதனுள் ஊக்கு விக்கிறது. இப்போது அதற்குப் "பந்து" என்ற கருத்து தெரிந்து விடுகிறது. அந்தக் கருத்து ஒரு சொல்லின் மூலம் வெளியிடப்படுகிறது. நமது சிந்தனைகளும். பேச்சின் மூலமே வெளியிடப்படுகின்றன. ஆனால் நமது சிந்தனை பண்பியலானது என்றும், அது பொதுக் கருத்துக்களின் அடிப்படையில் நடைபெறுகிறது என்றும் நாம் முன்னரே எடுத்துக் காட்டியுள்ளோம்.

ஒரு பொருளின் முக்கியமான பண்புகளை, அந்தப் பொருளிலிருந்தே பிரித்து எடுத்துத் தனிமைப் படுத்து வதை, நமக்கு சாத்தியமாக்குவது எது? சொற்களால், பேச்சினால் இது சாத்தியமாகிறது. "பந்து" என்ற சொல் ஒரு குறிப்பிட்ட பந்தை மட்டுமல்லாது, எல்லாப் பந்துகளையும் பொதுவாகக் குறிப்பிடுகிறது, என்பதைக் காட்டுகிறது. பண்பியலான கருத்துகளைச் சொற்களின் மூலமன்றி வேறு எந்த வகையாலும் வெளியிட முடியாது.

குழந்தைப் பருவத்திலிருந்தே மனிதனது தன்னறிவு சொற்களின், மொழியின், அடிப்படையில் அமைக்கப் படு கிறது: ஏனெனில் நமது சிந்தனைகள் அவற்றின் மூலம் வெளியிடப் படுகின்றன. இந்த நிகழ்ச்சியின் போது, மனிதன் ஒருவனுக்கே உரித்தான ஒன்று படிப் படியாகத் தோன்றுகிறது. சிந்தனை, பேச்சுடன் நெருக்க மாகப் பிணைக்கப்படுகிறது. மனிதனின் தன்னறிவு சிந்தனை, பேச்சிலிருந்து பிரிக்கப்பட முடியாதது. மொழிக்கும் சிந்தனைக்கும் இடையே ஒரு அறுக்க முடி யாத முழுமையான ஐக்கியம் நிலை நாட்டப்படுகிறது.

இணைந்த பேச்சின் தோற்றமே, மனிதக் குரங்கின் மூளை படிப்படியாக மனித மூளையாக வளர்ச்சி யடைவதற்கு உதவியது என்று ஏங்கெல்ஸ் வலியுறுத்தினர். இது எப்படி நிகழ்ந்தது?

தன்னறிவு பேச்சு இவற்றின் சமூகத் தன்மை.

இதற்குச் சரியான விடை காண பின் வரும் உதாரணம் உதவும். ஓநாய்களால் வளர்க்கப்பட்ட குழந்தைகளைப் பற்றி வரலாறு அடிக்கடி கூறுகிறது. 1956ல் இந்தியாவில், அத்தகைய நிகழ்ச்சி ஒன்று கண்டுபிடிக்கப் பட்டது. மூன்று வயதிற்கும் குறைவான ஒரு சிறுமியை ஒரு பெண் ஓநாய் தூக்கிக் கொண்டு போய்விட்டது. சில ஆண்டுகளுக்குப் பின் அந்தக் குழந்தை கண்டு பிடிக்கப்பட்ட போது, அது நான்கு கால்களால் ஓடிக் கொண்டிருந்தது. பிராணிகளின் ஓலத்தைக் காப்பி அடித்தது. ஆனால் அதனால் பேச முடியவில்லை. எல்லா விஷயங்களிலும், குழந்தை, பிராணிகளைக் காப்பி அடித்த தில் வியப்பு ஒன்றுமில்லை. ஆனால் இதில் ஒரு வினோத மான அம்சம் இருக்கிறது. அந்தக் குழந்தைக்குப் பேசக் கற்றுக் கொடுக்க எடுத்துக் கொண்ட முயற்சிகள்

அனைத்தும் பயனற்றுப் போயின. மனிதப் பண்பு, தன்னறிவு அச்சிறுமிக்கு மீண்டும் தோற்றுவிக்கப் படவில்லை. புதிய நிலைகளுக்கு அவளால் பழக்கப் படுத்திக் கொள்ள முடியவில்லை. அவள் இறந்துவிட் டாள். (இந்த வகையான குழந்தைகளில் ஒன்று கூட குழந்தைப் பருவத்திற்கு மேல் வாழ்ந்ததில்லை).

இங்கு பின் வரும் கேள்வி எழுகிறது. குழந்தை சரியான மனித மூளையுடன்தான் பிறந்தது. அவள் வளர்ந்த போது அவளது மூளையும் வளர்ச்சி அடைந் திருக்கும் என்பது தெளிவு. ஆனல் சிந்திக்கும் திறமையில் அவள் ஏன் இவ்வளவு பின்தங்கி இருந் தாள்? நாம் முன்னரே கூறியதன் அடிப்படையில் நீங்களே இந்தக் கேள்விக்கு விடை அளிப்பது எளிது. மனிதத் தன்னறிவை வெளிக்காட்ட உயிரியல் முறை யில் நன்கு வளர்ந்த மூளை இருந்தால் மட்டும் போதாது என்பது தெளிவாகிறது. ஒருவன் சமூகத்தில், கூட்டு வாழ்வில் வாழவும் வேண்டும். கூட்டு வாழ்விற்கு வெளியே மனித சிந்தனை இல்லை. சமூகத்தில் மனிதன் வாழ்வதன் விளைவாக அது தோன்றுகிறது. ஒரு பக்கத்தில் சிந் தனை இயற்கையைப் பிரதிபலிக்க, மற்றொரு பக்கத்தில், மனிதன் உழைப்பின்போதும், உற்பத்திக்கிரியைகளின் போதும், மற்ற மக்களுடன் திட்டவட்டமான உறவு கொள்ள, அப்பொழுதுதான் சிந்தனை தோன்றும். உழைப்பு, மனிதனை, மனித சமூகத்தைத் தோற்றுவிக்கிறது. உழைப்பின் மூலம், உற்பத்திச் செயல்களின் மூலம், மனிதனின் மூளை, தன்னறிவு, வளர்கிறது. எனவே தான் மார்க்ஸ், ஆரம்பத்திலிருந்தே தன்னறிவு சமூகத் தின் விளைபொருளாக இருந்து வந்திருக்கிறது; மக்கள் வாழும்வரை அப்படியே இருக்கும்; என்று எடுத்துக்

காட்டுகிறார். மனிதன் சமூகத்தில் வாழ்வதன் விளைவே தன்னறிவு. அது ஒரு சமூக நிகழ்வு.

சமூகத்திற்குப் புறத்தே, எப்படிப் பேச்சும், மொழியும் இருக்க முடியாதோ, அதே போலத் தன்னறிவும் இருக்க முடியாது என்பது இதன் பொருள். தொழில் நிகழ்ச்சியின் போதுதான், உற்பத்திச் செயல்களின் போதுதான் சிந்தனை தோன்றி, வளர்கிறது. ஏனெனில் அந்த நிலைகளின் கீழ்தான் மனிதன் இயற்கையின்மேல் செயலூக்கமுள்ள ஆதிக்கம் வகிக்க முடியும். இயற்கையின் மேல் செயல் புரிவதன் மூலம், மனிதன் தனது தன்னறிவையும் வளர்த்துக் கொள்கிறான். தொழில் நிகழ்ச்சியின்போதுதான், மனிதன் பண்டங்களைத் தனது தன்னறிவில் மேலும், மேலும், விரிவாகப் பிரதிபலிக்கிறான். அவற்றை ஒப்பிட்டுப் பார்க்கிறான். அவற்றிற்குப் பொதுவானவை எவை என்பதைக் கவனித்து, திட்டவட்டமான கருத்துக்களை உண்டாக்கிக் கொள்கிறான். செயல்முறை நடவடிக்கைகளின் போதும், மனிதன் பண்டங்களுக்கிடையே யுள்ள தொடர்புகளையும் உறவுகளையும் ஆராய்கிறான். இவ்விதமாகப் படிப்படியாகப் பொருள் உற்பத்தி வளர்ச்சி அடைந்த போது மனிதனது தன்னறிவும் வளர்ச்சி அடைந்து, பூரணத்துவம் அடைந்தது.

சிந்தனை, மொழி, உருவமைக்கப்படும் நிகழ்ச்சியை எங்கெல்ஸ், ''மனிதக் குரங்கிலிருந்து மனிதனாக மாறியதில் உழைப்பின் பங்கு'' என்ற தனது கட்டுரையில் வெளிப்படுத்தினார். மூதாதையர்களான மனிதக் குரங்குகளிலிருந்து, மனிதனாக மாறியதில் முதல் படி, நிமிர்ந்து நிற்கும் தோரணையைப் பெற்றதுதான் என்று அவர் எடுத்துக் காட்டினார். மனிதன் இயற்கைத் தொழில் கருவிகளைப் பயன்படுத்த ஆரம்பித்ததாலேயே

இது ஏற்பட்டது. இவ்விதமாக மனிதனது முன்கால்கள், விடுதலை பெற்று, தொழில் நிகழ்ச்சிகளின்போது செம்மைப் படுத்தப்பட்டு, பின்னர் படிப்படியாக மனிதனது கைகளாக வளர்ச்சி அடைந்தன. அது ஒரு தொழில் உறுப்பு மட்டுமல்ல, அது தொழிலின் விளைவாகத் தோன்றியதுமாகும்.

எனினும், இயற்கைக் கருவிகளை உபயோகிப்பது இன்னும் தொழிலாகி (அந்தச் சொல்லின் உண்மையான பொருளில்) விடவில்லை. வரலாற்றுக் காலத்தில் தொழிலும் வளர்ச்சி அடைந்து கொண்டு வந்திருக்கிறது. முதன்முதலாக மனிதன் செயற்கைத் தொழில் கருவிகளைச் செய்தபோதுதான் உண்மையான தொழில் தொடங்கியது. மனிதக் குரங்குகளால் இயற்கைக் கருவிகளை உபயோகிக்க முடியும். ஆனால் அவற்றால் அக்கருவிகளைச் செய்ய முடியாது. முதல் தொழில் கருவிகள் செய்யப்பட்டவுடனேயே மனித சமூகம் தோன்றிவிடவில்லை. மனிதக் குரங்கு மனிதனாக மாற்றமடைந்து, அதன்மூலம் அவனது தன்னறிவு உருவமைந்த ஒரு நீண்ட நிகழ்ச்சியின் தொடக்கமே அது. மனிதனும், மனித சமூகமும் வளர்ச்சி அடைந்து கொண்டிருந்த காலம் அது.

பேச்சும், இந்தக் காலகட்டத்தில்தான் தோன்றியது. கூட்டு உழைப்பின் போது, உற்பத்தியின் போது, மக்கள் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ள வேண்டிய தேவையை உணர்ந்தார்கள். இந்தத் தேவை அதற்கியைந்த உறுப்பைத் தோற்றுவித்தது என்கிறார் எங்கெல்ஸ். மனிதக் குரங்கின், செம்மையுறாத குரல் வளை படிப்படியாக மாறுதலடைந்தது. வாய் உறுப்புக்கள் ஒரு இணைந்த ஒலிக்குப்பின் மற்றொன்றாக, உச்சரிக்கக் கற்றுக் கொண்டன. இவ்விதம், சிந்தனைகளைப்

பரிமாறிக்கொள்ள ஒரு கருவியாக மனிதர்களுக்கிடையே தொடர்பு வைத்துக்கொள்ள ஒரு சாதனமாக, சிந்தனையின் பருப்பொருள் கூடாகிய பேச்சு, மொழி தோன்றியது.

மொழிக்கும், சிந்தனைக்கும் இடையேயுள்ள ஐக்கியம், சிந்தனையின் தன்மையிலிருந்தே தோன்றுகிறது. சொற்களில்தான் சிந்தனை ஸ்தூலமாகிறது. அது மனிதனின் தலைக்கு உள்ளே இருக்கும் வரை, மற்றவர்களால் அணுக முடியாதபடி, செத்துக்கிடப்பதுபோலக் காணப்படுகிறது. எனவே, சிந்தனையின் உடனடியான யதார்த்தம், மொழி என்று மார்க்ஸ் எடுத்துக் காட்டினார். பருப்பொருள் கூடாகிய மொழிக்குப் புறத்தே, சிந்தனை இருப்பதில்லை என்பது இதன் பொருள். நமது எண்ணங்களை நாம் வாய்விட்டுக் கூருத போதுங்கூட நமக்குள் நாமே சிந்தித்துக் கொண்டிருக்கும் போதுங்கூட, சொற்களால், மொழியால், அவற்றிற்கு உருவங் கொடுக்கிறோம். மொழியால் எண்ணங்கள் தோன்றுவதோடு மட்டுமல்லாமல், அவை மற்றவர்களுக்கு எடுத்துக்கூறவும் படுகின்றன. எழுத்தின் மூலம் அவை தலைமுறை தலைமுறையாக வழங்கப் படுகின்றன.

எனினும், மேலே கூறியனவற்றிலிருந்து, மொழியும், சிந்தனையும் ஒன்றுதான், என்று முடிவுசெய்வது தவருகும். அவை ஒரு ஐக்கியத்தின் இரு பகுதிகள். ஆனல் அவை இரண்டும் ஒன்றேயான நிகழ்வு அல்ல. சிந்தனை யதார்த்தத்தைப் பிரதிபலிக்கிறது. ஆனல் மொழியோ, சிந்தனைகளை மற்ற மக்களுக்கு எடுத்துச் சொல்வதற்கான ஒரு கருவி. சிந்தனை யதார்த்தத்துடன் நேரடியாகத் தொடர்பு கொண்டுள்ளது. மொழி யதார்த்தத்தோடு நேரடியாக அல்லாமல், சிந்தனையின் மூலம் தொடர்பு கொண்டுள்ளது. உலகிலுள்ள நிகழ்வுகளையும், அவற்றின் தொடர்புகளையும் மூளை நேரடி

யாகப் "படமெடுத்து" நமது கருத்துக்களையும், எண்ணங்களையும் தோற்றுவிக்கிறது. மொழியின் மூலம், நாம் அவற்றை மற்ற மக்களுக்கு எடுத்துக்கூற மட்டுமே செய்கிறோம்.

இதைப் பொருத்துப் பின்வரும் கேள்வி அடிக்கடி எழுகிறது. சிந்தனைகள் யதார்த்தத்தைப் பிரதிபலிக்கின்றன; அல்லது படமெடுக்கின்றன என்றால், இயற்கையில் உள்ள எந்தப் பொருளுக்கும் இயையாத கற்பனைகளும், புனைவுகளும் இருப்பதை நாம் எப்படி விளக்கமுடியும்?

**பொருள் முதல்வாதமும் கனவும் கற்பனையும்**

உதாரணமாக, செயற்கைக் கோள்கள் இல்லாதிருந்த காலத்திலேயே, ரஷ்ய விஞ்ஞானியும், ராக்கெட் இயலின் தந்தையுமான கோன்ஸ்தந்தைன் ஸியால்கோவ்ஸ்கி, இந்த நூற்றுண்டின் ஆரம்ப ஆண்டுகளிலேயே அவற்றை "எதிர்நோக்கினுர்." சிந்தனை முதன்மையானது, இரண்டாவதானதல்ல என்பதை இது காட்டவில்லையா? பொருள் முதல் வாதத்திற்கு இது முரணானதல்லவா?

புனைவுகள் இருப்பது, மக்களிடம் அத்தகைய கேள்விகளைக் கிளப்புகிறது என்பதை லெனின் கவனித்தார். சுற்றிலுமுள்ள யதார்த்தத்திலிருந்து தனித்துச் சிந்தனை தோன்றுகிறது என்ற கருத்து ஏற்படலாம். இங்குதான் கருத்து முதல் வாதத்தின் வேர்கள் உள்ளன. யதார்த்தத்திலிருந்து பிரிந்து, அல்லது அதற்கு எதிராகச் சிந்தனை தோன்றலாம் என்ற கருத்து முதல் வாத முடிவை எடுப்பதற்கு ஒரு அடிப்படை அமைக்கப்படுகிறது. அத்தகைய முடிவிற்கு ஏதாவது ஆதாரம் இருக்கிறதா என்று பார்ப்போம்.

நாம் பின்வரும் உண்மையை நினைவுபடுத்திக் கொள்வோம். இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில், புதுவகையான ஒரு கட்சியைத் தோற்றுவிக்கும் முயற்சியில் லெனின் ஈடுபட்டார். அந்த சமயத்தில்தான், அவர் 'இனி நாம் செய்ய வேண்டியது என்ன"? என்ற தனது நூலில் புகழ்பெற்ற ஒரு அறைகூவலை வெளியிட்டார். "நாம் கனவு காணவேண்டும்"! லெனின் எதைப்பற்றிக் கனவு கண்டார்? சக்திவாய்ந்த ஒரு கம்யூனிஸ்டுக் கட்சியைப் பற்றி அவர் கனவு கண்டார். அவரது கனவு எவ்வளவு துல்லியமாக நனவாயிற்று என்பது எல்லோருக்கும் நன்கு தெரியும். அதற்குச் சில காலத்திற்குப் பின்பே அத்தகைய கட்சி ஒன்று அமைக்கப்பட்டது. வாழ்க்கையே, யதார்த்தமே லெனினுடைய கனவை, அவரது துணிச்சலான எண்ணத்தைத் தோற்றுவித்தது.

அதுபோலவே ஸியால்கோவ்ஸ்கியின் புனைவுகளும் யதார்த்தத்தில் வேரூன்றி இருந்தன. உண்மையான உலகைக் கணித ரீதியில் துல்லியமாக அளவெடுத்து, என்றோ ஒரு நாள் நிச்சயமாகத் தோன்றப் போவது ஒன்றைப் பற்றி அவர் அற்புதமாக யூகித்தார். ஸியால்கோவ்ஸ்கியின் கனவுகளும், புனைவுகளும் எவ்வளவு யதார்த்தமானவை என்பதை அண்டப் பயணிகளின் அண்டப் பயணங்கள் எடுத்துக்காட்டியுள்ளன.

எனவே, கனவுகளும், புனைவுகளும் கூட யதார்த்தத்தின் பிரதிபலிப்புத்தான் என்றும், அதன் அடிப்படையிலேயே அவை தோன்றுகின்றன என்றும் நீங்கள் காண்கிறீர்கள். யதார்த்தம் கனவுகளுக்குச் சிறகுகளை கொடுக்கிறது.

பொருள் முதல் வாதம் கனவுகளையும், புனைவுகளையும், மறுக்கவில்லை. அதற்கு மாறாக, அவற்றை விஞ்

ஞான ரீதியில் விளக்குகிறது என்பது தெளிவாகிறது.

பொருளுக்கும், தன்னறிவுக்கும் இடையே உள்ள உறவு எனும் பிரச்சனையைப் பற்றிச் சிந்திக்கும்போது அடிக்கடி எழும் மற்றொரு கேள்வியைப் பரிசீலனை செய்வோம்.

ஆன்மா இருப்பதை பொருள் முதல் வாதம் மறுக்கிறது என்றால், உணர்ச்சிகள், ஆர்வம் இச்சை முதலிய முக்கியமான மனிதப் பண்புகள், அதாவது, மனிதனின் ஆன்மீகச் செல்வம் என்று சொல்லப்படுவது. இருப்பதையும் அது மறுக்கவில்லையா? உதாரணமாக "அவர் எவ்வளவு உள்ள உணர்ச்சியுடன் இசைக்கருவியை வாசிக்கிறார்" என்றும், "அவர் தனது வேலையில் உயிரையே வைத்திருக்கிறார்" என்றும் நாம் அடிக்கடி கூறுகிறோம். ஆன்மா இல்லையானால் வைப்பதற்கு என்ன இருக்கிறது; என்று கேட்கப்படுகிறது. தற்கால பிரஞ்சு சமய சித்தாந்த வாதியாகிய பியரி பிகோ, பொருள் முதல் வாதம் "ஆன்மீக மதிப்புக்களை ஏற்றுக் கொள்வதில்லை, ஏனெனில் அது பருப்பொருள் மதிப்புக்களை மட்டுமே ஏற்றுக் கொள்கிறது," என்று எழுதுகிறார். இது உண்மையா? இல்லவே இல்லை! இது பொருள் முதல் வாதத்தின் மேல் கூறப்படும் ஒரு அபாண்டமாகும். ஆன்மா என்பது தனிப்பட்ட, பருப்பொருள் தன்மையில்லாத ஒரு முழு நிறைக்கூறு என்ற கருத்தைத்தான் பொருள் முதல் வாதிகள் மறுதலிக்கிறார்கள். ஆனால் மனிதனின் அக, ஆன்மீக உலகை அவர்கள் மறுப்பதில்லை. மனிதனது ஆன்மீகச் செல்வத்தையும் அவர்கள் மறுப்பதில்லை. ஒரு கீழ்த்தரமான எழுத்தாளனே, வாசகர்களின் உள்ளத்தைத் தொட்டு,

அவர்கள் உணர்ச்சிகளைப் பாதிக்க விரும்பாது இருப்பான்.

சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சி, சோவியத் மக்களது பொருள் செல்வத்தைப் பெருக்குவதில் மட்டுமன்றி அவர்களது ஆன்மீகச் செல்வத்தை வளர்ப்பதிலும் எப்பொழுதும் அக்கறை காட்டி வந்துள்ளது. மனிதர்களது தன்னறிவை, அது எந்தச் சூழ்நிலைகளின் கீழ் வளர்கிறதோ அவற்றிலிருந்து பிரிக்க முடியாது. தன்னறிவு, வாழ்க்கையை, யதார்த்தத்தை, பிரதிபலிக்கிறது என்று நாம் பார்த்தோம். மக்களது உயர்ந்த உணர்ச்சிகளை வெளிக்கொணரவும், கம்யூனிஸ நிர்மாணகர்களிடத்தே மிக உயர்ந்த தன்னறிவைத் தோற்விக்கவும், தேவையான நிலைகளைக் கம்யூனிஸ்டுக் கட்சி ஏற்படுத்திக் கொடுக்கிறது. சோவியத் மக்களுக்கு, அவர்களது குறிக்கோள்களின் மேன்மையும், எழிலும், உயிரினும் இனியவை. மனித ஆட்பண்பின் ஆன்மீக, உணர்ச்சி அம்சங்களைக் கம்யூனிசம் புறக்கணிக்கிறது என்று கூறும், மார்க்ஸிஸத்தின் பூர்ஷுவா விமர்சகர்களது முயற்சி, பரிதாபத்திற்குரியதன்றோ! தற்காலக் கம்யூனிஸ்டு எதிர்ப்பாளர்களின் பொய்களுக்கு உறுதியான மறுதலிப்பு, சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் புதிய திட்டத்திலே காணப்படுகிறது. சோவியத் மக்களின், கம்யூனிஸ நிர்மாணகர்களின், கல்வியில் காட்டப்படும் கவனத்திற்கு அதன் ஒவ்வொரு பக்கமும் சான்று பகர்கின்றது.

எனவே, பொருள் முதல் வாதம், தன்னறிவின் இரண்டாவதான தன்மையைப் புரிந்து கொள்கிறது. ஆனால் மனித வாழ்வில் அதற்குள்ள முக்கியமான பங்கை மறுக்கவில்லை. இந்தப் பிரச்சனையைச் சற்று விரிவாகப் பரிசீலனை செய்வோம்.

**தன்னறிவின் செயலூக்கமுள்ள பங்கு**

தன்னறிவு, உலகை, முனைப் பற்று உணர்வதில்லை என்பதற்கு, கனவுகளும், சிறந்த கற்பனைகளும் இருப்பதே சான்றாகும். இந்த சந்தர்ப்பத்தில், தன்னறிவு, யதார்த்தத்தை முந்திக் கொண்டு செல்வது போலத் தோன்றுகிறது. யதார்த்தத்தை செயலூக்கமுள்ள முறையிலே பாதித்து அதை மாற்றுவதற்கான வழிதுறைகளையும், தன்னறிவு காட்டுகிறது.

உதாரணமாக, சோவியத் மக்களாலும், சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியினாலும், தீட்டப்பட்டுள்ள திட்டங்களை நிறைவேற்றுவதையே எடுத்துக் கொள்ளுங்கள். இங்கு சிந்தனை யதார்த்தத்தை முந்திக் கொண்டு செல்கிறது; அதற்கு வழி காட்டுகிறது. தேசத்திற்கு ஓர் அசுர ஆக்க சக்தியைக் கொடுக்கிறது. தன்னறிவு, வலுவுள்ள ஒரு முகப்படுத்தும் சக்தியாகத் திகழ்கிறது. கம்யூனிசத்தின் வெற்றிக்காக லட்சோப லட்சம் தொழிலாளர்கள் மாபெரும் பணிகளை ஏற்றுக் கொள்கின்றனர். இந்தக் கருத்தில்தான் மார்க்ஸ் ஒரு குறிக்கோள் மக்களைப் பற்றிக் கொள்ளும்போது, அது ஒரு பருப்பொருள் சக்தியாகிறது, என்று கூறினார். உயர்ந்த ஒரு குறிக்கோளால் ஊக்குவிக்கப்பட்ட மக்கள் மாபெரும் செயல்களைச் செய்யும் திறனுடையவர்கள் என்பதே இதன் பொருள் தன்னறிவு, உலகை சிருஷ்டிக்கிறது என்ற லெனினுடைய வாசகத்தை இந்த முறையில்தான் புரிந்து கொள்ள வேண்டும்.

யதார்த்தத்தைப் பிரதிபலிக்கும் போதே, தன்னறிவு அதை மாற்றுவதற்கும் வழிகாட்டியாக உள்ளது. சமாதானத்திற்காகவும், ஜனநாயகத்திற்காகவும், சோஷலிஸத்திற்காகவும், நடைபெறும் போராட்டங்களில்,

இன்று வலுமிக்க சக்தியாகி விட்ட மார்க்ஸிஸ லெனினிஸக் கோட்பாட்டையே இதற்கு உதாரணமாகக் கொள்ளலாம்.

மனிதத் தன்னறிவின் இந்த அம்சத்தைக் கருத்து முதல் வாதிகள் மிகைப்படுத்துகிறார்கள். தன்னறிவு செயலூக்கமுள்ளது, எனவே அது முதன்மையானது; மக்களின் நடவடிக்கைகளை வழிநடத்திச் செல்வது தன்னறிவு; என்றெல்லாம் அவர்கள் கூறுகிறார்கள். மனிதத் தன்னறிவின் செயலூக்கமான தன்மை, கருத்து முதல் வாதத்தின் வெற்றியைக் காட்டுகிறது என்று அவர்கள் உரிமை கொண்டாடுகின்றனர். இது உண்மையா? தன்னறிவு, மக்களின் நடவடிக்கைகளை வழி நடத்திச் செல்கிறது என்பதனால் அது முதன்மையானதாகி விடாது. அதற்கு மாறாக, நடவடிக்கைகளுக்கான எல்லாக் குறிக்கோள்களையும், பணிகளையும், திட்டங்களையும், தன்னறிவு யதார்த்தத்திலிருந்தே, அந்த நடவடிக்கைகளிலிருந்தே எடுத்துக் கொள்கிறது. இதை நாம் மேலே பார்த்தோம்.

மனிதனது தன்னறிவின் செய்கையைப் பற்றி இதுவரை கூறியதனைத்தும், தற்காலத் தொழிலின், வியப்பு மிக்க ஒரு நிகழ்வைப் பகுத்தாய்ந்து, சரியாக விளக்குவதற்கு நமக்கு உதவும்.

**சிந்தனையும் இயந்திரமும்**

நீங்கள் கணக்கீடு இயந்திரங்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். அவற்றால் சிக்கலான பல பணிகளைச் செய்து முடிக்க முடியும். ஒரு மொழியிலிருந்து மற்றொன்றிற்கு மொழி பெயர்க்க முடியும். ஒரு விமானத்திற்கு வழிகாட்டவும், ஒரு ரயிலை ஓட்டவும் முடியும். ஏன்! அவை சதுரங்கம் கூட விளையாடுகின்றன. மனித மூளைக்கே உரித்தான

சில அளவைக் கிரியைகளைக் கூட அவற்ருல் செய்ய முடியும். எப்பொழுது ஒரு ரயிலின் வேகத்தைக் குறைக்க வேண்டும், என்பதை அவை நிர்ணயிக்கின்றன. சில நிகழ்ச்சிகளை ''நினைவு வைத்துக்''கொள்கின்றன, இத்யாதி. உலோகத்திற்கு, மனித சிந்தனை கொடுக்கப்பட்டு விட்டது போலக் காண்கிறது.

ஆனால் மனித மூளையை அறவே ஒதுக்கி விடக் கூடிய ஒரு இயந்திரத்தைக் கட்டமுடியுமா? முடியாது. மனிதன் ஒரு இயந்திரத்தை எந்தக் காரியங்களுக்காகச் செய்திருக்கிருனே, அந்தக் காரியங்களை, அது குறையற்று நிறைவேற்றுகிறது என்பது உண்மைதான். தன்னை சிருஷ்டித்த மனிதனுக்குத் தெரியாத சில புதிய உண்மைகளைக் கூட அதனுல், கண்டு பிடிக்க முடியும். ஆனால், அது எப்போதும், மனிதனது உள்ளத்திற்கு ஒரு துணைக் கருவியாகவே இருக்கும். மனிதன் இல்லாவிட்டால் அது ''உயிரற்ற உலோகந்தான்''.

எந்த இயந்திரத்தைக் காட்டிலும், மனிதனது மூளை அளவிடற்கரிய முறையில் உயர்ந்து இருப்பதேன்? ஏனெனில் அது சமூகத் தொடர்புகளின் விளை பொருள். சிந்தனைக்கும் ஒரு சமூகப் பண்பு உண்டு என்பதையும் நாம் பார்த்தோம். மூளையின் வேலை, சமூக உறவுகளைப் போன்ற, சிக்கலுடையது. மனிதனது அக ஆன்மீக உலகை, அவனது செயலூக்கத் தன்மையை, கற்பனு விலாசத்தை, கனவுகளை, விருப்பாற்றலை வெளிப்படுத்த அவனுக்குள்ள திறமையை அவனது சிக்கலான கலை உலகை, எந்த மின்னணு மூளையாலும் தோற்றுவிக்க முடியாது.

முரண் தர்க்கப் பொருள் முதல் வாதத்தின் அடிப் படைப் பிரச்சனைகளில் சிலவற்றை நாம் பரிசீலனை

செய்தோம். அவற்றை ஆழ்ந்து புரிந்து கொள்ள, மார்க்ஸிஸப் பொருள் முதல் வாத முரண் தருக்கத்தின் சாரத்தைப் பற்றி நமக்கு ஒரு தெளிவான கருத்து வேண்டும். இந்தச் சாரம், அதன் விதிகளிலும், இனங்களிலும் காணக் கிடைக்கிறது. இவற்றை இனி நாம் பரிசீலனை செய்வோம்.

உரை ஐந்து

# முரண் தர்க்கத்தின் அடிப்படை விதிகள் "எண்ணியலான மாற்றங்கள், பண்பியலான மாற்றங்கள் ஆதல்"— எனும் விதி

**விதி என்பது என்ன?** விதி என்று நம்மால் சொல்லப் படுவது என்ன என்பதைப் புரிந்து கொள்ள நாம் மிக எளிய ஒரு உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். ஒரு கல்லைக் காற்றில் விட்டெறிந்தால், அது பூமியின்மேல் வந்து விழுகிறது. ஒரு வில்லிலிருந்து விடப்படும் அம்பிற்கும், இது பொருந்தும்.

இந்த நிகழ்வுகளின் தன்மை என்ன? அவை எப்படி நிகழ்கின்றன? இங்கு ஒரு வேளை ஏற்படலாம், அல்லது ஏற்படாது போகலாம் என்னும்படியான நிகழ்வுகளை நாம் பரிசீலனை செய்யவில்லை. கட்டாயமாக நிகழக்

கூடிய நிகழ்வுகளை, நிகழாமல் இருக்க முடியாத நிகழ்வு களையே நாம் பரிசீலனை செய்கிறோம். இதை முதலில் கவனிக்க வேண்டும். காற்றில் எறியப்பட்ட எந்தப் பண்டமும், புவிஈர்ப்பினால், இழுக்கப்பட்டுக் கட்டாய மாக பூமிக்குத் திரும்பித்தான் வரும். ஒரு கண்டிப்பான நியதி வரிசை முறை, ஒழுங்கு, இங்கு இருக்கிறது என்பதே இதற்குப் பொருள். நமது செயல்முறை நட வடிக்கைகளில் இத்தகைய நிகழ்வுகளைக் காணும் போது, அவற்றிடையே, ஒரு விதிக்கு உட்பட்ட, அவ சியமான, தொடர்பு இருக்கிறது என்று நாம் கூறுகி றோம்.

**நிகழ்வுகளிடையே யுள்ள அவசியமான தொடர்பே, விதி.**

அனேக சந்தர்ப்பங்களில், நிகழ்வுகளுக்கிடையேயுள்ள தொடர்பு நமக்குப் புலனாகாமலே இருக்கலாம். உதாரணமாக ஒரு நிலக்கரி சுரங்கத்திற்கும், நம் வீட்டில் உபயோகிக்கப்படும் மின்விளக்குக்குமிடையே என்ன தொடர்பு இருக்க முடியும்? விளக்கு மின்சாரத் தால் எரிகிறது. மின்சாரத்தை ஒரு டைனமோ உற்பத்தி செய்கிறது. டைனமோவை ஒரு நீராவி இயந்திரம் சுழற்றுகிறது. நீராவி இயந்திரம் சுரங்கத்திலிருந்து எடுக்கப்பட்ட நிலக்கரியாலோ, மற்ற எரிபொருளி னாலோ இயங்குகிறது. இவ்விதமாகத் தொடர்பு தெளி வாகிறது.

மற்றொரு உதாரணத்தைப் பார்ப்போம். விவசாயம், தொழிலுக்குக் கச்சாப் பொருள்களை அளிக்கிறது. தொழில், விவசாய உற்பத்திக்குத் தேவையான இயந் திரங்களையும், உரங்களையும், மின்சாரத்தையும் உற்பத்தி செய்கிறது. இது மட்டுமல்ல, தொழில், விவசாயம் இவற்றின் வளர்ச்சி, விஞ்ஞானத்தின்

முன்னே திட்டவட்டமான பிரச்சனைகளை வைக்கிறது. அவற்றை விடுவிக்கும் போது, செயல் முறையிலிருந்து கிடைக்கும் புதிய புள்ளி விவரங்களால் விஞ்ஞானம் செழுமையடைகிறது. விஞ்ஞானம், தன் பங்கிற்குத் தொழிலையும், விவசாயத்தையும் பாதிக்கிறது. இவ்வித மாகப் பொருளாதாரத்தின் முக்கியமான துறைகள் ஒன்றோடு ஒன்று இணைந்து வளர்ச்சி அடைகின்றன.

இந்த உதாரணங்களிலிருந்தும், நாம் முன்னர் கூறியனவற்றிலிருந்தும், இயற்கை, சமூகம் இவற்றின் நிகழ்வுகள் ஒன்றிலிருந்து ஒன்று தனித்து இருப்பதில்லை என்றும், அவை பரஸ்பரத் தொடர்புடையவை என்றும் நீங்கள் காணலாம். ஒன்று, மற்றொன்றைச் சார்ந்துள்ளது. மற்றொன்று மூன்றாவதைச் சார்ந்துள்ளது. இந்தத் தொடர்பு களுக்கு, சார்புகளுக்கு, (அல்லது நாம் கூறுவது போல) உறவுகளுக்கு, முடிவே இல்லை. எனவேதான், எங் கெல்ஸ், நாம் இயற்கையையோ, மனித வரலாற் றையோ ஆராயும்போது, யதார்த்த உலகின் பொருள் களுக்கிடையேயும், நிகழ்வுகளுக்கிடையேயும், தொடர் புகளும், பரஸ்பரக் கிரியைகளும் முடிவற்றுப் பின்னிக் கிடப்பதைப் பார்க்கிறோம், என்று கூறினர். எனினும், எல்லாத் தொடர்புகளும் சமமான முக்கியத்துவம் வாய்ந்தவை யல்ல. தற்செயலான, மாறுகின்ற, தொடர் புகள் உள்ளன. நிலையான, ஆழ்ந்த, அவசியமான (அல்லது நாம் கூறுவது போல) விதிக்கு உட்பட்ட தொடர்புகளும் உள்ளன.

இந்த ஆழ்ந்த, நிலையான உறவுகளையே ஒரு விதி வெளியிடுகிறது. நிகழ்வுகளில் எது அவசியமானதோ, அதை விதி தழுவுகிறது என்று லெனின் எடுத்துக்

காட்டினர். "அவசியமான உறவே விதி",† என்று அவர் எழுதினர். வேறு வார்த்தைகளில் சொன்னல் தற்செயலான, புறம்பான, மாறுகின்ற சந்தர்ப்பங்களால்ன்றி, பரஸ்பரத் தொடர்புடைய நிகழ்வுகளின் அகத்தன்மையால், வஸ்துக்களிடையேயும், நிகழ்வுகளிடையேயும் தோன்றும் உறவே விதி. ஒரு விதி எல்லாத் தொடர்புகளேயும் பிரதிபலிப்பதில்லே; முதன்மையான நிர்ணயமான உறவுகளேயே பிரதிபலிக்கிறது.

சர்வ வியாபகமான, புறவயத் தொடர்பே விதி.

மேலே கூறியது மட்டுந்தான் ஒரு விதியின் தன்மை என்பதல்ல. விதிக்கு, விலக்கில்லே என்று சாதாரணமாகக் கூறப்படுகிறது. இது விதியின் தன்மையை எடுத்துக் காட்டுகிறது. அதாவது, சில நிகழ்வுகளே மட்டுமின்றி, குறிப்பிட்ட வகையைச் சேர்ந்த எல்லா நிகழ்வுகளேயும். விதி பாதிக்கிறது என்பதை அது எடுத்துக் காட்டுகிறது. உதாரணமாக, ஆர்க்கிமெடீஸின் தத்துவம், எந்த திரவத்திலும் அமுக்கப்பட்ட எல்லாப் பண்டங்களுக்கும் பொருந்தும். அதாவது ஆர்க்கிமெடீஸ் தத்துவத்தால் வெளியிடப்படும் தொடர்பு (மூழ்கடிக்கப்பட்ட பண்டத்தின் எடை இழப்புக்கும், வெளியேற்றப்பட்ட திரவத்தின் எடைக்கும், இடையே யுள்ள தொடர்பு) சர்வ வியாபகமான தன்மையுடையது. எந்த ஒரு விதியும் இப்படிப்பட்டதுதான். நிகழ்வுகளில் உள்ள பொதுவான ஒன்றை அது வெளியிடுகிறது. "இயற்கையில் சர்வவியாபகத்தின் உரு

---

† லெனின்: தொகுப்புக் கட்டுரைகள் பாகம். 38 பக்கம்—153.

வமே விதி''* என்று எங்கெல்ஸ் எழுதினர். எனவே ஒரு விதி, விரிவான ஒன்றை, சர்வவியாபகமான ஒன்றை நமக்கு அறிமுகப்படுத்துகிறது.

சர்வவியாபகமானது மட்டுமன்றி, அவசியமானது மான தொடர்பை விதி பிரதிபலிக்கிறது. மேலே கூறிய உதாரணங்களில் காணப்படுவதுபோல, ஒரு விதியால் வெளியிடப்படுவது, கட்டாயமாக தவிர்க்க முடியாத படி நிகழ்ந்தாக வேண்டும்.

சாதாரணமாக, விதி என்று சொன்னல் அதற்கு ஒரு சட்ட ரீதியான தன்மை உண்டு என்பது பொருள். ஆனல், தத்துவஞானக் கருத்தில் நாம் விதி·என்னும் போது, இயற்கையில் உள்ளார்ந்து, அதன் வளர்ச்சி யைக் கட்டுப்படுத்தும், புறவயமான விதியையே குறிப் பிடுகிறோம்,

பொருள்களும், நிகழ்வுகளும், புறவயமாக இருப்ப தால், அவற்றிடையே உள்ள தொடர்புகளும் அதாவது அவற்றின் வளர்ச்சியைக் கட்டுப்படுத்தும் விதிகளும், புறவயமாகவே உள்ளன. எனவே விதியின் புறவயத்தன்மை அதன் முக்கியமானதொரு அம்சமாகும். இயற்கை, சமூகம் இவற்றின் வளர்ச்சியிலுள்ள ஒழுங்குகள். மனிதனது விருப்பாற்றலை அவனது தன்னறிவைச் சார்ந்து இல்லை என்பதை இது காட்டுகிறது, மனித சமூகத்தின் செயல் முறை அனுபவமனைத்தும், இதற்குச் சான்ருகவுள்ளன. மனித சமூகம் தோன்றுவதற்கு வெகு காலத்திற்கு முன்பே, இயற்கையின் விதிகள் செயல்பட்டுக் கொண் டிருந்தன. பூமியில், மனிதர்கள் வெகு காலத்திற்குப் பின்பே தோன்றினர்கள். ஆனல் நமது கிரஹத்தின் இயக்கத்தைக் கட்டுப் படுத்தும் விதிகள், நமது கிர

* எங்கெல்ஸ், இயற்கையின் முரண்தர்க்கம் பக். 310

ஹத்தைப் போன்ற தொன்மை வாய்ந்தவை. இயற்கையின் விதிகளுக்கும் இது பொருந்தும்.

சமூக விதிகளும் புறவயத் தன்மை உடையவை தாம். அவற்றைத் தோற்றுவிக்கவோ, அழிக்கவோ, அல்லது தன்னிச்சையாக மாற்றவோ, மக்களால் முடியாது.

கருத்து முதல் வாதத் தத்துவார்த்திகள் வேறுபட்ட ஒரு கருத்தைக் கொண்டுள்ளனர். ஜெர்மன் தத்துவஞானியாகிய காண்ட், இயற்கைக்கு விதிகள் எதுவும் கிடையாது என்று வலியுறுத்தினர். எல்லாமே ஒரு குழப்ப நிலையில்தான் உள்ளன. மனிதனது மனம் தான் இயற்கையினுள் நியதிகளையும், ஒழுங்குகளையும் புகுத்துகிறது. மனிதன் இல்லையென்ருல் விதிகளும் இருக்காது. தற்கால பூர்ஷுவா தத்துவார்த்திகள். இந்தக் கருத்தைத் திரும்பத் திரும்பக் கூறுகின்றனர்.

அவர்கள் வாதங்களின் அடிப்படை என்ன? எந்த நிகழ்வையும், நாம் ஆராயத் தொடங்கியவுடன், விதிகளைத் தேடுகிருேம் என்று காண்ட் கூறினர். எனவே, விதி எனும் கருத்து, நாம் அவற்றை யதார்த்தத்தில் காணும் முன்பே, நம் உள்ளத்தில் உள்ளது. அது நமது பகுத்தறிவில் உள்ளார்ந்துள்ளது. ஆனல் உண்மையான யதார்த்தத்தில் விதிகள் இல்லை. இந்தக் காரணத்தால், விதி எனும் இனம், "ஏற்கெனவே இருக்கும்" தன்மை உடையது என்று காண்ட் வலியுறுத்தினர். ஏனெனில் அது அனுபவத்திற்கு முன்னரே நமது பகுத்தறிவில் உள்ளது. ஆனல் இந்த வாதங்கள் விஞ்ஞான ரீதியான விமர்சனத்தின் முன்னுல் நிற்க முடியாது. உலக வளர்ச்சி பற்றிய விதிகளை இன்று மக்கள் தேடுகிருர்கள், என்பதனுல் அவர்கள் என்றுமே

அப்படித் தேடி வந்தார்கள் என்று முடிவெடுக்க முடியுமா? இன்று பாக்டீரியாக்களை அழிப்பதற்காக நாம் அவற்றைத் தேடுகிறோம். ஆனால் அவை இருப்பதை அறியாதிருந்த காலத்தில் மக்கள் அவற்றைத் தேடவில்லை.

ஆதிகாலத்துக் காட்டுமிராண்டிக்கு, உலகில் விதிகள் இருக்கின்றன என்ற அறிவே கிடையாது. எனவே அவன் அவற்றைத் தேடவில்லை. எனவே, அவை, அவனுள் "உள்ளார்ந்து" இருக்கவில்லை என்று ஆகிறது. பின்னர்தான், தங்கள் சொந்த வாழ்க்கையிலிருந்து, நிகழ்வுகளிடையே விதிக்குட்பட்ட தொடர்புகள் இருக்கின்றன என்பதை மக்கள் தெரிந்து கொண்ட பின்னர்தான், அவர்கள் யதார்த்தத்தில் விதிகளைத் தேடினார்கள். கண்டுபிடிக்கவும் செய்தார்கள். எனவே, விதி எனும் இனம், "ஏற்கெனவே இருக்கும்" தன்மையுடையது என்று வலியுறுத்துவது விஞ்ஞான ரீதியற்றது, அனுபவத்திற்கு முரணானது என்று தெரிகிறது. இயற்கை, சமூகம் இவற்றின் விதிகளது புறவயத் தன்மையை இது நிரூபிக்கிறது.

இவ்விதமாக, இன்றுள்ள பொருள்களுக்கிடையேயும், நிகழ்வுகளுக்கிடையேயும், உள்ள சர்வ வியாபகமான, அவசியமான, புறவயமான, ஓரளவு நிலையான, தொடர்பை விதி வெளியிடுகிறது.

எந்த வகையான விதிகள் இருக்கின்றன?

இயற்கையின் ஒரு பிரிவுக்கோ, ஒரு குறிப்பிட்ட சமூகத்திற்கோ உரித்தான நிகழ்வுகளிடையே உள்ள அவசியமான தொடர்புகளை விதிகள் குறிக்குமேயானால் அவை குறிப்பிட்ட விதிகள் எனப்படும். உயிரியல், பௌதிகம், இன்ன பிற விஞ்ஞானத் துறைகளால் ஆராயப்படும் விதிகள் அந்த வகையைச் சேர்ந்தவை.

எல்லா இயற்கை நிகழ்வுகளுக்கும், எல்லாச் சமூக நிகழ்வுகளுக்கும். எல்லா சிந்தனை நிகழ்வுகளுக்கும் உரித்தான, அவசியமான தொடர்புகளைக் குறிக்கும் விதிகள் பொது விதிகள் எனப்படும். இயற்கையின் எல்லா நிகழ்வுகளையும் கட்டுப்படுத்தும் பிரபஞ்ச ஈர்ப்பு விதி அத்தகையது. உற்பத்தியின் நிர்ணயமான பங்கு எனும் விதி, சமூகத்தின் வரலாறு முழுவதிலும் செயல்படுகிறது. இதுவும் ஒரு பொது விதியே. எல்லா நிகழ்வுகளுக்கும் (அவை இயற்கை நிகழ்வுகள், சமூக நிகழ்வுகள், சிந்தனை நிகழ்வுகள், எதுவாக இருந்த போதிலும்) உரித்தான, அவசியமான தொடர்புகளைக் குறிக்குமேயானால், அவ்விதிகள் சர்வ வியாபக விதிகள் எனப்படும். இந்த விதிகளையே மார்க்ஸிஸத் தத்துவ ஞானம் ஆராய்கிறது. அவையாவன.

(a) எண்ணியலான மாற்றங்கள், பண்பியலான மாற்றங்கள் ஆகும் விதி.

(b) எதிர்நிலைகளின் ஐக்கியமும், போராட்டமும் எனும் விதி.

(c) மறுப்பின், மறுப்பு, எனும் விதி.

**சில அற்புதமான மாற்றங்கள்**

ஒலியின் வேகத்தைவிட, வேகமாகச் செல்லக்கூடிய ஆகாய விமானத்தையோ, அல்லது ஒரு அண்டக் கப்பலையோ கட்டுவதற்கு, இயற்கையில் இல்லாத பொருள்கள் தேவைப்படுகின்றன. அவற்றை எப்படிப் பெறுவது? உதாரணமாக, எஃகைவிட வலுவானதும், அதே சமயத்தில் கண்ணாடியைவிட அதிகமாக ஒளி உட்புகும் தன்மை வாய்ந்ததுமான ஒரு கலப்பு உலோகத்தை நாம் எப்படிப் பெற முடியும்? இந்தப் பிரச்சனையை சமாளிக்க இரசாயனம் நமக்கு ஒரு வழியைக் காட்டுகிறது.

புதிய குணங்களுடைய ஒரு பொருள் தேவைப் பட்டால், பெரிய மூலக் கூறுகளைப் புதிய வகையிலே இணையச் செய்யவேண்டுமென்று விஞ்ஞானிகள் முடிவு செய்தனர். இவ்விதமாக, ஏராளமான அணுக் களைக் கொண்ட மூலக் கூறுகளாகிய "பாலிமெர்" களை உண்டாக்குவதற்கு ஒரு வழி கண்டுபிடிக்கப் பட்டது. மூலக்கூறுகளில் உள்ள அணுக்களின் எண்ணிக்கையையும், மூலக்கூறின் அமைப்பையும், மாற்றினாலே போதும்; ஒரு பொருளின் குணங்கள் பெரும் அளவில் மாறுபடுகின்றன, என்று கண்டு பிடிக்கப்பட்டது. இறுக்கமானது, நெகிழ்வடைந்தது; கடினமானது, மென்மையாயிற்று; ஒளி உட் புகாதது ஒளி உட்புகக் கூடியதாயிற்று. மூலக் கூறுகளின் எண்ணியல் அமைப்பை மாற்றுவதின் மூலம், புதிய பண்புகளை பொருள்களின் புதிய குணங்களை இரசா யன வாதிகள் தோற்றுவிக்க ஆரம்பித்தனர்.

எனவே, எண்ணியல்புக்கும். பண்பியல்பிற்கு மிடையே ஏதோ ஒரு வகையான தொடர்பு, சார்பு, இருக்கிறது என்பது உடனடியாகத் தெரிகிறது. இங்கு ஏதோ ஒரு வகையான விதி இல்லையா? இந்தக் கேள் வியை விளக்குவதே, இந்த சொற்பொழிவின் நோக்கம். எனினும் முதலில் நாம் எண்ணியலபு, பண்பியல்பு என்றால் என்ன என்பதை பரிசீலனை செய்வோம்.

பண்பும், குணமும்,

ஒவ்வொரு பொருளுக்கும் ஒரு வெளித் தோற்றம் இருக்கிறது. இதன் மூலமே, நாம் அப் பொருளை இனங்கண்டு கொள்கிறோம். உங்களைச் சுற்றிப் பாருங்கள். ஒவ்வொரு பொருளுக்கும்—ஒரு மைக்கூடு, மரம், மனிதன் எதுவாக இருந்தாலும் சரி— ஒரு அக ஒழுங்கு; அதாவது அந்தப் பொருளை வரையறை

செய்து, அதைப்பற்றிய முக்கியமான விஷயத்தை வெளியிட்டு, அதன் அவசியமான தன்மையைக் குறிப்பிட்டுக் காட்டும், சாயல்கள், அம்சங்கள், அறிகுறிகள், இருப்பதைக் காண்பீர்கள்.

இதை நான் ஏன் ஒரு பென்ஸில் என்று கூறுகிறேன்? ஏனெனில், எழுதுவதற்கும், வரைவதற்கும் பயன்படக் கூடியதும், மரத்துண்டிலே செருகப்பட்டதுமான, ஒரு மெல்லிய கிராபைட் குச்சி என் முன் உள்ளது. இந்த முறையில் நான், அதன் முக்கியமான குணங்களை, அதன் அக ஒழுங்கை வரையறை செய்து, அந்த வஸ்துவை எது பென்ஸிலாக இருக்கும்படி செய்கிறதோ, அதை, அதாவது அதன் பண்பை, வெளிப்படுத்துகிறேன்.

எனவே. பண்பு என்பது உள்ளார்ந்துள்ள, அதாவது பொருளுடனேயே பிணைந்துள்ள, ஒரு ஒழுங்கு; பொருளின் முக்கியமான அம்சங்கள் அனைத்தின் கூட்டுத் தொகை. அதன் மூலம் ஒரு பொருள் ஓரளவிற்கு நிரந்தரமடைகிறது; மற்றொரு பொருளிலிருந்து பிரித்து அறியப்படுகிறது.

பண்பை எந்த அடிப்படையில் நாம் நிர்ணயிக்கிறோம்? நாம் மேலே கூறிய, புதுப் பொருள்களின் அற்புத உலகைச் சற்று நினைவு படுத்திக் கொள்ளுங்கள். இங்கே ஒரு மெல்லிய நூல் இருக்கிறது. அதில் அரை அந்தர் எடை கட்டப்பட்டுள்ளது. அதன் மறு நுனி, கூரையில் பொருத்தப்பட்டுள்ள கப்பியின் வழியாகச் செல்கிறது. நூல் இழுக்கப் படுகிறது. "அது நிச்சயமாக அறுந்து விடும்," என்று நாம் எண்ணுகிறோம். ஆனால் அது அறவில்லை. எடையை உயரே தூக்குகிறது. இன்னும் ஒரு உதாரணத்தைப் பார்ப்போம். ஒரு பால் புட்டியை வாங்கிக் கொண்டு வரும் ஒரு சிறுமி, தற்செயலாக அதைக் கீழே போட்டு விடு

கிருள், ஆனுல் புட்டி உடையவில்லை. பந்து போல் எம்புகிறது.

இந்த விஷயங்களை நீங்கள் பார்த்தால், ஒவ்வொன் றிலும் ஒரு புதிய குணம் இருப்பதைக் காண்பீர்கள். முதல் சந்தர்ப்பத்தில் அறுக்க முடியாத நூலையும், இரண்டாவது சந்தர்ப்பத்தில் உடைக்க முடியாத புட்டி யையும் காண்பீர்கள். இவை புதிய பண்புடைய பொருள் கள் என்ற சரியான முடிவிற்கு வருவீர்கள். அப்போது வெளிப்பட்ட புதிய குணங்கள் மூலம், அந்தப் புதிய பண்பை நீங்கள் கண்டு பிடித்தீர்கள். நாம் எப்பொழு தும், இப்படித்தான் நடந்து கொள்கிறோம். உதாரண மாக, ஒரு உலோகத்தின் தன்மையை நாம் ஆராய் கிறோம் என்ருல், அதன் குணங்களை, அதாவது அதன் நிறம், அணு எடை, அதன் மென்மை, கடினம், ஆக்ஸி கரணமடைகிறதா இல்லையா, என்பனவற்றை, நாம் தெரிந்து கொள்கிறோம் என்பது பொருள். இந்த ஆய் வின் மூலம் அதன் அக ஒழுங்கை, அதாவது அதன் பண்பை நாம் அறிந்து கொள்கிறோம்.

எனவே ஒரு குணம் என்பது, ஒரு வஸ்துவின் அம்சம், அதற்கே உரித்தான ஒரு திறன், அதன் சிறப்புத் தன்மைகள். ஒரு வஸ்துவின் இந்த உள்ளார்ந்த சிறப்புத் தன்மை களே, அதன் பண்பு. இதிலிருந்து, பண்பு குணங்களின் மூலம் வெளிப்படுகிறது என்பது பெறப்படுகிறது.

பொதுவாக, ஒரு பொருளுக்கு, ஒன்றல்ல, பல குணங்கள் உண்டு. எனவே பண்பும், குணமும் ஒன்றெ னக் கொள்ளக் கூடாது. பண்பு என்பது ஒரு அக ஒருமை, குணங்களின் கூட்டுத்தொகை. ஒரு வஸ்து வின் பண்பு, ஒரு தனிப்பட்ட குணத்தால் அன்றி, ஒட்டு மொத்தமான அதன் குணங்கள் அனைத்தாலும் வெளி யிடப்படுகிறது என்று பொருள்படுகிறது:

**எண்ணியல்பு** பொருள்களுக்கும், நிகழ்வுகளுக்கும், பண்பு மட்டுமின்றி, எண்ணியல்பும் உண்டு. இதைப் புரிந்துகொள்வது சுலபம். பொருள்களின் பண்பைத் தவிர (அவை எத்தகையவை?) அவற்றின் எண்ணியல்பைப் பற்றிய கேள்விகளும் (எத்தனை? பரிமாணம் என்ன?) எப்போதும் எழுகின்றன. இதில் வியப்பதற்கு ஒன்றுமில்லை. எல்லா இயற்கை நிகழ்வுகளுக்கும் பண்பியலான ஒழுங்கோடு, எண்ணியலான ஒழுங்கும் உண்டு.

பொருள்கள், நிகழ்வுகள், இவற்றின் எண்ணியலான தன்மைகள் பல்வேறு வகையானவை. எனவே அவை பல்வேறு வகைகளில் வெளியிடப்படுகின்றன. உதாரணமாக, ஒரு தொழிற்சாலை எத்தனை இயந்திரங்களை வாங்கி இருக்கிறது, என்பதைக் கூறும் போது, நாம் 3, 4, 10, என்று எண்ணிக்கையில் கூறுகிறோம். உழைப்பின் உற்பத்தித் திறனை நிர்ணயிக்க வேண்டுமானால் அதைப் பெரிய, அல்லது சிறிய சதவிகிதத்தால் குறிக்கிறோம்; இத்யாதி.

எனவே, எண்ணியல்பு என்பது பொருள்கள், நிகழ்வுகள் இவற்றின் எண்ணிக்கை பருமன், வீதம், அடுக்கு, பரிமாணம் முதலியவற்றால் குறிப்பிடப்படும் ஒழுங்காகும்.

ஒரு பொருளின் பண்பு மாற்றப்படும் போது பொருளே மாற்றம் அடைகிறது. ஆனால் எண்ணியல்பு மாற்றங்கள், பொருள் மாற்றத்தை உண்டாக்குகின்றனவா? இந்தப் பிரச்சனையைப் பரிசீலிப்போம்.

ஒரு நீர் மின் நிலையம் அமைப்பதற்காக, ஆற்றின் போக்கைத் தடை செய்யும், அணைகள் எப்படிக் கட்டப் படுகின்றன என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். லாரிகளிலிருந்து, பெரும் கான்கிரீட் துண்டுகளை ஆற்

றிலே போடுகிறுர்கள். சிறிது காலம் வரை அணை உண்டாவதில்லை. ஆனுல் துண்டுகளின் எண்ணிக்கை அதிகமாகும்போது, நீரின் போக்கு, பெரிதும் பாதிக்கப்படுகிறது. இன்னும் சில துண்டுகளைப் போட்ட பின்பு, ஆற்றின் போக்குத் தடைப்படுகிறது. தனிப்பட்ட துண்டுகளிலிருந்து ஒரு அணை கட்டப் பட்டு விட்டது.

இப்போது என்ன நிகழ்ந்தது? எண்ணியலான மாற்றங்கள் ஒரு குறிப்பிட்ட வரம்புக்குள்ளிருந்த வரை அவை ஒரு புதிய பண்பை, இந்த சந்தர்ப்பத்தில் ஒரு அணையை, தோற்றுவிக்கவில்லை. ஆனுல் தேவையான வரம்பு, ஒரு குறிப்பிட்ட அளவு, அடையப்பட்ட பின் அந்த மாற்றங்கள், தொடக்கத்திலிருந்தது போல் முழுக் கிரியையும் பாதிக்காமல் இருக்கவில்லை.

அளவு என்பது என்ன?

அளவு

ஏதோ ஒன்றின் வரம்பை, எல்லையைக், குறிப்பிடுவதற்கு 'அளவு' என்னும் சொல் உபயோகிக்கப் படுகிறது. அது எப்போதும் எண்ணியல் போடு இணைந்திருக்கிறது என்பதை இதுவே காட்டுகிறது. ஆனுல் அளவு, பண்புடனும் இணைந்துள்ளது. இதை எப்படிப் புரிந்து கொள்வது? கீழ் வரும் உதாரணம் இதற்கு உதவலாம்.

ஒரு கல்லைப் பாருங்கள். அது பெரிதாகவோ, சிறிதாகவோ இருக்கலாம். ஆனுல் கற்களுக்கு ஒரு திட்டவட்டமான பருமன் உண்டு. அது சில நூறுகஜ உயரம் உடையதாக இருந்தால், அது ஒரு கல்லாக இருக்காது. அது ஒரு குன்ருக இருக்கும். அளவு என்பது மனிதனுக்கும் உரியதுதான். மக்கள் உயரமாக இருக்கலாம். பல உயரங்களையுங் கொண்டிருக்கலாம். அவர்களின் எடைகளும் வேறுபடலாம். எனினும் அவர்களது

உயரங்களுக்கும், எடைகளுக்கும், குறிப்பிட்ட ஒரு வரம்புண்டு. 15 அடி உயரமுள்ள மனிதனையோ, ஒரு டன் எடையுள்ள மனிதனையோ யாரும் பார்த்ததில்லை. அத்தகைய எண்ணியல்பு (ஒரு டன்) குறிப்பிட்ட பண்புக்கு (மனிதனுக்கு) ஒவ்வாது. எல்லாப் பொருள்களுக்கும் இது பொருந்தும். அவை அனைத்திற்கும் ஒரு திட்டவட்டமான பண்பும், அதற்கு இயைந்த திட்டவட்டமான எண்ணியல்பும் உண்டு. எல்லாவற்றிலும் ஒரு விகிதம் இருக்கிறது.

மேலே கூறியதிலிருந்து, அளவு என்பது, பொருள்களின் எண்ணியல்புக்கும், பண்பியல்புக்கும் இடையேயுள்ள ஒரு உடன்பாடு, ஒரு ஒருமை, என்பது தெளிவாகிறது. ஒவ்வொரு பொருளும் ஒரு அளவாக இருப்பதனால்தான், அது எப்பொழுதும் ஒரு பண்பாக இருக்கிறது. அதற்கு இயைந்து ஒரு திட்டவட்டமான எண்ணியல்பும் உண்டு. இந்த இசைவு, இந்த அளவு, அழிக்கப்பட முடியாதது. ஏனெனில் அவ்விதம் அழிக்கப்பட்டால் பொருள் எதுவாக இருக்கிறதோ அதுவாக இருக்காது. ஒரு பொருளின் பண்பியல்பு யதேச்சையாக எடுத்துக் கொள்ளப்பட்ட எந்த எண்ணியல்புடனும் ஒருமையுற்றிருக்காது. அதேபோல அதன் எண்ணியல்பு, எதேச்சையாக எடுத்துக் கொள்ளப்பட்ட எந்தப் பண்பியல்புடனும் ஒருமையுற்றிருக்காது. எண்ணியல்பும், பண்பியல்பும் ஒன்றுக்கொன்று ஒரு குறிப்பிட்ட இசைவுடன்தான், அவற்றின் அளவின் வரம்பிற்கு உட்பட்டுத்தான், இருக்கின்றன.

மேலே கூறியதிலிருந்து ஒரு முக்கியமான முடிவு பெறப்படுகிறது. அதாவது ஒரு பொருளில் எண்ணியலான மாற்றங்கள் நிகழும்போது, அந்த மாற்றங்கள் அளவின் வரம்பிற்கு உட்பட்டு இருக்கும் வரை பொருளின் பண்பைப் பாதிப்பதில்லை. இந்த வரம்பிற்குள்ளாக

நிகழும் எண்ணியலான மாற்றங்களைப் பொருள் இலட்சியம் செய்வதில்லை என்று கூறலாம். இந்த அளவு குலைக்கப்பட்ட உடனே, எண்ணியலான மாற்றங்கள் பொருளின் பண்பியல்பில் பிரதிபலிக்கப்படுகின்றன. எண்ணியல்பு, பண்பியல்பாக மாறுகிறது.

**எண்ணியல்பு பண்பியல்பாக மாறுதல்**

எண்ணியலான மாற்றங்கள் புலனாகாதவாறு, படிப்படியாக, சேகரமடைகின்றன. தொடக்கத்தில் ஒரு பொருளின் பண்பியலான தன்மையை அவை பாதிப்பது போலத் தோன்றவில்லை. ஆனால், ஹெகல் கூறியது போல இது ஒரு "சூழ்ச்சியே". காலம் வரும்போது சூழ்ச்சி அம்பலமாகிறது. எண்ணியல்பான மாற்றங்கள், அவற்றின் சேகரிப்பின்மூலம் ஒரு பொருளின் பண்பில் மாற்றத்தை விளைவிக்கின்றன. இதற்கு உதாரணங்கள் மேலே கொடுக்கப்பட்டன. இரசாயன வாதிகள், "புதிய பாலிமர்களை," புதிய குணங்களைப், புதிய பண்புகளைத் தோற்றுவிக்கக் கற்றுக்கொண்டபோது, அவர்கள், எண்ணியல்பான மாற்றங்கள் பண்பியலான மாற்றங்கள் ஆதல் எனும் விதியின் அடிப்படையிலேயே செயல்பட்டார்கள்.

எண்ணியலான மாற்றங்கள், பண்பியலான மாற்றங்களைத் தோற்றுவிக்கின்றன என்பதை மட்டுமல்லாமல், பண்பியலான மாற்றங்கள் எண்ணியல்பான மாற்றங்களை தோற்றுவிக்கின்றன என்பதையும் நாம் நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும். ஒரு புதிய பண்பின் தோற்றம், ஒரு பொருள் அல்லது கிரியையில் அடிப்படையான மாற்றத்தைக் குறிக்கிறது. எனவே அதில் புதிய வளர்ச்சி விதிகள் தோன்றுகின்றன. புதிய விதிகளைக் கொண்ட இந்தப் புதிய பண்பியலான பொருள்கள், ஒரு

புதிய எண்ணியல்பான ஒழுங்கையும் கொண்டுள்ளன. ஒரு புதிய அளவு ஏற்படுத்தப்படுகிறது.

உதாரணமாகத் தாவர இன விருத்தியாளர் ஒருவர் ஒரு புது வகைச் செடியை உண்டாக்குகிறார். இது ஒரு புதிய பண்பு. ஆனால் அந்தப் புதிய வகை அதிக விளைச்சலைக் கொடுக்கிறது. அதாவது அதற்குப்புதிய எண்ணியல்புத் தன்மைகள் இருக்கின்றன. இங்கே புதிய பண்பியலான மாற்றங்கள் எண்ணியல்பான மாற்றங்கள் ஆகின்றன. எண்ணியல்பு பண்பியல்பாகிறது. அதுபோலவே பண்பியல்பு எண்ணியல்பாகிறது.

எனவே, முதலில் புலனாகாத எண்ணியலான மாற்றங்கள் படிப்படியாகச் சேகரமடைந்து ஒரு நிலையில் அடிப்படையான பண்பியல் மாற்றங்களை உண்டாக்குகின்றன. அதன் விளைவாகப் பழைய பண்பு மறைந்து ஒரு புதிய பண்பு தோன்றுகிறது. இந்தப் புதிய பண்பு புதிய எண்ணியலான மாற்றங்களை உண்டாக்குகிறது. இதுவே எண்ணியலான மாற்றங்கள் பண்பியலான மாற்றங்கள் ஆகும் விதியின் சாராம்சம்.

எண்ணியலான மாற்றங்கள், பண்பியலான மாற்றங்களாகும் இந்த நிகழ்ச்சி எப்படி நடைபெறுகிறது?

பாய்ச்சல்கள்.

தண்ணீர், அல்லது பால் எப்படிக் கொதிக்கிறது என்பதையோ, முட்டை எப்படி வறுக்கப்படுகிறது, என்பதையோ நீங்கள் நிச்சயமாகப் பார்த்திருப்பீர்கள், முதலில் தண்ணீர் மேலும், மேலும் சூடாகிறது வெப்பநிலை 60 டிகிரி, 70 டிகிரி செ கி. க்கு உயர்கிறது. ஆனால் தண்ணீர் தண்ணீராகத்தான் இருக்கிறது. அது தனது பண்பை இழந்துவிடவில்லை. ஆனால் வெப்பநிலை 100 டிகிரி செ.கி க்கு உயர்த்தப்படும்போது, தண்ணீர் திடீரென்று கொதித்து நீராவியாகிறது. அது பண்பியலான மாற்றத்தை அடைந்

துள்ளது. முட்டை வறுக்கப்படும்போதும் இந்த வகை யான மாற்றமே நடைபெறுகிறது. வெள்ளைக் கருவும், மஞ்சள் கருவும், திடீரென்று இறுகிவிடுகின்றன.

எண்ணியல்பு, எப்படிப் பண்பியல்பாகியது என்பதை இந்த உதாரணங்கள் தெளிவாக்குகின்றன. முதலில் இந்த நிகழ்ச்சி மெதுவாக நடைபெறுகிறது. படிப்படியான, எண்ணியல்பான தயாரிப்பு மாற்றங்கள் நிகழ்கின்றன. ஆனால் இந்த மாற்றங்கள் போதுமான அளவு சேகரம் அடைந்தவுடன் திடீரென, விரைவாகப் பண்பியலான மாற்றம் ஏற்படுகிறது. இந்தத் திடீர் மாற்றம் **பாய்ச்சல்** எனப் படுகிறன.

பாய்ச்சலை, லெனின், படிப்படியான தன்மையின் இடை **யீடு** என்று வரையறை செய்தார். இதில் உள்ளடங்கி யுள்ள கருத்து என்ன? ஏதோ ஒரு நிலையில் மெதுவான எண்ணியலான வளர்ச்சி தடை செய்யப்பட்டு, புதிய பண்புக்கு மாறும் காலம் தோன்றுகிறது. இந்த மாற்றம் மெதுவானதாகவோ படிப்படியானதாகவோ இல்லை. புதிய பண்புக்குமாறுவது ஒரு பாய்ச்சலாக இருக்கிறது. எனவேதான் லெனின், பாய்ச்சல் என்பது, ஒரு பழைய பண்பிலிருந்து, புதிய பண்பை நோக்கி ஏற்படும் நிர்ண யமான திருப்பம், வளர்ச்சியில் ஒரு திடீர் முறிவு, என்று வரையறை செய்தார்.

இயற்கையிலும், சமூகத்திலும், புதிய பண்புகளின் தோற்றம் ஒரு பாய்ச்சலின் மூலமே ஏற்படுகிறது. உயிரற்ற இயற்கையிலிருந்து, உயிருள்ள இயற்கை தோன்றிய மாற்றம் இந்த வழியில்தான் நடந்தது. அங்கஜீவிகளது உலகத்தின் பரிணாமம், அதாவது பிராணிகள் ஒரு சிறப்பினத்திலிருந்து மற்றொரு சிறப் பினமாவது, பாய்ச்சல்களின் மூலமே நடைபெறுகிறது. மனித சமூகத்திலும் அத்தகைய மாற்றங்கள் நிகழ்

கின்றன. ஆதிகாலத்து சமுதாய அமைப்பிலிருந்து அடிமைச் சமூகத்திற்கும் அதிலிருந்து நிலப்பிரபுத்து வத்திற்கும், முதலாளித்துவத்திலிருந்து, சோஷலிஸத் திற்கும் ஆன மாற்றங்கள் எப்போதும் பாய்ச்சல் மூலமே, படிப்படியான தன்மையில் இடையீட்டின் மூலமே, நடைபெறுகின்றன.

வளர்ச்சி எனும், நிகழ்ச்சி, தொடர்ச்சி, தொடர்ச்சி யின்மை, இவற்றின் ஒருமையின் அடிப்படையில் நிகழ் கிறது. ஒரு குறிப்பிட்ட நிலையில், தொடர்ச்சியான, அமைதியான நிகழ்ச்சி இடையீடு அடைகிறது. பின் னர் பாய்ச்சலின் விளைவாகப் புதிய பண்பு தோன்று கிறது. பாய்ச்சல், விதிக்குட்பட்ட ஒரு நிகழ்ச்சி என் பதை இங்கு நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். அதற்கு முன் நிகழும், எண்ணியல்பான மாற்றங்களின் சேகரத்தால் பாய்ச்சலுக்கு வேண்டிய தயாரிப்புகள் செய்யப்படுகின்றன. எனவே இதில் எந்த "அருள் விளையாட்டும்" இல்லை.

இவ்விதமாக, எண்ணியலான மாற்றங்கள் எப்படிப் பண்பியலான மாற்றங்களாகின்றன என்ற கேள்விக்கு விடை 'பாய்ச்சலின் மூலம், பாய்ச்சலின் மூலம் மட்டுமே" என்பதுதான். இதற்கு எத்தனையோ உதாரணங்களை நாம் அன்றாட வாழ்விலே காண்கிறோம்.

**பரிணாம வளர்ச்சியும் புரட்சிகர வளர்ச்சியும்.**

வளர்ச்சி எனும் கிரியை இரண்டு நிலைகளில், இரண்டு வகைகளில் நடைபெறுகிறது என்று நாம் மேலே எடுத்துக் காட்டினோம்: மெதுவான, சிறுதிறமான எண் ணியலான மாற்றங்கள்; விரை வான அடிப்படையான, பண்பியலான மாற்றங்கள், என்பனவே அவை. இவற்றில் முதலாவது, எப்போதும்

பழைய பண்பின், பழைய அளவின் வரம்புக்கு உள்ளேயே ஏற்படுகிறது. இங்கு பொருள்களிலோ, நிகழ்வுகளிலோ அடிப்படையான மாற்றங்கள் எதுவும் தோன்றவில்லை. இந்தக் கருத்தில் அவற்றைப் பரிணும மாற்றங்கள் என்று கூறலாம். பரிணுமம் என்பது திடீர் பாய்ச்சல்களோ ஒரு புதிய பண்பை நோக்கிய மாற்றங்களோ அற்ற அமைதியான, படிப்படியான, மெதுவான, வளர்ச்சி.

ஆனுல், பழைமையை அடிப்படையாக உடைத்தெறிவதோடு தொடர்புடைய—சமூக உறவுகள், விஞ்ஞானக் கருத்துக்கள் தொழில் நுணுக்கம், முதலியவற்றில் பண்பியலான மாற்றங்களோடு தொடர்புடைய—வளர்ச்சி, புரட்சிகரமான வளர்ச்சி எனப்படும்.

எனவே முரண்தர்க்கம், பரிணுமம் என்னுங் கருத்தை அப்படியே மறுதலித்துவிடவில்லை. மேலும் ·பரிணுமம்'' எனும் சொல், பொதுவான வளர்ச்சி என்ற கருத்தில், நிகழ்வுகள் ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலக்கு மாறுவது என்ற கருத்தில், பயன்படுத்தப்படுவதாலும் அவ்விதம் மறுதலிக்க முடியாது. பிராணிகள் தாவரங்கள் இவற்றின் சிறப்பினத்தில் பரிணுமம், என்று கூறும்போது நாம் இந்தக் கருத்திலேயே அந்த சொல்லேப் பயன்படுத்துகிறேம். லெனின் இந்தக் கருத்திலேயே அந்தச் சொல்லே அடிக்கடி பயன்படுத்தினுர், உதாரணமாக, அவர் ''பொருளாதாரப் பரிணுமம்'' என்று கூறியபோது இக்கருத்திலேயே பயன்படுத்தினுர்.

ஆனுல், பரிணுமம், எனுங் கருத்து, அப்பாலே வாதிகளால் அடிக்கடி திரித்துக் கூறப்படுகிறது என்பதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். லெனின் கூறியது போல; இவ்விதம் திரிக்கப்பட்ட, பரிணுமம்

பற்றிய தற்காலக் கருத்தை முரண்தர்க்கம் வன்மையாக எதிர்க்கிறது.

வளர்ச்சி பரிணாம முறையில்தான் ஏற்படுகிறது என்றும், பாய்ச்சல்களோ, அல்லது படிப்படியான தன்மையில் இடையீடுகளோ இல்லை என்றும் சில அப்பாலை வாதிகள் கூறிவருகின்றனர். உலகில் எண்ணியலான மாற்றங்களே நிகழ்கின்றன என்று அவர்கள் கூறுகிறார்கள். அபிவிருத்தி என்பது வளர்ச்சியே தவிர வேறொன்றுமில்லை. பண்பியல் ரீதியில் புதியதானது என்று எதுவுமே உலகில் இல்லை. இந்தக் கண்ணோட்டம், கொச்சைப் பரிணாமம் என்று கூறப்படுகிறது. ஏனெனில் அது பரிணாமத்தைக் கொச்சையான செம்மையுறாத, திரிக்கப்பட்ட முறையிலே காண்கிறது.

சமூக வாழ்க்கையை விளக்குவதில், கொச்சைப் பரிணாமக் கருத்து விரிவாகப் பயன்படுத்தப்பட்டது. சமூக வாழ்க்கையில், சமூக அடிப்படையை பாதிக்காத, அமைதியான, மெதுவான பரிணாம மாற்றங்களே நிகழ்கின்றன என்று கூறப்படுகிறது. இந்த அப்பாலைக் கருத்து, சீர்திருத்த வாதிகளால்—வலதுசாரி சோஷலிஸ்டுகள், தொழிற்கட்சி அங்கத்தினர்கள் ஆகியோரால்—முதலாளித்துவத்திற்கு ஆதரவாகப் பயன்படுத்தப்படுகிறது. தொழிலாளி வர்க்கத்தின் புரட்சிகரமான போராட்டங்களை அவர்கள் மறுதலிக்கிறார்கள். அவற்றிற்குப் பதிலாக, அறைகுறையான சீர்திருத்தங்களுக்கும் சிறிய சலுகைகளுக்குமான போராட்டங்களை முன் வைக்கிறார்கள். இவை முதலாளித்துவ சமூகத்தின் அடிப்படையை பாதிப்பதில்லை.

லெனின் சீர்திருத்த வாதத்தை. தொழிலாளர்களை பூர்ஷுவாக்கள் ஏமாற்றும் வித்தை, என்று கூறினார். ஏனெனில் சீர்திருத்தங்கள் நிறைவேற்றப்பட்ட பின்ன

ரும், அதிகாரம் பூர்ஷுவாக்களின் கையிலேதான் இருக்கிறது. இதை நமது அனுபவம் நிதர்சனமாக நிரூபித்து விட்டது. உதாரணமாக, பெல்ஜிய சோஷலிஸ்டுகள் பல ஆண்டுகளாக அதிகாரத்தில் இருந்து வந்துள்ளனர். ஆனல் அவர்கள் சோஷலிசத்தைப் புகுத்தவில்லை. அவர்கள் நிறைவேற்றிய சீர்திருத்தங்கள் பூர்ஷுவா அமைப்பைக் குன்ருமல், குலையாமல் காத்து வந்துள்ளன தொழிற் கட்சிகளும், வலதுசாரி சோஷலிஸ்டுகளும், அதிகாரத்திற்கு வரும் எல்லா நாடுகளிலும் இதுதான் நிகழ்கிறது.

பல காலத்திற்கு முன்பே அம்பலப்படுத்தப்பட்டு விட்ட இந்தச் சீர்திருத்தப் பொய்மைகளுக்குப் புத்துயிரூட்டத் தற்காலத் திருத்தல் வாதிகள் முயன்று வருகின்றனர். அமெரிக்கத் திருத்தல் வாதியாகிய கேட்ஸ், தற்காலத்தில் போராட்டங்கள், சிறு சீர்திருத்தங்களுக்காகத்தான் இருக்க முடியுமென்றும், மாற்றங்கள் பரிணுமத் தன்மை உடையவாய் இருக்க வேண்டுமென்றும், சோஷலிசத்திற்கான ஒரே பாதை "சட்ட ரீதியான போராட்டங்கள்"தான் என்றும் வலியுறுத்துகிருர்.

இந்தத் திருத்தல் வாதிகளை லெனின் அம்பலப்படுத்திஞர். அவர்கள், விஞ்ஞானத்தைத் தத்துவார்த்த ரீதியில் கொச்சைப் படுத்தல் எனும் முடுபனிக்குள்ளே, ஊர்ந்து சென்று, புரட்சிகரமான முரண் தர்க்கத்திற்குப் பதிலாக, "எளிய", "அமைதியான" பரிணுமத்தை முன் வைக்கிருர்கள், என்று லெனின் கூறிஞர்.

எனவே சீர்திருத்த வாதிகள் என்போர், சமூக வளர்ச்சியின் ஒரே ஒரு அம்சத்தை, எண்ணியலான அம்சத்தை. பரிணும ரீதியான அம்சத்தை மட்டுமே பார்க்கும், அப்பாலே வாதிகளாவர்.

அராஜக வாதிகளது கண்ணேட்டமும் அப்பாலைத் தன்மையுடையதே. ஆனல் அதற்குக் காரணம் வேறு. அவர்கள் வளர்ச்சியின் பரிணும முறையை மறுதலிக்கிருர்கள். எந்தத் தயாரிப்புமற்ற, படிப்படியாகச் சக்திகளைச் சேகரிப்பதற்ற, பாய்சல்களை மட்டுமே அவர்கள் ஏற்றுக் கொள்ளுகிருர்கள். அராஜாக—தொழிலாளர் ஆட்சி முறை, சீர்திருத்தவாதம் இரண்டுமே, பூர்ஷுவா உலகக் கண்ணேட்டத்தின் நேரடியான விளைவுகள் என்று கருதப்பட வேண்டுமென, லெனின் எழுதினுர். † ஏனெனில் அவை, வளர்ச்சிக் கிரியையின் பரிணுமத்திற்கும், புரட்சிக்குமிடையேயுள்ள உறவு பற்றிய பிரச்சனைக்கு ஒருதலைச் சார்பான முடிவெடுக்கின்றன.

இந்தப் பிரச்சனையை இவ்விதம் ஒருதலைப் பட்சமாக, அப்பாலை முறையில் அணுகுவதை விடுத்து, முரண்தர்க்கப் பொருள் முதல்வாதம், வளர்ச்சிக் கிரியையின் பரிணும, புரட்சிகரமான அம்சங்களுக்கிடையே ஒரு ஆழ்ந்த தொடர்பு இருக்கிறது என்ற நிலையிலிருந்து தொடங்குகிறது. ஒரு நிகழ்ச்சியில்லாமல், மற்ருென்றைப் பற்றி எண்ணக்கூட முடியாத அளவிற்கு இந்தத் தொடர்பு உள்ளது. எண்ணியலான, பரிணும மாற்றங்கள் இல்லாமல், பண்பியலான, புரட்சிகரமாற்றங்கள் இல்லை. பண்பியலான, புரட்சிகரமாற்றங்கள் இல்லாமல் புதிய அளவு இல்லை. புதியநிலை இல்லை. எனவே வளர்ச்சியும் இல்லை.

"இயற்கையில் 'வாழ்க்கையிலும், வளர்ச்சியிலும் மெதுவான பரிணுமம், விரைவான பாய்ச்சல்கள்,

† லெனின் தொகுப்புக் கட்டுரைகள் பாகம்: 16, பக். 349.

(தொடர்ச்சியின் முறிவுகள்) இரண்டுமே அடங்கி இருப்பதுபோல, யதார்த்த வாழ்க்கையில், யதார்த்த வரலாற்றில் இவ்விரண்டு போக்குகளும் அடங்கியுள்ளன". ¶ என்று லெனின் எழுதினார்.

வளர்ச்சிக் கிரியையில், தொடர்ச்சியான, படிப்படியான மாற்றங்களின் நிலை, பெரும் பங்கு வகிக்கிறது. ஆனால் பழைய பண்பின் மாற்றமல்ல அது. இந்த மாற்றத்திற்கு, பழைய பண்பை அடிப்படையாக மாற்றும் பாய்ச்சல், புரட்சி, இன்றியமையாதது.

எனவே, அனுபவ வாழ்க்கையில், அடிப்படையான பண்பியல் மாற்றங்களோடு, மெதுவான, கடுமையான, தயாரிப்புப் பணிகள் இணைக்கப்பட வேண்டுமென்பதை நீங்கள் காண்கிறீர்கள். இந்த சந்தர்ப்பத்தில், பண்பியலான மாற்றங்களுக்கான தயாரிப்பு, படிப்படியாக, அன்றாட இயக்க வேலைகளின்போது செய்யப்பட வேண்டுமென்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

எனினும், பழைய பண்பின் புரட்சிகரமான மாற்றத்திற்குத் தேவையான முன்னேற்பாடுகளைச் செய்து கொண்ட பின்பு பழையதை நீக்கிப் புதியதைப் புகுத்துவதற்கு மிக விருவிருப்பான புரட்சிகர நடவடிக்கை தேவைப்படுகிறது. கொடுக்கப்பட்ட பணிகளுக்கு ஒரு புரட்சிகரமான முடிவு காண்பதற்கு மிகவும் சாதகமாக இருக்கக் கூடிய வகையில், பாய்ச்சலுக்கு சரியான தருணத்தைத் தேர்ந்தெடுப்பது மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ஒரு புரட்சிகரமான நடவடிக்கைக்கு சரியான தருணத்தைத் தேர்ந்தெடுப்பது ஒரு பெரிய கலை. அக்டோபர் புரட்சி, சோவியத் யூனியனைத்

---

¶ லெனின்: கட்டுரைத் தொகுப்பு பாகம் 16 பக். 349

தொழில் மயமாக்கியது, விவசாயத்தில் கூட்டுப்பண்ணை துறையைப் புகுத்தியது, யுத்தப் பிற்காலத்தில் பொருளாதாரத்தைப் புனரமைத்து வளர்ச்சி அடையச் செய்தது. விவசாய உற்பத்தியை உயர்த்துவதற்கான போராட்டம், கம்யூனிஸத்திற்கான முழு அளவு நிர்மாண வேலைகளைத் துவக்கியது, ஆகிய சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த பணிகளை சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சி, சரியான தருணத்தில் மக்கள் முன் வைத்தது. இவற்றிற்கு கவனம் மிக்க முன் தயாரிப்புகள் செய்து கொள்ளப்பட்டன. சோவியத் மக்கள் அடைந்த வெற்றிக்கு உத்திரவாதம் அதில்தான் அடங்கி இருந்தது.

ஒரு பண்பிலிருந்து மற்றொன்றிற்குச் செல்வது, ஒரு பாய்ச்சலின் விளைவாக ஏற்படுகிறது என்று நாம் கூறினோம். இனி, எத்தனை வகையான பாய்ச்சல்கள் உள்ளன. அவை எவற்றைச் சார்ந்துள்ளன, என்பதைப் பார்ப்போம்.

**பாய்ச்சலின் பல்வேறு வகைகள்; சோஷலிஸ சமுகத்தில் பாய்ச்சல்.**

பல்வேறு வகையான பாய்ச்சல்கள் இருக்கின்றன என்பது, ஏற்கனவே கொடுக்கப்பட்ட உதாரணங்களிலிருந்து தெரிகிறது. பிராணிகள் உலகின்வளர்ச்சியில் மனிதக் குரங்குகளிலிருந்து மனிதனாக மாறியது ஒரு பாய்ச்சலேதான் ஆனால் அதற்குப் பல பத்தாயிரம் ஆண்டுகள் ஆயின. தண்ணீர் கொதிப்பதில் கண்ட பாய்ச்சல் மற்றொரு வகையானது. உடனடியாக நிகழ்வதால், அது முந்தியனின்று வேறுபடுகிறது, முந்திய பாய்ச்சலில் அடிப்படை மாற்றங்கள் ஏற்படுவதற்கு ஒரு நீண்ட காலம் தேவைப்பட்டது.

பாய்ச்சலின் வகையை நிர்ணயிப்பதில், காலம் பெரும் பங்கு வகிக்கிறது. உதாரணமாக, 1917ல் நடந்த ரஷ்யப் புரட்சி, பூர்ஷுவா ஆதிக்கத்திற்குச் சில நாட்களிலேயே முடிவு கண்டுவிட்டது. பூர்ஷுவா சர்வாதிகாரத்திற்குக் கொடுக்கப்பட்ட நிர்ணயமான அடி அது. ஆனால் விவசாயத்தில் கூட்டுப்பண்ணை முறையைப் புகுத்தியது (சோஷலிசத்தை நோக்கி, ரஷ்ய விவசாயிகளின் புரட்சிகரமான மாற்றம் இது) படிப்படியாகப் பல ஆண்டுகளில் நிறைவேற்றப்பட்டது. இந்த இரு நிகழ்வுகளும் வேறுபட்ட தன்மையுடையவை. இவை நிகழ்ந்த நிலைகளும் வேறுபட்டவை. எனவே புதிய பண்புக்கு மாறிய பாதையின் வகைகளும் பாய்ச்சலின் வகைகளும் வேறுபட்டன.

சோவியத் யூனியனில் சோஷலிச மாற்றங்கள் ஏறத்தாழ இருபது ஆண்டுகளில் நிறைவேறின. அந்தக் காலகட்டங்களை லெனின் "பெரும் பாய்ச்சல்"களின் சகாப்தம் என்று குறிப்பிட்டார். முதலாளித்துவத்திலிருந்து சோஷலிசத்திற்கு மாறுவது ஒரு பாய்ச்சல். ஆதலால், அது உடனடிச் செய்கையாக இருக்க வேண்டுமென்று கருதியவர்களை அவர் ஏளனம் செய்தார். அனேக சந்தர்ப்பங்களில் ஒரு புதிய பண்பிற்கு மாறுவது கண்மூடித் திறக்கும் நேரத்தில் நடந்து விடுவதில்லை. ஆனால், ஒரு நீண்டகால கட்டத்திலேயே நடைபெறுகிறது. எனினும் இதுவும் ஒரு பாய்ச்சல் தான். ஒரு புதிய பண்பை நோக்கிய, இந்தப் படிப்படியான மாற்றத்தில்கூட, படிப்படியான தன்மையில் இடையீடு ஏற்படுகிறது. சமூக வாழ்க்கையில் மிகத் தீவிரமான வளர்ச்சியைக் கொண்ட கால கட்டங்கள் இதில் உள்ளன. எனவே தீவிரமாக, விரைவாக, நிகழ்ந்து ஒரு பொருளின் பண்பியலான நிலையைக்

குறுகிய காலத்தில் மாற்றும் பாய்ச்சல்களுக்கு மாறாக, பொருளையோ, ஒரு பண்பையோ உடனடியாக மாற்றாத பாய்ச்சல்களும் உள்ளன.

ஒரு பண்பிலிருந்து மற்றொன்றிற்கு மாறுவதற்கான பாதைகளின் பல்வேறு வகைகள், அதாவது பாய்ச்சல்களின் பல்வேறு வகைகள், வளர்ச்சியடைந்துகொண்டிருக்கும் நிகழ்வுகளின் தன்மையையும் அவை நிகழும் நிலைகளையும் சார்ந்துள்ளன, என்பது இப்போது தெளிவாகிறது சமூக வாழ்விலிருந்து எடுக்கப்படும் உதாரணங்களில் இது குறிப்பாக வெளிப்படுகிறது. எங்கு சமூகம் முரண்பட்ட வர்க்கங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறதோ அங்கு பாய்ச்சல், போராட்டத்தின் விளைவாக ஏற்படுகிறது. ஆனால், முரண்பட்ட வர்க்கங்கள் இல்லாத சோஷலிஸ சமூகத்தில், பாய்ச்சல்கள், திடீர் திருப்பங்கள், பழைய பண்பின் அம்சங்கள் படிப்படியாக மறைந்து, புதிய பண்பின் அம்சங்கள் வளர்ச்சியடைவதன் மூலம், ஏற்படுகின்றன. இங்கு புதிய பண்புகள் சேகரமடையும்போது அடிப்படையான மாற்றங்கள் தொடங்குகின்றன.

பொருளாதாரம், கலாசாரம், விஞ்ஞானம், ஆகிய துறைகளிலே நிகழ்ந்த பண்பியலான மாற்றங்களாலானதே சோவியத் சமூகத்தின் வரலாறு. பொருளாதார ரீதியிலே பின் தங்கியிருந்த பழைய காலத்து ஜாரின் ரஷ்யா, வலுமிக்க ஒரு தொழில் சக்தியாக, சோஷலிஸத்தின் வெல்ல முடியாத கோட்டையாக, மாற்றப்பட்டது. இந்தப் பாய்ச்சல், எவ்வகையான சமூகக் கொந்தளிப்புகளுமின்றி, படிப்படியாக நிறைவேற்றப் பட்டது. மெதுவான எண்ணியலான மாற்றங்களுக்கும், அடிப்படையான பண்பியலான மாற்றங்களுக்கும் இடையே உள்ள ஒருமையை இது தெரிவாகக் காட்டுகிறது.

ரஷ்யாவில் நடந்த கலாச்சாரப் புரட்சி சோஷலிஸத்தின் மாபெரும் சாதனைகளில் ஒன்ருகும். இது, விஞ்ஞானத்திலும், தொழில் நுணுக்கத்திலும், உலகிலே ஒரு முதன்மையான இடத்தை ரஷ்யாவிற்குத் தேடிக் கொடுத்துள்ளது. இதுவும் ஒரு பாய்ச்சலே. ஆனல் இதுவும் படிப்படியாகவே நிறைவேற்றப்பட்டது. முதலாவதாக, எழுத்தறிவின்மை அகற்றப்பட்டது. பிறகு சோவியத் மேதைகளின் எண்ணிக்கையை உயர்த்துவதற்கான பணிகள் செய்யப்பட்டன. விஞ்ஞான வளர்ச்சிக்குத் தகுதியான நிலைகள் தோற்றுவிக்கப்பட்டன. இன்றுகூட, இந்தப் பாய்ச்சல் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. மக்கள் ஜனநாயகக் குடியரசுகளிலும், அத்தகைய பாய்ச்சல்கள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன.

முழுமையான கம்யூனிஸத்தை அடைவதும் சோவியத் யூனியனின் சமூக வளர்ச்சியிலே ஒரு பாய்ச்சல்தான். பொருளாதாரத் துறையிலும், கலாசாரம், அரசியல், விஞ்ஞானம், ஆகிய துறைகளிலும், பண்பியல் ரீதியில் ஒரு புதிய மட்டத்திற்குச் சமூகத்தை உயர்த்த வேண்டும். இது ஒரு உடனடிச் செய்கை அல்லவே அல்ல. சோஷலிஸம் கம்யூனிஸமாக வளர்ச்சி அடைவது தொடர்ச்சியாக, படிப்படியாக, நடைபெறும் ஒரு நிகழ்ச்சி. உழைப்பைப்பற்றிய புதிய கம்யூனிஸக் கண்ணேட்டம், மக்களிடையே புதிய தொடர்புகள், ஆகியவற்றின் புதிய முளைகள் அன்ருட வாழ்விலே தோன்றி வளர வேண்டும்.

சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் புதிய திட்டத்தால் முன்வைக்கப்பட்டுள்ள பணிகள் நிறைவேற்றப்பட்டால் சமூகம் ஒரு புதிய நிலையை அடையும், ஏற்கெனவே இன்று அந்த சமூகத்தில்

காணப்படும் கம்யூனிச அம்சங்கள், அந்த நிலையில் முழுமுதல் ஆதிக்கம் வகிக்கும். இது பண்பியல் ரீதியில் புதியதான ஒரு அரசாங்கமாக இருக்கும் அதில் கம்யூனிஸ சமூகம் முதல் நிலையிலிருந்து, இரண்டாவது நிலக்கு உயர்த்தப்பட்டிருக்கும். இதற்கு இருபது ஆண்டுகள் ஆனபோதும்கூட இதுவும், (பாய்ச்சல் என்ற சொல்லின் உண்மையான பொருளில்) ஒரு பாய்ச்சல்தான், எனவே சோஷலிச சமூக வளர்ச்சியின் முரண்தர்க்கம், படிப்படியான தன்மையை, தொடர்ச்சியை, பாய்ச்சலுடன், தொடர்பின்மையுடன்—பிரிக்க முடியாதபடி பிணைக்கிறது.

இவ்விதமாக, சோஷலிசத்தின் கீழ் வளர்ச்சி, சோஷலிசம் படிப்படியாகக் கம்யூனிஸமாக மாறுவது, ஆகிய இரண்டும் எண்ணியலான மாற்றங்களையும், பண்பியலான மாற்றங்களையும் ஒரு முரண்தர்க்க ஒருமையாகப் பிணைக்கின்றன. எனவேதான் இந்தக் கால கட்டத்தில் நிறைவேற்றப்படும் சீர்திருத்தங்கள் முற்றிலும் வேறுபட்ட முக்கியத்துவம் பெறுகின்றன.

கம்யூனிஸ்டுக் கட்சியாலும், சோவியத் அரசாங்கத்தாலும் நிறைவேற்றப்படும் சீர்திருத்தங்கள் புரட்சிகர முக்கியத்துவத்தைப் பெறுகின்றன. அவை எண்ணியலான தயாரிப்பு நடவடிக்கைகள் அல்ல. சமூக வாழ்க்கையின் வளர்ச்சியில் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த பண்பியல் ரீதியான புதிய அம்சங்களை நேரடியாகப் புகுத்துகின்றன.

உதாரணமாகப் பள்ளிக் கூடங்களுக்கும், உற்பத்திக்கும் இடையேயுள்ள தொடர்புகளை உறுதிப்படுத்துவது பற்றியும், கல்வியின் வளர்ச்சி பற்றியும், ரஷ்ய சுப்ரீம் சோவியத் நிறைவேற்றியுள்ள சட்டம், சாதாரணக் கல்விச் சீர்திருத்தம் அல்ல. சோஷலிசத்தின்

கீழ் உயர்தரக் கல்வியை, உயர் கல்வியைச் செம்மையுறச் செய்வது என்ருல், உற்பத்திக்குத் தேவையான ஊழியர்களே, தலைவர்களேத் தோற்றுவிப்பது என்பது பொருள்; சோஷலிஸ அரசாங்கத்தின் சக்தியை வளர்ப்பது என்பது பொருள். அது ஒரு புரட்சிகரமான நடவடிக்கை. முக்கியமான அரசியல் பணியின் முடிவு. இவ்விதமாகச் சீர்த்திருத்தங்களே ஒரு புதிய புரட்சிகரமான உட்பொருளேப் பெறுகின்றன.

எனவே, எண்ணியலான மாற்றங்கள் பண்பியலான மாற்றங்களாதல் எனும் விதி, புதிய பண்புகளது தோற்றத்தின் அக இயங்கு முறையை, அதாவது வளர்ச்சிக் கிரியையின் அடிப்படையை, வெளிப்படுத்துகிறது என்று முடிவு செய்யவேண்டும்: ஆனுல் அதை ஊக்குவிக்கும் சக்தி எது? அதன் மூலத்தானம் எது? முரண் தர்க்கத்தின் இரண்டாவது விதி—எதிர் நிலைகளின் போராட்டமும் ஐக்கியமும் என்றவிதி - இக்கேள்விக்கு விடை அளிக்கிறது.

உரை ஆறு

# "எதிர்நிலைகளின் ஐக்கியமும்போராட்டமும்" எனும் விதி

அனுமதிக்கக் கூடிய அனுமதிக்க முடியாத முரண்பாடுகள்.

நீங்கள், உண்மையற்றது என்று கருதும் ஒரு கூற்றை மறுதலிக்க வேண்டிய சந்தர்ப்பம் உங்கள் எல்லோருக்குமே நேர்ந்திருக்கும். உங்கள் நண்பரது வாதத்தில் ஒரு முரண்பாட்டைக் காணும் போது, "நீங்கள் முன்னுக்குப்பின் முரணுகப் பேசுகிறீர்கள்," என்று கூறுகிறீர்கள். அதாவது அவர் முன்பின் இணைவற்று இருப்பதை நீங்கள் கண்டுபிடித்து விடுகிறீர்கள்.

நமது சிந்தனை முரண்பாடற்று இருந்தால்தான், அது சரியானதாக இருக்கமுடியும். தத்துவஞானத்தைப் படித்துக் கொண்டிருக்கும் ஒரு குழுவினரைப்

பார்த்து, நான் "அவர்கள் எல்லோரும் நன்ருகப் படிக் கிருர்கள்,'' என்று கூறுகிறேன். பின்னர் அதே குழு வினரைப் பற்றி "அவர்களில் சிலர் மோசமாக இருக் கிருர்கள்,'' என்று கூறுவேனுனல் அதை ஆட்சேபிப் பதற்கு உங்களுக்கு உரிமையுண்டு. 'ஒரே மக்களைப் பற்றி, ஒரே சமயத்தில், நீங்கள் எப்படி வெவ்வேறு விதமாகக் கூறமுடியும்? இதில் ஒன்றுதானே உண்மை யாக இருக்க முடியும்,'' என்று நீங்கள் கேட்கலாம். நீங்கள் கேட்பது முற்றிலும் சரியானது.

அத்தகைய முரண்பாடுகள், உருவ அளவை முரண் பாடுகள் எனப்படும். சரியான சிந்தனையைப் பற்றி கூறும் விஞ்ஞானமாகிய உருவ அளவை இயலால் அவை வெளிப்படுத்தப்படுகின்றன. முரண்பாடுகளைக் கொண்ட வாசகங்கள் முன்பின் இணைவற்றவை, தவருனவை.

ஆனுல் அளவை ரீதியான முரண்பாடுகள் இருக்கக் கூடாது என்பதனுல், இயற்கையிலும், சமூகத்திலும் எந்த வகையான முரண்பாடுகளும் இருக்க முடியாது என்று முடிவெடுக்கலாமா? இந்தக் கேள்வியை விளக்கு வதற்கு நாம் ஒரு உதாரணத்தைப் பார்க்கலாம். ஒரு தத்துவஞான வகுப்பில், விரிவுரையாளர், உருவ அளவை முரண்பாடுகள் அனுமதிக்க முடியாதவை என்று கூறினுர். அப்போது என்ன நேரிட்டது என்று பார்ப்போம்.

"பொருள்களிலும், நிகழ்வுகளிலும் முரண்பாடான அம்சங்களோ, போக்குகளோ, இருக்கின்றனவா?'' என்று ஆசிரியர் கேட்டார்.

"இல்லவே இல்லை. எந்த முரண்பாடுகளும் இருக்க முடியாது என்று நீங்கள்தானே சற்றுமுன்பு சொன்னீர் கள்,'' என்று மாணவர்கள் விடை அளித்தனர்.

“அப்படியானுல், அணு எப்படி அமைக்கப்பட்டிருக்கிறது என்பதை நினைவு படுத்திக் கொள்ளுங்கள். அதில் நேர் மின்னேற்றமுடைய துகள்கள், எதிர் மின்னேற்றமுடைய துகள்கள், என்ற இரண்டுமே இருக்கின்றன. இப்போது நான், அணுவைப் பற்றி ஒரு முரண்பாடுள்ள வாசகத்தைக் கூறுகிறேன். அது ‘நேர்’ ஆகவும், ‘எதிர்மறை’ யாகவும் இருக்கிறது என்று கூறுகிறேன். இது விஞ்ஞான ரீதியில் நிரூபிக்கப்பட்டுள்ள உண்மை” என்று ஆசிரியர் கூறினுர்.

உருவ அளவை முரண்பாடுகள் இருப்பதற்கு வாய்ப்புக்கள் கூட இல்லை என்று சற்று முன்தான் நீங்கள் கூறினீர்கள். ஆனுல் இப்போதோ முரண்பாடு விஞ்ஞான ரீதியில் நிரூபிக்கப்பட்டு விட்ட உண்மை என்று கூறுகிறீர்கள். இது எப்படிச் சரியாகும்? இது மிகவும் சிக்கலான கேள்வி. இதற்கு ஓரிரண்டு வார்த்தைகளில் விடை கூறிவிட முடியாது. இதைச் சற்று விரிவாகப் பரிசீலனை செய்வோம்.

முரண்பாடுகளின் பிரச்சனை, வெகுநாட்களாகவே சிந்தனையாளர்களின் மனதிலே இடம் பெற்று வந்துள்ளது. உதாரணமாக, அப்பாலை வாதிகள், அளவை முரண்பாடுகள் எதுவுமே இருக்கக்கூடாது என்ற உண்மையின் அடிப்படையில் தொடங்கி, இயற்கையில் எந்த முரண்பாடுகளும், மாறுபட்ட பண்புகள், அம்சங்கள் அல்லது வரையறைகளும் இருக்கக்கூடாது என்ற முடிவிற்கு வந்தார்கள். கி. மு. 5வது நூற்ருண்டில் வாழ்ந்த கிரேக்கத் தத்துவஞானியாகிய ஸீனே, முரண்பாடு, எங்கு காணப்பட்ட போதிலும் உண்மையற்றது, சாத்தியமற்றது, நினைக்க முடியாதது, என்று எடுத்துக் காட்ட முயற்சித்தார்.

தற்கால பூர்ஷுவா தத்துவார்த்திகள் சிலரும், இந்தக் கண்ணோட்டத்தை ஏற்றுக் கொள்கின்றனர். உதாரணமாக, அமெரிக்கப் பிற்போக்காளராகிய சிட்னி ஹூக் "கூற்றுக்கள் அல்லது தீர்ப்புக்கள் அல்லது வாசகங்கள், முரண்பாடுள்ளவையாக இருக்கலாம். ஆனால் பொருள்களும், நிகழ்ச்சிகளும், அப்படி இருக்க முடியாது,"§ என்று கூறுகிறார்.

ஆனால் அணுவின் உதாரணம், பொருள்களுக்குள்ளேயே, இயற்கையினுள், முரண்பாடுகள், மாறுபட்ட அம்சங்கள் இருக்கின்றன என்று காட்டுகிறது. ஒரு மனிதனையோ, அல்லது பிராணியையோ பாருங்கள். அங்கும் இரண்டு முரண்பட்ட கிரியைகள் ஒரே சமயத்தில் நடைபெறுகின்றன என்பதைக் காண்பீர்கள். அவற்றின் ஸெல்கள் வளர்ந்து கொண்டும், இறந்து கொண்டுமிருக்கின்றன. இந்தக் கிரியைகளில் ஏதாவது ஒன்று நின்று விட்டால், பிராணி இறந்துவிடும். ஒவ்வொரு நிலையிலும் அத்தகைய உதாரணங்கள் காணப்படுகின்றன. இதைப்பற்றி இன்னும் விரிவாக பல சமயங்களில் கூறுவோம். இயற்கையினுள்ளேயே முரண்பாடுகள் உள்ளன. அவற்றிலிருந்து நீங்கள் தப்பமுடியாது.

**எதிர்நிலைகளும், முரண்பாடுகளும்.**

அவை ஏன் இருக்கின்றன? ஏன் இருந்துதான் தீரும்? இதைப் புரிந்துகொள்ள, முதலில் எதிர் நிலைகள் என்று நாம் கூறுபவை யாவை, அவற்றிடையே எப்பொழுது முரண்பாடுகள் தோன்றுகின்றன, என்பதை நாம் தெரிந்துகொள்ள

---

§ சிட்னிஹூக்: "முரண்நிலைத்தர்க்கப் பொருள் முதல் வாதமும், விஞ்ஞான முறையும்" பக். 7.

வேண்டும். சாதாரணமாக, நமது அன்றாட வாழ்வில் இந்தச் சொல்லை எப்படிப் பயன்படுத்துகிறோம் என்பதைப் பார்ப்போம். எதிர்நிலை என்ற சொல்லை, நாம் என்ன கருத்திலே உபயோகிக்கிறோம் என்பதை எல்லோரும் புரிந்து கொள்கின்றனர்: உலகின் தென், வட துருவங்கள் எதிர்நிலையானவை; அது போலவே ஒரு சாலையின் வலது பக்கமும், இடது பக்கமும் எதிர்நிலையானவை. இது போற் பல உண்டு. நாம் எந்த வகையான பொருள்களையும் ஒப்பிட்டும், முரண்படுத்தியும் பார்க்கிறோம். அப்போது அவற்றில், ஒன்றை மற்றொன்றிற்கு எதிராக வைக்கக்கூடிய அளவிற்குப் அவற்றின் குணங்கள் வேறுபடுமேயானால். அந்தப் பொருள்கள், அல்லது நிகழ்வுகள் எதிர்நிலையானவை என்று கூறுகிறோம். உதாரணமாக, ஒரு நல்ல மனிதனும் கெட்ட மனிதனும் எதிர்நிலையானவர்கள். அத்தகைய நிகழ்வுகளையும் நிகழ்ச்சிகளையும் நாம் ஏன் ஒன்றெதிர் ஒன்றாக வைக்கிறோம்? ஏனெனில் அவற்றில் ஒன்று மற்றொன்றை ஒதுக்குகிறது. நன்மை தீமையிலிருந்தும், வடக்கு தெற்கிலிருந்தும், இடது வலதிலிருந்தும் அகற்றப்படுகின்றன; ஒதுக்கப்படுகின்றன. எதிர்நிலைகள் என்பவை, ஒன்றையொன்று ஒதுக்கும் நிகழ்வுகள் அல்லது நிகழ்வுகளின் அம்சங்கள் என்பதைக் காண்கிறோம்.

எனினும், தீமை எப்போதும் நன்மைக்கு வெகு தூரத்திலே இருந்தால், (அவற்றினிடையே பொதுவானது எதுவும் இல்லாதபடி) இந்த இரு எதிர் நிலைகளுக்கிடையே உரசல்கள், பகைமையுள்ள போராட்டங்கள், தகராறுகள், பூசல்கள், இருக்க முடியாது. அதாவது அவற்றிடையே முரண்பாடுகள் எதுவும் இருக்காது. பார்க்கப்போனால், வெவ்வேறு குணங்களையும், கண்ணோட்டங்களையும்கொண்ட மக்களிடையே எப்பொழுது

முரண்பாடுகள் தோன்றுகின்றன? அவர்கள் சந்திக்கும்போதோ, அல்லது மோதும்போதோ தான் தோன்றுகின்றன. இல்லையென்றால், அவர்கள் ஒருவரோடு ஒருவர் விவாதித்துக் கொள்ள முடியாதே! எதிர்நிலைகளின் நிலையும் இதுதான்.

இங்கு, நாம் கட்டாயமாகப் புரிந்து கொள்ள வேண்டிய ஒரு விஷயத்திற்குக் கவனம் அளிக்க வேண்டும். இல்லையென்றால், பின்னால் வரும் வாதத்தைப் புரிந்து கொள்ள முடியாது. எதிர் நிலைகள் ஒன்றையொன்று ஒதுக்குவதால், அவற்றிடையே பொதுவானதாக எதுவும் இருக்க முடியாது என்ற எண்ணம் தோன்றலாம். மக்கள் பின் வரும் முறையிலே வாதிக்கிறார்கள். வெள்ளை கருப்பல்ல, தெற்கு வடக்கல்ல, குளிர்ச்சி வெப்பமல்ல. இது ஒரு இயற்கையான கண்ணோட்டம். நம் கண்ணில் உடனடியாகப் படக்கூடிய மேலெழுந்தவாரியான அம்சத்தையே இது குறிக்கிறது. ஆனால் பொருளை நாம் ஆழ்ந்து பரிசீலனை செய்தால், வாழ்க்கையில், இயற்கையில், உள்ள எதிர்நிலைகள் தாண்ட முடியாத ஒரு தடையால், பிரிக்கப்பட்டிருக்கவில்லை என்பதை உணர்ந்து கொள்வது சுலபம். ஒன்றோடொன்றைத் தொடர்புபடுத்தியே அவற்றைப் புரிந்து கொள்ள முடியும்.

கூட்டலும், கழித்தலும்; நேர்மின்னேற்றமுடைய துகள்களும், எதிர் மின்னேற்றமுடைய துகள்களும்; ஒரே அணுவில் இருக்கின்றன என்பதை நாம் ஏற்கனவே பார்த்தோம். இயந்திரவியலில் வினையும், மறுவினையும் கூடச் சேர்ந்துதான் உள்ளன. ஒரு படகை நீங்கள் தள்ளும் வேகம், அது உங்களைத் தள்ளும் வேகத்திற்குச் சமமாக உள்ளது. மறுவினை இல்லாத வினையே இல்லை. இரசாயனத்தில், அணுக்களின்

இணைவு, பிரிவு, போன்ற எதிர் நிலைகளும் பிரிக்க முடியாதவை.

ஒன்றோடொன்று தொடர்புடைய எதிர்நிலைகளுக்கிடையே ஏதோ ஒரு வகையான உறவுகள் எப்பொழுதும் தோன்றுகின்றன. எனவேதான் அவற்றிடையே "உரசல்கள்," "சச்சரவுகள்" "பூசல்கள்" நிகழ்கின்றன. எங்கெல்லாம் எதிர்நிலைகள் மோதுகின்றனவோ, எங்கெல்லாம் அவற்றிடையே உறவுகள் தோன்றுகின்றனவோ, அங்கெல்லாம் முரண்பாடுகள் எப்பொழுதும் தோன்றுகின்றன. ஏனெனில் எதிர்நிலையான நோக்குகள் போக்குகள், சக்திகள் மோதுகின்றன. எனவே, எதிர்நிலைகளிடையே உள்ள உறவுகளே முரண்பாடு என்று வரையறை செய்யலாம். எதிர் நிலைகள் ஒரு முரண்பாட்டின் அம்சங்களாகத் தோன்றுகின்றன.

வஸ்துக்களும், நிகழ்வுகளும் மாற்றமடையாதிருக்குமேயானால், அவை எல்லாக் காலத்திலும் ஒரே மாதிரியாக இருக்குமேயானால், அவற்றினுள்ளே, எதிர் நிலைகள், ஒன்றையொன்று ஒதுக்கும் அம்சங்கள், அல்லது போக்குகள், இருக்காது. ஆனால் அவை நிரந்தரமாக இயங்கிக் கொண்டு, மாறிக்கொண்டு, வளர்ந்து கொண்டு, இருக்கின்றன, என்பதை நாம் ஏற்கனவே பார்த்தோம். எனவே வஸ்துக்கள் எப்போதும் பல்வேறு அம்சங்களை வெளிக்காட்டுகின்றன. அவற்றுள் ஏதோ ஒன்று காலங்கடந்து போய் பழையதாகி விடுகிறது. புதியது ஒன்று தோன்றி வளர்ச்சி அடைகிறது. சுருங்கச் சொன்னால், வளர்ச்சி அடைந்துகொண்டிருக்கும் ஒரு நிகழ்ச்சி, எப்போதும், எதிர்நிலை அம்சங்களை, போக்குகளை, சக்திகளை, எனவே முரண்பாடுகளை வெளிக்காட்டுகிறது.

**எதிர்நிலைகளின் ஐக்கியம்**

அவை ஒன்றோடொன்று என்ன உறவு கொண்டுள்ளன? எதிர் நிலைகள் ஒன்றோடொன்று இணைந்து காணப்படுகின்றன என்பதை நாம் பார்த்தோம். அவை, அந்தத் தொடர்பிலிருந்து பிரிந்து இருக்க முடியாத அளவிற்கு அது வலுவுள்ளதாகவும், துண்டிக்க முடியாததாகவும் இருக்கிறது. இந்தத் தொடர்பை நாம் எதிர்நிலைகளின் ஐக்கியம் என்று கூறுகிறோம். இந்த ஐக்கியம் இருப்பதை, அப்பாலைவாதிகள் மறுக்கிறார்கள். ஒவ்வொரு எதிர்நிலையும் தன்னந் தனியாக இருக்கிறது என்று அவர்கள் கருதுகிறார்கள் ஆனால் அது உண்மையல்ல! உதாரணமாக ஒரு தொழிற்சாலை இயங்குவதை எடுத்துக் கொள்வோம்.

ஒவ்வொரு தொழிற்சாலையிலும், செலவு என்று ஒன்று பணம், பொருள்கள் இவற்றின் முதலீடு, உண்டு அதாவது அதே சமயத்தில் பணம், பொருள்கள் இவற்றைப் பெறும் வரவும் உண்டு. ஒரு தொழிற்சாலை பணத்தை ஈட்டாமல் செலவழித்துக் கொண்டு மட்டுமே இருக்க முடியுமா? முடியாது. ஆனால் இயந்திரங்கள், கச்சாப் பொருள்கள், இவற்றிற்காகப் பணத்தைச் செலவழிக்காமலும் இயங்க முடியாது. இந்த இரு எதிர் நிலைகளையும் வரவையும், செலவையும் உங்களால் பிரிக்க முடியாது. அல்லது தனிமைப் படுத்த முடியாது. அவற்றிடையே ஐக்கியம் இல்லாமல் தொழிற்சாலை இயங்குவதைப் பற்றி நினைத்துக் கூடப் பார்க்க முடியாது.

இன்னுமொரு உதாரணத்தைப் பார்ப்போம். முன்னரே கூறியது போல ஒரு மனிதன் அல்லது பிராணியின் உயிர் வாழ்வில் இரண்டு எதிர்நிலைக் கிரியைகள் அடங்கியுள்ளன. சில செல்கள் தோன்றுகின்றன. மற்

றவை அழிக்கப் படுகின்றன அல்லது இறந்து விடுகின் றன. ஆனால் ஒருவர் இப்படிக் கூறுவதாக வைத்துக் கொள்வோம். ஆயுட் காலத்தை நீடிப்பதற்கு, ஸெல்கள் அழிவதை, இறப்பதைத் (பரவயமாதல்) தடை செய்து விட்டு, அவை புதுப்பிக்கப் படுவதை, தோன்றுவதை (தன் வயமாதல்) மட்டும் வைத்துக்கொள்ள வேண்டும். அப்போது ஸெல்கள் புதிது புதிதாகத் தோன்றிக் கொண்டு மட்டுமிருக்கும். இது மிகவும் தவறான வாத மாகும். உயிர் இரண்டு எதிர்நிலையான கிரியைகளைக் கொண்டது என்பதும், அவற்றில் ஒன்றிலிருந்து ஒன் றைப் பிரிப்பது முடியாத காரியம் என்பதும், இங்கு கவ னிக்கப் படவேண்டும். ஒரு எதிர்நிலையை அழிக்க முயற் சிக்கும் போது மற்றொன்றையும் அழித்து, அதன் மூலம் உயிரையே அழித்து விடுகிறீர்கள். உயிர் எனும் நிகழ்ச்சி, ஒரே சமயத்தில் ஒரு ஐக்கியமாகவும், முரண் பட்ட கிரியையாகவும் இருக்கிறது.

தற்கால வலதுசாரி சோஷலிஸ்டுகளும், திருத்தல் வாதிகளும், அப்பாலைக் கண்ணோட்டத்தைக் கைக் கொள்கிறார்கள். முதலாளித்துவத்தில் "நல்லதும்" இருக்கிறது, "கெட்டதும்" இருக்கிறது என்று அவர் கள் கூறுகிறார்கள். அதிலுள்ள "கெட்டதை" அகற்று வதற்கு, 'நல்லதை' வளர்ச்சி அடையச் செய்ய வேண் டும். 'கெட்டது' நீக்கப் பட்டு விட்டால் 'பொதுநல சமூ கம்' தோன்றும் என்று அவர்கள் கூறுகிறார்கள். மனித உடலில், புது ஸெல்களின் தோற்றத்தை மட்டும் வைத் துக் கொண்டு, பழைய ஸெல்களின் அழிவை நிறுத்தி விடவேண்டுமெனக் கூறுபவரின் வாதத்தை ஒத்தது இது. ஆனால் இதை எப்படி மனித உடலில் செய்ய முடி யாதோ, அதே போல பூர்ஷுவா சமூகத்திலும் இதை விளைவிக்க முடியாது.

இங்கு எதிர்நிலைகள் அருகருகில் இல்லை; அவை ஐக்கியத்தில் இருக்கின்றன. அவை ஒன்றையொன்று ஊடுருவி உள்ளன. இரண்டும் சேர்ந்துதான் நாம் பூர்ஷுவா சமூகம் என்று சொல்கிறோமே, அதாகின்றது. எனவே ஒரு அம்சத்தை அகற்றி விட்டு மற்றொன்றை வைத்துக் கொள்வது முடியாத காரியம். "கெட்டதை", முதலாளித்துவத்தின் தீமைகளை, அழிக்க வேண்டுமானால், முதலாளித்துவத்தையே அழித்தாக வேண்டும். இதைத் தவிர வேறு வழியே இல்லை.

**எனவே, எதிர்நிலைகளின் ஐக்கியம் என்பதில், அவை பிரிக்க முடியாதபடி ஒன்றோடொன்று இணைந்திருப்பதும், இரண்டும் சேர்ந்து ஒரே முரண்பாடுள்ள கிரியையாவதும், உள்ளடங்கியுள்ளன. எதிர்நிலைகள் இருப்பதற்கு அவை பரஸ்பரக் காரணமாகின்றன. அதாவது ஒன்று இருப்பதால்தான் மற்றொன்றும் இருக்கிறது.**

எதிர் நிலைகளின் ஐக்கியத்தை அவற்றின் ஒன்றேயான தன்மையின் அடிப்படையிலும் புரிந்து கொள்ள வேண்டும். தகுந்த நிலைகளின் கீழ் எதிர்நிலைகள் ஒன்று மற்றொன்றாக மாறுகின்றது என்பது இதன் பொருள். உதாரணமாக ஈரம் உலர்கிறது. உலர்ந்தது, ஈரமாகிறது; இங்கு எதிர்நிலைகள் இடம் மாற்றிக் கொண்டுள்ளன. ஏனெனில் இயைந்த மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. சூடான பண்டம், தனது உஷ்ணத்தை சுற்றுப்புறத்தில் வெளியிட்டுக் குளிர்ச்சி அடைகிறது.

எதிர்நிலைகளின் பரஸ்பர மாற்றம் என்ற கருத்துக்கு லெனின் மிகுந்த முக்கியத்துவம் அளித்தார். எதிர்நிலைகள் எப்படி ஒன்றேயானவையாக இருக்க முடியும்; எப்படி அவை ஒன்றேயாகின்றன; எந்த நிலைகளின்கீழ் அவை ஒன்று மற்றொன்றாக மாறி ஒன்றேயான தன்

மையைப் பெறுகின்றன, ஆகியவற்றைப் போதிப்பதே முரண் தர்க்கம். § என்று அவர் கூறினார்.

எதிர்நிலைகளை, பகுத்தாய்ந்து, லெனின், அவற்றின் ஐக்கியம் ஓரளவானது, தற்காலிகமானது, மாறக் கூடியது, என்று கூறினார். அதாவது எதிர்நிலைகளின் ஐக்கியம் எந்த நிலைகளின் கீழ் வெளிப்பாடடைகிறதோ, அந்த நிலைகளைக் குறிக்காமல், அவற்றின் ஐக்கியத்தைப் பற்றிக் கூற முடியாது என்பது இதன் பொருள். நிலைகள் மாறும் போது ஐக்கியம் முடிவடைகிறது.

எதிர்நிலைகள் ஒருபோதும் முழுமையாகப் பொருந்துவதில்லை என்பதிலிருந்து, இந்த ஐக்கியத்தின் சார்புத் தன்மை புலனாகிறது. தன்வயமாதலும், பரவயமாதலும் எப்படி முற்றிலும் பொருந்த முடியும்? ஏனெனில் அவை இரண்டும் வேறுபட்ட கிரியைகள் ஒன்றுக்குப்பதிலாக மற்றொன்று வருகிறது. அவை ஒன்றேயான தன்மையைப் பெருகின்றன; ஆனால் முற்றிலுமாக அல்ல. முழுமுதன்மையாக அல்லாது ஓரளவிற்கே அவை ஒன்றேயான தன்மையைப் பெருகின்றன.

எதிர்நிலைகள் ஒன்றோடொன்று மோதுகின்றன, ஒன்றோடொன்று போராடுகின்றன என்று மேலே சுருக்கமாகச் சொன்னோம். இந்தப் பிரச்சனையை இனிச் சற்று விரிவாகப் பரிசீலனை செய்வோம்.

**எதிர்நிலைகளின் போராட்டம்**

எதிர் நிலையான போக்குகளிடையே நிகழும் பூசல் அவற்றிடையேயான போராட்டம் என்று கூறப்படுகிறது. ஒவ்வொரு வஸ்துவிலும், ஒவ்வொரு கிரியையிலும், எதிர்நிலையான பக்கங்கள் இருப்பதால், அவற்றிடையே ஒரு பூசல், ஒரு

---

§ லெனின்: தொகுப்பு நூல்கள் தொகுதி 38, பக். 109.

போராட்டம், எப்பொழுதுய் நடந்து கொண்டிருக்கிறது என்பதைக் காண்பது எளிது. இப்போராட்டத்திற்குக் காரணம் என்ன ?

அவை ஒன்றோடொன்று தொடர்பு கொண்டு ஒரு ஐக்கியமாக இருக்கும் அதே சமயத்தில், அவை ஒன்றையொன்று மறுக்கின்றன; ஒதுக்குகின்றன; என்ற காரணத்தால் எதிர்நிலைகளுக்கிடையே போராட்டம் தோன்றுகிறது இந்த நிலையில் உரசல், சச்சரவு, போராட்டம் தவிர்க்க முடியாதது. எனவே, எங்கெல்லாம் எதிர்நிலைகள் ஐக்கியத்தில் இருக்கிறனவோ, அங்கெல்லாம் அவற்றிடையே ஒரு போராட்டமும் இருக்கும் ஒரு கிரியையில், அல்லது நிகழ்வில் தனி ஆதிக்கம் வசிக்க அவை ஒவ்வொன்றும் செய்யும் "முயற்சி" என்ற முறையிலேயே, எதிர் நிலைகளின் போராட்டத்தை நாம் புரிந்து கொள்ளவேண்டும்.

எனவே, எதிர்நிலைகளின் ஐக்கியமும், போராட்டமும், யதார்த்தத்தில் உள்ளன என்பதை நீங்கள் காண்கிறீர்கள். எனினும், வளர்ச்சியில், நிர்ணயமான பங்கு வகிப்பது எது? உதாரணமாக ஹெகல், எதிர்நிலைகளின் ஐக்கியமே அவற்றின் ஒன்றேயான தன்மையே, வளர்ச்சியில் முக்கியமானது என்று வலியுறுத்தினுர். ஹெகலின் இந்தக் கருத்தின் அடிப்படையில், சமூக இணக்கம் இருப்பதற்கு வாய்ப்புக்கள் உள்ளன என்றும், பூர்ஷுவா சமூகத்தின் பகைமையுள்ள வர்க்கங்களிடையே காணப்படும் முரண்பாடுகளை அமைதியாகத் தீர்த்துக் கொள்ள முடியுமென்றும், நிருபிக்க, வலதுசாரி சோஷலிஸ்டுகளும், திருத்தல் வாதிகளும், முயற்சி செய்து, தோல்வி கண்டனர்.

உண்மையில் முதன்மையான பங்கு வகிப்பது எதிர்நிலைகளின் போராட்டமேயன்றி அவற்றின் ஐக்கியமல்ல- ஒரு கணங்கூட நிற்காது, தொடர்ந்து நடை

பெறும் இந்தப் போராட்டமே, எதிர்நிலைகளிடையே யுள்ள பரஸ்பர உறவின் முக்கியமான அம்சமாகும். எதிர்நிலைகள் ஒன்றையொன்று ஒதுக்குவதால், அவை ஒன்றோடொன்று போராடிக் கொண்டே இருக்கின்றன. எனவே எதிர்நிலைகளின் ஐக்கியம், ஒன்றேயான தன்மை ஒரளவானது, தாற்காலிகமானது, மாறுவது. ஆனால் அவற்றின் போராட்டமோ, லெனின் எழுதியது போல, எப்படி வளர்ச்சியும், இயக்கமும், முழுமுதன்மை யானவையாக இருக்கின்றனவோ, அதுபோல போராட்டமும் முழுமுதன்மையானது." ‡ வளர்ச்சியின், இயக்கத்தின் மூலத்தானம் எதிர்நிலைகளின் போராட்டமே, என்பதுதான் இதற்குப் பொருள்.

**எதிர்நிலைகளின் போராட்டமே வளர்ச்சியின் மூலத்தானம்**

வளர்ச்சியின் மூலத்தானம். அதை ஊக்குவிக்கும் சக்தி எது என்ற பிரச்னை எப்போதும், தத்துவார்த்திகளின் கவனத்தைக் கவர்ந்து வந்துள்ளது பொதுவாக உலகத்தையும், குறிப்பாக அதன் நிகழ்வுகளையும், கிரியைகளையும் ஊக்குவிக்கும் சக்தி எது என்பதைப் பற்றிச் சிந்திக்கும் அனைவர் முன்னும் இக்கேள்வி எழுகின்றது. இயற்கையினது வளர்ச்சியின் மூலத்தானத்தை இயற்கைக்கு வெளியே, கடவுளில், ஆன்மாவில், காணவேண்டுமென்று அப்பாலை வாதிகள் கூறுகின்றனர். இயற்கையினது வளர்ச்சியின் உண்மையான பலத்தைச் சுட்டிக் காட்டத் திறன் அற்றவர்களாய், மதத்தின் உதவியை அவர்கள் நாடுகின்றனர்.

---

‡ லெனின்: தொகுப்பு நூல்கள் தொகுதி 38 பக். 360

ஆனால் இயற்கை ஏன் வளர்ச்சி அடைகிறது என்பதை விளக்குவதற்கு தெய்வீக சக்திகளின் உதவி எதுவும் தேவையில்லை. இயற்கையின் உள்ளேயே, எதிர் நிலைகளின் போராட்டத்தில், அந்த மூலத்தானம் காணக் கிடக்கிறது, "எதிர் நிலைகளின் 'போராட்டமே' வளர்ச்சி", § என்று லெனின் எழுதினார்.

இதைப் புரிந்து கொள்வதற்குச் சில உதாரணங்களைப் பார்ப்போம்.

எண்ணியலான மாறுபாடுகள், படிப்படியாகச் சேகரமடைவதன் விளைவாகப் புதிய பண்பு தோன்றுகிறது என்று பார்த்தோம். ஆனால் இந்தக் கிரியையைத் தொடங்கி வைப்பது எது? உதாரணமாகத் தண்ணீரை சூடாக்கும் போது அதன் மூலக் கூறுகளின் இயக்க கதி அதிகரிக்கப்படுகிறது. மூலக்கூறுகளிடையேயுள்ள ஆகர்ஷண சக்தி (தண்ணீர் திரவநிலையிலிருப்பதற்கு இந்த சக்தியே காரணம்) பலவீனமடைகிறது; கொதி நிலையில், மூலக்கூறுகளை இணைத்து வைத்துக்கொள்ள முடியாத அளவிற்கு இந்த சக்தி பலவீனமடைகிறது. அப்போது தண்ணீர் கொதிக்கிறது; இரண்டு எதிர் நிலையான போக்குகளிடையேயுள்ள போராட்டத்தின் விளைவாகவே இவையனைத்தும் நிகழ்கின்றன. மூலக் கூறுகளிடையே உள்ள ஆகர்ஷண சக்தி ஒரு புறம்; மூலக்கூறுகளை ஒன்றிலிருந்து ஒன்று விலக்கும் எதிர்ப்பு சக்தி மற்றொருபுறம்; இவற்றிடையேயுள்ள முரண்பாடு முடிவடையும் வரையில், இந்தப் போராட்டம் தொடர்ந்து நடைபெறுகிறது. ஒரு பாய்ச்சல், எதிர்நிலைகளின் ஐக்கியத்திற்கு முற்றுப்புள்ளி வைக்கிறது. புதிய முரண்பாடுகளையுடைய, ஒரு புதிய

§ லெனின்: தொகுப்பு நூல்கள், தொகுதி 38 பக். 360

பண்பியல் நிலை தோன்றுகிறது. தண்ணீர் நீராவி ஆகிறது. எனவே முரண்பாடுகளுக்கு தீர்வு ஏற்படும்போது ஒரு புதிய பண்பு வளர்ச்சி இயக்கம் மாற்றம் தோன்றுகிறது என்பது தெரிகிறது.

ஒவ்வொரு முரண்பாட்டிற்கும் ஒரு வரலாறு உண்டு. அது தோன்றுகிறது, வளர்கிறது, (பெருக்கம்) முடிகிறது. முரண்பாடுகள் படிப்படியாக வளர்ச்சி அடைந்து, எதிர்நிலைகள் ஐக்கியத்தில் இனியும் தொடர்ந்து இருக்க முடியாது என்ற நிலை ஏற்படும் போது, கடைசிக் கட்டம் தோன்றுகிறது. போராட்டத்திற்கு ஒரு தீர்வு காணப்படுகிறது.

பூர்ஷுவா சமூகத்தை அரித்துக்கொண்டிருக்கும் முரண்பாடுகள், சோஷலிஸப் புரட்சியைத் தோற்றுவிக்கும் போது, முரண்பாடுகளுக்குத் தீர்வு காணும் காலம் வந்துவிட்டது என்று பொருள் எதிர்நிலைகளின் போராட்டம், முரண்பாடுகளின் தீர்வு, இவற்றின் விளைவாக சமூகம் மேல் மட்டத்திற்கு உயர்த்தப்படுகிறது. பூர்ஷுவா சமூகத்திற்குப் பதிலாகப் புதிய சோஷலிஸ சமூகம் தோன்றுகிறது. எனவே, எதிர்நிலைகளின் போராட்டமும் அவற்றினுடைய முரண்பாடுகளின் தீர்வுமே சமூக வளர்ச்சியின் மூலத்தானம் என்பதை நீங்கள் காண்கிறீர்கள்.

இவ்வாறுக, எல்லாப் பொருள்களிலும், கிரியைகளிலும் உள்ளார்ந்துள்ள, முரண்பாடான அம்சங்கள் பிரிக்க முடியாதபடி இணைந்தும் அதே சமயத்தில் இடைவிடாத போராட்டத்திலும் உள்ளன. இதுவே எதிர்நிலைகளின் ஐக்கியமும், போராட்டமும் என்னும் விதியின் சாராம்சம். வளர்ச்சியின் மூலத்தானம். எதிர்நிலைகளின் இந்தப் போராட்டமே அதை ஊக்குவிக்கும் சக்தி.

இந்த விதியை லெனின், முரண்தர்க்கத்தின் சாரம்; அதன் உட்கரு என்று கூறினர்.

சுற்றியுள்ள உலகில் பல்வேறு வகையான முரண்பாடுகள், ஏராளமாக உள்ளன அவற்றில் அகமுரண்பாடுகளும், புறமுரண்பாடுகளும் உண்டு.

அகமுரண்பாடுகளும் புறமுரண்பாடுகளும்

40 ஆண்டுகளுக்கும் மேலாக, முதலாளித்துவ நாடுகளில் உள்ள தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்யும்போது, அல்லது காலனி மக்கள் தங்களை ஆக்கிரமித்துக் கொண்டிருப்பவர்களை எதிர்த்துக் கிளர்ந்து எழும்போது, அல்லது, உழைக்கும் மக்கள் உலக அமைதிக்காக, மகத்தானதொரு இயக்கத்தை ஆரம்பிக்கும் போது, பூர்ஷுவா பிரசாரகர்கள், "கிரெம்லின் சதி" என்ற கூக்குரலை எழுப்பி வந்துள்ளனர்.

உழைக்கும் மக்கள் தங்கள் உரிமைக்காக நடத்தும் போராட்டத்திற்கு இந்த "விளக்கம்" கொடுப்பது கேலிக்கூத்தானதாகும். சமூக நிகழ்ச்சிகளுக்கான காரணங்களை, அந்த நிகழ்ச்சிகள் எந்த நாட்டில் நடைபெறுகின்றனவோ, அந்த நாட்டில் அல்லாது வெளிநாடுகளில் அவர்கள் தேடுகிறார்கள். புரட்சியை ஏற்றுமதி செய்ய முடியாது. புரட்சியைத் தோற்றுவிக்கும், உள்நாட்டு மூலத்தானங்களும், சக்திகளும் இல்லாமல் ஒரு நாட்டில் புரட்சி ஏற்பட முடியாது. சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் திட்டம் கூறுவதுபோல, ஒரு புரட்சி...ஒருவரது கட்டளையின்படி தோன்றுவதல்ல. முதலாளித்துவத்தின் ஆழ்ந்த உள்நாட்டு, சர்வதேச முரண்பாடுகளின் விளைவாக அது தோன்றுகிறது. வெற்றி பெற்ற பாட்டாளிவர்க்கம், மற்றவர்கள் மேல் "மகிழ்ச்சியைச்" சுமத்த முடியாது. அப்படிச் செய்யுமேயானால், அது தனது வெற்றிக்கே குழி தோண்டிக்கொள்ளும். "புரட்சியை ஏற்றுமதி"

செய்வதை கம்யூனிஸ்டுகள் எப்போதும் எதிர்த்து வந்திருக்கிருர்கள், அதே சமயத்தில் ஏகாதிபத்தியவாதிகள் எதிர் புரட்சியை ஏற்றுமதி செய்வதையும் அவர்கள் உறுதியாக எதிர்த்து வந்துள்ளனர்.

முதலாளித்துவத்தின் அழிவிற்கான காரணங்கள், ஒவ்வொரு முதலாளித்துவ நாட்டினுள்ளும் காணக்கிடக்கின்றன. அங்கே, விரல் விட்டு எண்ணக்கூடிய சில ஏகபோக முதலாளிகளின் நலன்கள், தேசத்தின் நலன்களோடு, இணக்கம் காணமுடியாத வகையில் முரண்பாடுற்று இருக்கின்றன.

நாம் மேலே கூறிய முரண்பாடுகள் அகமுரண்பாடுகள் ஆகும்; ஏனெனில் அவை ஒரு நிகழ்வின், அல்லது கிரியையின் உள்ளேயே தோன்றுகின்றன. அவற்றைத் தவிர நிகழ்வுகள், கிரியைகள், இவற்றிடையே புறமுரண்பாடுகளும் உள்ளன. ஆனல் அகமுரண்பாடுகளே நிர்ணயமான பங்கு வகிக்கின்றன.

இயற்கை தனது வளர்ச்சிக்கான மூலத்தைத் தன்னுள்ளேயே கொண்டுள்ளது என்றும், அந்த மூலத்தைக் கருத்துக்களிலோ, ஆன்மாவிலோ, கடவுளிடத்திலோ தேடுவது பயனற்றது என்றும் லெனின் எடுத்துக் காட்டினுர். இயற்கையின் இயக்கம், அதன் சுய இயக்கமே! அதன் வளர்ச்சி! சுய வளர்ச்சியே! அகமுரண்பாடுகளைச் சமாளிப்பதன்மூலம் அந்த வளர்ச்சி நடைபெறுகிறது.

எனினும், வளர்ச்சியில் புற முரண்பாடுகளுக்கு உள்ள முக்கியத்துவத்தை, முரண்தர்க்கம் புறக்கணிக்கவில்லை. ஒவ்வொரு பொருளும், நிகழ்வும், கிரியையும், மற்றவற்ருேடு, எண்ணிலடங்கா இழைகளால் இணைக்கப்பட்டுள்ளது. எனவே, அவற்றினுள்ளே நடைபெறுவன மட்டுமன்றி அவற்றின் புறத்தே நடை

பெறுவனவும், அவற்றை ஓரளவிற்குப் பாதிக்கத்தான் செய்கின்றன. ஒரு உதாரணத்தைப் பார்ப்போம். ஜப்பானிய ராணுவாதிபத்தியவாதிகளுக்கும், அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளுக்கும் இடையே இருந்த முரண்பாடுகளும், அவற்றின் விளைவாகத் தோன்றிய யுத்தமும், சீன மக்கள், ஆக்ரமிப்பாளர்களை எதிர்த்து நடத்திய போராட்டத்திற்கு உதவி செய்து மக்கள் புரட்சிக்கு வெற்றி தேடித் தந்தன. ஆனால் இங்கு நிர்ணயமான பங்கு வகித்தது அக முரண்பாடுகளே! பெரும்பான்மையான சீன மக்களுக்கும், அமெரிக்க ஏகாதிபத்தியத்துடன் தொடர்பு கொண்டிருந்த பெரும் பூர்ஷுவாக்களுக்கு மிடையே இருந்த முரண்பாடுகளே யாகும்!

எனவே பொருள்களின் சாரத்தினுள்ளேயே இருக்கும் முரண்பாடுகள் அகமுரண்பாடுகள் எனப்படும் என்பதையும், பல்வேறு பொருள்கள், கிரியைகள் இவற்றிடையே உள்ள முரண்பாடுகள், புற முரண்பாடுகள் எனப்படும் என்பதையுங் காண்கிறோம்.

புறவயமான யதார்த்தத்தின் ஒவ்
வாழ்விலே முரண்பாடு வொரு நிலையிலும் முரண்பாடு
ளும், சிந்தனையில் கள் இருக்கின்றன என்பதை
அவற்றின் பிரதிபலிப்பும் நாம் காண்கிறோம். நமது சிந்
தனை முன்பின் இணையான
தாக, முரண்பாடற்றதாக இருக்கவேண்டுமென்றும் நாம் கூறினோம். அப்படியானால், புறவயமான முரண்பாடுகளை நமது சிந்தனையில் எப்படிப் பிரதிபலிப்பது என்ற கேள்வி எழுகிறது.

நாம் கீழ்க்கண்ட உதாரணத்தைப் பார்ப்போம். ஒளியின் சில குணங்கள், அலைகளின் வியாபக விதிக்குக் கட்டுப்பட்டுள்ளன என்றும், வேறுசில குணங்கள்

நுண் துகள்களின் இயக்க விதிக்குக் கட்டுப்பட்டுள்ளன என்றும், வெகு காலத்திற்கு முன்பே கண்டுபிடித்தனர். எனவே, ஒளியைப் பற்றி அலைக் கோட்பாடு, நுண் துகள் கோட்பாடு, என்ற முற்றிலும் மாறுபட்ட இரண்டு கோட்பாடுகள் தோன்றின.

ஒளியின் உண்மையான தன்மைக்கு இயைந்த கோட்பாடு எது? அதன் உண்மையான தன்மை என்ன? என்பதைப்பற்றி விஞ்ஞானிகள் பல காலம் வரை விவாதித்து வந்தனர். ஒளி, நுண் துகள்களின் ஓட்டமாக இருக்க வேண்டும்; அல்லது அலைகளின் இயக்கமாக இருக்க வேண்டுமென்று, அவர்கள் வாதித்தனர். 20-வது நூற்றுண்டின் தொடக்கத்தில்தான் அதன் முரண்தர்க்கத் தன்மை நிரூபிக்கப்பட்டது. அது ஒரே சமயத்தில் அலைகளின் இயக்கமாகவும், நுண்துகள்களின் இயக்கமாகவும் இருக்கிறது என்று கண்டுபிடிக்கப் பட்டது.

எனவே, ஒரு நிகழ்வு முரண்பாடுள்ளதாகஇருந்தால், நமது சிந்தனையில் அதன் பிரதிபலிப்பும், அதுபற்றிய நமது நிர்ணயமும் முரண்பாடுள்ளவையாகத்தான் இருக்க வேண்டும்,

எதிர்நிலைகளை, ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரித்துத் தனிப்படுத்திக் காண, அப்பாலை வாதிகள் முயற்சிக்கின்றனர். உதாரணமாக, சுதந்திரமும், கட்டுப்பாடும், ஒவ்வாத எதிர்நிலைகள் என்று திருத்தல் வாதிகள் கூறுகின்றனர். கட்சியில் சுதந்திரம் இருக்க வேண்டும், அப்படியானல் கட்டுப்பாடு இருக்காது. அல்லது கட்சியில் கட்டுப்பாடு இருக்க வேண்டும். அப்படியானல் சுதந்திரம் ஜனநாயகம் இருக்காது. ஆனல் மார்க்ஸிஸ முரண்தர்க்கத்தின் அடிப்படையில், லெனின், கம்யூனிஸ்டுக் கட்சியைக் கட்ட ஆரம்பித்த

காலத்திலேயே, கட்டுப்பாடு, ஜனநாயகத்திற்குப் புறம் பானதல்ல வென்றும், அது ஜனநாயகத்துடன் இணைந் துள்ளது என்றும் ஐயம் திரிபு அற நிரூபித்தார்.

ஒரு புது மாதிரியான கட்சியின், அசைக்கமுடி யாத ஸ்தாபனக் கொள்கைகளை—ஜனநாயக மத்தியத் துவம் என்ற கோட்பாட்டை—லெனின் வரையறை செய் தார். கட்சியின் அங்கங்களை—மேல் மட்டத்திலிருந்து, அடித்தளம் வரை—தேர்ந்தெடுப்பதன்மூலம் விரிவான ஜனநாயகம் கைக்கொள்ளப்படுகிறது. இரகசிய ஓட் டெடுப்பு மூலம் கட்சி அங்கத்தினர்கள் தங்கள் கருத் துக்களைச் சுதந்திரமான சூழ்நிலையில் வெளியிடுகிறார் கள் இவ்விதமாகக் கம்யூனிஸ்டுகளின் கருத்துக்கள் ஜனநாயகரீதியில் வெளிப்படுத்தப் படுகின்றன. கம்யூ னிஸ்டுகள், மேலிடத்தை விமர்சித்து, அதன் நடவடிக் கைகளைத் திருத்துகிறார்கள். மேலிடம் அவர்களுக்குப் பதில் சொல்லக் கடமைப் பட்டுள்ளது. இதிலும் ஜன நாயகம் வெளிப்படுகிறது. இது விஷயத்தின் ஒரு அம்சம்.

ஆனால், கட்டுப்பாடு இல்லாமல், பெரும்பான்மையி னரின் கருத்துக்குச் சிறுபான்மையினரின் கருத்தை உட்படுத்தாமல் மத்திய தலைமை இல்லாமல், வலு வுள்ள, சக்திவாய்ந்த, கட்சியைக் கட்டுவது சாத்திய மில்லை. ஜனநாயக மத்தியத்துவம் என்ற லெனினின் கொள்கையின் இரண்டாவது அம்சம் இதை உறுதிப் படுத்துகிறது. மத்தியத் தலைமை, அதாவது சோவி யத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் மத்தியக் கமிட்டி, கட்சி, அரசாங்கம் இவற்றின் உயர்மட்ட அங்கங்கள் ஆகியவை, கட்சி, அரசு இவற்றின் நட வடிக்கைகளையும் வாழ்வையும் வழி நடத்துகின்றன அவற்றின் முடிவு கண்டிப்பாக ஒப்புக்கொள்ளப்பட

வேண்டியது. இல்லையானல், கட்டுப்பாடோ. ஒன்று பட்ட கருத்தோ, ஒன்றுபட்ட செயலோ இருக்க முடியாது.

சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் திட்டத்தில் கூறப்பட்டுள்ளபடி, "மிக விரிவான ஜனநாயகம் உழைக்கும் மக்களிடையே, தோழமை மிக்க கட்டுப்பாட்டோடு இணைந்து சென்று, அத்தகைய கட்டுப்பாட்டை மேல்மட்டத்திலிருந்தும், கீழ்மட்டத்திலிருந்தும் வளர்க்க உதவேண்டும்"†

வாழ்விலே பலகாலும், முரண்பாடுகள் காணப்படுகின்றன என்றும் யதார்த்தத்தை மேலும் நன்ருகப் புரிந்து கொள்ள அவற்றை இணைக்க வேண்டுமென்றும் கூறும்போது, நிகழ்வுகளேயும், கிரியைகளேயும் ஒருதலேப்பட்சமாக அணுகுவதை, முரண்தர்க்கம் அனுமதிப்பதில்லை என்பதே பொருள். நமது நிர்ணயங்களிலும், செயல்களிலும், நெகிழ்வு இன்றியமையாதது.

**கருத்துக்களின் நெகிழ்வைப் பற்றி லெனின்**

"கருத்துக்களில் பல பக்கமான, சர்வ வியாபகமான நெகிழ்வு, எதிர் நிலேகளின் ஒன்றேயான தன்மையை உணரும் ஒரு நெகிழ்வு—அதுவே பொருளின் சாரம்." என்று லெனின் எழுதினர். ‡‡

இதற்கு எப்படிப் பொருள் கொள்வது? உதாரணமாக, கண்டிப்பு, நயம் என்ற கருத்துக்களே எடுத்துக் கொள்ளுங்கள். "நான் கண்டிப்புடன் இருக்கவேண்டும், எனவே இங்கு நயத்திற்கு இடமில்லை," என்று ஒருவர் வாதிப்பாரேயானல், அவர் பிடிவாத முள்ளவராக இருக்கிருர். தவருன, நெகிழ்வற்ற, முறையிலே பிரச்சி

† கம்யூஸத்திற்கான பாதை பக். 552.

‡‡ லெனின் நூல்கள் தொகுதி தொகுப்பு 38 பக். 110.

ணயை அணுகுகிருர். ஒரு உண்மையான தலைவர் கண்டிப்பையும், நயத்தையும் இணைத்துக் கடைப் பிடிக்க வேண்டும்.

எனினும், எல்லா வகையான நெகிழ்வுகளையும் முரண் தர்க்கம் அனுமதிப்பதில்லை. அதைத் தன்வயமாகக் கைக் கொள்பவர், அதாவது வாழ்க்கையில் உண்மையாக உள்ள நிலைகளுக்கு இயையாது தன் சொந்த விருப்புக் களுக்கு இயைந்து கைக்கொள்பவர், ஒருபெரும் தவறை இழைக்கிருர். "தன்வயமாகக் கைக் கொள்ளப்பட்ட நெகிழ்வு தன்னிச்சை இணைப்பு வாதம், போலி வாதம் (இவற்றிற்குச் சமம்-மொ-ர்) புறவயமாகக் கைக்கொள் ளப்பட்ட நெகிழ்வு, அதாவது ஒரு பருப்பொருள் கிரி யையின் பல பக்கத் தன்மையையும் ஐக்கியத்தையும் பிரதிபலிக்கக் கூடிய முறையில் கைக் கொள்ளப்பட்ட நெகிழ்வு, முரண் தர்க்கமாகும். அதுவே, உலகின் முடி வற்ற வளர்ச்சியின் சரியான பிரதிபலிப்பாகும்",என்று லெனின் எழுதினுர். $

தன்னிச்சை இணைப்பு வாதம் என்று லெனின் இங்கு எதைக் குறிப்பிடுகிருர்? முரண்பாடான பலபடித் தான கோட்பாடுகள் கருத்துக்கள், கண்ணோட்டங்கள் இவற்றை தன்னிச்சையாக இணைப்பது தன்னிச்சை இணைப்பு வாதம் எனப் படுகிறது. உதாரணமாக, ஒரு தத்துவார்த்தி, "பொருள், ஆன்மாவைத் தோற்றுவிக்கிறது" என்று கூறி விட் டுப், பின்னர், எனவே ஆன்மா சுயேச்சையானது" என்று கூறுவாரேயானுல், அது, பலபடித்தான கருத்து முதல்வாதப் பொருள் முதல்வாதக் கண்ணோட்டங் களின் தன்னிச்சையான இணைப்பாகும்.

தன்னிச்சை இணைப்பு வாதியும், முரண்பாடுகளை இணைக்கிருர் என்பதை நீங்கள் காண்கிறீர்கள். ஆனுல்

$ லெனின் : கட்டுரைத் தொகுதி பாகம் 38 பக். 110.

அவர், யதார்த்தத்திற்கு ஏற்ப அல்லாது, அதற்கு முரணாக அவற்றை இணைக்கிறார். இதன் விளைவு லெனின் கூறுவது போல, "தன்னிச்சை இணைப்பு அவியல்." தொழிலாளிவர்க்க இயக்கத்தில், பூர்ஷுவாக்களின் முக்கியமான சித்தாந்த, அரசியல் முன்னணியாகத் திகழும் வலதுசாரி சோஷலிஸ்டுகளின் கொள்கை இதற்கு ஒரு சிறந்த உதாரணமாகும். "பழைய சந்தர்ப்பவாதக் கருத்துக்களையும், "மிகத் தற்கால" பூர்ஷுவா கோட்பாடுகளையும் அவர்கள் தன்னிச்சையாக இணைக்கிறார்கள்" என்று சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் திட்டம் கூறுகிறது. †

போலிவாதமும் அதைப் போன்று விஞ்ஞான ரீதியற்றதே. ஒரு தத்துவார்த்த விசாரணையில், வேண்டுமென்றே ஒரு தவறான அடிப்படையை எடுத்துக் கொள்வதன் மூலமோ, அல்லது அடிப்படையைத் தவறாக விளக்குவதன் மூலமோ, மேலெழுந்தவாரியாகச் சரியான, ஆனால் அடிப்படையில் தவறான வாதங்களை முன் வைத்தல் போலிவாதம் எனப்படும்.

ஒரு நிகழ்வை, முழுமையாக, ஆழ்ந்து பகுத்தாய்வதற்கு இது அவசியம் என்ற பாசாங்குப் போர்வையில், போலிவாதிகள், நேர்நிலை இல்லாத இடத்திலே அதைக் காண முயற்சிக்கிறார்கள். வெளிப்படையாக, நேரடியாக, "ஆமாம்" அல்லது "இல்லை" என்று சொல்ல வேண்டிய சந்தர்ப்பத்தில்; "ஒரு பக்கத்தில் இதை ஏற்றுக் கொள்ள வேண்டியதுதான் ........... அதே சமயத்தில் மறுபக்கத்தில் இதையும் ஒப்புக் கொள்ள வேண்டும்............." என்ற கொள்கையின் அடிப்படையில், ஒன்றிக்கு 'ஆதரவாகவும்", "எதிராவும்" வாதங்களைக்

---

† கம்யூனிஸத்திற்கான பாதை, பக் 501

காண அவர்கள் முயற்சிக்கிறார்கள். அவர்களது சூழ்ச்சி மிக்க தந்திரங்கள். வாழ்விலிருந்துயதார்த்தத்திலிருந்து பிரிக்கப்பட்டவை. போலிவாதிகளின் கருத்து நெகிழ்வு தன்வயமானது; யதார்த்தத்திலிருந்து தனிமைப்படுத் தப்பட்டது, என்று லெனின் கூறுகிறார். போலிவாதி களுக்கு வாழ்விலே அக்கறை கிடையாது; சான்றுகளின் வெளித்தோற்றத்திலேயே அவர்கள் அக்கறை காட்டு கிறார்கள்.

பூர்ஷுவா சித்தாந்த வாதிகளின், குறிப்பாகத் திருத்தல் வாதிகளின் போலிவாதத்தையும், தன்னிச்சை இணைப்பு வாதத்தையும், லெனின், எப்போதும் அம்பலப் படுத்தி வந்துள்ளார். திருத்தல்வாதிகள் தங்களை மார்க் ஸிஸ்டுகள் என்றே கூறிக் கொள்கிறார்கள். ஆனால் அவர்கள் பல நிபந்தனைகளையும் கூறுகின்றனர். 'மார்க்ஸிஸம்' நல்லதுதான், ஆனால், அது கீழை நாடு களுக்குத்தான் ஏற்றதேயன்றி மேலை நாடுகளுக்கல்ல, என்று கூறுகிறார்கள். அல்லது. ''நாங்கள் சோஷ லிஸத்தை ஆதரிக்கிறோம். ஆனால் அது முதலாளித்துவ அமைப்பிற்குள் இருக்க வேண்டும்'', என்று கூறுகிறார் கள். அத்தகைய எதிர்நிலைகளை இணைப்பது நீரையும் நெருப்பையும் இணைப்பது போலக் கஷ்டமானது.

எனவே, முரண் தர்க்கம் தன்னிச்சை இணைப்பு வாதத் திற்கும், போலிவாதத்திற்கும் எதிரானது. ஏனெனில் முதன்மை யாக இவை கொள்கையற்ற நிலையில் கொண்டு போய் விடுகின் றன. ஆனால் கொள்கைப் பிடிப்பும் அதை உறுதியாகக் கடைப் பிடிப்பதும் முரண் தர்க்கத்திற்கு இன்றியமையாதது.

**இணக்கமல்ல!**
**வெற்றியே!**

கம்யூனிஸ்டுக் கட்சியின் கொள் கை, சிறிது கூட வழுவாது, மார்க்ஸிஸக் கோட்பாடுகளின் அடிப்படையில் அமைந் துள்ளது.

"ஆனால் கருத்துக்களின் நெகிழ்வு பற்றிய நிலை என்ன?" என்று நீங்கள் கேட்கலாம். "எதிர்நிலைகள் ஐக்கியத்தில் இருக்குமேயானால், எதிரான கண்ணோட்டங்களிடையே, உதாரணமாக, பூர்ஷுவாக் கண்ணோட்டமும், பாட்டாளி வர்க்கக் கண்ணோட்டம், இவற்றிடையே ஐக்கியம் இருக்க முடியாதா? இந்தக் கேள்வியைக் கேட்கும் போது நாம் ஒன்றை மறந்து விடுகிறோம். எதிர்நிலைகள் ஐக்கியத்தில் மட்டுமல்ல. அதைவிட முக்கியமாகப் போராட்டத்திலும் உள்ளன. போராட்டம் என்றால், ஏதாவது ஒன்று வெற்றி அடையும் என்பதே பொருள். பூர்ஷுவா உலகக் கண்ணோட்டம் வெற்றியடையும் அல்லது பாட்டாளி வர்க்கக் கண்ணோட்டம் வெற்றியடையும் என்று லெனின் எழுதினார். எனவே, பாட்டாளி வர்க்கச் சித்தாந்தத்தின் வெற்றிக்கான செயலூக்கமுள்ள போராட்டம் இன்றியமையாதது. கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்த ஒரு கொள்கையைப் பின்பற்றுவதின் மூலந்தான் இந்த வெற்றியை அடைய முடியுமே தவிர, சமரஸத்தின் மூலம் அல்ல! சந்தர்ப்ப வாதத்திற்கும் திருத்தல் வாதத்திற்கும் எதிரான தனது போராட்டத்தைப் பற்றிக் கூறும்போது லெனின் 1916ல் பின் கண்டவாறு எழுதினார். "இதுவே எனக்கு நியதியாகி விட்டது. அரசியல் மௌடீகங்கள் வெறுமைகள் சந்தர்ப்பவாதம் முதலியவற்றை எதிர்த்துத் தொடர்ந்து மூர்க்கமாகப் போராடுவதே நியதியாகி விட்டது. 1893 லிருந்து இது தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டு வருகிறது. இதனால் கொச்சை வாதிகளின் வெறுப்புக்கு ஆளானேன். எனினும் இந்த நியதிக்குப் பதிலாகக் கொச்சைவாதி

களின் ''சமாதானத்தை'' ஏற்றுக் கொள்ள நான் தயாராயில்லை''*

கொள்கையிலிருந்து சிறிது பின் வாங்குவதில் யாதொரு தீங்கும் இல்லை. நமது சித்தாந்த விரோதிகளுடனும் நாம் சமாதானம் செய்து கொள்ள முயற்சிக்கலாம். சண்டை போடுவதால் என்ன நன்மை''? என்று சில சமயங்களில் வாதிப்பவர்கள், லெனினின் இந்த வார்த்தைகளை மனதிலிருத்திக் கொள்ள வேண்டும். தொடக்கத்தில் சிறு சலுகையைப் போல்காணப்படுவது பின்னர் பின் வாங்கும் கொள்கையின் முதல் எட்டாக. இணக்கம் காண முடியாத வற்றிடையே சமரசங் காணும் முயற்சியாக மாறி விடுகிறது என்பதை அனுபவம் காட்டுகிறது. கொள்கைப் போராட்டத்தில் பாதி வழியில் நிற்பது என்பது முடியாத காரியம்.

கோட்பாடுகளின் அடிப்படையில் தோன்றும் வேறுபாடுகளை உறுதியான மார்க்ஸிஸ அடிப்படையில் தீர்க்க வேண்டும். இணக்கங்களின் எல்லா வகைகளையும் லெனின் அம்பலப்படுத்தினர். உறுதியான, விடாப்பிடியான போராட்டமே, மார்க்ஸிஸ-லெனினிஸத்தின்-கம்யூனிஸத்தின் வெற்றிக்கு உத்தரவாதமளிக்கிறது. மார்க்ஸிஸத் தத்துவத்தின் தூய்மைக்கான போராட்டத்தில், லெனினைப் போல இணக்கம் காட்டாது இருக்க வேண்டும். மார்க்ஸிஸக் கோட்பாடுகளின் வெற்றிக்கான போராட்டம் மார்க்ஸிஸ முரண்தர்க்கத்தின் புரட்சிகரமான தன்மையிலிருந்து, குறிப்பாக எதிர்நிலைகளின் ஐக்கியமும் போராட்டமும் என்ற சித்தாந்தத்திலிருந்து தோன்றுகிறது என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

---

* லெனின் கட்டுரைத் தொகுதி: பாகம் 35: ரஷ்யப் பதிப்பு, பக் 20? .

அத்தகைய கொள்கைப் பிடிப்பு, நெகிழ்வை, சமர சங்களை ஒதுக்கி விடவில்லையா என்று நீங்கள் கேட்க லாம். இல்லை! அவை எல்லா விஷயங்களுக்கும் இன்றி யமையாதவை முரண் தர்க்கத்தில் முதிர் திறன் பெருத ஒருவரே, "போராட்டந்தான்; எவ்வித சமரசமு மல்ல," என்று கூறுவார். அது அப்பால அணுகல் முறை.

மார்க்ஸிஸ—லெனினிஸ்டுகள் எல்லா சமரசங்களை யும் எதிர்க்கவில்லை. உலகக் கண்ணேட்டத்தின் அடிப்படைப் பிரச்சனைகளில் பின் வாங்குவதில் சென்று முடியும் சமரசங்களையே எதிர்க்கின்றனர். "பாட்டாளி களின் புரட்சி எனும் மார்க்ஸிஸத் தத்துவத்தை நீங்கள் கைவிட்டால், உங்களுடன் கூட்டுச் சேரு கிருேம்," என்று வலதுசாரி சோஷலிஸ்டுகள், கம்யூ னிஸ்டுகளைப் பார்த்துக் கூறுவார்களேயானுல், அத்த கைய சமரசம் மறுக்கப்படும். ஆனுல் பாஸிஸத்திற் கும், பிற்போக்கிற்கும் எதிரான ஒரு கூட்டுப் போராட் டத்தை - (சோஷலிஸ்டுகளும், கம்யூனிஸ்டுகளும் சேர்ந்த)- நடத்தக் கம்யூனிஸ்டுகள் முயற்சித்து வரு கின்றனர். இந்தக் கூட்டு, அடிப்படைப் பாட்டாளி வர்க்க கோட்பாடுகளை பாதிப்பதில்லை.

வேறுபட்ட சமூக அமைப்புடைய நாடுகளிடையே சமாதான சக வாழ்வு, என்று சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியும், சோவியத் அரசாங்கமும் கூறும்போது, சோஷலிஸத்திற்கும், முதலாளித்துவத் திற்கும் இடையேயுள்ள முரண்பாடுகளை இது ஒழித்து விடுமென்ருே, கம்யூனிஸ, பூர்ஷுவா, சித்தாந்தங் களுக்கிடையே இணக்கம் காண்பதற்கான வாய்ப்பு இருக்கிறதென்ருே பொருள் படாது.

சித்தாந்தங்களுக்கு இடையே உள்ள வேறுபாடுகள் இணக்கம் காண முடியாதவை. அவை தொடர்ந்து இருந்து கொண்டுதான் இருக்கும். ஆனால் அவை, சோஷலிஸ, முதலாளித்துவ நாடுகளுக்கிடையே ஒரு அமைதியான போட்டியைத் தவிர்த்து விடவில்லை நாடுகளிடையே சமாதான சக வாழ்வின் நலன்களுக்கான பரஸ்பரச் சலுகைகளை, சோஷலிஸ அரசு, கம்யூனிஸ சித்தாந்தம் இவற்றின் அடிப்படைத் தன்மையையே பாதிக்கும் கொள்கையளவான சலுகைகளோடு குழப்பிக் கொள்ளக் கூடாது. இந்த சந்தர்ப்பத்தில் சலுகைகள் எதுவுமே இருக்க முடியாது. கொள்கைப் பிடிப்பு என்றால், மார்க்ஸிஸ - லெனினிஸத்தின் அமரக் கருத்துக்களுக்கு, எந்த நிலையிலும் விசுவாசமாக இருத்தல்; எல்லாப் பகைவர்களின் ஆக்கிரமிப்பிலிருந்தும் அதைப் பாதுகாக்கத் திறனுள்ளவர்களாக இருத்தல் என்பது பொருள். எனவே நெகிழ்வும் கொள்கைப் பிடிப்பும் முரண் தர்க்க ரீதியில் இணைக்கப்பட்டுள்ளன.

பகைமையுள்ள, பகைமையற்ற முரண்பாடுகள்.

முதலாளித்துவத்தின் கீழும், சோஷலிஸத்தின் கீழும், சமூக முரண்பாடுகளின் தனிப்பட்ட தன்மையை இங்கு நாம் தெளிவு படுத்த வேண்டும். கீழ்கண்ட உதாரணத்துடன் விளக்கத்தைத் தொடங்குவோம்.

1917-ல் ரஷ்யநாடு முரண்பாடுகளின் நிலைக்களனாக இருந்தது. தொழிலாளர்களுக்கும், முதலாளிகளுக்குமிடையே போராட்டம் இருந்தது. ஏகாதிபத்தியக் கொள்ளைக்காரர்களிடையே போராட்டம் இருந்தது. "மத்திய அரசுக்கும்," விளிம்புப் பகுதிகளுக்கும் இடையே அதாவது, தேசிய இனங்களுக்கிடையே போராட்டம் இருந்தது. இந்தச் சிக்கலை விடுவிப்பது

எப்படி? முரண்பாடுகளுக்கு ஒரு தீர்வு காண்பது எப்படி? இதற்குச் சரியான ஒரே விடையைக் கம்யூனிஸ்டுக் கட்சி கொடுத்தது: "பூர்ஷுவா-நிலப்பிரபுத்துவ ஆட்சியைப் பலவந்தமாகக் கவிழ்ப்பதன் மூலம்! சோஷலிஸப் புரட்சியின் மூலம்! என்ற விடையைக் கொடுத்தது.

20-வது ஆண்டுகளின் முடிவுக்காலம். முற்போக்கான அரசியல் அமைப்பு, நாட்டிலே வெற்றி கண்டு நீண்ட காலமாகிவிட்டது. எனினும் பழைய ரஷ்யாவிலிருந்து பெற்ற துயரச் சீதனத்தின் விளைவுகள் இன்னும் காணப்பட்டன. முற்போக்கான அரசியல் அமைப்புக்கும், பின்தங்கிய தொழில் நுணுக்கப் பொருளாதார நிலைகளுக்கும் இடையே ஒரு முரண்பாடு தோன்றியது. இந்த முரண்பாட்டிற்குத் தீர்வு காண்பது எப்படி? "நாட்டைத் தொழில் மயமாக்குவதன் மூலம்," என்று கட்சி பதில் அளித்தது.

நாட்டின் அண்மைக்கால அனுபவத்திலிருந்து ஒரு உதாரணத்தைப் பார்ப்போம். முற்போக்கு எண்ணம் படைத்த மக்கள், நாட்டின் நலனுக்காகத் தன்னலமற்று உழைக்கின்றனர். சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின், 22-வது காங்கிரஸின், அறைகூவலை ஆர்வமுடன் ஏற்றுக்கொண்டு, அவர்கள் கம்யூனிஸத்தின் வெற்றிக்குத் தங்களால் இயன்றதனைத்தையும் செய்கிறார்கள். ஆனால் அவர்களோடு சில சமயங்களில் ஒரே நிறுவனத்தில்—பின்தங்கியவர்களும், சோம்பேறிகளும், குடிகாரர்களும் இருக்கிறார்கள். இது ஒரு யதார்த்தமான முரண்பாடு. இதற்குத் தீர்வு காண்பது எப்படி? போதனையின் மூலமும், அவர்களது குறைகளை விமர்சிப்பதின்மூலமும் பின் தங்கியவர்களின் உணர்ச்சியை முற்போக்கானவர்களின் மட்டத்திற்கு உயர்த்துவதன் மூலமும், என்று கட்சி விடை அளிக்கிறது.

இவ்விதமாக முரண்பாடுகளுக்குத் தீர்வு காண்பதில் பலவகைகள் உண்டு. ஏனெனில் வெவ்வேறு முரண் பாடுகளுக்கு, வெவ்வேறு வகையான சிறப்பியல்புகள் உண்டு. எனவே, அவற்றிற்குத் தீர்வு காணும் முறை யும், குறிப்பிட்டதாக இருக்கவேண்டும். முதலாளிக ளுக்கும் பாட்டாளி வர்க்கத்திற்கும் இடையேயுள்ள முரண்பாடு ஒரு வகையானது. முற்போக்கான தொழி லாளிக்கும், பின்தங்கிய தொழிலாளிக்கு மிடையே யுள்ள முரண்பாடு மற்ருெரு வகையானது. முதல் சந் தர்ப்பத்தில் இணக்கம் காண முடியாத வர்க்க முரண் பாடுகள் உள்ளன. இரண்டாவதில், சேர்ந்து உழைக்கும் இரண்டு தோழர்களிடையே முரண்பாடுகள் உள்ளன. எனவே அவற்றிற்குத் தீர்வு காண்பதற்கான முறை களும் வேறுபடுகின்றன. முதல் சந்தர்ப்பத்தில், பாட் டாளி வர்க்கப் புரட்சியின் மூலம் பழைய அரசாட்சி பலாத்காரமாகக் கவிழ்க்கப்பட்டது. இரண்டாவதில் தோழமை உணர்ச்சியுள்ள விமர்சனமும், சுய விமரிசன மும் கைக்கொள்ளப் படுகின்றன. முதல் வகையைச் சேர்ந்த முரண்பாடுகள் பகைமையுள்ள முரண்பாடுகள் என்று கூறப்படுகின்றன. இரண்டாவது வகையைச் சேர்ந்தவை பகைமையற்ற முரண்பாடுகள் என்று கூறப் படுகின்றன. இணக்கம் காணமுடியாத நலன்களுக் கிடையே போராட்டம் நடைபெறும்போது, பகைமை யுள்ள முரண்பாடுகள் தோன்றுகின்றன.

விலங்குகளின் உலகத்தில், அத்தகைய இணக்கங் காணமுடியாத நலன்களும், போட்டிகளும் இல்லை என்று கூறிவிட முடியாது வேட்டையாடும் மிருகங் களுக்கும் வேட்டையாடப்படும் மிருகங்களுக்கு மிடையே கொடிய போராட்டத்தில் சென்று முடிவடை யும் பகைமைகள் உள்ளன. எனினும், பகைமையுள்ள

பகைமையில்லாத முரண்பாடுகள் முதன்மையாக சமூக உறவுகளின் துறையிலேயே தோன்றுகின்றன. அந்த முரண்பாடுகள் எந்த நிலைகளின் கீழ் தோன்றுகின்றனவோ, அந்த நிலைகளின் தன்மைக்கேற்ப, அவற்றிற்குத் தீர்வு காணும் வழி துறைகளைப் பற்றி, இந்தத் துறையில்தான் நாம் பேசமுடியும். சமூகத்தில், பகைமையுள்ள இணக்கங் காண முடியாத முரண்பாடுகள், பகைமையுள்ள சமூக சக்திகள் அல்லது வர்க்கங்களிடையேயான முரண்பாடுகளாகத் தோன்றுகின்றன. நிலச் சொந்தக்காரர்களுக்கும், விவசாயிகளுக்குமிடையேயும், பூர்ஷுவாக்களுக்கும், பாட்டாளிகளுக்கு மிடையேயும், காலனி மக்களுக்கும் ஏகாதிபத்திய வாதிகளுக்கு மிடையேயும், சச்சரவுகளும், மோதல்களும் தோன்றுகின்றன.

முதலாளித்துவ சமூகத்திலிருந்து ஒரு உதாரணத்தின் மூலம் இதை விளக்குவோம். முதலாளித்துவத்தின் கீழ் உற்பத்தி என்பது, கூட்டு உழைப்பின் விளைவே அன்றி தனிப்பட்ட உழைப்பின் விளைவு அல்ல என்பதைக் கவனிக்க வேண்டும். உதாரணமாக ஒரு டிராக்டரை உற்பத்தி செய்வதில், சுரங்கத் தொழிலாளர்களும், அருகிலுள்ள உருக்காலைத் தொழிலாளர்களும், நூற்றுக்கணக்கான மைலகளுக்கப்பால் இருந்து தொழிற்சாலைக்கு மின்சாரத்தை அளிக்கும் மின் நிலையத் தொழிலாளர்களும் பங்கு கொள்கின்றனர். இயந்திரத் தொழிலில் உற்பத்தி செய்யப்படும் ஒவ்வொரு பொருளும், சமூக உழைப்பின் விளைவேயாகும். எனவே முதலாளித்துவத்தின் கீழ் உற்பத்திக் கிரியை ஒரு சமூகத் தன்மையை அடைகிறது என்பது தெளிவாகிறது.

முதலாளித்துவ உற்பத்தியில் சமூகம் முழுவதும் பங்கு கொள்கிறது என்பதனுல், உழைப்பின் விளை

பொருள்கள், சமூகம் அனைத்துக்கும் சொந்தமானவை என்று பொருளா? இல்லை, என்பதுதான் இங்கு முக்கிய மாகக் கவனிககப்பட வேண்டிய விஷயம். உழைப்பின் விளைவுகள், தொழிற்சாலைகள், நிலம், சுரங்கங்கள் இவற்றின் உடமையாளர்களுக்கு, அதாவது முதலாளிகளுக்கு தனிச் சொத்துடையவர்களுக்குச் சொந்தமானவை எனவே முதலாளித்துவத்தின் கீழ் உற்பத்தியின் சமூகத்தன்மைக்கும்; விளைவுகளை அனுபவித்தலின் தனி முதலாளித்துவ முறைக்குமிடையே ஒரு முரண்பாடு இருக்கிறது என்பது பெறப்படுகிறது. இதுவே முதலாளித்துவத்தின் அடிப்படை முரண்பாடு. முதலாளித்துவத்தின் உயர்ந்த மட்டமாக ஏகாதிபத்திய அமைப்பில் இது குறிப்பாக வெளிப்படுகிறது.

பூர்ஷுவா சமூகம் காலங்கடந்து விட்டது. சமூக முன்னேற்றத்திற்கு அது ஒரு தடையாகி விட்டது. உற்பத்தி பிரம்மாண்டமான அளவைஅடைந்து விட்டதால், அதை வெற்றிகரமாக நடத்தத் திட்டங்கள் தேவை. தனிச் சொத்துரிமையும், ஒரு முதலாளிக்கும், மற்றொரு முதலாளிக்குமிடையேயும், ஒரு நிறுவனத்திற்கும், மற்றொரு நிறுவனத்திற்குமிடையேயும், போராட்டங்களும் பொருளாதாரப் போட்டிகளும் மிகுந்துள்ள முதலாளித்துவ சமூகத்தில் திட்டமிட முடியாது. அத்தகைய மேலாண்மை, உற்பத்தி அராஜகத்தில், அதாவது திட்டமின்மையில், பொருளாதாரக் கோளாறுகளில் கொண்டுபோய் விடுகிறது. எனவே, முதலாளித்துவ சமூகத்தில் அடிக்கடி, மிகை உற்பத்தி நெருக்கடி தோன்றுகிறது. வேலையில்லாத்திண்டாட்டம் அதிகரிக்கிறது. பெருமபான்மையான மக்களுக்குப் பொருளை வாங்கும் திறன் இருப்பதில்லை. இதன் விளைவாக உற்பத்தி குறைக்கப் பட்டு, வேலையில்லாத் திண்டாட்டம் மேலும் அதிகமாகிறது முதலாளித்துவ உற்

பத்தி, ஒரு நெருக்கடியிலிருந்து மற்றொன்றிற்குத் தாவி கொண்டேயிருக்கிறது. எனவே, முதலாளித்துவத்தின் அடிப்படை முரண்பாடு, உற்பத்தி அராஜகம் பொருளாதார நெருக்கடிகள்; சமூகப் பெருங்கேடுகள்; இவற்றின் மூலம் வெளிப்படுகிறது என்பதை நீங்கள் காண்கிறீர்கள். அத்தகைய நிலைகளின் கீழ் சமூக உற்பத்தி சாதாரணமாக வளர்ச்சி அடைய முடியாது.

முதலாளித்துவ சமூகத்தை அரித்து, அதன் தவிர்க்க முடியாத வீழ்ச்சிக்குக் காரணமாகும் மற்ற எல்லா முரண்பாடுகளுக்கும், இந்த அடிப்படை முரண்பாடே, பருப்பொருள் அடிக்கல் ஆகிறது. வர்க்கங்களுக்கிடையே (பூர்ஷுவா, பாட்டாளி வர்க்கங்களுக்கிடையே) யுள்ள முரண்பாடுகளையும், ஏகாதிபத்தியங்களுக்கிடையேயுள்ள முரண்பாடுகளையும், அவற்றிற்கு உதாரணமாகக் கூறலாம். இரண்டாவது உலகப் போரில் தோல்வி கண்டபின்னர், ஜெர்மனியும், ஜப்பானும், பிரிட்டன், பிரான்ஸ், போன்ற ஐரோப்பிய நாடுகளுடன் போட்டிபோட முடியாது என்று அண்மைக் காலம் வரை எண்ணப்பட்டு வந்தது. ஆனல் மீண்டும் அந்த நாடுகள், ஐரோப்பிய நாடுகளை உலகச் சந்தையிலிருந்து வெளியேற்றி வருகின்றன என்று தெரிகிறது. இது அவற்றிடையேயுள்ள முரண்பாடுகளை மேலும் அதிகரிக்கும். மேற்கு ஜெர்மனியும், ஜப்பானும் அமெரிக்காவிற்கும் போட்டியாளர்களாகி விட்டன. இவற்றின் விளைவாகப் பழைய ஏகாதிபத்ய முரண்பாடுகளின் சிக்கல் புதுப்பிக்கப்படுவதுடன், புதிய முரண்பாடுகளும் தோன்றும்.

ஏகாதிபத்திய நாடுகளையும், தேசியவிடுதலைபெற்ற நாடுகள், விடுதலைக்காகப்போராடும் நாடுகள் இவற்றையும், ஒரு ஆழ்ந்த பகைமையுணர்ச்சி பிரித்து வைத்துள்ளது. ஆப்ரிக்கா, ஆசியா, மத்திய கிழக்கு நாடுகள்,

தென் அமெரிக்கா, ஆகிய பகுதிகளின் மக்கள், ஏகாதிபத்தியக் கொள்ளையை ஏற்றுக் கொள்ள மறுத்து, தங்கள் விடுதலைக்காகப் போராடி வருகின்றனர். சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் திட்டம் எடுத்துக் காட்டுவது போல, தொழிலாளிகளுக்கும், முதலாளித்துவத்திற்கும் இடையேயுள்ள பகைமை, மக்களுக்கும், ஏகபோக முதலாளித்துவத்திற்கும் வளர்ந்துவரும் இராணுவ வாதிபத்தியத்திற்கும் இடையேயுள்ள முரண்பாடுகள், காலனி அமைப்பின் சிதைவு, புதிய தேசீய அரசாங்கங்களுக்கும், பழைய காலனி ஆதிக்க வாதிகளுக்குமிடையேயுள்ள முரண்பாடுகள், இவையனைத்தையும் விட முக்கியமாக, உலக சோஷலிஸத்தின் துரித வளர்ச்சி, ஆகியவை ஏகாதிபத்தியத்தை உறிஞ்சி அழித்துக் கொண்டிருக்கின்றன. முடிவில் ஏகாதிபத்தியம் பலவீனமடைந்து, தகர்ந்துவிடும். உள் முரண்பாடுகளால் அலைக்களிக்கப்படும் முதலாளித்துவத்தின் யதார்த்த நிலை இதுதான். இந்த முரண்பாடுகள், சமூக—பொருளாதார அமைப்பு என்ற முறையில் ஏகாதிபத்தியத்தை வீழ்ச்சி அடையச் செய்யும்.

பகைமையுள்ள முரண்பாடுகள் எப்படித் தீர்க்கப்படுகின்றன? அவற்றின் வளர்ச்சியும், பெருக்கமும், அவற்றின் அபிவிருத்தியின் பொதுவான பண்பாகும். இதன்விளைவாக மாறுபட்ட அம்சங்கள், போக்குகளிடையே சச்சரவு தோன்றுகிறது.

எனவே பகைமையுள்ள சமூக சக்திகள், நலன்கள், குறிக்கோள்கள், கண்ணோட்டங்கள் இவற்றிடையேயுள்ள இணக்கங்காண முடியாத முரண்பாடுகளே பகைமையுள்ள முரண்பாடுகள், அவை சண்டை சச்சரவுகளைத் தோற்றுவிக்கின்றன. கடுமையான போராட்டத்தின் மூலம் சமூகப் புரட்சியின் மூலம் அவை தீர்க்கப்படுகின்றன. சமூக உறவுகளின் வரம்பிற்குள், ஒரு

பகைமைக்குத் தீர்வு காணமுடியாது. அவற்றிற்குத் தீர்வுகாண இந்த உறவுகள், புரட்சிகரமான முறையில் ஒழிக்கப் படவேண்டும்.

எனினும், பகைமையுள்ள முரண்பாடுகளைத் தீர்க்கும் முறைகள் எப்போதும் ஒரே மாதிரியானவை என்பதல்ல இதன் பொருள். எந்த நிலைகளின் கீழ் தீர்வு காணப்படுகிறதோ, அந்த நிலைகளைச் சார்ந்து அந்த முறைகள் உள்ளன. எனவே பல்வேறு வரலாற்றுநிலைகளில், பகைமையுள்ள முரண்பாடுகள் பல்வேறு வகைகளில் தீர்க்கப் படுகின்றன என்பதைக் காண்கிறோம்,

பகைமையில்லாத முரண்பாடுகள், பொதுவான உயிர்நிலையான, நலன்களைக் கொண்ட சமூக சக்திகள், போக்குகள், இவற்றிடையே தோன்றுவதால் பகைமையுள்ள முரண்பாடுகளிலிருந்து மாறுபடுகின்றன. உதாரணமாக, ஒரு சோஷலிஸ சமூகத்தில் முற்போக்கானவருக்கும், பின்தங்கியவருக்குமிடையே உள்ள முரண்பாடு அத்தகையதே.

பகைமையில்லாத முரண்பாடுகளைக் கொண்ட சோஷலிஸ சமூகத்தில், அவை கூர்மையடைந்து, ஆழமடைந்து, பகைமையுள்ள எதிர்நிலைகளாக வளர்ச்சி அடையும் போக்கு காணப்படுவதில்லை. அதற்கு மாறாக, எல்லா வர்க்கங்களும் பொதுவான அடிப்படை நலன்களால் இணைக்கப் பட்டிருப்பதால், முரண்பாடுகளைத் தணித்து, அமைதியாகச் சமாளிக்கும் போக்குக் காணப்படுகிறது. அதனால்தான், எப்படி இவ்விரு முரண்பாடுகளும் வேறுபடுகின்றனவோ, அதேபோல, அவற்றிற்குத் தீர்வுகாணும் முறைகளும் வேறுபடுகின்றன. பகைமை இல்லாத முரண்பாடுகள், சமூகப் புரட்சியால், அரசியல் கொந்தளிப்பால் தீர்க்கப்படுவதில்லை. அதற்குப் பதிலாக, போதனையால், விமரிசனத்தால், சுயவிமரிசனத்தால், மற்றும் கம்யூனிச நிர்மாணத்தின் ஸ்தூல

மான சூழ்நிலையிலிருந்து தோன்றும் புதிய முறைகளால் தீர்க்கப் படுகின்றன, சோஷலிஸசமூகத்திலுள்ள முரண் பாடுகள் சரியான சமயத்தில் கம்யூனிஸ்டுக் கட்சியால் வெளிப்படுத்தப்படுகின்றன. அவற்றைத் தீர்ப்பதற்கு ஸ்தூலமான முறைகளையும்கட்சியே கண்டுபிடிக்கிறது. எனவே அவை, பகைமையுள்ள சக்திகள், நலன்கள் இவற்றிடையேயான மோதலாக ஒரு போதும் வளர்ச்சி அடைய முடியாது. ஏனெனில் சோஷலிஸ சமூகத்தில் நலன்களின் ஐக்கியம் இருக்கிறது.

எனவே, சோஷலிஸ சமூகத்தில் பகைமையுள்ள முரண்பாடுகள் இல்லையெனும் போது, அதில் முரண் பாடுகளே இல்லை, என்பதல்லபொருள் என்பதை நீங்கள் காண்கிறீர்கள். எந்த வகையான முரண்பாடுமில்லாத பூரணமான, முழுமுதன்மையான இணக்கம் எப்போதும் தோன்ருது என்று லெனின் கூறினர். “அத்தகைய பிணக்குகள் எப்போதும் இருக்கும். இயற்கையின் வளர்ச்சியிலும், சமூகத்தின் வளர்ச்சியிலும் அவை எப் போதும் இருக்கின்றன”,† என்றும் அவர் எழுதினர். ஆனல் சோஷலிஸத்தின் கீழ் இருக்கும் முரண்பாடுகள் பகைமையற்றவை. அவற்றை இப்போது இருக்கும் சமூக அமைப்பின் வரம்பிற்குள்ளேயே தீர்த்துக் கொள் ளலாம்.

இவ்விதமாக, எதிர்நிலைகளின் ஐக்கியமும், போராட் டமும் எனும் விதி வளர்ச்சியின் உள் மூலத்தை வெளிக் காட்டுகிறது. ஆனல் இந்த வளர்ச்சி எப்படி நடைபெறு கிறது? அது ஒரு நேர் கோட்டிலிருக்கிறதா? அல்லது பழையன கழிந்து, புதியன தோன்றும் நிகழ்ச்சி, அதை விடச் சிக்கலானதா? இந்தக் கேள்விகளுக்கு அடுத்த உரையில் விடை அளிப்போம்.

---

†லெனின்: தேர்வுக் கட்டுரைகள் (மூன்று பாகங்கள்) பக்: 755.




உரை ஏழு

# மறுப்பின் மறுப்பு விதி

ஏதேனும் ஒன்றை மறுத்தல் என்ருல், அதற்கு என்ன பொருள்? நீங்கள் தத்துவம் படித்திராவிட்டால், உங்களது விடை கீழ்க்கண்டவாறு இருக்கும்.

''ஏதேனும் ஒன்று இருத்தலை மறுப்பதே, நீக்குதலே, ஒதுக்குதலே, 'மறுதலித்தல்', எனப்படும். என்னைக் குறை கூறுவதை நான் மறுக்கிறேன்'', என்று நாம் சொல்லும்போது, நான் அதை ஒதுக்குகிறேன், குற்றச்சாட்டை மறுக்கிறேன் என்பதுதான் பொருள்.

இலக்கணத்தில் இந்த எதிர்மறையை—மறுப்பை—'அல்ல' என்ற சொல்லால் குறிப்பிடுகிருேம் என்றும், மறுப்பின் சின்னமாக அடிக்கடி எதிர்ப்படும் சொல் 'இல்லை' என்பதும் உங்களுக்கு நினைவிருக்கும்.

'மறுத்தல்' என்ற சொல்லிற்கு இப்படிப்பட்டதொரு பொருள் இருக்கத்தான் செய்கிறது. என்ருலும், அதை விடப் பொருள் பொதிந்ததும், ஆழ்ந்த கருத்தைக் கொண்டதுமான மற்ருெரு விளக்கமும் அச் சொல்

லிற்கு உண்டு. கீழ்க்கண்ட வற்றிலிருந்து அது தெளி வாகும்.

மறுப்பு என்றால் என்ன?

முதுமை, அழிவு, சாவு எனும் இயற்கை மருமத்தை, நம்மைச் சுற்றி நாம் சதா காண்கிறோம். இயற்கைநிகழ்வுகளில் ஏதேனும் ஒன்றை எடுத்துக் கொள்ளுங்கள்; அதற்கு ஒரு ஆரம் பம் உண்டு; அதாவது ஏதேனும் ஒரு காலத்தில் அது தோன்றியுள்ளது; வளர்ச்சியடைகிறது, மலர்கிறது; பலம் பெறுகிறது; அதன் பின்னர் அது முதுமை அடை கிறது; காலாவதியாகிறது. நிபந்தனைகளற்றதாய் என்றென்றும் புனிதமாக இருப்பதாய் எதுவுமே தர்க்க வியலில் கிடையாது என்று எங்கெல்ஸ் 'லூட்விக் பியூவர் பாக்'கும் பண்டைய ஜெர்மன் தத்துவத்தின் முடிவும்' என்ற நூலில் எழுதுகிறார். எந்தப் பொருளும் தவிர்க்க இயலாதபடி, மறுப்பின், மறைவின் முத்திரை பொறிக்கப்பட்டே உள்ளது; அதை எதிர்த்து நிற்கவோ தொடர்ந்து உருவாகியும் அழிந்தும் வரும் நிகழ்ச்சி யைத் தடுக்கவோ, கீழ்மட்டத்திலிருந்து, உயர் மட்டத் திற்கு முடிவற்று நிகழும் ஏற்ற நிகழ்ச்சியைத் தடுக் கவோ, எதனாலும் இயலாது.

இந்தக் கருத்தின்படி, பொருளாயத உலகில் பழையன கழிதலும் புதியன புகுதலுமான ஒரு இடைவிடாத புதுப்பிக்கும் நிகழ்ச்சி நடைபெற்றுக் கொண்டிருக்கும் உண்மையில்தான் மறுப்பின் சாரம் அடங்கியுள்ளதென்பதை நீங்கள் காணலாம். பழையனவற்றிற்குப் பதிலாக, புதியன தோன்றுவதே அவற்றின் மறுப்பாகும்.

'எல்லா நிகழ்வுகளும் முதுமையையும், அழிவை யும் நோக்கியே செல்வதால் இந்த உலகமும் படிப்படி யாக விரைவிலோ, காலம் கழித்தோ அழிந்துவிடும்

என்பதும் பெறப்படுகிறது என்று நீங்கள் ஒருவேளை கூறலாம்.

இது குறித்து நன்கு தெரிந்து கொள்ள, மறுத்தல் எனும் நிகழ்வு—காலாவதியான முறைகளின் அழிவு—பல உருவெடுக்கின்றது என்பதை மனதில் இருத்திக் கொள்ளவேண்டும். உதாரணமாக, எந்த எந்திரமும் தேய்ந்து விடுகிறது; தூக்கியெறியப்படுகிறது. சாதாரண தினசரிப் பொருளில் நடைபெறும் மறுப்பிற்கு இது ஓர் உதாரணம். ஆனால் வேகமாக மாறும் நவீன தொழில் நுணுக்க வியலுடன் தொடர்புள்ள எவரும் மற்றொரு மிகச் சிக்கலான சார்பு ஒன்றைத் தெரிந்திருப்பர்.

பழக்கத்தின் போது, ஒரு கருவி அதன் நேரடியான ஸ்தூலப் பொருளின்படி மட்டும் காலாவதியாகி விடுவதில்லை. பிரதானமாக அதன் 'தார்மீகப்' பொருளிலும் அது வழக்கொழிந்து விடுகிறது. அதாவது, முன்னேற்றகரமான, சிறந்த பயனுள்ள எந்திர அமைப்புக்கள் தோன்றுவதனாலும், அம்மாதிரி அமைப்புக்கள் மலிவாகத் தயாரிக்க ஆரம்பிக்கப்படுவதனாலோ அல்லது அவற்றுடன் வேறு அதைவிடச் சிறந்த எந்திரங்கள் போட்டிக்கு வருவதனாலோகூட, ஒரு யந்திரம் 'பழமை' யடைந்துவிடுகிறது; மதிப்பிழந்துவிடுகிறது.*

ஒரு எந்திரத்தை வெறுமே அழித்துவிட்டால், அப்படிப்பட்டதொரு மறுப்புச் செயல், புதிய வளர்ச்சிக்கான சூழலைத் தோற்றுவிப்பதில்லை. அப்படிப்பட்ட மறுப்பை நாம் நமது வாழ்விலும் காண்கிறோம்; சில குறிப்பிட்ட சமயங்களில் அது அவசியமானதாகவும் ஆகின்றது. சோவியத் யூனியனின்மீது நாஜிப்படை

*மார்க்ஸ் மூலதனம்- தொ. 1 பக் 404

யெடுப்பு ஏற்பட்ட ஆரம்ப ஆண்டுகளில், சோவியத் மக்கள், தங்களது தானியச் சேமிப்புக்களை எரித்தார்கள்; கட்டடங்களையும், எந்திரங்களையும் அழித்தார்கள்; எதிரியின் கைகளுக்கு அவை சென்று விடாமல் தடுப்பதற்காக அவர்கள் அவ்வாறு செய்யவேண்டியிருந்தது.

எனினும், படைப்பே, தொடர்ந்த வளர்ச்சியே, சரித்திர வளர்ச்சியின் பிரதான போக்கு ஆகும். தொழில் நுணுக்க சாதனத்தின் வளர்ச்சி பற்றியும் காலாவதியான பழைய எந்திரங்களை மறுப்பதன் மூலம் புதியன முன்னேறுவதைப் பற்றியும், நாம் கூறும் போது, ஏற்கனவே இதை விளக்கியுள்ளோம். புதுப்பித்தல் எனும் நிகழ்வு பற்றிய நமது இனிவரும் விளக்கத்தில், இவ்வகையான மறுப்பைப் பற்றித்தான் நாம் பார்க்கப் போகிறோம்.

**மறுப்பின் மறுப்பு.** இயற்கையிலும், சமூகத்திலும் தோன்றும் புதிய நிகழ்வுகளும் இயற்கையான வளர்ச்சி விதிப்படியே செல்லுகின்றன. நாளாவட்டத்தில், அவையும் காலங்கடந்தவைகளாகி விடுகின்றன; மேலும் புதிய நிகழ்வுகளுக்கு இடம் கொடுக்கின்றன. பழங்காலத்தில், அவை பழைமையை மறுதலித்தன, இப்பொழுதோ அதையும் விட எது புதியதோ, இளமையுடைத்தோ பலமுடையதோ அதனால் மறுக்கப்படுகின்றது. இதுதான் மறுப்பின் மறுப்பு, எனப்படுவது. உலகில் ஏற்படும் நிகழ்வுகள் முடிவற்றவை; அவற்றின் மறுப்பும் தொடர்ந்து முடிவற்றுச் சென்று கொண்டேயிருக்கின்றன. அதாவது, மறுப்பின் மறுப்பு தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டேயிருக்கின்றது.

இவையனைத்தின் முடிவுதான் என்ன? கீழ்க்கண்ட உதாரணம் அதை உங்களுக்குக் காட்டும். பயிர்களின்

வளர்ச்சி பல நிலைகளில் நடைபெறுகிறது. விதை முளைத்தல், செடியின் வளர்ச்சி, அதன் முதிர்ச்சி (அறுவடை) ஆகியன. விதை முளைத்தவுடன், மண்ணில் விதை இல்லையாகி விடுகிறது; அது மறுக்கப்பட்டு விடுகிறது. ஆனால் அதன் இடத்தைச் செடி எடுத்துக் கொள்கிறது. அச் செடியின் கிளைகளும் அந்த விதையினின்றும் தோன்றியவையே. அதன் பின்னர் பூக்கள் மலர்கின்றன. மலர்கள் கருவுறுகின்றன; கனிந்து அறுவடைக்குத் தயாராகின்றன. பின், கிளைகள் இறக்கின்றன. இது இரண்டாவது மறுப்பு; ஆக விளைச்சலை தோற்றுவிக்கும் வளர்ச்சிக்கிரியையனைத்தும் மறுப்பின் மறுப்பு ஆகும்.

இந்த மறுப்பு வினை நடைபெறும்போது, மண்ணிலுள்ள விதைகளின் அழிவு மட்டுமின்றி, அதேபோது. புதிய விதைகளின் தோற்றமும்—அதுவும் பத்து அல்லது பனிரண்டு மடங்கு அதிகமாக—ஏற்படுகிறது என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். இந்த விளைவில் மறுப்பின் மறுப்பு எனும் விதியின் சாரம் அனைத்தையும் நாம் காண்கிறோம். இந்த நிகழ்வின் ஆரம்ப நிலை எது? செடியின் விதை. இறுதி முடிவு என்ன? மீண்டும் விதைகளே. ஒரு நிகழ்வு மீண்டும் ஏற்படுகிறது; இதன் மூலம் ஒரு 'சுழற்சி' பூர்த்தியாகிறது. எனினும், வளர்ச்சி ஏற்பட்டுள்ளதென்பதை மறுப்பின் மறுப்பு விதி காட்டுகிறது. தொடக்கத்தில், ஒரு குறிப்பிட்ட அளவு விதைகள் நம்மிடம் இருந்தன. முடிவில் ஏராளமான விளைச்சல்; அப்படியெனில், இது ஒரு எளிய, மீண்டும் மீண்டும் நடைபெறும் நிகழ்ச்சி அல்ல.

நாம் தொடங்கிய இடத்திற்கு வந்து விட்டோம் என்பது உண்மைதான். ஆனாலும், மீண்டும் ஏற்பட்ட நிகழ்வு ஒரு புதிய, உயர் மட்டத்தில் ஏற்பட்டுள்ளது.

அளவிலும், தன்மையிலும், ஆரம்பத்தில் இருந்ததைப் போன்றுதான் தானியம் அறுவடை செய்யப்படுகிறது என்றால், பயிர் செய்வதில் பலன் ஏதுமில்லை. இந்த உதாரணத்தில், நிகழ்வின் ஆரம்பமும் (விதைத்தல்) முடிவும் (அறுவடை) தன்மையளவில் மாறுபட்ட இரண்டு வளர்ச்சிக் கட்டங்கள்; ஒன்று தாழ்ந்தது; மற்றொன்று உயர்ந்தது. இந்த வளர்ச்சியின் விளைவாக ஒரு கிரியை நின்ற இடத்திலேயே குதித்துக் கொண்டிருப்பதில்லை. ஆனால் அது தாழ்ந்ததிலிருந்து உயர்ந்ததற்கு எளியதிலிருந்து சிக்கலானதிற்கு நகர்கிறது.

இவ்வாறாக, வளர்ச்சிப் போக்கில், ஒவ்வொரு உயர்கட்டமும் அதற்கு முன்னுள்ள கட்டத்தை மறுத்து, அழிப்பதுடன் மட்டுமன்றி, அதே நேரத்தில் அதன் வளர்ச்சியிலுள்ள எல்லா நேர்மையான உள்ளடக்கத்தையும் பாதுகாத்து, ஒரு புதிய கட்டத்திற்கு எடுத்துச் செல்வது தான் மறுப்பின் மறுப்பு எனும் விதியின் சாரம் என்று காண்கிறோம்.

மறுப்பு, பாதுகாப்பு ஆகிய இரண்டையும், அழிவு–மேலும் வளர்ச்சி ஆகிய இரண்டையும், தன்னுட் கொண்டது தான் தர்க்கவியல் மறுப்பு. இதுதான் 'மறுப்பு' எனும் சொல்லால் குறிக்கப்படுகிறது.

**தாக்கவியல் மறுப்பு, இன்மை வாதம், சந்தேகவாதம் ஆகியவற்றின் விமர்சனம்.**

எல்லா மறுப்பும், வளர்ச்சியின் மூலாதாரமாக முடியாது என்பது மேற்சொன்னவற்றிலிருந்து தெளிவாகிறது. நாம் ஓரளவிற்கு விவரித்த மேற்கூறிய எளிய உதாரணத்தை எங்கெல்ஸ் கொடுக்கிறார். சாதகமான சூழலில் ஒரு விதையை முளைக்க விட்டு அதைத் தர்க்கவியல் ரீதியாக மறுப்பதற்குப் பதில், அதை வெறுமே அழித்தும் விடலாம். இதுவும் மறுப்புத்தான்; ஆனால் தர்க்க

வியல் மறுப்பு அல்ல; வளர்ச்சிக்கு அது மூலமாக முடி யாது. அந்த அம்சத்தையே நாம் அழித்து விடுகிறோம், அவ்வளவுதான். அப்படிப்பட்ட மறுப்பை லெனின் 'பயனற்ற மறுப்பு' என்றார்.

அதைப் போன்ற மறுப்பு வாழ்விலும் ஏற்படு கிறதா? ஆம்! அடிக்கடி ஏற்படுகின்றது. உதாரணமாக எதையுமே மறுப்பவர்கள், எதையுமே நம்பாதவர்கள் இருக்கின்றனர். அவர்களை இன்மை வாதிகள் எனலாம். வேறு சில மக்கள் எதையுமே சந்தேகிக்கப்பார்கள்; எதிலுமே நம்பிக்கையற்றிருப்பார்கள். அவர்களை 'சந்தே கவாதிகள்' எனலாம். இவர்களும் எதையுமே மறுக்கத் தான் செய்கின்றனர். ஆனால் அவர்களது மறுப்பு, பய னற்ற சந்தேக மறுப்பு; இதுபோன்ற 'வெத்து' மறுப் புக்களை லெனின் எப்பொழுதும் தாக்கி வந்தார்.

அதற்கு முந்திய வளர்ச்சிக் கட்டத்துடன் ஏற்படும் தொடர்பு அம்சமாக, அதன் சாரத்தைத் தருவதாக, உள்ளது முரண் தர்க்க மறுப்பு. வளர்ச்சியின் நிகழ்ச்சி வரிசையை அது வெளியிடுகிறது. மறுப்பு என்பது வளர்ச் சியின் ஊற்றாக இருக்குமானால்தான் நேர்முகமான, வளமான, அரியதான அனைத்தையும் தன்னுள் கொண்டிருந்தால்தான், அது முரண் தர்க்க மறுப்பாகவிருக்கும். மறுப்பு என்பது அத் துடனேயே முடிவடைந்து விடுவதில்லை. மறுப்பிற் காகவே மறுப்பு என்பது இன்மை வாதம். முந்திய வளர்ச்சிக் கட்டத்தை அசட்டை செய்யாமலோ, ஒதுக்கிவிடாமலோ அதன்மேல் வெற்றி காண்பதையே முரண் தர்க்க மறுப்பு குறிப்பிடுகிறது. மறுப்பு என்பது முரண் தர்க்க மறுப்பாக விருக்குமானால், அது வளர்ச் சிக்குத் தடையாக விருப்பதில்லை; மாறாக, வளர்ச்சி யிலுள்ள எல்லா நேரிய அம்சங்களையும் அது பாதுகாக் கிறது. "வெத்து மறுப்பு அல்ல–பயனற்ற மறுப்பு

அல்ல-சந்தேக மறுப்பு அல்ல-ஊசலாட்டமும், சந்தேகமும் முரண் தர்க்கத்தின் விசேஷ இன்றியமையாத முக்கியமான அம்சங்கள் தான். (முரண் தர்க்கத்தில் மறுப்பு அம்சம், அதன் மிக முக்கியமான அம்சமாக உள்ளது என்பதில் சந்தேகமில்லை.) எனினும் மறுப்பு என்பது, தொடர்பேற்படுத்தும் ஒரு அம்சமாக, வளர்ச்சியின் அம்சமாக, ஊசலாட்டங்கள், தன்னிச்சை இணைப்பு வாதங்கள் அற்ற, நேரியனவற்றைப் பாதுகாப்பதாக அமைய வேண்டும்,'§ என்று லெனின் எழுதினர்.

இன்மை வாதிகளும், சந்தேக வாதிகளும் எவ்வாறு நடந்து கொள்ளுகின்றனர்? சோஷலிச அமைப்பின் சாதனைகள் குறித்து பூர்ஷுவாத் தலைவர்களின் நோக்கு பற்றிய உதாரணத்திலிருந்து இதை எளிதில் தெரிந்து கொள்ளலாம். சிலர் அக்டோபர் புரட்சியைப் பகிரங்கமாக எதிர்த்தார்கள். அதன் பின்னர், பல ஆண்டுகளுக்கு, சோவியத் குடியரசு இருப்பதையே ஒப்புக் கொள்ள அவர்கள் மறுத்தனர். ஒரு புதிய சமூகத்தைத் தோற்றுவிப்பதற்கு, தொழிலாள மக்களுக்குள்ள திறமை பற்றி, சந்தேகவாதிகள் சதா ஐயமுற்றுனர்.

முதலாவது ஐந்து ஆண்டுத் திட்டங்களை "கனவு" என்றும், "சாத்தியமற்றது" என்றும் மேலையச் செய்திகள் பழித்து வந்தன. ஆனுல் ஆண்டுகள் சென்றன; இன்மைவாதிகளும், சந்தேகவாதிகளும் வெட்கித் தலைகுனிந்தனர்.

ஸ்புத்னிக்குகளையும், லூனிக்குகளையும் ஒரு சோஷலிச நாடு ஏவியதன் பின்னர், அந்த நாட்டின் வெற்றிகள் குறித்து சந்தேகப்படுவதோ, அல்லது அவற்றை மறுப்பதோ, மிகவும் கடினமாகி விட்டது. சோவியத் வீரர்கள் மேற்கொண்ட விண்வெளிப் பயணத்தைக்

§ லெனின், தொகுப்பு நூல்கள்: தொகுதி 38 பக்கம் 226

கூட "சந்தேகித்த" அப்பட்டமான சந்தேகவாதிகளும், வெட்கத்துடன் பின் வாங்க வேண்டியிருந்தது. இன்மைவாதிகளும் சந்தேகவாதிகளும் தங்களது முறையை அல்லது வழியையே மாற்றிக் கொண்டுள்ளனர். சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் திட்ட அமைப்பில் கண்டுள்ள பொருளாதாரத் திட்டங்களை இப்பொதெல்லாம் அவர்கள் பகிரங்கமாக மறுப்பதில்லை; அத் திட்டங்கள் பற்றி அவர்களுக்கு "பெறும்" ஐயப்பாடுகள் தோன்றுகின்றன; அவ்வளவுதான். மக்களுக்கு நிறைவு ஏற்படுத்த முடியும் என்று அவர்கள் "நம்பவில்லை." மனதிலே மகிழ்ச்சி என்பது அடையக்கூடிய இலட்சியம் தானு என்பதை அவர்கள் "சந்தேகிக்கின்றனர்".

சோவியத் யதார்த்தம் பற்றி மட்டுமே இந்த இன்மைவாதப்போக்கு புலனுகிறது என்பதல்ல. விஞ்ஞானம் தொழில் நுணுக்கஇயல், தத்துவயியல்,- ஏன்?- மனித சிந்தனையின் வரலாறு முழுவதிலுமே ஏற்பட்டுள்ள வளர்ச்சியின் நேரிய அம்சங்கள் அனைத்தையும் மறுக்க முயலும், குட்டி-பூர்ஷுவா அராஜகப் போக்கினை, என்றுமே கம்யூனிஸ்டுக் கட்சி எதிர்த்துப் போராடி வருகிறது.

உலக கலாசாரம் குறித்த ஏளனப் போக்கு, சாதாரண மக்களிடமிருந்து கற்க மறுத்து, பிறருக்குப் போதனை செய்யும் முயற்சி, இறுமாப்பு ஆகியவற்றை எதிர்த்துக் கம்யூனிஸ்டுக் கட்சி என்றுமே போராடி வந்துள்ளது; போராடியும் வருகிறது.

உதாரணமாக, அக்டோபர் புரட்சிக்குப் பிந்திய ஆரம்ப ஆண்டுகளில் "புரோலெத்குல்த்" என்ற தொழிலாளர்களின் கலாசார, கல்வி கழகங்களின் இணைப்பு ஸ்தாபனம் ஒன்று இருந்தது. அதைப் பின்பற்றியவர்

கள், பழைய கலாசாரமனைத்தையும் புதிய சோஷலிசக் கலாசாரம் பூரணமாக மறுத்து விட வேண்டும் என்று கருதினர். போல்ஷாய் அரங்கும், மாஸ்கோ கலை அரங்கும், நிலப்பிரபுத்துவ பூர்ஷுவா ருஷ்யாவில் தோன்றின என்பதாலும், தொழிலாளி வர்க்கத்திற்குப் புதிய இலக்கியமும் புதிய கலையும் தேவை என்பதாலும், அவ்வரங்குகளை மூடிவிட வேண்டும் என்று ''புரோலெத்குல்த்'' பிரேரேபித்ததிலிருந்து, அந்த ஸ்தாபனத்தின் சூன்யவாத நடவடிக்கைகள் அடைந்த பயங்கரப் போக்கை நாம் புரிந்து கொள்ள முடியும்.

புரோலெத்குல்த்'' சித்தாந்தவாதிகளின் மார்க்சீய விரோதக் கருத்துக்களை லெனின் தீவிரமாகத் தாக்கினர். தொழிலாளி வர்க்கக் கலாசாரம் என்பது வெறுமையிலிருந்து தோன்றுவதல்ல: ஆனல் அதற்கு முந்திய கலாசார வளர்ச்சியனைத்தின் இயற்கையான விளைவே அது என்பதை அவர் எடுத்துக் காட்டினர். சோஷலிசக் கலாசாம், பூர்ஷுவாக் கலாசாரத்தை மறுக்கிறது; அழிக்கிறது: ஆனல், அந்தக் கலாசாரம் தோற்றுவித்த மதிப்பிற்குரிய நல்லனவற்றையெல்லாம் பாதுகாக்கும் வழியில், அது மறுக்கிறது. பூர்ஷ்ஷுவாக் கலையின் முரண்தர்க்க மறுப்பை லெனின் இப்படித்தான் விளக்கினர்.

மக்களுடன் உறவு, சார்பு ஆகிய கோட்பாட்டின் அடிப்படையில் எழுந்த சோஷலிச யதார்த்த வாதம், உலக கலாசாரத்தின் எல்லா முற்போக்குப் பாரம்பரியத்தின் பயன்கள், வளர்ச்சி ஆகியவற்றுடன், வாழ்வைக் கலையழகுடன் சித்திரிக்கும் துணிகரமான புதுமையைக் கலப்பதே என்று சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் திட்டம் குறிப்பிடுகிறது.

ஆக்கவோ, படைக்கவோ திறனற்ற அழிவுவாதிகள் கம்யூனிஸ்டுகள் என்று மார்க்சீய விரோதிகள் வர்ணிக்கின்றனர். ஆனால், கம்யூனிசம் என்ற புதிய, மிக நேரிய சமூக அமைப்பைத் தோற்றுவிப்பதற்காக, மக்களால் வெறுக்கப்பட்ட சுரண்டும் அமைப்பை அழித்தவர்கள் கம்யூனிஸ்டுகளே.

ஆக்க நோக்கத்திற்காகவே, கம்யூனிஸ்டுகள் எப்பொழுதும் மறுப்பைப் பயன்படுத்துகின்றனர். உலகை மாற்றிப் புதுப்பிக்கும் ஒரு மாபெரும் ஆக்க சக்தியாக கம்யூனிஸ்டுகள் மனிதகுல வரலாற்றில் இடம் பெற்றுள்ளனர். பிற்போக்கான, காலாவதியான அனைத்தும் அவர்களால் மறுக்கப்படுகிறது. மதிப்பு வாய்ந்ததனைத்தும் அவர்களால் பாதுகாக்கப்படுகிறது.

பிறநாடுகளின் அனுபவத்தில் பயனுள்ளனவற்றை சோஷலிச நாடுகள் ஒதுக்கித் தள்ளுவதில்லை; ஆனால், அவற்றைத் திறனாய்வுடன் மதிப்பீடு செய்து, மேலைய நாடுகளின் தொழில் நுணுக்கவியலும், உற்பத்தி ஸ்தாபனங்களிலும் மதிப்புவாய்ந்த அனைத்தையும் ஸ்வீகாரம் செய்து கொள்கின்றன. பொருளாதார, கலாசார துறையின் எல்லாப் பிரிவுகளையும், வெற்றிகரமாக வளர்ச்சியடையச் செய்யும், அளப்பரும் ஆற்றலையும், சாத்தியப் பாட்டினையும் பெருமளவு பெற்றுள்ளது சோஷலிச சமூகம். அதே போது, பிறநாடுகளின் விஞ்ஞான, தொழில் நுணுக்கவியல் சாதனைகளை மறுத்து அவை குறித்து ஒரு இன்மைவாத நோக்கினைக் கொள்வது பெரும் தவறாகும்.

மார்க்சிச தத்துவ இயல் மாணவர்கள் வினவலாம்: "உங்களுக்குப் பிடித்தமான கூற்றுஎது?" என்றுமார்க்ஸைக் கேட்ட பொழுது அவர் கூறிய சொற்கள் "எதையுமே சந்தேகிப்பது;" என்று நாம் அறியும் போது. ஏன்

இந்த சந்தேகவாதத்தை இத்துணை கண்டிக்க வேண்டும்?'' லெனின் கூட, முரண் தர்க்க வியலில் ஓரளவு சந்தேக வாதம் கலந்துள்ளது; என்று மீண்டும் மீண்டும் கூறி வந்துள்ளார். இந்தக் கோட்பாடுகள் (எண்ணங்கள்) சிலபோது வெவ்வேறு கருத்துக்களில் பொருள் கொள்ளப்படுகின்றன என்பதை மனதிலிருத்திக் கொண்டால் இதைப் புரிந்து கொள்ள முடியும்,

மேற்கூறப்பட்ட, மார்க்ஸ், லெனின் இவர்களது கூற்றுக்களில் காணப்படுவது முரண்தர்க்க மறுப்பும், அறிவார்ந்த சந்தேக வாதமும் ஆகும். இதுதான் யதார்த்த்தை நோக்கிய மார்க்சீய அணுகல் முறையின்பிரிக்க முடியாத அம்சம் ஆகும். குருட்டு நம்பிக்கைக்கும், சிந்தனையற்ற வரட்டுத் தத்துவவாதத்திற்கும் முரண்தர்க்கம், இயல்பாகவே, எதிரானது.

யதார்த்தம் பற்றிய வரட்டுத் தத்துவக் கண்ணோட்டத்தை, எதையும் நம்பிக் கொள்வதை, கம்யூனிஸ்டுக் கட்சி எதிர்க்கிறது. அறிவார்ந்த சந்தேகவாத அம்சம் இங்கு இன்றியமையாதது. யதார்த்தத்தை, அறிவார்ந்த ஐயத்துடன் அணுகுவது, உலகைப்பற்றிய வளமான நோக்கைப் பெற உதவும். இதுதான், மேற்கூறப்பட்ட மார்க்சிஸ்டு வாசகத்தின் சாரம்.

அறிவார்ந்த ஐயப்பாட்டிற்குப் பதிலாக, வெறுமையான சந்தேகவாதத்தைப் புகுத்துவது கிட்டத் தட்ட இன்மைவாதத்திற்கு ஒப்பாகும்.

இன்மை வாதத்திலிருந்து, வளமான சந்தேக வாதத்தைப் பிரிக்கும் எல்லையைத் தெரிந்துகொள்வது நடைமுறை நடவடிக்கைகளுக்கு மிக முக்கியமானது. ''எனது ஐயப்பாட்டின் நோக்கம் என்ன? அழிவா, ஆக்கமா?'' என்று ஒருவன் தன்னைத் தானே எப்பொழுதும் கேட்டுக் கொள்ள வேண்டும்.

முரண்தர்க்கத்தில் ஓரளவு சந்தேகவாதம் கலந்திருந்தபோதும் அதனை சந்தேகவாதமாகவே குறைத்து விட முடியாது என்று லெனின் போதித்தார். பயனற்ற ஐயப்பாடுகள், நேரிய எதையுமே கொடுப்பதில்லை. அதற்கு எவ்விதப் பயனும் கிடையாது. இந்த வகை சந்தேகவாதிகள் பற்றி பெலின்ஸ்கி சில சிறந்த குறிப்புக்கள் தந்துள்ளார். “தாழ்ந்த உள்ளங்களே, தகுதியற்றமக்களே, தங்களது சந்தேகவாதத்தை உயர்த்திப் பிடித்து, அதை ஒரு நவ நாகரீகப் போர்வையெனத் தம்பட்ட மடித்து, தங்களுக்குள்ள ஒரு விசேஷத் தகுதி அதுவெனப் பெருமையடித்துக் கொள்கின்றனர். சோம்பேறிக் கூட்டத்தை உற்சாகப் படுத்த எண்ணும் கோமாளிகள்தான் எதையுமே விளையாட்டாகவும் ‘ஜாலி’யாகவும் சந்தேகப்படுகின்றனர். அவர்களது அந்த சந்தேகம் குறித்து அவர்களுக்கே வேடிக்கையாகவும், இருக்கும்...அதனால் அவர்களுக்கு எந்தவிதக் கஷ்டமும் கிடையாது. ஆனால், விஞ்ஞானம், பகுத்தறிவு கலை ஆகிய ஒவ்வொன்றிற்கும் எதிராக, கிண்டல்களையும், சொற்சிலம்பங்களையும் வீசுவதில் என்ன மதிப்பு, தகுதி இருக்க முடியும்?” என்கிறார் அவர்.

மறுப்பின் முரண்நிலை தர்க்கத் தன்மையைசரியான படி புரிந்து கொள்வது சிந்தனையற்ற வரட்டுத் தத்துவ வாதத்திற்கும், இன்மைவாதம், சந்தேகவாதம் இவற்றிற்கும் எதிரான நம்பகமான பாதுகாப்பாகும்.

வளர்ச்சியின் முற்போக்கான தன்மையைப் பற்றிய அறிவுடன் பிணைக்கப்பட்டுள்ள மறுப்பின் மறுப்பு விதியின் சாராம்சத்தை, மேலும் ஆழ்ந்து ஆராய மேற்கூறியவை நமக்கு உதவுகிறது. இந்தப் பிரச்சினையைப் பற்றிச் சற்று ஆராய்வோம். ஆதி மனிதன், தொழிற் கருவிகளை ஆக்கியதன் மூலம் தனது உழைப்புக் கிரி

வளர்ச்சியின் முற்போக்குத்தன்மை

யைத் தொடங்கினுன் என்பது உங்களுக்குத் தெரியும். வரலாற்று வளர்ச்சியின் ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் கற்கருவிகளுக்குப் பதிலாக, உலோகக் கருவிகள் உபயோகத்திற்கு வந்தன. பிற்கூறப்பட்டது முற்கூறியதற்கு ஒரு வகையில் மறுப்பாகும்; எனினும் கற்கருவிகளிலிருந்த அரிய தன்மைகளனைத்தையும், உதாரணமாக, அவற்றின் கூர்மை, அமைப்பு (கற்கோடரி, இரும்புக் கோடாரி போன்றவை) ஆகியவற்றை, உலோகக் கருவிகள் ஏற்றுக் கொண்டன.

உற்பத்திக் கருவிகளின் வளர்ச்சியில், எந்திரங்கள் கண்டு பிடித்தது ஒரு புதிய முற்போக்கான படியாகும். எந்திரத்தறியின் ஆரம்பகால அமைப்பு, பழைய கைத்தறியை நினைவூட்டும் என்று மார்க்ஸ் மூலதனம் எனும் நூலில் குறிப்பிடுகிறுர். எந்திரத்தறி, கைத்தறியின் மறுப்பு ஆகும்; ஆனுல், பழைய கைத்தறியின் தத்துவத்தை ஓரளவிற்கு, புதியதறி பாதுகாப்பதால், இது ஒரு முரண்தர்க்க மறுப்பு. எந்திரங்களைப் பொறுத்த மட்டில் எப்பொழுதும் இது போன்றே நடைபெறுகிறது. புதிய எந்திரங்கள் பழையனவற்றை மறுக்கின்றன; ஆனுல் முந்தைய உற்பத்தியின்போது பெற்ற அனுபவத்தின் அரிய அம்சங்களை நிச்சயமாகக் அவை கட்டிக்காக்கின்றன.

வளர்ச்சிப் போக்கு எவ்வாறு செல்கின்றதென்பதைக் கவனியுங்கள். ஆதிகாலத்தில், மக்களிடம் புராதன (கற்களாலானவை) கருவிகளே இருந்தன. தற்போது, நம்மிடம் அணுசக்தி நிலையங்களும், ஜெட்யந்திரங்களும், இன்னும் பல்வேறு அமைப்புக்களும் உள. ஆகவே, தொடர்ந்து ஏற்பட்ட மறுப்புப் போக்கு ஆதிகாலத்திலிருந்ததைவிட அளவிடமுடியாத அளவிற்கு

மேம்பாடான விளைவுகளை படிப்படியாகக் கொடுத்துள் ளது. இவ்வாறாக, மனித குலம் தனது நீண்ட வளர்ச்சி சிப் பாதையில் முன்னேறிச் சென்றுள்ளது.

இந்த முறையின் பாதை எது? ஆதிகாலத்திலி ருந்து, நவீன தொழில் உத்திகள் வரை ஒருமானசீக மான கோடு வரைந்து பார்த்தால், விளைவுகளைப் பற்றிய தெளிவான கருத்து ஏற்படும். இந்தக்கோடு, நிச்சயமாக ஒரு ஏற்றக் கோடாகத்தான் இருக்கும்· உத்திகள் மேன் மேலும் பூரணத்துவம் பெற்றுள்ளன; அலங்காரமாகச் சொல்லப்போனால் மேன்மேலும் உயர்ந்துள்ளன. அவற் றை ''உயர்ந்த தொழிலுற்பத்தி உத்திகள்'' என்று கூறுவது மிகையாகாது. மறுப்பின் மறுப்பு எனும் விதி யின் விளைவாக நிகழும் எல்லாவித வளர்ச்சிப் போக் கும் இதே தன்மையுடையதுதான். மொத்தத்தில் அது கிரியையை வளப்படுத்தி மேம்படுத்துவதனால்தான் வளர்ச்சியின் உயர் மட்டம் உயர்ந்ததாக இருக்கிறது. இதுவே முரண்தர்க்க மறுப்பின் பிரதான அம்சமாகும். இதிலிருந்து முக்கியமான ஒரு முடிவு ஏற்படுகிறது. அதாவது, மறுப்பின் மறுப்பு விளைவாக ஏற்படும் வளர் சிக்கு ஒரு முற்போக்கான, முன் செல்லும் தன்மை உள்ளது.

இயற்கை, மனித சமூகம் ஆகிய இரண்டின் வளர்ச் சிக்கும் இந்த முடிவு பொருந்தும். இயற்கையில், அனங் ககக் கட்டத்திலிருந்து, உயர் அங்ககக் கட்டத்திற்கு மாறுபாடு ஏற்பட்டுள்ளது. பிராணிகள் இனத்தில் ஆதி உயிர்ப்பொருள்களிலிருந்து, மனிதனின்தோற்றம்வரை பரிணாம வளர்ச்சியும் ஏற்பட்டுள்ளது. சமூகத்தில், ஆதி கம்யூனிசத்திலிருந்து, கம்யூனிசத்தின் முதற்படியாகிய சோஷலிசம் வரை பாதை நீள்கிறது. விஞ்ஞான வளர்ச் சியிலும் நாம் இதனையே காண்கிறோம். நவீன விஞ்ஞா

னம் மனிதனுக்களித்துள்ள அறிவுடன், உலகைப் பற்றிய ஆதி மனிதனின் அறிவை ஒப்பிடவே முடியாது.

இதே போக்கினை, இதே ஒழுங்கு முறையை—வளர்ச்சி முந்போக்கானது என்பதை - அதாவது, தாழ்ந்தனவற்றிலிருந்து உயர்ந்தனவற்றிற்கு, எளியனவற்றிலிருந்து, சிக்கலானவற்றிற்கு வளர்ச்சி ஏற்படுகிறது என்பதை நாம் எங்கணும் காண்கிறோம். மறுப்பின் மறுப்பு விதியின் சாரம் இதுவே.

மார்க்சிய லெனினிய உலகக் கண்ணோட்டத்தின் ஒரு முக்கியமான அம்சத்தை—அதன் நம்பிக்கை மிக்க போக்கை—இந்தப் போக்கு, இந்த விதிதான் தீர்மானிக்கிறது. மறுப்பைப் பற்றிய முரண் தர்க்கக் கண்ணோட்டத்திலிருந்து நேரடியாகத் தொடர்வது அது. பயனற்ற மறுப்பை அங்கீகரிக்க மறுக்கும் எவரும், மறுப்பு என்பது வளர்ச்சியின் ‘செவிலித்தாய்’ என்பதை உணரும் எவரும், பொருள்களைப்பற்றிய பரந்த நன்னம்பிக்கை நோக்கையே கொள்ள முடியும். அதுதான் நமது உலகக் கண்ணோட்டத்தின் தன்மையும் ஆகும்.

ஆனால், கருத்துமுதல்வாத பூர்ஷுவா உலக நோக்கைப் பின்பற்றுபவர்கள், இதனின்றும் முற்றிலும் மாறுபட்ட கருத்தைக் கொண்டுள்ளார்கள். அது தோல்வி மனப்பான்மையை அளிக்கிறது; அதாவது, வாழ்வு பற்றிய இருண்ட உற்சாக மற்ற நோக்கு அது. முதலாளித்துவ உலகம் நொறுங்கி வீழ்ந்து கொண்டிருப்பதைக் கண்ணுறும்போது, இந்த சமூக அமைப்பின் வீழ்ச்சி, நாகரீகத்திற்கும், சிந்தனைக்கும், பொதுவாக மனிதத்துவத்திற்கே ஏற்பட்டுள்ள ஒரு நெருக்கடி என்று சில பூர்ஷுவா தத்துவார்த்திகளும், சமூக இயலாளர்களும் கற்பனை செய்து கொள்ளுகின்றனர். ‘‘அணுப் பிரளயம்’’ பற்றியும், ‘‘நாகரீகத்தின் அழிவு’’ பற்றியும், ‘‘உலகத்தின் அழிவு,’’ பற்றியும் அவர்கள்

பேசுகின்றனர். முன்னேற்றம் குறித்தும், மனித சமூகத்தின் முற்போக்கு வளர்ச்சி குறித்தும் மேலைய நாடுகளின் நவநாகரீகமான மறுப்பில் அடங்கியுள்ள தென்ன என்பதை இதிலிருந்து நீங்கள் தெரிந்து கொள்ளலாம். 'முன்னேற்றம்' என்ற பதம்கூட சில வேளைகளில் பின்னணிக்குத் தள்ளப்பட்டுவிடுகிறது. 'முன்னேற்றம்' என்ற சொல்லிற்குப் பதிலாக, 'மாற்றம்' என்ற சொல்லே பயன்படுத்தப்பட வேண்டும் என்று, மூன்றாவது சர்வதேச சமூகவியல் காங்கிரஸில், பூர்ஷுவா சமூகவியலாளரான லியோபால்டு வான்வீஸ் பிரேரேபித்தார். இரண்டு உலக யுத்தத் துன்பியல் பாதை வழி கடந்து வந்துள்ள மனித குலத்திற்கு அப்படிப்பட்ட நிதானமான, சந்தேகச் சொல் மிகப் பொறுத்தமுடையதாக விருக்கும் என்று அவர் விளக்கினார். ஆனால் பூர்ஷுவா தத்துவார்த்திகளின் இந்தக் கூற்றுக்களை விஞ்ஞானமும், நடைமுறை வாழ்வும் மறுக்கின்றன. இயற்கையும் மனித சமூகமும் முற்போக்குவளர்ச்சி பெறுவதும், முன்னேறுவதும் நிதர்சனமான மீளமுடியாத விதி. அது எவ்வாறு இயங்குகிறது?

**சுருள் வளர்ச்சி**

"சரித்திரம் சகடை போன்றது" என்ற ஒரு வாசகத்தை அனைவரும் அறிவார்கள். சரித்திரப் போக்கின் அம்சங்களில் ஒன்றை அது குறிக்கிறது. உழைப்புக் கருவிகள் சமூக, கூட்டு உடைமையாக இருந்ததிலிருந்து, மனித குலம் தனது வளர்ச்சியைத் தொடங்கிற்று. ஆயிரக்கணக்கான ஆண்டுகள் கழிந்துவிட்டன; சோஷலிசம், கம்யூனிசத்தின் கீழ் மீண்டும் அதே நிலை ஏற்படுகிறது: சமூக உறுப்பினர்கள், தங்களது உழைப்பின் விளைவைக் கூட்டாக அனுபவிக்கின்றனர்.

இங்கு ஒரு மீள்வினை ஏற்படத்தான் செய்கிறது. இதைப் போன்று பல உதாரணங்கள் கொடுக்கமுடியும். உலகில் வளர்ச்சி ஒரு சுழல் வடிவத்தில், வட்ட அமைப்பில் தான் ஏற்பட்டு வருகிறது என்பதை நிரூபிக்கும் பொருட்டு, பூர்ஷுவா தத்துவார்த்திகளும் மதவாதிகளும் இந்த உதாரணங்களை உபயோகிக்கின்றனர். இந்தப் பேருலகில் புதியது என்று ஒன்றுமே யில்லை; எல்லாம் வெறும் மீள்வினைகள்தான்; வெறும் சுழற்சி தான்.

17-வது நூற்றுண்டின் பிற்பகுதியிலும், 18-வது நூற்றுண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்த இத்தாலிய தத்துவார்த்தியான ஜியோவானி விக்கோ என்பார் இந்த சுழல் தத்துவத்தின் ஒரு விரிவுரையாளர். அவரது கருத்தின்படி எல்லா மக்களும், மனித வாழ்வில் காணப்படும் மூன்று பருவங்களான குழந்தைப் பருவம், வாலிபப் பருவம், முதுமை ஆகிய மூன்று காலகட்டத்தைக் கடக்கின்றனர். மலர்ச்சிக் காலகட்டம் கழிந்து, அதன் பின்னர் சமூகம் வீழ்ச்சியடைகிறது. அதவாது, சமூகம் அதன் ஆதி நிலையை அடைகிறது. ஒரு சுழற்சி பூர்த்தியாகிறது; பின்னர் சமூகம் ஒரு புதிய வளர்ச்சிச் சுழலைத் தொடங்குகிறது; ஆனால் அதுவும், முன்னதைப் போன்றதே.

விக்கோவின் கருத்துக்களில் சில முற்போக்கான அம்சங்களும் காணப்படுகின்றன; வரலாற்றுப் போக்கு புறவய விதிகளால்தான் நிர்ணயிக்கப்படுகின்றதென்று அவர் அங்கீகரித்தார்; மேலும், அவரிடம் வரலாற்று ரீதியான ஒரு நம்பிக்கை இருந்தது; எனினும், தற்கால பூர்ஷுவா வரலாற்றியலாளர்களும், தத்துவார்த்திகளும், சுழல் தத்துவத்திலுள்ள பிற்போக்கு அம்சங்களிலேயே தங்கள் கவனத்தைக் குவிக்கின்றனர்.

உதாரணமாக, ஒவ்வொன்றும் பிறப்பு, வளர்ச்சி, அழிவு என்னும் அதே கட்டங்களைக் கடக்கும் பல தனிப்பட்ட சுதந்திர நாகரீக அமைப்புக்களாக மனித சமூக வரலாற்றை விளக்குகிறார் பிரிட்டிஷ் வரலாற்றிய லாளரான ஆர்னால்ட் டோன்பி என்பார். இப்படிப்பட்ட தத்துவத்திற்கு எவ்வித உண்மையான அடிப்படையும் கிடையாது. ஏனெனில், தற்காலத்தில் சமூகத்தின் முற்போக்கு வளர்ச்சி பற்றி அனைவரும் அறிவர்.

"அது எவ்வாறிருக்க முடியும்? வரலாற்று வளர்ச்சி யின்போது, ஒரு குறிப்பிட்ட மீள்வினை,—பழமைக்குத் திரும்புவது,—ஏற்படுகிறது என்று நீங்களே மேலே கூறவில்லையா? அதை ஏன் நாம் இப்போது மறுக்க வேண்டும்?" என்று நீங்கள் வினவலாம்.

மறுப்பின் மறுப்பு ஏற்படும்போது, பழமைக்குத் திரும்பிவருதல் யதார்த்தத்தில் காணப்படுகிறது என் பது உண்மைதான். உதாரணமாக, ஆதி கூட்டுசமூகத் தின் கீழும், கம்யூனிசத்தின் கீழும் சமூக உடைமை என் பதை சற்று நினைவு படுத்திப் பாருங்கள். இந்த வினை, மேல் தோற்றத்திற்கு பழைமைக்குத் திரும்புதல்போலத் தோன்றுகிறது. உண்மையிலேயே, மிகச் சிக்கலான ஒரு உறவை மங்கச் செய்யும், ஒரு மேலெழுந்த தோற் றம்தான் இது. யதார்த்த உண்மை என்னவெனில், இங்கு எந்த விதமான பின்வாங்குதலும் இல்லை.

மிக உயர்ந்த வளர்ச்சியுற்ற தொழில் நுணுக்கத் தையும் பிரம்மாண்டமான உள்ளாற்றல்களையும் கொண்ட கம்யூனிசத்தின் கீழ் சமூக உடைமை என்பது ஆதி சமூக அமைப்பிலிருந்த சமூக உடைமையினின்றும் முற்றிலும் மாறுபட்டது. கம்யூனிச சமூக அமைப்பா ளர்களின் வாழ்வு, ஆதிமனிதனின் வாழ்விலிருந்து வேறுபட்டது. இது எவ்வகையிலும் பழமைக்குத்

திரும்புவதாகாது. "பின்னேக்கிய இயக்கம்'' என்ற புறத்தோற்றத்தின் பின்னேயுள்ள, மெய்யான முற்போக்கு வளர்ச்சியினை வேறுபடுத்த வேண்டும். இது குறித்து செர்னிஷெவ்ஸ்க்கி கீழ்வருமாறு எழுதினுர். "உயர் வளர்ச்சிக் கட்டம் என்பது தோற்றத்தைப் பொறுத்த அளவில், முன்பிருந்த ஆரம்பவளர்ச்சிக் கட்டத்திற்குத் திரும்புதல்தான். ஆனுல், உருவத் தோற்றங்கள் ஒன்ரு யிருந்தாலும்கூட, முடிவில் ஏற்பட்டுள்ளதன் உள்ள டக்கம் அளப்பரும் வளமுடையது: தொடக்கத்திலிருந் ததைக் காட்டிலும் உயர்ந்ததும் ஆகும்.''

மறுப்பின் மறுப்பு என்பதன் விளைவு தோற்றத்தில் பழமைக்குத் திரும்புதல் ஆகும் என்று லெனின் வலி யுறுத்திஞர். உருவைப் பொறுத்த மட்டில் தான் அது அவ்வாறு உள்ளது; சாராம்சத்தைப் பொருத்து அல்ல; ஏனெனில் அந்த நிகழ்வு செழுமையாக்கப்பட்ட தோடு, உயர் மட்டத்திற்கும் சென்றுள்ளது.

எனவே, 'வரலாறு திரும்புகிறது' என்ற முது மொழி, மெய்யான வளர்ச்சிப் போக்கின் ஒரு குறிப் பிட்ட அம்சத்தை சரியானபடி விளக்குகிறது; அதை அப்படியே பொருள் கொண்டால் அது ஒரு பெருந்தவ ருகும். முற்போக்கான வரலாற்று வளர்ச்சியில், எல்லா வகைகளிலும் ஒரே மாதிரியான கட்டங்கள் இரண்டு இருக்க முடியாது. மறுப்பின் மறுப்பு எனும் நியதியின் விளைவாக, முன்னர் காணப்பட்ட வரலாற்று உருவங்க ளின் சில குறிப்பிட்ட குணும்சங்களும், தன்மைகளும் மட்டுமே மீண்டு வரும்; உயர் மட்டத்தில் அவை மீண் டெழும். வளர்ச்சி ஒரு வட்டத்தில் நிகழ்வதல்ல என்ப தையே இது காட்டுகிறது.

இந்த சந்தர்ப்பத்தில் மற்ருெரு கேள்வி எழலாம். வளர்ச்சி முற்போக்கானது என்ருல், தாழ்ந்தனவற்றிலி

ருந்து, உயர்ந்தனவற்றிற்குச் செல்வது என்ருல், இது ஒரே நேர்கோட்டில் செல்கிறதா அல்லது அது அதை விடச் சிக்கலானதொரு நிகழ்வா?

வளர்ச்சியின் முற்போக்கான இயல்பு பற்றிய கருத்து வரையறையை ஆதரிக்கும் போதே, வரலாற்று வளர்ச்சி ஒரே நேர்கோட்டில் தான் செல்கின்றதென்று மார்க்சீசம் கருதவில்லை. வரலாறு, நேர்கோட்டில் முன்னேறவில்லை; அதில் பிரம்மாண்டமான குறுக்கீடுகளும், நெளிவு சுளிவுகளும், திடீர்த் திருப்பங்களும் உள்ளன. பின்னேக்கிய இயக்கமும் வரலாற்றில் ஏற்படுகின்றது. அதுபோன்ற காலத்தில், குறிப்பிட்ட ஒரு நாட்டிலோ, அல்லது பல நாடுகளிலோ, வெற்றிபெறுவது முற்போக்கு சக்திகளல்ல; பிற்போக்கு சக்திகளே; உதாரணமாக, நாஜி ஜெர்மனியில் ஏற்பட்டதைப் போன்று பிற்போக்கு சக்திகள் வெற்றி பெறுகின்றன. ஆனுல் இந்த பின்னேக்கிய இயக்கம், வரலாற்று வளர்ச்சியின் பொதுப்போக்கினை மாற்றிவிடாது; அது மொத்தத்தில் முற்போக்குப் பாதையில், ஏறுமுகத்தில்தான் செல்கிறது.

இயற்கை, சமூகம் இவற்றின் வளர்ச்சியை, ஒரு சுருளுடன் ஒப்பிட்டு மிகத் தெளிவாகப் புரிந்துகொள்ளலாம். அதில் பல வளையங்கள் உண்டு; ஆனுல் அவை ஒன்றுடன் ஒன்று இணைவதில்லை; மீண்டு வருவதுமில்லை. சுழற்படிகளில் ஒருவன் ஏறினுல், அவன் ஒரு வட்டத்தில் செல்வது போலத் தோன்றுகிறது; ஆனுல், உண்மையில் அவன் உயர, உயரச் சென்று கொண்டிருக்கிருன். இந்த உவமை மறுப்பின் மறுப்பு விதியின் சாரத்தை நன்கு விளக்குகிறது.

ஆக, வளர்ச்சி ஒரு சுழற்பாதையில் செல்கிறது. ஒவ்வொரு திருப்பத்திலும், அந்தப் போக்கை ஒரு உயர்மட்டத்திற்கு எடுத்

துச் செல்லும், பண்பியலான ஏதேனும் ஒரு புதியது தோன்று கிறது.

இப்பொழுது நீங்கள் கேட்கலாம்: மறுப்பின் மறுப்பு என்பதன் விளைவாக ஒவ்வொரு நிகழ்வும் ஒரு உயர்மட்டத்திற்கு எடுத்துச் செல்லப்படுகிறதென்றால், கம்யூனிசத்திற்குப் பின்னர் என்ன நிகழும்? அந்த சமூகமும் மறுக்கப்படுமா? இக்கேள்வி அடிக்கடி எழு கிறது. மார்க்சிஸ்டுகள் இதற்குக் கீழ்கண்டவாறு பதிலளிக்கிறார்கள்; கம்யூனிச உறவுகள் நிறுவப்படுவ தென்பது, ஒரு சமூக-பொருளாதார அமைப்பிலிருந்து மற்றொன்றிற்கு வெறுமே நிலைபெயர்வது அல்ல; ஆனால் பல அமைப்புக்களைக் கொண்ட சமூக வரலாற்று முற்காலத்திலிருந்து அதன் உண்மையான (மெய்யான) வரலாற்றிற்கு நிலை பெயர்வதாகும்.

கம்யூனிசம் வரலாற்றின் ஒரு பருவமோ, அல்லது நிலை பெயர்வின் ஒரு இடைக்கட்டமோ அல்ல. கம்யூனிச உறவுகள் நிறுமிக்கப்படுவது ஒரு புதிய, உண்மையான உணர்வுபூர்வ மனிதகுல வரலாற்றின் தோற்றமாகும். அதற்குப்பின் வரும் எல்லா வரலாற்று மாற்றங்களும், அதன் பல்வேறு நிலைகளாகத்தானிருக் கும். வரலாற்று வளர்ச்சி, அண்மைக்காலத்திலோ, சேய்மைக் காலத்திலோ, கம்யூனிசத்தை மறுக்கும் பிரச்சினையை எழுப்பும் என்று கூறுவது, தொழில் நுணுக்க முன்னேற்றத்தின் விளைவாக பெரும் எந்திரத் தொழிலே மறுக்கப்படும் என்று கொள்வதைப் போன்று அவ்வளவு அபத்தமானது.

“இப்பொழுது முரண்தர்க்கத்திற்கும் விஞ்ஞான கம்யூனிசத் தத்துவத்திற்குமிடையே முரண்பாடு உள்ளது” என்று மார்க்சீயத்தின் சித்தாந்த எதிர்ப் பாளர்கள் உரைக்கின்றனர். “கம்யூனிசத்தின் கீழ்,

மறுப்பின் மறுப்பு விதி, செயல்படுவது தடைப்படுகிறது'' என்கின்றனர் அவர்கள். உண்மையிலேயே அப்படிப்பட்டதொரு 'முரண்பாடு' இங்கே உள்ளதா? இதை நாம் பரிசீலிப்போம்.

அடிமைத்தனம், நிலப்பிரபுத்துவம், முதலாளித்துவம் இவற்றின் கீழுள்ள எல்லா வகைப் பொருளாதார உறவுகளும், சில காலத்திற்குப் பின்னர், சமூக வளர்ச்சிக்கு முட்டுக்கட்டையாக அமைந்து, பின்னர் அவற்றை உடைத்தெறியவும், மாற்றவும் வேண்டியிருப்பது ஏன்? ஏனெனில் எல்லா உறவுகளும் தனி உடைமையின்மீது எழுந்துள்ளவை யாதலால்தான். கம்யூனிச சமூக உடைமை வந்தபின்னர் முதன்முறையாக உற்பத்தி சக்திகளின் தங்குதடையற்ற வளர்ச்சி அமைப்பு நிறுவப்படுகிறது. ஆகவே, அது முடிவற்ற காலத்திற்கு நீடிக்கிறது. அப்படியானால், கம்யூனிசத்தின் கீழ் சமூக வளர்ச்சி மெய்யாகவே நின்றுவிடுகிறது என்று அமையுமா? அப்படி ஒரு கேள்வியை நீங்கள் கேட்பதாயின், 'சமூக வளர்ச்சி' எனும் கருத்தையும் 'தற்போதய சமூக உறவுகளின் மாற்றம்' என்ற கருத்தையும் நீங்கள் ஒன்றெனக் கருதுகிறீர்கள் என்று பொருள்.

அடிமை சமூகம், நிலப்பிரபுத்துவம், முதலாளித்துவம் இவற்றின் கீழ், வழக்கொழிந்த சமூக உறவுகளின் வரம்பிற்குள்ளாக, சமூக வளர்ச்சி என்பது உண்மையாகவே சாத்தியமற்றதாகவிருந்தது. அந்தக் காரணத்திற்காகவே அவை மாற்றப்பட வேண்டி இருந்தது. ஆனால், சமூக முன்னேற்றத்திற்கு கம்யூனிச உறவுகள் தங்குதடையற்ற சந்தர்ப்பங்களைத் தோற்றுவிக்குமானால், அவற்றை மறுப்பதால், அழிப்பதால் யாது பலன்?

அதை மாற்றியமைப்பதற்கு எந்தக் காரணமும் இல்லை என்பது ஒப்புக்கொள்ளப்பட வேண்டும்.

கம்யூனிசத்தின் கீழ் சமூக உறவு செம்மையடையும் போது பழமையைப் புதுமை மறுப்பதும், உற்பத்தித்துறை மனித நடத்தை, கலாசாரத்தரங்கள் இவற்றில் ஆழ்ந்த பெரும் தொடர் மாற்றங்கள், ஏற்படுவதும் நிகழத்தான் செய்யும் என்பது ஏற்றுக்கொள்ளக் கூடியதே. எனினும் இவற்றில் எந்த மறுப்பும், கம்யூனிச உறவுகளின் சமூகத் தன்மையைப் பாதிப்பதில்லை. அந்த சமூகத்தன்மைதான், மேலும் வரலாற்று முன்னேற்றம் ஏற்பட அவசியமான முன்தேவை. இதிலிருந்து, கம்யூனிசத்தின் கீழும், மறுப்பின் மறுப்பு விதியின் பிரதான உட்பொருள்—சமூக வளர்ச்சியின் முற்போக்குக் குணம்சம்—எவ்வகையிலும் அழிக்கப்படவில்லை, என்று தெரிகிறது. பழைமை, வழக்கொழிந்தவை ஆகியவற்றின்மீது புதுமை வெற்றி காணும் என்பது மனிதகுல வரலாறு முழுமைக்கும் பொருந்தும் விதி; எனவே கம்யூனிச சமூகத்திற்கும் அது பொருந்தும்.

**புதுமைக்கும் பழமைக்கும் நடைபெறும் போராட்டம் வளர்ச்சி**

மனித நடவடிக்கையின் எத்துறையையும் எடுத்துக்கொள்ளுங்கள்—அது விஞ்ஞானம், கலை, அல்லது அரசியல் வாழ்வு-எத்துறையாயிருப்பினும்–அவற்றில் பழமை, வழக்கிறந்தவை ஆகியவற்றிற்கு எதிராக புதுமையின் போராட்டம் நடைபெற்று வருவதைக் காணலாம். எனில், எதைப் புதுமை என்று கொள்வது ?

தினசரி வாழ்வில், ஏதேனும் ஒன்று முதன் முதலாகச் செய்யப்பட்டாலோ, அல்லது அண்மையில்

எழுந்தவையாகஇருந்தாலோ, அவற்றைப்புதுமை என்று கொள்கிறோம். தத்துவார்த்த ரீதியாக, இந்தக் கருத்தின் பொருள் சற்று மாறுபட்டது; ஆழ்ந்த தன்மையுடையது. உதாரணமாக, மேலைய நாடுகளில், "புதிய" தத்துவார்த்தக் கருத்தோட்டம் தோன்றுகிறது என்று கொள்வோம்; அது, புதுமை எனும் பெயரால், நீண்ட காலத்திற்கு முன்னரே வழக்கொழிந்த, செல்லரித்துப் போன எண்ணக் கோவைகளை உயிரூட்டிற்று என்றால், அதை ஒரு புதிய நிகழ்வாக, எவ்விதத்திலும் அழைக்க முடியாது. மாறாக, அது எதிர்காலமற்ற ஒரு பழைய காலாவதியான நிகழ்வே.

யதார்த்த வாழ்வில், அடிக்கடி பழமையே, புதுமை என்று வேடந் தரித்து வருவதுண்டு. இது புதுமையை எதிர்த்துப் பழமை நடத்தும் போராட்டத்தின் பரந்த, அதேபோது திரையிடப்பட்ட ஒரு வகையாகும். கீழ்க்கண்ட உதாரணத்தைக் கவனியுங்கள்; எல்லா சந்தர்ப்பவாதிகளும், திருத்தல் வாதிகளும், 'காலங் கடந்த' மார்க்சிஸ்ட் கோட்பாடுகளை விமர்சித்து, தாங்கள் புதிய சில விஷயங்களை முன் வைப்பதாகச் சாதிக்கின்றனர். ஆனால், புதியனவற்றை உற்பத்தி செய்யும் போர்வையில், அவர்கள் மார்க்சிஸ்ட் தத்துவத்தின் அஸ்திவாரத்திற்கே குழி பறிக்கின்றார்கள். சோஷலிசத்திற்கான "புதிய" பாதையைக் கண்டு பிடிப்பதில், திருத்தல் வாதிகள், சோவியத் மக்கள் கடந்து வந்த பாதை காலங் கடந்தது என்று கூறி ஒதுக்கித் தள்ளுகின்றனர். ஆனால் அவர்கள் அளிப்பதோ, புதியதெனக் கொடுக்கும் பழைய உணவே.

முதலாளித்துவ உலகிலுள்ள பெரும் புள்ளிகள் தற்கால முதலாளித்துவத்தை "புதியது" என்றும் "நவீனமானது" என்றும் காட்ட முயல்வதையும் நாம்

விசேஷமாகக் கவனிக்க வேண்டும். ஆனால், இங்கும் புதுமை பற்றிப் பேசுவதில் பொருளில்லை. முதலாளித் துவம் வழக்கொழிந்த தொன்று; அது தனது முடிவை நெருங்கி விட்டது; என்னதான் அதை அலங்கரித்தாலும், அதைக் காப்பாற்ற முடியாது.

ஆகவே, தத்துவார்த்தக் கருத்தாகிய 'புதுமை' என்பதற்கு ஒரு குறிப்பிட்ட பொருள் உண்டு.

வளர்ச்சியின் முற்போக்கு அம்சங்களை எடுத்தியம்பும் ஒரு நிகழ்வோ, முறையோதான் "புதிது" என்று மார்க்சீய—லெனினிஸம் பொருள் கொள்ளுகிறது. புதுப்பித்தலுடனும் தாழ்ந்தவற்றிலிருந்து உயர்ந்தவற்றிற்கும்,எளியனவற்றிலிருந்து சிக்கலானதற்கும் ஆன வளர்ச்சியுடனும் நிச்சயமாகத் தொடர்புடைய எது முன்னேற்றமானதோ, எது முற்போக்கானதோ அதுதான் புதியது.

பழைய, புதிய நிகழ்வுகள் ஒன்றுடன் ஒன்று என்ன உறவு கொண்டுள்ளன? முதன்மையாக அவை ஒன்றையொன்று எதிர்ப்பவையே. ஆனால், எதிர்மறைகள், ஐக்கியத்திலும், அதே நேரம் போராட்டத்திலும் உள்ளன என்பது உங்களுக்குத் தெரியும். ஆகவே, அந்த எதிர்மறைகளை எவரும் பிரிக்கவும் முடியாது; அல்லது, அவற்றிற்கிடையே போராட்டத்தையும் தவிர்க்க முடியாது. உண்மையிலேயே, புதுமை என்பது பழமையை விட்டு ஒதுங்கியோ அல்லது அதனுடன் சேர்ந்தோ பிறப்பதில்லை, ஆனால், அதன் உள் ஆழத்திலேயே பிறக்கிறது. இங்குதான், புதுமையின் கரு, தொடக்கப் பகுதிகள் தோன்றுகின்றன; அல்லது அதன் தோற்றத்திற்கான சூழல்கள் உருவாகின்றன. வளர்ச்சிப் போக்கில், பழமை சிதைகிறது. தளர்கிறது; புதுமை வளர்கிறது உரம் பெறுகிறது. எனவே புதுமை என்றுமே பழமையின் முரண் தர்க்க

மறுப்பே. எதிர் மறைகளின் போராட்டம் என்ற உருவில் முரண்தர்க்க மறுப்பு முறை நிகழ்கிறது. இந்தப் போராட்டத்தில் முன்னேற்றமான முற்போக்கான புதுமை, வழக்கொழிந்த பழமையைத் தோற்கடிக்கிறது. (மறுக்கிறது). புதுமையின் வெல்லமுடியாத தன்மை, வரலாற்று வளர்ச்சியின் விதியாகும்.

சோவியத் யூனியனின் வரலாற்றை நீங்கள் சற்று நினைவு கூர்ந்தால், அது தோன்றிய நாள் தொட்டு, சோஷலிச அமைப்பின் ஒவ்வொரு படியும், புதிய சோஷலிச சமூகத்தின் வெற்றிகரமான நடையினைத் தடுக்க எண்ணியவர்களையும், சர்வதேச ஏகாதிபத்தியத்தையும் எதிர்த்து நடத்தப்பட்ட போராட்டத்தின் மூலம் தான், அடையப்பட்டது என்பது தெளிவாகும். இந்தப் போராட்டத்தில், சோவியத் யூனியன் ஒவ்வொரு முறையும் வெற்றி கண்டது; ஏனெனில், புதிய உறவுகளை, ஒரு முற்போக்கான சமூக அமைப்பை அது தன்னகத்தே கொண்டு விளங்கிற்று. ஆனால், இதிலிருந்து, புதுமை எப்பொழுதுமே எளிதில் பழமையையும், வழக்கொழிந்தனவற்றையும் தோற்கடித்து விடும் என்று கொள்ளக்கூடாது. அப்படி நடைபெறுவதில்லை; ஏனெனில், ஆரம்ப காலத்தில், பழமையை விட புதுமை பலவீனமாக உள்ளது; அது இன்னமும் உரம் பெறவில்லை. ஆகவே, அதற்குக் காலத்திற்கேற்ற ஆதரவும், கவனமான பேணுதலும் இல்லையெனில், அது தோற்கடிக்கவும் படலாம்.

சமூக வாழ்வில், முற்போக்கு வர்க்கங்களின் போராட்டம், வழக்கமாகப் பழமையின்மீது புதுமை காணும் வெற்றிக்குத்தான் இட்டுச் செல்கிறது சித்தாந்த முனையிலும் கூட, பழமையும் காலாவதியுமான

வற்றை எதிர்த்து போராட்டத்தின் மூலமே புதுமை வெற்றி காண்கிறது.

இவற்றிலிருந்தெல்லாம் பெறப்படும் முடிவு யாது?

வரலாற்று வளர்ச்சிப் போக்கிலிருந்து புதுமையின் வளர்ச்சியும், வெற்றியும் விளைகிறது எனக் கொண்டால், எது யதார்த்தத்தில் தோன்றுகிறது எனக் கண்டு, அதன் வெற்றியைத் தூண்டுவதே மார்க்சீய லெனினியக் கட்சியின் கடமையாகும் எனவே, புதுமையின் வெல்ல முடியாத் தன்மை பற்றிய மார்க்சீய லெனினிசத் தத்துவம், கம்யூனிஸ்டுக் கட்சியை, எது முற்போக்கானதோ, எது தோன்றிக் கொண்டுள்ளதோ, வளர்ந்து கொண்டுள்ளதோ, அதற்காகப் போராடுமாறு செய்கிறது; அதன் வருங்காலத்தையும் தீர்க்கமாகக் காண உதவுகிறது. ஒரு அக்கறையுள்ள தோட்டக் காரனைப் போன்று, கட்சி, புதுமை, முற்போக்கு ஆகியவற்றின் இளங்குருத்துக்களைப் பேணி வளர்க்கின்றது. கீழ்க்கண்ட லெனினது தாக்கீதை நடைமுறை சாத்தியமாக்கியதே சோவியத் யூனியனின் முழு வரலாறும் ஆகும்.

"புதிய குருத்துக்களை நாம் கவனமாகக் கணிக்க வேண்டும்; அத்தனை அக்கறையையும் அதற்கே சொரிய வேண்டும்; அதன் வளர்ச்சியை ஊக்க அனைத்தும் செய்ய வேண்டும்; அந்த தளிர்க் குருத்துக்களின் தாதியாக இருக்க வேண்டும்." ‡

பொருள் முதல்வாத முரண் தர்க்க வியலின் முக்கியமான விதிகளை நாம் பரிசீலித்தோம். இது மட்டுமே, அவற்றின் சாராம்சத்தை விளக்கிக் கூறப் போதாது. பொருள் முதல்வாத முரண் தர்க்கத்தின் வகைகளைப் பற்றியும் நாம் தெரிந்து கொள்வது அவசியம்.

‡ லெனின்—தேர்வு நூல்கள்: தொ: II பாகம் 2, பக்கம் 229

உரை எட்டு

# பொருள் முதல்வாத முரணிலைத் தர்க்கவியலின் இனங்கள்

தத்துவார்த்த இனங்கள் :

பொதுவான கருத்தம்சமின்றி எதுவும் செய்ய முடியாதென நாம் கண்டோம். உதாரணமாகப் பண்டங்களின் ஒய்வு நிலையையோ, அவற்றின் ஒரே சீரான இயக்கத்தையோ பாதுகாக்கும் பல்வேறு தன்மைகள் குறித்து, பௌதீகவாதிகள் கற்கின்றனர். ஆனால் அத்துடன் அவர்கள் நின்று விடுவதில்லை. தவிர்க்க இயலாதவாறு அவர்களை ஒரு கேள்வி எதிர் நோக்குகின்றது! ஏன் எல்லாப் பண்டங்களிலும் இத்தன்மை தோன்றுகின்றது? அவையனைத்திற்கும் பொதுவாக இருப்பது என்ன? இவ்வாறாக, தனிப்பட்ட பொருள்களின் தன்மைகள் பற்றிக் கற்பதன் அடிப்படையில், பௌதீகவாதிகள் ஒரு பொதுவான கருத்தை, ஜடத்துவம், என்ற கருத்தை அடைகின்றனர். பொருட்களின்

ஜடத்துவ அளவாகிய நிறை என்பதற்கும் இதுவே பொருந்தும். இங்கும், தனிப்பட்ட பொருள்களின் நிறை பற்றிக் கற்பதுடன் ஒருவர் நின்றுவிட முடியாது; நிறை என்ருல் என்ன என்பதைப் பற்றிய பொதுவான ஒரு வரையறையை அமைக்க வேண்டுவது அவசிய மாகிறது. இதே வழியில் தான், 'சக்தி' என்ற பொது வான கருத்திற்கும் பௌதீகவாதிகள் வந்தனர். அது ஒரு பொதுவான கருத்தே; ஏனெனில், ஒரு குறிப்பிட்ட பொருளின் விசேஷ குணும்சங்களை மட்டுமன்றி, சக் தியைத் தம்முட்கொண்ட எல்லாப் பொருள்கள், போக்கு களையும், ஒருமுகப்படுத்தப்பட்ட உருவில் அது கொடுக் கிறது.

உயிரியலிலும் இதனையே காணலாம். பல்வேறு இன மீன்களையும், பாலூட்டிகளையும், பிற உயிர்ப் பொருள்களையும் பற்றி மட்டும் கற்காது, அது பொது வாகச் சிறப்பினம் என்ற கருத்தை நிலை நாட்டுகிறது.

மிகப் பொதுவான அம்சங்களையும், தொடர்புகளையும், நிகழ்வுகளின் போக்குகளையும் குறிப்பிடும் கருத்துக்களே இனங் கள் எனப்படும். ஒவ்வொரு விஞ்ஞானத் துறையும், விஞ் ஞானக் கருத்துக்களை, இனங்களை, அமைக்கின்றன: உயிரியலில் "இனம்," "மரபு" ஆகியவை; அரசியல் பொருளியலில் "மதிப்பு," "உழைப்பு" போன்றவை; ரசாயனவியலில் "ரசாயன மூலகம்," "ரசாயனக் கிரியை" ஆகியவை.

எனினும், குறிப்பிட்ட இயல்களின் இந்த இனங் களே போதுமானவையா? அதனதன் வரம்பிற்குள் பொதுவான கருத்துக்கள் பற்றி ஒவ்வொரு இயலும் கற்கின்றது. ஆனல், நாம் ஏற்கனவே கண்டதைப் போல, வஸ்துக்கள், நிகழ்வுகள் ஆகியவற்றின் மிகப் பொதுவான சில தன்மைகள் உள்ளன. இந்தப் பொது

வான கருத்துக்களை எந்த இயல் வரையறுக்கின்றது? அது பௌதீகத்தால் செய்யப்பட முடியாது; ஏனெனில், அதற்கு அதன் விசேஷ அறிவுத் துறை வரம்புண்டு. அதுவே ரசாயனத்திற்கும், உயிரியலுக்கும், பிற விஞ்ஞானங்களுக்கும் பொருந்தும்.

"பொருள்," "இயக்கம்," "வெளி," "காலம்," "தன்மை," "அளவு," "முரண்பாடு" போன்ற தத்துவார்த்த இனங்களில் வஸ்துக்களின் மிகப் பொதுவான குணங்கள் பிரதிபலிக்கின்றன. தத்துவார்த்த இனங்களே எல்லாக் கருத்துக்களிலும் மிகப் பொதுவானவை ஆகும். பௌதீகமோ ரசாயனமோ, பிற விஞ்ஞானத் துறைகளோ வகுத்துள்ள இனங்களுக்குள் மட்டுமே, நம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாது என்பது தெளிவு. நிகழ்வுகளின் மிகப் பொதுவான குணங்களைப் பிரதிபலிப்பதற்கு, அறிதல் எனும் போக்கில் தத்துவார்த்த இனங்கள் உண்டாகின்றன.

பிற எல்லாக் கருத்துக்களையும் போன்றே இனங்களும் இரண்டாம் பட்சமானவை, வழி வந்தவை. தத்துவார்த்த இனங்கள் என்ற மிகப் பொதுவான கருத்து உள்ளிட்ட எல்லாக் கருத்துக்களும் உருவாவதற்கு, இந்த மெய்யுலகின் பொருள்களைப் பற்றிய படிப்படியான ஆராய்ச்சியே நம்மை இட்டுச் சென்றது. அதாவது, மனிதனுக்குப் புறம்பாகவிருக்கும் இந்த ஸ்தூல உலகிலுள்ள பொருள்களும், நிகழ்வுகளுமே இந்த இனங்களின் மூலஸ்தானம் என்பதே இதன் பொருள். எனவே, இனங்கள் என்பது ஒரு புறநிலைத் தன்மையுடையது.

தத்துவார்த்த இனங்கள் ஏற்பட்டபிறகு, தனிப்பட்ட விஞ்ஞான இயல்களுக்கு வழிகாட்டியாகப் பயன்படுகின்றன. உதாரணமாக, நோயின் காரணத்தைக் கண்டுபிடிக்கப் புகுமுன், ஒரு மருத்துவர்

காரணம் என்ருல் என்ன, அது புறநிலைப் பாங்குடன் உளதா, இலையா என்பதையெல்லாம் அறிந்திருக்க வேண்டும். சுருங்கக் கூறின், "காரணவாதம்" என்ற இனத்தைப் பற்றி அவர் அறிந்திருக்க வேண்டும். ஏனெனில், கருத்து முதல்வாதிகள் கூறுவதைப் போன்று காரணவாதம் புறநிலையில் இல்லையெனில், அதைத் தேடிப் பயனென்ன? அதற்கு முக்கியத்துவம் கொடுத்துத்தான் என்ன பயன்?

**இனங்களின் இரண்டாம் பட்ச, புறவயத்தன்மையின் பொருள்முதல் வாதத்தத்துவம் நடை முறைச் செயல்களில் சரியான வழிகாட்டியாக அமைகிறது.**

கருத்து முதல் வாதிகள், இனங்களின் மெய்யான முக்கியத்துவத்தைத் திரிக்கின்ருர்கள். ஹெகல் போன்ற புறநிலைக் கருத்து முதல் வாதிகள் இனங்கள் என்பவை இப்பொருளாயத உலகிற்கு வெளியே நிலவும் ஒரு ஆன் மீக சக்தியின் விளைவே என்று கருதுகின்றனர். ஆன் மாவினுல் தோற்றுவிக்கப்பட்ட இனங்கள், யதார்த்தத் திற்கு ஓர் "அளவுகோலாகப்" பயன்படுகிறது. இந்தக் கருத்து, அனைத்தையும் தலைகீழாக்கி விடுகிறது. இதன் படி பொருள்களின் குணங்களை, இனங்கள் பிரதிபலிக்க வில்லை; மாருக, அததற்குத் தகுந்த இனங்களின்படி பொருள்கள் அமைந்திருக்க வேண்டும்.

இனங்கள் என்பனவற்றிற்கு புறநிலை உள்ளடக்கம் கிடையாதென்றும் அவை அகநிலையின்பாற்படும் என்று அகநிலை கருத்துமுதல் வாதிகள் கூறுகின்றனர். உதாரணமாக காண்ட் என்பார், இவ்வுலகைப் பற்றிய அறிவைப் பெறுமுன்பே இனங்கள் என்பது மனிதனின் தன்னறிவில் இருந்தன என்று கருதுகிருர். நவீன கருத்து முதல் வாதிகளும் இதே வாதத்தை திருப்பிக் கூறுகின்றனர். ஆனுல் நாம் ஏற்கனவே பார்த்தது

போல இது விஞ்ஞானப்பார்வையல்ல: இனங்கள் என்பன பொருள்களின் பொதுவான தன்மைகளையே பிரதிபலிக்கின்றன; மனிதன் அவற்றைப் பற்றிக் கற்க ஆரம்பிப்பதன் முன்னரே அவை உள்ளன.

இந்த உரையில் முரண்தர்க்கவியலின் சில இனங்களைப் பற்றி நாம் ஆராய்வோம். மற்றவை முரண் தர்க்கப் பொருள் முதல் வாதம் பற்றிய உரைகளின் போது பரிசிலிக்கப்படும். நடைமுறையில் தனிப்பட்ட பொருள்களே முதன்மையாகவிருப்பதால் ஒருமையும் பொதுவானதும் என்ற இனங்களுடன் நாம் தொடங்குவோம்.

## ஒருமை, குறிப்பிட்டவை, சர்வ வியாபகமானவை.

**ஒருமை, பொதுமை என்றால் என்ன?**

"இந்த யந்திரம்" 'இந்த மனிதன்" "இந்த மரம்" என்று நாம் கூறும்போது தனித்த பொருள்களையே குறிப்பிடுகிறோம். ஆனால், 'யந்திரம்,' 'மனிதன்', 'மரம்' என்று பொதுப்படையாகப் பேசும்போது, ஒரு முழுமையான இனத்தையே அல்லது அப்படிப்பட்ட பொருள்களின் இனத்தையே நாம் மனதில் கொண்டுள்ளோம்.

புத்தாண்டு தினத்தன்று குழந்தைகள் அலங்கரிக்கும் ஒரு 'பிர்' மரமோ (ஊசியிலைகளைக் கொண்ட குளிர் மண்டலப் பிரதேச மரம்-மொ-ர்) அல்லது நாம் என்றோ தங்கி இளைப்பாறிய ஒரு 'ஓக்' மரமோ அல்லது தன் அழகினால் நம் மனதை வசிகரித்த ஒரு 'பிர்ச்' மரமோ, இருக்கத்தான் செய்கிறது ஆனால் நாம் 'பிர்', 'ஓக்'

'பிர்ச்' என்று பொதுவாகப் பேசுகிறோமே, அந்தப் பொதுக் கருத்துக்கள் எங்கிருந்து வந்தன ?

ஒவ்வொரு பொருளும் விசேஷத் தன்மைகள் பல வற்றைக் கொண்டதாக உள்ளன. அதைத் தொடர்ந்து, மேற்குறிப்பிட்ட தன்மைகளைப் பிரதிபலிக்கும் ஒருமைப் பொருள்களைப் பற்றிய கருத்துக்கள் நம் மனதில் தோன்றுகின்றன. இதுதான் 'ஒருமை' எனப்படும் இனம். உதாரணமாக, பீட்டர், உயரத்திலும் முடியின் நிறத்திலும், பேச்சின் தோரணையிலும், ஜானிலிருந்து மாறுபட்டிருக்கிறான்; அவர்கள் இருவரும் ஒரேமாதிரி யாக இல்லை. அதேபோன்று, ஒரு பிர்ச் மரம், மற்றொன்றி லிருந்தும், ஒரு பிர் மரம் அதனருகே வளரும் மற்ற மரங்களிலிருந்தும், பல அம்சங்களில் வேறுபட் டுள்ளன.

எனினும் கூட, அவை வேறுபட்ட போதிலும், எல்லா பிர் மரங்களுக்கும் பொதுவான சில உயிரியல் தன்மைகள்-அமைப்பு போன்ற பொதுவான குணங்கள் பல உண்டு. அதுவே, மக்களுக்கும் பொருந்தும். ஒவ்வொரு தனி மனிதனுக்கும், அந்த மனிதனுக்கே உரித்தான பல தனிப்பண்புகள் இருக்கின்றன. அத் துடன், எல்லா மக்களுக்கும் பொதுவான சில அம்சங் களும்—தொழில் செய்திறன், சிந்தனை, பேச்சு போன் றவை—உள்ளன. ஆகவே, எது தனித்துள்ளனவோ அது, பொதுவாக உள்ளனவற்றுடன் இணைக்கப்பட் டிருக்கிறது என்பது தெளிவாகிறது. ஒரு எளிய வாக்கியம் இதனைக் காட்டும். "இந்த பிர் ஒரு மரம்", "பாபி என்பது ஒரு நாய்", 'பீட்டர் ஒரு மனிதன்" என்று நாம் கூறும்போது, "இந்த பிர்", "பாபி" "பீட்டர்" ஆகிய கருத்துக்கள் ஒருமையானவை; "மரம்" "நாய்," "மனிதன்" என்பவை பொதுவானவை. அவை

ஒவ்வொன்றும் ஒரே வகையான பல பொருளைக் குறிப்பிடுகின்றன.

ஆக, ஒருமை என்பது, பொருளாயத உலகில் உள்ள கொடுக்கப்பட்ட ஒரு பருப்பொருளையோ, நிகழ்வையோ காட்டுவது. பொதுமை என்பது, பல பொருள்கள் அல்லது நிகழ்வுகளின் ஒரு தொடர்புள்ள கூட்டம். எனவே, அதன் சம்பந்தப்பட்ட பொதுமையுடன், ஒருமை எப்பொழுதும் இணைக்கப்பட்டுள்ளது; உதாரணமாக, பிர் என்பது மரங்களின் கூட்டத்துடனும், பீட்டர் என்பவன் மக்கள் இனத்துடனும், இணைந்துள்ளதுபோல.

இந்தப் பொதுமையும் பல வகைப்படும். ஒரு 'பிர்ச்' என்பது மரம் மட்டுமல்ல; அது ஒரு தாவரம். 'பாபி', நாய் மட்டுமல்ல; ஒரு பிராணியுங்கூட. கொடுக்கப்பட்ட ஒரு பிர்ச் மரத்தை, பிற 'பிர்ச்' மரங்களுடன் இணைக்கும் பொதுவான தன்மை, அவற்றை 'பிர்ச்' என்ற இனத்துடன் ஐக்கியப் படுத்துகிறது. இப்படிப்பட்ட பொதுமையின் சிறு கூறையே "குறிப்பிட்டவை" என்கிறோம் எல்லா பிர்ச் மரங்களையும், பொதுவாக மரம் என்னும் தொகுதியுடன் சேர்க்கும் பொதுத் தன்மையை 'சர்வ வியாபகம்' என்கிறோம். அதே போன்று 'பாபி'' ஒன்பது ஒருமை, நாய் என்பது குறிப்பிட்டது; பிராணி என்பது சர்வவியாபகமானது; ஹைட்ரஜன்-ஒருமை;வாயு-குறிப்பிட்டது: ரசாயன மூலகம் சர்வவியாபகமானது. இவ்வாறு, நாம் கீழ்க்கண்ட இணைப்பை நிறுவுகிறோம்: ஒருமை-குறிப்பிட்டவை - சர்வவியாபகமானவை,

இங்கு ஒரு கேள்வி எழலாம்: இயற்கையிலேயே ஒருமைதான் உள்ளது. ஒருமை என்ற இனத்தில் அது பிரதிபலிக்கிறது; ஆனுல், பொதுமை என்ற இனத்தின் இணையொப்பு யதார்த்தத்தில் உண்டா? இல்லையெனில்,

பொதுமை என்பது நமது மனத்தின் சிருஷ்டியல்லவா? ஒருமை, பொதுமை என்ற பிரச்சினையை எவ்வாறு எடுத்தியம்புவது என்பதில் உள்ள இன்னலை இக் கேள்வி சரியானபடி எடுத்துக் காட்டுகிறது. இப்பிரச் சினையை அப்பாலைத் தத்துவவாதிகளால் தீர்க்க முடிய வில்லை. அவர்கள், ஒருமையைப் பொதுமையிலிருந்து பிரித்தனர். இவ்விஷயத்தின் உயிர்க்கூறு என்ன வெனில், ஒருமைக்கும் பொதுமைக்குமிடையே பிரிக்க முடியாத முரண் தர்க்க இணைப்பு இருக்கிறது. இந்த இணைப்பை விவரிப்பதன் மூலமாகவே, இக்கேள் விக்குரிய விடையை நாம் புரிந்துகொள்ள முடியும். இவ்விணைப்பு எதில் அடங்கியுள்ளது?

**ஒருமை, பொதுமை இவற்றின் முரண் தர்க்கம்**

ஒருமை அல்லது ஒன்று, பொது வானவற்றிலிருந்து தனித்து இருக்க முடியாது. உதாரண மாக, ஒரு குறிப்பிட்ட பிர்ச் மரம், பொதுவாக மரங்களுக்கு உரித் தான பல குணப்பண்புகளை உடையது. இவ்வாறாக, ஒருமைக்கும், பொதுமைக்குமிடையே கலைக்க முடியாத ஒரு இணைப்பு நிறுவப்படுகிறது; ஒவ்வொரு ஒருமையும் ஏதேனும் ஒரு வழியில் பொதுமையானது; ஒவ்வொரு பொதுமையும், ஒருமையில் காணப்படுகிறது. "முரண் தர்க்கவியல் பிரச்சினைபற்றி," ‡ என்ற தனது நூலில் லெனின் எழுதினார்: "எதிர்நிலைகள் (ஒருமைக்கு எதி ரான பொதுமை) ஒரேமாதிரியானவை; ஒருமை என்பது, பொதுமைக்கு இட்டுச் செல்லும் இணைப்பில்தான் உள்ளது. ஒருமையின்மூலம், ஒருமையிலேயே இருப் பது பொதுமை.

---

‡ லெனின் தொகுப்பு நூல்கள்; தொ. 38 பக்கம் 361

இவ்வாறுதான், ஒருமைக்கும் பொதுமைக்கு மிடையேயுள்ள இணைப்புப் பிரச்சினையை, முரண்தர்க்க பொருள் முதல்வாதம் தீர்க்கிறது.

கருத்து முதல் வாதிகள் வேறொரு பதிலைத் தருகின்றனர். அவர்கள் தனிப்பட்டவற்றிற்கும், பொதுவானதற்குமுள்ள முரண்தர்க்கத்தை உருச்சிதைக்கின்றனர். உதாரணமாக, பிளேட்டோ குறிப்பிட்டவற்றிற்கு முன்னர், யதார்த்தப் பொருள்களுக்கு முன்னர், "பொதுமை" அதாவது "கருத்து" நிலை பெற்றிருந்ததாகக் கூறினார். அதே எண்ணத்தைத்தான், ஹெகலும், இதர புறநிலைக் கருத்து முதல் வாதிகளும் கூறினர். ஆனால், அது உண்மையல்லவென நாம் கண்டோம். பூக்கள் என்றழைக்கப் பொதுவான சில தன்மைகள் இருப்பதால்தான், எல்லா வயலெட்டுகளையும் நாம் பொதுவான கருத்தாகிய ':மலர்கள்" என்பதில் ஒன்றுபடுத்துகிறோம். தனிப்பட்டவற்றின் நிகழ்ச்சியில் இது நேரவில்லை என்றால், யதார்த்தத்திலேயே அது இல்லையென்றால்—பொதுக் கருத்தே இருந்திருக்காது. பொதுமை, தனிப்பட்ட பொருள்களிலேயே இருக்கிறது. நமது மனம் அதைப் பிரதிபலிக்கிறது; ஆனால் அதைத் தோற்றுவிப்பதில்லை. யதார்த்தத்திலுள்ள பிராணிகளையும், தாவரங்களையும் தவிர, வேறு பிராணி அல்லது தாவர இனம் கிடையாது. இதன் பயனாக பொதுமை முதன்மையானதாக முடியாது; அதே போன்று, நமது மனத்தின் சிருஷ்டியாகவும் இருக்க முடியாது. பொதுமை என்பது யதார்த்தத்தில் இருப்பது; அது பிறபொருள்களிலிருந்து பிரிந்து தானாகவே இருப்பது அல்ல: ஆனால், பொருள்களும், நிகழ்வுகளும் எடுத்துக்காட்டும் பொதுவான தன்மைகளில் இருப்பது. ஆகவே, பொதுமை நமது உணர்

வில் பிரதிபலிக்கிறதேயன்றி, தன்னறிவினுல் சிருஷ்டிக்கப்படுவது அல்ல.

இவ்வாருக, ஒருமையும், பொதுமையும் ஒன்றிலிருந்து மற்ருென்று பிரிக்கப்படமுடியாதது. பொதுமையைத் தன்னுள் அடக்கியுள்ளது ஒருமை; ஒருமையில்தான் (தனிப்பட்டனவற்றில்) அதன் மூலமாகத்தான் பொதுமை உள்ளது. இந்த வரையறை நடைமுறைச் செயலுக்கு மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தது; குறிப்பாக, திருத்தல் வாதத்திற்கும், வறட்டுத் தத்துவ வாதத்திற்கும் எதிரான போராட்டத்தில் இது மிக முக்கியமானது.

**இந்த இனங்களின் நடைமுறை முக்கியத்துவம்.**

நடைமுறைப் பிரச்சினைகளின் தீர்வு, ஒருமை, பொதுமை ஆகிய இனங்களைப் பகுத்தாராய்வதுடன் பிணைக்கப்பட்டுள்ளது. விஞ்ஞான விதிகள் போன்ற பொதுக் கருத்துக்களைச் செயலாக்கும் விஷயத்தில் இது மிகவும் பொருந்தும்.

தனிப்பட்ட யதார்த்தப் பொருள்களிலும், நிகழ்வுகளிலும், இயற்கையின் விதிகளும் சமூக வாழ்வின் விதிகளும் வெளிப்பாடடைகின்றன. இயற்கையில், "பொதுவான விதிகள்" என்று ஏதுங்கிடையாது. அதே போதில், இச்சூழுலகின் தனிப்பட்ட பொருள்களுக்கும், நிகழ்ச்சிகளுக்கும்,—சமூக நிகழ்வு உட்பட— அவை தோன்றும் நிலைமைகளின் காரணமாக, பல்வேறு தனிப்பட்ட தன்மைகளும் விசேஷ குறிப்பிட்ட குணங்களும், அம்சங்களும் உள்ளன. ஆகவே, நடைமுறைச் செயல்களின் போது, தனிப்பட்ட நிகழ்வுகளை ஸ்தூலமாகவும், அவை எந்த நிலைமைகளில் தோன்றுகின்றன என்பதையும் ஆராய்வது மிக அவசியம்.

உதாரணமாக, அக்டோபர் சோஷலிஸ்டுப் புரட்சியின் போது வர்க்கசக்திகளின் இணைப்பையும், லெனின் தலைமை தாங்கிய கம்யூனிஸ்டுக் கட்சியின் போர்த்தந்திரத்தையும் பற்றி நன்கு அறிந்துகொள்ள, 20வது நூற்றாண்டின் தொடக்கத்திலும், குறிப்பாக 1917-கோடை, கூதிர் காலத்திலும், ரஷ்யாவில் உருவான யதார்த்த நிலைமைகளை முழுமையாகப் பகுத்தாராய வேண்டுவது அவசியம்.

ஒரு புரட்சி என்றால் என்ன, எத்தனை வகையான புரட்சிகள் உள்ளன என்பனபற்றிய பொதுவான வரையறைகளைப் பற்றிய வெறும் அறிவு ஒரு குறிப்பிட்ட சோஷலிசப் புரட்சியை வெற்றிகரமாக நடத்துவதற்குப் போதுமானதல்ல. ஒருமைக்கும், பொதுமைக்குமுள்ள பரஸ்பரத் தொடர்பை சரியான முறையில் கணக்கிலெடுத்துக்கொள்ள வேண்டுவது மிகவும் அவசியம்.

அப்படியானால், பொதுவான விதிகளைப்பற்றி நாம் ஏன் கற்கவேண்டும் என்று நீங்கள் கேட்கலாம். நாம் எந்த ஸ்தூல நிலைமைகளிலும் நிகழ்ச்சிகளிலும் ஈடுபாடு கொண்டிருக்கிறோமோ, அவற்றைப்பற்றி மட்டுமே கற்பது சிறந்ததல்லவா? இவ்விதமாக, வாதிப்பது முற்றிலும் தவறானது.

உண்மையில், பொதுமையுடன் ஒருமை இணைக்கப்பட்டுள்ளது என்றும், ஒருமையின் சாராம்சத்தை பொதுமை காட்டுகிறது என்பதையும் நீங்கள் அறிவீர்கள். இதன் விளைவாக, பொதுவான விதிகளை கற்பதன் மூலமாகத்தான், ஒரு பெரும் நிகழ்வுத் தொகுதியின் விசேஷத் தன்மைகள், குணாம்சங்கள் ஆகியவற்றைப் பற்றிய அறிவு நமக்குக் கிட்டும் என்பதனால் அவற்றைக் கற்பது முக்கியமானது.

ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும், பொதுவான விதிகளைப் பற்றிய அறிவைப் பயன்படுத்தி, பல தலைமுறையினரின் அனுபவத்தை மக்கள் உபயோகித்துக் கொள்ளுகின்றனர்; அவற்றைப் புதிதாகக் 'கண்டு பிடிக்க' வேண்டியதில்லை. உதாரணமாக, புரட்சியின் பொதுவான விதிகளைப்பற்றி நாம் அறிந்திருந்தால் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும், அவற்றைப் புதிதாகக் 'கண்டுபிடிக்க' வேண்டிய அவசியமில்லை; யதார்த்த நிலைமைகளைக் கணக்கிலெடுத்துக் கொண்டு அவற்றை செயல்படுத்தி விட முடியும்.

மேற் கூறியவற்றிலிருந்து, நடைமுறை செயல்களில், பொதுவான வரையறைகள் மட்டுமே நமக்கு வழிகாட்ட முடியாது என்பதையும், தனிப்பட்ட நிகழ்வுகள் உருவாகும் நிலைமைகளைக் கணக்கிலெடுத்துக் கொள்ளாது, அவற்றை செயல்படுத்த முடியாது என்பதையும் நீங்கள் தெரிந்துகொள்ளலாம். ஒருமை பொதுமை இவற்றின் முரண்தர்க்க வியலைப் பற்றிய அறிவு மட்டுமே, நடைமுறைச் செயல்களில், சரியான வழிகாட்டியாகப் பயன்படும். ஆகவே, குறிப்பிட்ட நாட்டின் தனிப்பட்ட, விசேஷ நிலைகளின் பங்கை ஆதாரமற்று மிகைப்படுத்துதலும், (இவ்வாறுதான் திருத்தல்வாதிகள் செய்கின்றனர்) பொதுவான விதிகளை முழு முதன்மையாக்குதலும், (வறட்டுத் தத்துவ வாதிகள் இவ்வாறுதான் செய்கின்றனர்)—இரண்டுமே மார்க்கீஸத்தைத் திரித்துப் புரட்டுவதாகும்.

பொதுமைக்கும், ஒருமைக்கு மிடையேயுள்ள முரண் தர்க்கத் தொடர்புப் பிரச்சினையும், சோஷலிச. கம்யூனிச நிர்மாணப் போராட்டத்தில் அவற்றின் நடைமுறை முக்கியத்துவமும், 1957லும் 1960லும் மாஸ்கோவில் நடைபெற்ற கம்யூனிஸ, தொழிலாளர் கட்சிகளின்

கூட்ட தஸ்தாவேஜுகளிலும் (பத்திரங்களிலும்), சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் 22-வது காங்கிரஸ் கொள்கைப் பத்திரங்களிலும், முதன்மையான இடத்தை வகிக்கிறது. எல்லா நாடுகளுக்கும் பொதுவான விதிகளின், இயக்கத்தின் மூலம் தான் சோஷலிச வெற்றி கிட்டுகிறது என்பதை அந்தப் பத்திரங்கள் வலியுறுத்துகின்றன. இந்த விதிகள் வருமாறு:

— ஏதேனும் ஒரு வகையில் தொழிலாள வர்க்கப் புரட்சியை நடத்தவும், ஏதேனும் ஒரு உருவில் தொழிலாளி வர்க்க சர்வாதிகாரத்தை நிலை நாட்டவும், உழைக்கும் மக்களுக்கு மார்க்ஸீய - லெனினியக் கட்சியை மையமாகக் கொண்ட, தொழிலாளி வர்க்கத் தலைமை;

— பெருவாரியான விவசாயிகளுடனும், உழைக்கும் மக்களின் பிற பகுதிகளுடனும், தொழிலாள வர்க்கத்தின் நேச உறவு;

— அடிப்படை உற்பத்தி சாதனங்களில் முதலாளித்துவ உடைமையை ஒழித்தலும், பொது உடைமையை நிலை நாட்டுதலும்;

— விவசாயத்தைப் படிப்படியாக சோஷலிச மாற்றமடையச் செய்தல்,

— சோஷலிசத்தையும் கம்யூனிசத்தையும் கட்டவும், உழைக்கும் மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்குமான குறிக்கோளுடன், திட்டமிடப்பட்ட பொருளாதார வளர்ச்சி.

— சித்தாந்த, கலாசாரத் துறையில சோஷலிசப் புரட்சியை அடைதல்; தொழிலாள வர்க்கம், உழைக்கும் மக்கள், சோஷலிசம் ஆகியவற்றில் ஈடுபாடுள்ள எண்ணிக்கை மிகுந்த அறிவுத் துறை ஊழியர்களை வளர்த்தல்;

— தேசீய ஒடுக்கு முறையை ஒழித்து, தேசங்களிடையே சமத்துவம், சகோதரத்துவ நட்பு ஆகியவற்றை நிறுவுதல்;

— சோஷலிசத்தின் வெற்றிகளை, புற, அக எதிரிகளிடமிருந்து பாதுகாத்தல்;

— ஒரு நாட்டின் தொழிலாள வர்க்கம் பிற நாடுகளின் தொழிலாள வர்க்கத்துடன் ஒற்றுமையாயிருத்தல் – தொழிலாள வர்க்க சர்வதேசியம்;

முதலாளித்துவ சமூகத்தை, சோஷலிச சமூகம் இடப் பெயர்ச்சி செய்யும் கால கட்டத்தில், எல்லா நாடுகளிலும் இந்தப் பொதுவான விதிகள் செயல் படுகின்றன. எனினும், ஒவ்வொரு நாட்டிலும், யதார்த்த வரலாற்று நிலைமைகளுக்கேற்ப, அவை விசேஷ வழிகளில் செயல் படும். சோஷலிச நிர்மாணத்தின்போது, ஒரு நாட்டின் உண்மையான நிலைகளில், சோஷலிச நிர்மாணத்தின் பொதுக் கோட்பாடுகளை நடைமுறையாக்கும் விஷேச முறைகளும், உருவங்களும் தெளிவாகும்; இதன் மூலம், பொதுமைக்கும், ஒருமைக்கும் உள்ள தொடர்பு வெளியாகிறது.

பல நாடுகளிலும் சோஷலிசத்தை நடைமுறையில் நிர்மாணித்ததே, அனைத்து சோஷலிசக் கூட்டுக்குழுவின் கூட்டு அனுபவத்தின் அடிப்படை என்று, கம்யூனிஸ்டு, தொழிலாளர் கட்சிகளின் கூட்ட (1960) அறிக்கை சுட்டிக் காட்டுகிறது. இந்த அனுபவத்தை சகோதரக் கட்சிகள் விரிவாகக் கற்பதும், அந்தந்த தேசீயத் தன்மைகளுக்கும், உண்மை நிலைமைகளுக்கும் தகுந்தவாறு, அவற்றை ஆக்க ரீதியாகச் செயல்படுத்தி, வளப்படுத்துவதும், ஒவ்வொரு சோஷலிச நாட்டிற்கும் மாறாத வளர்ச்சி விதியாகும்.

காரண காரியத் தொடர்புகளைக் கற்பதன் மூலம், பொது விதிகளைப் பற்றிய அறிவைப் (பொதுமை பற்றி) பெறலாம்.

**காரணமும் காரியமும் :**

எந்த ஒரு நிகழ்வும், ''அதாகவே'' ஒரு காரணமுமின்றித் தோன்றுவதில்லை என்று அனுபவ ரீதியாக உங்களுக்குத் தெரியும் ஒரு குறிப்பிட்ட நிகழ்வின் முன் வளர்ச்சியின் காரணமாகவோ, அல்லது பிற நிகழ்விலுலோதான் அது விளைகிறது. ஒன்றுமற்றதிலிருந்து எதுவும் தோன்றுவதில்லை. ஒவ்வொரு நிகழ்விற்கும், அது தோன்றுவதற்குக் காரணமாகவுள்ள மூலம் உண்டு. இதுதான் 'காரணம்' எனப்படுகிறது மற்றொரு நிகழ்வைச் சிருஷ்டிக்கவோ, உண்டாக்கவோ, தூண்டவோ ஆன ஒன்றைத் தான் காரணம் என்கிறோம். ஒரு காரணத்தின் செயலால் உண்டாவதுதான் விளைவு அல்லது காரியம் எனப்படுவது.

ஆக, காரணம் என்ற ஒரு நிகழ்வு, காரியம் என்ற மற்றொரு நிகழ்வைத் தவிர்க்க முடியாதபடி தோற்றுவிக்கிறது. நிகழ்வுகளுக்கிடையேயுள்ள இந்தத் தொடர்பைப் பிரதிபலிப்பவைதான் காரணம் காரியம் என்ற தத்துவார்த்த இனங்கள் ஆகும். இந்தத் தொடர்பு 'காரணத் தொடர்பு என்றழைக்கப் படுகிறது.

**காரண வாதத்தின் பிரதான அம்சங்கள்.**

ஒரு நீராவி 'டர்பைனின் தகடுகளை நீராவி சுழலச் செய்யும் போது, நீராவியின் சக்திக்கும், டர்பைனுக்குமிடையே எழும் தொடர்பு, நமது தன்னறிவிற்குப் புறம்பாக, அப்பாற்பட்டு, சுயேச்சையாக இயற்கையில் உள்ளதாகும். இது போன்ற உதாரணங்களிலிருந்து, ஒவ்வொரு காரணத் தொடர்பும், மெய்யாகவே உள்ள பொருள்களிலிருந்து தோன்றுகின்றன என்று தெரிவாகிறது.

எனவே, காரணத் தொடர்பின் மிக முக்கியமான அம்சம், அதன் புறநிலைத் தன்மையே.

காரணத் தொடர்பின் புறநிலைத் தன்மையும், இயற்கை நிகழ்வுகளின், சர்வ வியாபக காரண காரிய பரஸ்பரச் சார்பும், பொருள் முதல் வாதக் கோட்பாடாகும். இதனை, மார்க்ஸ் காலத்திற்கு முன்னர் பொருள் முதல் வாதத் தத்துவார்த்திகளான, பண்டைய கிரேக்க நாட்டைச் சேர்ந்த டெமாகிரிட்டஸ், சீனுவைச் சேர்ந்த வாங்சுங், அதன் பின்னர் ஸ்பைனோஸா, ஹாப்ஸ், செர்னி செவ்ஸ்கி ஆகியோர், கருத்து முதல் வாதத்திற்கெதிரான தங்களது போராட்டத்தில், விளக்கிக் கூறினர்.

இயற்கையிலும், சமூகத்திலும், நிகழ்வுகளின் ஒரு சர்வ வியாபகமான காரணத் தொடர்புள்ள பரஸ்பரச் சார்பு நிலை இருந்து வருகிறதென்றும், அதுபுறவயமான, மனிதனிலிருந்தும் சுயேச்சையான விதிக்குட்பட்ட தேவை என்றும் கருதும் சிந்தனையாளர்கள் நியதிவாதிகள் எனப் படுவர். எல்லா இயற்கை நிகழ்வுகளும், ஏதேனும் ஒரு காரணத்தினுல் ஏற்பட்ட விளைவாகத்தான் தீர்மானிக்கப் படுகின்றன,—இயற்கை நியதிகள் செயல்படுத்தப்படுவதனுல்தான் தோன்றியுள்ளன என்று அவர்கள் கருதுகின்றனர். இந்த உலகில் நடைபெறும் அனைத்தும் அவசியமானவையே. ஏனெனில், அந்த தத்துவார்த்திகள் கூறுவது போல, அவை ஏற்கனவே தீர்மானிக்கப் பட்டு விட்டன.

தத்துவ வரலாறு முழுவதிலும், கருத்து முதல வாதிகளின் காரணத் தொடர்பு வாத மறுப்பை, நியதியின்மை வாதத்தை, எதிர்த்து நியதிவாதிகள் ஒரு போராட்டம் நடத்தி வந்துள்ளனர். மனிதன் காரணத் தொடர்புவாதம் என்ற வகையை, 'வசதிக்காகவும், சிந்தனைச் சிக்கனத்

திற்காகவும்'', இயற்கை நிகழ்வுக் குழப்பத்தில் ஒரு ஒழுங்கைப் புகுத்துவதற்காகவுமே, சிருஷ்டித்தான் என்று பல்வேறு கருத்தோட்டங்களையும், போக்குகளையும் கொண்ட கருத்து முதல் வாதிகள் தொடங்குகின்றனர். இவ்வாறாக, அகநிலைக் கருத்து முதல்வாதியான பெர்க்லி, காரண காரியத் தொடர்பு வாதம் என்ற எண்ணத்தையே மறுக்க முயன்றார். ஹ்யூமும், காண்ட்டும் முயன்றதும் அதுவே. அவர்களிருவரும், புறநிலைக் காரண காரியத் தொடர்பு இருப்பதையே மறுத்தனர்.

காரண காரியத் தொடர்பின் அகநிலைத் தன்மை எனும் தங்களது கோட்பாட்டை நியாயப்படுத்தும் முயற்சியில், அவர்கள் கீழ்க்கண்ட வாதங்களைக் கொடுத்தனர். ஹ்யூம் கூறினார்: எரிந்து கொண்டிருக்கும் மெழுகுவர்த்திச் சுடரை ஒவ்வொரு முறை நாம் தொடும் போதும் அது நம்மைச் சுடுகிறது. ஆனால், இதிலிருந்து, வருங்காலத்தில் அது தவிர்க்க இயலாதவாறு, நம்மைச் சுடத்தான் வேண்டுமென்பது பெறப்படுவதில்லை. பத்து லட்சம் முறை அது ஏற்பட்டிருக்கக் கூடும்; எனினும் பத்து லட்சத்து ஒன்றாவது முறை அது வேறுவிதமாக இருக்கக் கூடும். எரியும் மெழுகுவர்த்தி, ஒரு தீக்காயத்தை இதுகாறும் ஏற்படுத்தி வந்தது என்பதனால், தீக்காயங்களுக்குக் காரணம், எரியும் மெழுகுவர்த்திதான் என்று கூறிவிட முடியாது.''

இந்த இரு நிகழ்வுகளும்—எரியும் மெழுகுவர்த்தியும், தீப்புண்ணும்—அருகருகே இருக்குமாறு மட்டும் அந்த வாதத்தில் கூறப்பட்டுள்ளது; ஆனால், அதிலிருந்து அந்த இரண்டிற்குமிடையே காரண காரியத் தொடர்பு இருப்பதாக முடிவு செய்து விடக் கூடாது. நிச்சயமாக, ஹ்யூம் சொல்வது தவறாகும். சும்மா கவனிப்பதன் அடிப்படையில் மட்டுமே நாம் காரணத்தை

நிர்ணயிக்கவில்லை. பரிசோதனைகளின் மூலமும, நடைமுறையின் அடிப்படையிலும் நாம் அதனை ஆராய்கிறோம்; அவை, உறுதிப்பாடான வகையில் அது ஏன், அப்படி, எனக் காட்டுகின்றன. உதாரணமாக, எரியும் தீக்கொழுந்து தவிர்க்க முடியாதபடி தீக்காயத்தை ஏற்படுத்தும் என்று காட்டுகிறது. நடைமுறையும் பரிசோதனையும் நிகழ்வுகளின் காரண காரியப் பரஸ்பரச் சார்பு நிலையை எடுத்துக் காட்டுகின்றன.

காரண காரியத் தொடர்பு வாதம் பற்றிய காண்ட், ஹ்யூமின் ஆய்வுரைகள், ஏகாதிபத்திய சகாப்தத்தின் பிற்போக்குத் தத்துவார்த்திகளான, மாஷிஸ்டுகளாலும், அவர்களது நவீன வாரிசுகளாலும் மீண்டும் உயிருட்டப்பட்டன. தத்துவ இயலில் மாஷிஸ்டுப் போக்கைக் கடைப்பிடிக்கும் தற்காலக் காரியவாதிகள், வெளி உலகின் புறநிலைத் தன்மையையும் அதோடு காரண காரியத் தொடர்புகளின் புறநிலைத் தன்மையையுமே மறுக்கின்றனர்.

நவீன 'பௌதீகக் கருத்து முதல் வாதிகளும்' — வெர்னர் ஹிய்சன்பர்க், நீல்ஸ் போஹர், பாஸ்தவெல் ஜோர்தன் போன்ற பௌதீக இயலாளர்கள் உள்ளிட்டு காரண காரியத் தொடர்பு வாதத்தை மறுக்கின்றனர். உதாரணமாக, மேற்கு ஜெர்மன் பௌதீகவியலாளரான ஜெர்ஹார்டு ஹென்னிமன் எழுதுகிறார்; "காரண காரியத் தொடர்பு வாத விதி, அதன் பண்டைய சூத்திரத்தின்படி எல்லாவிடத்திற்கும் பொருந்தாது" என்று கூறுகிறார்.

காரண காரியத்தொடர்பு எனும் பொருள் முதல் வாதக் கோட்பாட்டிற்கெதிராக, பூர்ஷுவா தத்துவார்த்திகள் ஏன் சொற்போர் தொடுக்கிறார்கள் என்று நீங்கள் கேட்கக்கூடும். ஏனெனில், அக்கோட்பாட்டி

னின்று விஞ்ஞான, நாஸ்திக முடிவுகள் தொடருகின்றன. அனைத்தும், இயற்கையான காரணங்களின் விளைவுகளாகவே இருக்குமானால், அங்கு கடவுளுக்கு எந்த வேலையும் இல்லை. நடைபெறும் அனைத்தும், அதற்குரிய காரணங்களால் தான் ஏற்படுகின்றனவே தவிர கடவுளின் இச்சையினாலல்ல. தங்களது மத விதிகளை எளிதில் உள்ளே இழுத்துவிட வசதியேற்படுத்திக் கொள்வதற்காக, கருத்து முதல் வாதிகள், விஞ்ஞான விதிகளை மறுக்கின்றனர் என்று லெனின் குறிப்பிட்டார்.

காரண காரியத் தொடர்பு வாதத்தின் அடுத்த அம்சம், அதன் சர்வவியாபகத்தன்மையாகும்; பொருளாயத உலகின் சர்வ வியாபக விதி, காரண காரியத் தொடர்பு விதியாகும். அதன் பொருள் என்ன? இந்த விதிக்குட்படாத நிகழ்வே இல்லை; அதற்குத் தகுந்த பொருளாயத மூலமின்றி, எந்த நிகழ்வும், இவ்விதிக்குப் புறம்பாக ஏற்பட முடியாது. உங்களது சொந்த அனுபவத்திலிருந்தே, காரண காரியத் தொடர்பு விதிக்கு, எந்த விதி விலக்குகளும் கிடையாது என்று நீங்கள் நிச்சயமாகத் தெரிந்து கொள்வீர்கள். ஏதேனும் நிகழ்ந்தது என்றால், அதன் காரணத்தைத் தேடுங்கள்; காரணமின்றி எதுவுமே இவ்வுலகில் தோன்றுவதில்லை. சாதாரணக் கூற்றுக்களான, "நெருப்பின்றிப் புகையில்லை", ஒவ்வொரு பருவிற்கும் காரணம் உண்டு", என்பனவற்றில் இந்த அனுபவம்தான் பொதிந்துள்ளது.

நடைமுறை வாழ்க்கையில், நாம் எப்பொழுதும் நிகழ்ச்சிகளின் காரணங்களைத் தேடுகிறோம். தீவிரக் குறைபாடுகள் நேரிடின், உதாரணமாக, உற்பத்திப் பொருளின் தரம் குறைந்தால், அதன் காரணத்தைத் தேடுகிறோம். காரணங்களை தவிர்ப்பதன் மூலம், குறைபாடுகளை நீக்குகிறோம்.

ஒரு காரணம் செயலூக்கத் தன்மையுடையது. இந்தத் தன்மையின் விளைவாகத்தான் காரண காரியத் தொடர்புகள் ஏற்படுகின்றன. மேற் கூறியனவற்றிலிருந்து இதைப் புரிந்து கொள்வது சுலபம்: ஒரு காரணம், ஒரு காரியத்தைத் தோற்றுவிப்பதால், அது செயலூக்கமுள்ள ஒன்ருக இயங்குகிறது. எனினும், காரியம் என்பது செயலற்றது என்றும், குறிப்பிட்ட கிரியையிலோ வளர்ச்சியிலோ அது பங்கு பெறுவதில்லை என்றும் பொருளல்ல. ஈரமான திரைச்சீலையின்மீது, சூரியனது சக்தி—உஷ்ணம்—கிரியை செய்தால், அத்திரைச்சீலை உலர்ந்து விடுகிறது. அதே சக்தி ஒரு மெழுகுத் துண்டின்மீது கிரியை செய்யுமானுல், விளைவு வேறுவிதமாக இருக்கும். மெழுகு உருகிவிடுகிறது. ஒரு செடியின்மீது, சூரிய சக்தியின் விளைவு வேறுபட்டது: அந்த சக்தியினுல், தாவரங்களுக்கு மிகவும் முக்கியமான சில உயிர்க்கிரியைகள் நடை பெறுகின்றன. ஆகவே, பிற பொருள்களுக்கும், நிகழ்வுகளுக்கும் ஏற்பத்தான், ஒரு காரணம், ஒரு குறிப்பிட்ட காரியத்தை ஏற்படுத்துகிறது. அதனுல்தான், நாம் காரண காரியத் தொடர்பு பற்றி, உறவு பற்றிப், பேசுகிருேம்.

எண்ணற்ற காரண காரியத் தொடர்புகள் இவ்வுலகில் எழுகின்றன; ஆனுல் அவையனைத்தும் சமமான முக்கியத்துவம் வாய்ந்தவை அல்ல. அவற்றில், பிரதானமானவையும், முக்கியமானவையும் உண்டு; அவற்றை முதலில் தனிப்படுத்த வேண்டும்.

**பிரதான, பிரதானமற்ற காரணங்கள்.**

தரக் குறைவான உற்பத்தி உதாரணத்தைச் சற்று ஆராய்வோம். நாம் அதன் காரணங்களைக் கண்டு பிடித்தாக வேண்டும். உற்பத்தியில், பல உறவு

களும் தொடர்புகளும் இணைந்திருப்பதால், தரக்குறைவிற்குப் பல காரணங்கள் இருக்கும். மேலும் பகுத்தாராய்ந்தால், சில பிரதான, முக்கியமான காரணங்களே உள,—அதாவது, பிற எல்லாக் காரணங்களையும் தீர்மானிக்கும் சில பிரதான காரணங்களே உள-எனத் தெரியவரும். நமது உதாரணத்தில் அவைகுறைந்தமட்ட தொழில் நுணுக்கம், தொழிற் கட்டுப்பாடின்மை, உற்பத்தி நிர்வாகத்தரம் போதுமானதாக இல்லாமை, வேலையில் லயமின்மை ஆகியவையாக இருக்கலாம். உண்மையிலே இவைதான் பிற எல்லாவற்றையும் தீர்மானிக்கின்றன. உதாரணமாக எங்கு தொழில் முறை ஒழுங்கு குறைவாக உள்ளதோ அங்கு சேதாரம் விளைகிறது. லயமற்ற வேலையும், பல தீமைகளின் காரணமாக இருக்கின்றது.

பிரதான காரணத்தைக் கண்டு பிடிப்பது மிகவும் அவசியம். ஏனெனில், பெறப்படும் விளைவில் நிச்சயமான மாற்றத்தை ஏற்படுத்த இதுவே சாத்தியப் பாட்டினை ஏற்படுத்துகிறது. ஆனால், பிரதான காரணங்கள் தவிர, பிறவற்றை அசட்டை செய்து விடலாம் என்று பொருள் கொள்ளக் கூடாது.

**காரண காரியத்தின் பரஸ்பரக்கிரியை**

காரணம் காரியத்தை விளைப்பதால், அவற்றிற் கிடையே நிச்சயமான ஒரு தொடர்பு இருக்கிறது. அப்பாலை வாதிகள் இத்தொடர்பு பற்றி ஒரு தலைப் பட்சமான கருத்துக் கொண்டுள்ளனர்; அதாவது, காரணம் காரியத்தின்மீது விளைவிக்கும் கிரியையை மட்டுமே அவர்கள் காண்கின்றனர். ஆனால், காரியம் அல்லது விளைவு காரணத்தின்மீது ஆதிக்கம் செலுத்துகிறதா? அப்பாலை வாதிகள் இக்கேள்விக்குச் சரியான விடையளிக்க முடியாது; ஏனெனில், அவர்கள் எதிர்நிலைகளை—காரணத்தையும், காரி

யத்தையும் ஒன்றிலிருந்து மற்றொன்றை வேறுபடுத்து கின்றனர்.

ஒரு குறிப்பிட்ட நிகழ்வு, காரணமாகவோ அல்லது காரியமாகவோ இருக்கக் கூடும் என்று அவர்கள் வாதிடுகின்றனர். அது ஏதேனும் ஒன்ருகவிருந்தால், பிறிதொன்ருக விருக்க முடியாது. எங்கெல்ஸ் கூறியது போன்று, அப்பாலை வாதிகள் ஓரிடத்தில் காரணத்தையும் வேரோரிடத்தில் காரியத்தையும் காண்கின்றனர்; அதாவது, அவற்றினிடையேயுள்ள பரஸ்பர இணைப்பிற்கு அவற்றின் முரண் தர்க்க ஐக்கியத்திற்கு அப்பாற்பட்டு அவற்றைக் காண்கின்றனர்.

அப்பாலை வாதிகளின் கூற்று தவருனது. காரண, காரியத்திற்கிடையே பரஸ்பரக் கிரியை உள்ளது. இதை ஒரு உதாரணத்தின் மூலம் காண்போம். பொருள், உயிர்ப்பொருள், தன்னறிவைத் தோற்றுவிக்கிறது; தன்னறிவு அந்த உயிர்ப் பொருளைப் பாதிக்கிறது. நான்காவது உரையில் நாம் ஏற்கனவே பார்த்தது போல அதை தீவிரமாகப் பாதிக்கிறது; ஆகவே, காரண, காரியத்தின் பரஸ்பரச் சார்பு நிலையில்தான்.—ஒன்றன் மீது மற்றொன்று வகிக்கும் செல்வாக்கில் தான்—பரஸ்பரக்கிரியை அடங்கியுள்ளது.

நீங்கள் கேட்கலாம். "சம அளவில் காரணமும் காரியமும் ஒன்றையொன்று கட்டுப்படுத்துகிறது என்பதுதான் இதன் பொருளா?" இல்லவே இல்லை; காரண காரியத் தொடர்பில், காரணம் தான் நிர்ணயமான பங்கை வகிக்கிறது. அதுதான் காரணகாரியத் தொடர்பைத் தீர்மானிக்கிறது; காரியம், இரண்டாம் பட்சமானது எனினும் முக்கியமான பங்கையே வகிக்கிறது. ஒரு குறிப்பிட்ட காரண காரியத் தொடர்பில் எதைக் காரணம் என்று கருதலாம். எதைக் காரியம் என்று கருதலாம், என்பது பொருட்டல்ல என்று

கொள்ளக் கூடாது; உதாரணமாக, பொருள் தன்னறிவை நிர்ணயிக்கிறதா அல்லது தன்னறிவு பொருளைத்தீர்மானிக்கிறதா என்பது குறித்து விஞ்ஞானம் பொருட்படுத்தாமலிருக்க முடியாது. எனினும், இங்கும், காரணத்தின்மீது காரியம் வகிக்கும் ஆதிக்கத்தையும் புறக்கணித்து விட முடியாது.

மேற் கூறப்பட்டவை தவிர, பரஸ்பரக்கிரியை எனும் கருத்திற்கு, கீழ்வரும் உதாரணம் காட்டுவது போல, இரண்டாவது அர்த்தமும் உண்டு. ஒரு டைனமோ உற்பத்தி செய்யும் மின்சக்தியின் காரணம், சுழற்சி எனும் யந்திர சக்தியே: யந்திர சக்தியே மின்சக்தியாக மாற்றப்படுகிறது; ஆனால், இந்த யந்திர சக்திக்கும் ஒரு காரணம் உண்டு; விழ்ச்சியடையும் நீரின் சக்தியில் அதைக் காணலாம். இவ்வாருக, சுழற்சி எனும் யந்திர சக்தி ஓரிடத்தில் காரணமாகவும், பிறிதொரு இடத்தில், மற்றெரு காரணமாகிய, வீழ்ச்சியடையும் நீர்ச் சக்தியின் காரியமாகவும் இருக்கிறது. ஆனால், இங்கு காரணம் எனத் தோன்றும் வீழ்ச்சியடையும் நீர்சக்தியே, ஒரு காரியமாகவும் உள்ளது. இயற்கையில் நீரின் ஓட்டத்திலிருந்தும், அருகே மின் நிலயம் கட்டப்பட்டிருக்கும் ஆற்றுப்போக்கில் அந்த நீர் தேக்கி வைக்கப்பட்டிருக்கும் மட்டத்திலிருந்தும் விளைவதே அது.

இந்தக் காரண காரிய உறவுச் சங்கிலியை நீங்கள் ஆராய்ந்தால், அதில் ஒன்றிலிருந்து ஒன்று தனித்திராமல், ஒன்றுடன் ஒன்று தொடர்புள்ள பலநிகழ்வுகள் இருப்பதைக் காணலாம். ஒவ்வொரு காரணத்தையோ அல்லது காரியத்தையோ, தனித்துக் காணக்கூடாது; தோற்றுவித்த அல்லது தோற்றுவிக்கப்பட்ட நிகழ்வுடன் அதற்குரிய தொடர்பையும் சேர்த்தே காண வேண்

டும். ஒரே பொருள் அல்லது ஒரே வினை ஒரே சமயத்தில் காரணமாகவும், காரியமாகவும் இருக்கக்கூடும். இவ் வகையில் பார்த்தால், காரணமும் காரியமும் ஏறுமாருன வை, எதிர்த்துருவங்கள் அல்ல எனலாம். பரஸ்பரக்கிரி யை புரியும் பொருள்கள் நிகழ்வுகள் ஆகிய சிக்கலான சங்கிலியின் கண்ணிகளே அவை. ஆக, எங்கெல்ஸ் கூறுவது போல, உலகில் சர்வ வியாபகப் பரஸ்பரக்கிரியை உள்ளது: தொடர்ந்து காரணமும் காரியமும் இடம் மாற்றிக் கொள்ளும் உண்மையில் அது அடங்கியுள்ளது; இங்கு, இப் பொழுது காரணமாகத் தோற்றுவது, பின்னர் வேரிடத்தில் காரிய மாகவும், வினைவாகவும், அதேபோன்று மாறியும் தோன்றுகிறது.

காரணத் காரிய தொடர்புவாதம் மூட நம்பிக்கைகளை தகர்க்கிறது.

பல்வேறு வகையான மூட நம்பிக்கைகளைத் தகர்த்தெறிவதில் மார்க்சீய லெனினிய காரண காரியத் தொடர்புத் தத்துவம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது.

ஒரு நிகழ்வு காலத்தால் மற்ளுென்றிற்கு முற்பட்ட தாயிருப்பதால், அது பின்னதன் காரணம் என்று கொள் ளக் கூடாது. என்னும் இது ஒரு சகஜமாகச் செய்யப் படும் தவறு.

எல்லா மூட நம்பிக்கைகளும் அப்படிப்பட்ட தவ றையே அடிப்படையாகக் கொண்டவை. மூட நம்பிக் கையுள்ள மக்கள், புறக்குறிகளைக் கொண்டு, அவை ஏதேனும் ஒரு வகையில் காலத்தால் தொடர்பு கொண் டிருப்பதால், இரு நிகழ்வுகளை காரண காரியத் தொடர் பால் பிணைக்கின்றனர். தங்களது பாதையில் ஒரு கறுப்புப்பூனை செல்வதை யாரேனும் கண்டு, அதன் பின்னர் ஏதேனும் ஒரு துரதிருஷ்டம் அவருக்கு நேர்ந் தால், உடனே பூனைதான் தனது துரதிருஷ்டத்திற்குக் காரணம் என்று முடிவு கட்டுகின்ருர். துரதிருஷ்டம்

பூனையின் தோற்றத்திறகுப் பின்னுல் ஏற்படுவதால அவையிரண்டிற்கு மிடையே வெறும் காலவரிசையைத் தவிர, வேறெந்த ஆழ்ந்த, உட்தொடர்பு இல்லையெனி னும் கூட, பூனையின் தோற்றமே விளைவின் காரணம் என்று முடிவு கட்டப்படுகிறது. இவ்வாருக, நிகழ்வு களுக்கிடையே உண்மையில் எந்தவிதத் தொடர்பும் இல்லையெனினும் அவற்றிற்கிடையே காரண காரியத் தொடர்பு பற்றி மூட நம்பிக்கையுள்ள மக்கள் பேசுகின் றனர்.

செர்னி செவ்ஸ்கி வரலாற்று மேற்கோள் ஒன்றைக் காட்டுகிருர். "பறவைகள் பறப்பதிலிருந்து குறி சொல் லும் பண்டைய ரோமானிய முறையின் சாராம்சம் என்ன? ஒருமுறை, யுத்தத்திற்கு முன்னர் வலது புறத் திலிருந்து அண்டங் காக்கை கரைவதைக் கேட்டனர்; அந்த யுத்தத்தில் அவர்கள் தோற்றனர்; மற்ருெருமுறை அண்டங் காக்கை இடது புறமிருந்து கத்திற்று. அந்த யுத்தத்தில் அவர்கள் வென்றனர். இப்பொழுது விஷயம் தெளிவாகி விட்டது...இரண்டிற்கும் ஒரு காரண காரி யத் தொடர்பு உண்டு: ஆக, வலப்புறமிருந்து கத்துங் காக்கை அழிவையும், இடப்புறமிருந்து கத்துவது வெற் றியையும் குறிக்கிறது!

"எல்லா வகையான மூட நம்பிக்கைகளும், இத் தகைய வாதத்தின் அடிப்படையில் தான் அமைந் துள்ளன".

நிகழ்வுகளின் தோற்ற காரணங்களை விடுத்து, உண்மையான காரணங்களை மனிதன் புரிந்து கொண் டால் தான், அவன் பயத்தையும், அத்துடன் மூட நம் பிக்கைகளையும் விட்டொழிக்கிருன். இதோ ஓர் உதார ணம்: ஒருகாலத்தில் ஆப்பிரிக்கப்பிரயாணிகள் "வானத் தில்" பெரும் சுவர்க்கத் தோட்டத்தைத் தாங்கள் கண்

டதாக அறுதியிட்டு உரைத்தனர், சில சமயங்களில், ஏதோ ஒரு வன் கப்பல் மாலுமிகளுடன் ஆகாயத்தில் தென்பட்டதாக அவர்கள் கூறினர். பின்னர், அவைய னைத்தும் மறைந்து விட்டன. இது எப்படி இருக்க முடி யும்? காரணம் தெரியாதவரை, எல்லாவிதமான தவ றுன விளக்கவுரைகளும் தரப்பட்டன. நாட்கள் செல்லச் செல்ல, இந்த அசாதாரண நிகழ்வின் காரணங்கள் கண்டு பிடிக்கப்பட்டன. உஷ்ணப் பிரதேசங்களில், அமைதியான கால நிலையில், வாயு மண்டலத்தின் அடர்த்தி அதிகரித்து, ஒரு பெரும் ராட்சத கண்ணாடி யைப் போன்று அது தோன்றுகிறது. இந்தக் கண்ணாடி யில் அந்தந்த இடத்திற்குத் தகுந்தாற்போல, நிலத் திலோ, கடலிலோ உள்ள பொருள்கள்—தோட்டம், கப் பல் போன்றவை, பிரதிபலிக்கின்றன. ஆகவே, மக்கள் பார்த்தது, சுவர்க்கலோகத் தோட்டங்களை அல்ல; பூமி யிலுள்ள தோட்டங்களின் பிரதிபலிப்பைத்தான் அவர் கள் கண்டனர். வானத்தில் மிதக்கும் கப்பல்களை அல்ல; நீரின் மேல் மிதக்கும் கப்பல்களின் பிம் பங்களையே அவர்கள் கண்டனர். இந்த நிகழ்வின் கார ணங்கள் கண்டு பிடிக்கப்பட்ட உடனேயே, அவை பற் றிய மூட நம்பிக்கைப் பயம் மறைந்து விட்டது.

ஆக, காரணங்களைப் பற்றிய அறிவு, மூடநம் பிக்கையிலிருந்து நம்மை விடுவிக்கிறது,

காரணங்களைப் பற்றிய ஆராய்வு, குறிக்கோட் தன்மை என்றஇயற்கையின்·மிகச் சுவையான நிகழ்வை நாம் புரிந்து கொள்ள உதவுகிறது.

காரண காரியத் தொடர்புவாதமும்குறிக் கோட்தன்மையும்

நம்மைச் சுற்றியுள்ள உலகை மேலோட்டமாகப் பார்த்தாலே அதிலுள்ள அற்புதமான இசை வும், தக அமைவும் நன்கு புல

ளுகும். நன்கு ஒழுங்கு படுத்தப்பட்ட ஒரு உயிர்ப் பொருளுக்கு இவ்வுலகை ஒப்பிடுவது ஆச்சரியப்படக் கூடியதல்ல. அதிலும், குறிப்பாக, அங்கக உலகில் காணப்படும் குறிக்கோட் தன்மை மிக விந்தையானது. இதோ சில உதாரணங்கள்: பல மலர்களும் காலையில் அலர்கின்றன. இது குறிக்கோளுடன் கூடிய ஒரு நிகழ்வாகும். ஏனெனில், பூச்சிகள் நாட்பொழுதில் மகரந்தத்தையும் தேனையும் சேகரிக்கின்றன. இன்னும் சற்று நேரத்தில் சூரியன் உதயமாகிவிடுவான் என்பது தங்களுக்குத் 'தெரிந்ததைப்' போல விடிவதற்குச் சற்று முன்னர் பூக்கள் மலர்கின்றன. தாவரங்களுக்கு, கால "நினைவு" நன்கமைந்துள்ளது. அவற்றைச் சற்று நேரம் இருட்டிலேயே வைத்திருந்த போதும், மாலையில் குவிந்து காலையில் மலர்கின்றன அவற்றின் பூக்கள். சூரியன் எப்பொழுது உதயமாவான் என்பது அவற்றிற்குத் தெரியும் போலும்!

இந்தக் குறிக்கோட் தன்மை—இயற்கையின் 'அறிவார்ந்த பண்பு'-தாவரங்களும், பிராணிகளும் தங்களது வாழும் நிலைமைகளுக்கேற்ப, சுற்றுப் புறத்திற்கேற்ப. தங்களைத் தக அமைத்துக் கொள்வதிலும் காணப்படுகிறது. பறவைகள் தங்களது வாழ்வின் பெரும் பகுதியைக் காற்று வெளியிலேயே கழிக்கின்றன; அதற்கேற்றாற்போல அவற்றின் உடலமைப்பும் உள்ளது. அவற்றின் எடையைக் குறைந்த பட்ச அளவிலேயே வைத்துகொண்டு, அதே நேரத்தில் குளிரிலிருந்து நம்பகமான பாதுகாப்பை அளிக்க, அவற்றின் உடல்களை எவ்வாறு போர்த்துவது என்ற வேலையை இயற்கை மேற்கொண்டது போலத் தோன்றுகிறது. பறவைகளின் முழு அமைப்பும், அவை பறப்பதை எளிதாக்கும் வகையில் அமைந்துள்ளது.

இயற்கையின் ஒருசில குறிக்கோட் தன்மைகளையே நாம் குறிப்பிட்டோம். மக்கள் இதைப் பார்க்கத் தவறியிருக்க முடியாது என்பது தெளிவு. ஆகவே, நீண்ட நெடுங்காலமாகவே, இந்த அற்புத நிகழ்வுகளை எவ்வாறு விளக்குவது என்ற கேள்வி அவர்கள் முன் நின்றது. ஏன் அவை அவ்வாறு உள்ளன?

கருத்து முதல்வாதிகளும் மதகுருக்களும், இயற்கையில் எங்கணும் நிறைந்துள்ள ஒழுங்கு முறையினையும் குறிக்கோட் தன்மையின் உண்மைகளையும் விளக்க முடியவில்லை; இந்த இயற்கை நிகழ்வுகள் அனைத்தின் தோற்றமும் வளர்ச்சியும் பொருளாயத காரணங்களால் இயற்கை விதியினால்—நிர்ணயிக்கப்பட வில்லைஎன்றும் அவற்றின் நோக்கத்தினாலும், அவை எதற்காகத் தோன்றியுள்ளனவோ அதற்காகவும், அவை இருப்பதற்கு என்ன அவசிய நோக்கமோ அதனாலும்தான் நிர்ணயிக்கப்படுகின்றதென்று அவர்கள் உறுதியாகக் கூறினர்.

இப்படிப்பட்ட கருத்தை நோக்கவியல் கருத்து (டெலியோலாஜிக்கல்) என்கிறோம். ('டெலோஸ்' என்றால் கிரேக்க மொழியில் நோக்கம் என்று பொருள்.)

இதிலிருந்துதான் மதகுருமார்கள் கீழ்க்கண்ட முடிவிற்கு வந்தனர், எல்லா ஒழுங்கு முறைகளும், குறிப்பிட்ட வழிகளின் மூலம் நோக்கங்கள் கைகூடுவதும். காட்டுவது என்ன? இதன் பின்னே அறிவார்ந்த ஒன்று.-மனம் ஒன்று-இருக்க வேண்டும். இயற்கை உண்மையாகவே ஒரு ஒழுங்கையும், குறிப்பிட்ட நோக்கங்களை சாதிக்கும் பண்பையும் படைத்ததாக விருக்கிறது. அப்படியானால், சர்வ வல்லமையுள்ள மனம்—கடவுள், மாந்திரீக சிருஷ்டி கர்த்தா—இயற்கையில் இயங்கிக் கொண்டிருக்கிறது. இயற்கையின் குறிக்கோட் தன்மையும் புத்திசாலித்தனமும் அறிவுள்ள கடவுளி

ளுல் தான் ஏற்பட்டுள்ளது. அவன்தான், அந்த ஆண்டவன்தான், இப்பெரும் உலகெனும் கருவியைத் தோற்றுவித்த "அசகாய சூத்திரதாரி." இப்படிப்பட்ட கருத்தை கேலி செய்து எங்கெல்ஸ் எழுதினுர். உலகைப்பற்றிய நோக்கவியல் கருத்தின்படி "எலிகளைத் தின்பதற்காகவே பூனைகள் படைக்கப்பட்டன; பூனைகளால் தின்னப்படுவதற்காகவே எலிகள் படைக்கப்பட்டன. இந்த உலகம் முழுவதுமோ—அந்த சிருஷ்டிகர்த்தாவின் அறிவாற்றலை நிரூபிப்பதற்காகத்தான் படைக்கப்பட்டது."

கடவுட் கொள்கைவாதிகள், உலகம்எவ்வளவு அறிவார்ந்த முறையில் அமைக்கப்பட்டுள்ளது என்பதிலிருந்துதான் உலகைப் "படைத்த" அந்த "அறிவாற்றல் சக்தியைப்பற்றி முடிவு கட்டுகின்றனர். இன்று வரை, கருத்து முதல் வாதிகளும், கடவுட் கொள்கை வாதிகளும் அப்படிப்பட்ட "நிருபணங்களையே" உபயோகித்து வந்தனர். உதாரணமாக, அமெரிக்கக் கலைக் களஞ்சியம் (என்சைக்ளோபீடியா அமெரிக்கானு) கூறுவதைப் பாருங்கள்: "உயிர்வாழ் பொருள்கள் அனைத்திற்கும் உள்ள குறிக்கோள்களைச் சீர்தூக்கிப் பார்த்தால், அவையனைத்தும் ஒரு பிரதமப் புனைவாளனின்றி வளர்ச்சியடைந்திருக்கக் கூடும் என்று நம்புவது முடியாத காரியம்" †

ஆனுல் உண்மை அதுதானு? நோக்கவியல் கொள்கைக்கு விஞ்ஞான அடிப்படை உண்டா? இதை நாம் பார்ப்போம்.

முதற்கண், குறிப்பிட்ட ஒரு நிகழ்வு என்ன நோக்கத்திற்காக எழுந்தது என்பதைப் பற்றி எவ்வளவுதான் நமது மூளையைக் குடைந்தாலும், அதன் இயற்கையைக் கண்டு பிடிப்பதில் ஒரு படி கூட நாம் முன்னேற மாட்

† (தொகுதி 18 - பக்கம் 184)

டோம் என்பதை மனதிலிருத்திக் கொள்ள வேண்டும். ஒரு நிகழ்வைப் புரிந்து கொள்ள, அது ஏன் ஏற்படுகிறது என்பதற்கான காரணங்களை, அதை எது தோற்றுவிக்கிறது. அது எதனுடன் இணைக்கப்பட்டிருக்கிறது என்பதை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். ஏன், என்ன காரணங்களால் இயற்கையில் இத்துணை அற்புதமான குறிக்கோளுடைமை நிலவுகின்றது! என்ற கேள்விகளைப் போடுவதன் மூலமாகவே, இவ்வுலகில் நடைபெறும் நிகழ்வுகளின் இயற்கையை நாம் புரிந்து கொள்ள முடியும். ஆனால், இயற்கை நிகழ்வுகளைப் பற்றிய இவ்விதமான விஞ்ஞான, காரண காரிய விளக்கவுரைக்கு எதிராகவே, நோக்க வியல் கருத்து திருப்பிவிடப் பட்டுள்ளது.

உலக நிகழ்வுகளின் மெய்யான, புறவயக் காரணங்கள் கண்டு பிடிக்கப்பட்டவுடன், அவை இயற்கையில் எந்த விதமான ரகசிய நோக்கங்களும், தெய்வீக விருப்பங்களும், சர்வ வல்லமையுள்ள ஒரு மனத்தின் சக்தியும் இல்லை என்பதை நிரூபித்துக் காட்டுகின்றன.

இதோ ஒரு மிகச் சிறந்த உதாரணம்: கோடையில், கடற்கரையோரத்தில், ஈரமான கூழாங் கற்களினூடே பல பூச்சிகள் குதித்துக் கொண்டிருப்பதை நீங்கள் கண்டிருக்கக் கூடும். திடீரென்று அவை நீரிலிருந்து வெகு தூரம் விலகிச் சென்று விடுகின்றன. இது, ஏதோ தற்செயலாக நிகழ்வதல்ல; சற்று நேரம் கழித்து ஒரு புயல் அடிக்கிறது; அந்தப் பூச்சிகளுக்குப் புயல் வரப்போவது முன் கூட்டியே 'தெரிவதைப்' போலத் தோற்றுகிறது. ஒரு புயல் வருவதன் முன், மீன்கள் கரையோரத்திலிருந்து விலகி உள்ளே சென்று விடுகின்றன, இல்லையெனில் அவை கரைகளில் தூக்கி எறி

யப்பட்டுவிடும். ஜெல்லிபிஷ் என்ற வகை மீன்களும் மறைந்து விடுகின்றன.

உயிர்ப் பொருள்களின் இந்த நடத்தையைப் பற்றி எண்ணும்போது, இந்த நிகழ்வுகள் குறித்த "அற்புதத் தன்மை"யைப் பற்றிய சிந்தனை வராமலிருப்பது கடினமே. ஆனால், விஞ்ஞானம் அவற்றின் இயற்கைக் காரணங்களை எடுத்துரைக்கும் போது, அனைத்தும் தெளிவாகி விடுகின்றன. கடற்கரையிலிருந்து தூரத்தில் ஒரு புயல் உருவானால், மனித கேள்விப் புலனுக்கும் அப்பாற்பட்ட ஒலி அலைகள் கரையை அடைகின்றன என்பது நிலை நாட்டப்பட்டுள்ளது. அந்த ஒலி அலைகள் ஆயிரக்கணக்கான மைல்கள் பயணம் செய்கின்றன. நெடுந்தூரத்தில் ஏற்படும் புயல், கரையை அடைவதன் முன்னரே, அதன் முன்னறிவிப்பு இங்கு கிடைக்கிறது. மனிதனைப் போலன்றி, கடற் பிராணிகள் இவ்வொலிகளை அறிகின்றன. புயல் பற்றிய "முன்னெச்சரிக்கை" அவற்றிற்குக் கிடைக்கின்றன; உரிய காலத்தில் பாதுகாப்பை நாடுகின்றன அவை. "அறிவார்ந்த" இச்செய்கை, மெய்யான, இயற்கைக் காரணங்களை அடிப்படையாகக் கொண்டவை. இதில், எந்த விதமான அதீதமும் அடங்கியிருக்கவில்லை. இவற்றிலிருந்து, விஞ்ஞானம்தான்—மதம் அல்ல—குறிக்கோட் தன்மை பற்றிய உண்மைகளைச் சரிவர விளக்க முடியும் என்று தெளிவாகிறது.

உலகில் ஓர் ஒழுங்கு முறை இருப்பதால், அதை "வழி நடத்த" உயர் அம்சம் ஒன்று அவசியம் இருந்தாக வேண்டுமென்ற மத குருக்களின் அறிக்கைகளின் மதிப்பு பற்றி இப்பொழுது நாம ஆராய்வோம். அப்படிப்பட்ட உயர் அம்சம் இன்றி, இந்த விதமான ஒழுங்குமுறை இருக்க முடியுமா? பொருள் முதல்வாதத்

தத்துவ இயல் 'ஆம், முடியும்' என்றே பதிலளிக்கிறது. இயற்கையான காரணங்களின் அடிப்படையில், புறவய மான இயற்கை விதிகளின் அடிப்படையில், உலக வளர்ச்சி ஏற்பட முடியும்: பொருளாயத தத்துவ இயல் இது விஷயத்தில் விஞ்ஞானத்துடன் பூரண உடன் பாடு கொண்டுள்ளது. உலகம் குறிப்பிட்ட விதிகளுக் குட்பட்டது என்பதனுல்தான், பொருள்களின் இயற்கை யான ஒழுங்கு முறைக்குட்பட்டிருப்பதால்தான், இயக் கத்திலுள்ள பொருள்களைக் கட்டுப்படுத்தும் விதிகளின் படி அவை வளர்ச்சியடைவதால் தான், உலகில் குழப் பமும், கலக்கமும் இல்லாமலிருக்கிறது

அங்கக இயற்கையின் குறிக்கோட் தன்மையை எவ்வாறு விளக்குவது? இந்தக் குறிக்கோட் தன்மை, இயற்கையான வழியிலேயே பெறப்படுகிறது என்று டார்வின் காட்டினுர். நம்மை வியப்பிலாழ்த்தும், அங்கக உலகின் குறிக்கோட் தன்மையும், இணக்க இசைவும், பலப் பல நூற்றுண்டு பரிணுமப் போக்கில், இயற்கை விதிகள், இயற்கைக் காரணங்கள் ஆகியவற்றின் அடிப் படையில் வளர்ச்சியடைந்தவை.

''சிருஷ்டி கர்த்தா''வின் நோக்கம் பற்றிய வறட்டு வாதங்களில் புகுவதற்குப் பதிலாக, டார்வின், விலங்கின உலகின் வளர்ச்சி பற்றிய உண்மையான, புறவயக் காரணங்களையும், விதிகளையும் ஆராய்வதில் தன்காலத் தைச் செலவிட்டார். அங்கக உலகின் குறிக்கோட் தன் மையின் ரகசியத்தைக் கண்டு பிடிப்பதில் அவர் வெற்றி யடைந்தார். அதைப் புரிந்து கொள்ளும் வழிகாட்டியே டார்வினின் இயற்கைத தேர்வு விதி. இயற்கையில, உயிர் பிழைக்கும் ஒவ்வொரு உயிர்ப் பொருளுக்கும், லட்சோப லட்சம் உயிர்ப் பொருள்கள் மடிகின்றன என் பதுதான் இதன் பிரதான அம்சம். உயிர்ப் பொருள்

களின் தலைவிதியை நிர்ணயிப்பது எது? இயற்கையே நிர்ணயிக்கிறது! உயிரினங்களில் எவை உயிர் வாழும், எவை சந்ததிகளை விருத்தி செய்யும், வாழ்க்கைப் போராட்டத்தில் எவை செத்து மடியும், என்பது, எந்தப் 'பரம் பொருட் சக்தி'யின் தலையீடுமின்றி, இயற்கையின் மாறாத வளர்ச்சி விதிகளின் அடிப்படையிலேயே தீர்மானிக்கப்படுகிறது. இதன் விளைவைத்தான் டார்வின், இயற்கையின் தேர்வு என்று வரையறுத்தார்; ஏனெனில், இயற்கைக் காரணங்கள், விதிகளின் அடிப்படையில் அவை நடைபெறுகின்றன. சுற்றுப்புறச் சூழ்நிலைக்கு, சிறந்த முறையில் தக அமைந்துள்ள தாவரங்களும், பிராணிகளுமே உயிர் வாழ்கின்றன.

இவ்விதமாக, வாழும் சூழலுக்குச் சிறந்த தக அமைப்பிற்கான போராட்டத்தின் அதுதான்—வாழ்க்கைப் போராட்டம் என்பதும்-விளைவாக, சிறந்த பிராணிகளே—வாழ்வதற்குத் தக்க எவை அமைகிறதோ, அவையே, தவிர்க்க முடியாதபடி பாதுகாக்கப்படுகின்றன. இருக்கும் நிலைமைகளுக்கேற்ப, உயர்மட்ட குறிக்கோள் தன்மையைக் கொண்டுள்ள, பிராணி, தாவர இனங்கள், நூறு ஆயிரக்கணக்கான தலைமுறைகளில் தோன்றியுள்ளன. இந்த குறிக்கோட் தன்மைமேலிருந்து அவற்றின் மீது திணிக்கப்பட்டது அல்ல; பல நூற்றாண்டுகளாகப் பரிணாம வாதப் போக்கில் வளர்ச்சி பெற்றவை அவை.

உதாரணமாக, வரும் புயலை அறியும் அற்புதத் திறன் சில குறிப்பிட்ட கடல்வாழ் பிராணிகளுக்கு எப்படி வந்தது? இதை எவ்வாறு விளக்குவது? பரிணாமப் போக்கில், எந்த உயிரினங்கள் பரவும் ஒலி அதிர்வுகளை அறிந்து, புயலிலிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ளும் திறன் பெற்றிருந்தனவோ, அவையே

வாழ்க்கைப் போராட்டத்தில் தப்பிப் பிழைத்தன. அந்தத் திறமையற்றிருந்த பிராணிகள் அதனுலேயே, வாழ்க்கைப் போராட்டத்தில் அழிந்து பட்டன; ஆனுல் அறியும் திறனிருந்த பிராணிகளுக்கு, அத்திறன் சாதக மாக விருந்தது. இவ்வாருக, இயற்கைத் தேர்வின் மூலம், எந்த தெய்வீக சக்தியின் தலையீடுமின்றி, தமது "அறிவார்ந்த தன்மை"யினுலும், "குறிக்கோட் பண் பினுலும்" நம்மைவியப்பிலாழ்த்தும் அவ்வகைப்பிராணி கள் தோன்றின.

இதே போன்றதுதான், தாவரங்களும், பிராணிகளும் மிக மிகத் துல்லியமாக காலத்தை 'அளக்கும்' திறன் பெற்றிருப்பதும். கால ஓட்டத்திற்குத் தகுந்தாற்போல், தங்களது உடலியல் கிரியைகளை அவை இணக்கி நிலைப்படுத்துகின்றன. காலப்போக்கில், சில விதி களுக்குட்பட்ட மாற்றங்கள் சூழ்நிலையில் ஏற்படு வதற்கு இயைந்து, பிராணிகளும், தாவரங்களும் தங் களைத் தக அமைத்துக் கொண்டதன் விளைவாகவே பல நூற்ருண்டு பரிணுமப் போக்கில் அவை இத்திறனைப் பெற்றது ஆகும்.

"குறிக்கோட் தன்மை" என்ற பழைய சொல்லிற் குப் புதிய பொருள் புகட்டியது அறிவியல். கற்பித்துக் கொள்ளப்பட்ட குறிக்கோளுக்குப் பதிலாக. உண்மை யான காரணத்தை நாம் எடுத்தோதுகிருேம். இயற்கை விதிகளின், இயற்கையான காரணங்களின் தவிர்க்க இயலாத அவசிய விளேவே, அங்கக உலகின் பூரணத் துவம் ஆகும்.

காரணங்கள் பலவகைப்படும் என்பதை மனதி லிறுத்திக்கொள்ள வேண்டும். சில, அவசியமான நிகழ்வுகளைத் தோற்றுவிக்கின்றன; வேறுசில, தற் செயல் நிகழ்வுகளைத் தோற்றுவிக்கின்றன.

## அவசியமும், தற்செயல் நிகழ்ச்சிகளும்

புகழ்பெற்ற பௌதீக இயலாளரான பியரிகியூரி யிடமிருந்து, பெக்குவாரெல் என்ற விஞ்ஞானி ஒரு முறை, தனது விரிவுரையின் போது மாணவர்களுக்குக் காட்டுவதற்கென சிறிதளவு ரேடியத்தை இரவல் வாங்கினார். ஒரு சிறிய குழலில் அந்த ரேடியத்தைப் போட்டு தனது மேலங்கியின் பையில் அவர் வைத்திருந்தார். சில தினங்கள் கழிந்த பின்னர், அந்தக் குழலை வைத்திருந்த இடத்திற்கு நேராக, அக்குழல் வடிவில் தோல் அவரது சிவந்திருப்பதை அவர் கண்டார். இந்தத் தற்செயல் நிகழ்ச்சியே, ரேடியத்திலிருந்து வரும் கதிர்கள், மனித உடலில் ஏற்படுத்தும் பாதிப்புக்களைப் பற்றிய ஆராய்ச்சிக்கு இட்டுச் சென்றது. இந்த விபத்து மட்டும் ஏற்படாவிடில், ரேடியக் கதிர்வீச்சு நோய் பற்றியும், ரேடியத்தின் அபாயம் பற்றியும், மக்களுக்கு எதுவுமே தெரிந்திருக்காது என்று தோன்றுகிறது. அப்படித்தானா? சிலர் 'ஆம்' என்று இதற்குப் பதிலளிப்பார்கள்.

நமது வாழ்வு முழுமைக்குமே அவர்கள் இக் கருத்தை விஸ்தரித்து, வாழ்க்கையையே தற்செயல் நிகழ்ச்சிகளின் தொடர் என்று உரைக்கின்றனர். இக் கருத்தைக் கொண்டுள்ளவர்கள் "தற்செயலாக உதவி கிட்டியது," "சந்தர்ப்பம் கெடுத்து விட்டது" என்று கூறக் கேட்கிறோம். உலகம் உட்பட அனைத்தும்— இங்கு நடைபெறும் எல்லாமே— ஏதோ ஏறுமாறான நடத்தைகளுக்கும், எதிர்பாராத விபத்துக்களின் விளைவுகளுக்குமே ஏற்றிக் கூறப்படுகிறது.

வேறு சிலர் இக்கூற்றுக்களை எதிர்க்கின்றனர். அவர்கள் கூறுகின்றனர்: இயற்கையில்

எதுவுமே தற்செயலாக நிகழ்வதில்லை; ஏனெனில் அனைத்தும், குறிப்பிட்ட காரணங்கள், விதிகளின் அடிப்படையிலேயே நடைபெறுகின்றன. பெக்கெரெல் ஏன் தனது விரிவுரை வகுப்பிற்கு ரேடியத்தை எடுத்துச் சென்றார்? ஏனெனில், ரேடியத்தைப் பற்றி மாணவர்களுக்குக் கூறும் நேரம் வந்துவிட்டது. அதுவே தகுந்த காரணம்தானே! அவரது உடலில் ஏற்பட்ட கதிர்வீச்சுச் சூட்டிற்கும் ஒரு குறிப்பிட்ட காரணமுண்டு. ரேடியம் உயிர்ப் பொருளை பாதிக்கிறது; பாதிக்காமலிருக்க முடியாது. எனவே, அவர் அடைந்த சூட்டுப் புண்ணிற்கு ஒன்றல்ல; ஒரு பெரும் காரணத் தொடரே உண்டு. அது அவசியத்தை முன்னிட்டே ஏற்பட்டது; தற்செயல் நிகழ்ச்சிகள் எதுவும் அதில் இல்லை.

அப்படியானால், ஏன் சில நிகழ்ச்சிகள் மட்டும் தற்செயல் நிகழ்ச்சிகள் என்று கூறப்படுகின்றன? மேற் கூறிய கருத்தை ஆதரிப்போர் அதைக் கீழ்க்கண்டவாறு விளக்குகின்றனர். குறிப்பிட்ட நிகழ்ச்சியின் காரணங்களை அறியாத மக்கள் அதை தற்செயல் என்று அழைக்கின்றனர். எனினும், ஒரு நிகழ்வைத் தோற்றுவித்த காரணங்களை, சற்றுத் தேடினால் கண்டுபிடித்து விடலாம். அப்பொழுது அந்த தற்செயல் போலத்தோன்றும் நிகழ்ச்சியும் மறைந்து விடும். அந்த நிகழ்வு அவசியமானது; காரணகாரியத் தொடர்பினால் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இத்தகைய தத்துவத்தைத்தான் டெமாகிரிட்டஸ், ஸ்பைனோசா, ஹோல்பாக் போன்ற தத்துவார்த்திகள் கூறினர்.

ஆக, இதுபற்றி இரு அபிப்பிராயங்கள் உள்ளன. ஒரு சாரார், இந்த உலகில் அனைத்துமே அவசியம் தானென்றும், எதுவுமே தற்செயல் அல்லவென்றும்

கூறுகின்றனர். இதற்கு மாருக, வேறுசிலர், எல்லாமே இவ்வுலகில் தற்செயலானதென்று உரைக்கின்றனர். இவற்றுள் எது சரியானது?

பின்னுல் கூறப்பட்டவர்கள், காரணகாரியத் தொடர்பு வாதத்தையும், விதிக்குக் கீழ்படிதலேயும் மறுக்கின்றனர்; இது உண்மைகளுக்கும் விஞ்ஞானத் திற்கும் முரணுனது; எனவே அவர்கள் கூற்று தவறு தான். நியதியற்ற தன்மை மறுக்கப்பட வேண்டியதே.

அவர்களது எதிர்த்தரப்பினரான-நியதிவாதிகளைப் பொறுத்த மட்டில், அவர்கள் பிரச்சினையைச் சரியான படி தீர்த்துவிட்டனர் என்று நாம் முடிவு கட்டிவிடக் கூடாது. விஷயம் அதைவிட மிகச் சிக்கலானது. நியதிவாதம் பலவழிகளில் உருக்கொள்ள முடியும். அப்பாலே அல்லது யாந்திரீக நியதிவாதத்தையும், முரண்தர்க்க நியதிவாதத்தையும் வேறுபடுத்திப் பார்ப்பது அவசியம்.

அப்பாலே நியதிவாதத்தின் விசேஷ அம்சம் என்ன வென்ருல், அது உலகில் நடைபெறும் அத்தனையும், காரண காரியத் தொடர்பினுல் நிர்ணயிக்கப்படுகிற தென்றும், விதிகளால் ஆளப்படுகின்றதென்றும் ஒப்புக் கொண்டு, தற்செயல் நிகழ்ச்சிகள் நேருவதையே மறுக் கிறது. (முரண்தர்க்க நியதிவாதம், தற்செயல் நிகழ்ச் சிகளேயும் ஒப்புக் கொள்ளுகிறதென்பது பற்றி நாம் பின்னுல் காண்போம்.) இயற்கையின் எல்லா நிகழ்வு களுக்கும் காரணங்கள் உண்டு என்றும், உலகில் எதுவுமே காரணமின்றி நடைபெறுவதில்லே என்றும் கூறுவது வரை அப்பாலே நியதிவாதம் சரியானதே.

எனினும், எல்லா நிகழ்வுகளுக்கும் காரணங்கள் உண்டு என்ற ஆதாரத்தின் பேரில் தற்செயல் நிகழ்ச்சி களேயே அவர்கள் மறுப்பது சரிதானு? நிச்சயமாக

இல்லை. இதிலுள்ள அம்சமும் இதுதான்: அதாவது, அப்பாலை நியதிவாதமும், நியதியற்ற தன்மை வாதமும், இரண்டுமே, ஏதேனும் ஒன்றைத்தான்—அவசியத்தையோ அல்லது தற்செயல் நிகழ்ச்சிகளையோ—இவற்றில் ஒன்றைத்தான் அங்கீகரிக்கிறது. ஒன்று, இவ்வுலகில் அனைத்துமே அவசியமானது; அல்லது அனைத்துமே தற்செயலானது என்ற வகையில் கேள்வி எழுப்பப்படுகிறது. இதுவா—அதுவா? இப்படித்தான் அப்பாலைத்தத்துவம், வழக்கமாக கேள்வியை எழுப்புகிறது. இவற்றிலிருந்து, இரண்டு கருத்துக்களுமே சில வரம்புக்குட்பட்டவை; ஏனெனில் அவை அவசியத்தையும், தற்செயல் நிகழ்ச்சிகளையும் ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரிக்கிறது என்று காண்கிறோம். இதற்குச் சரியான தீர்வுதான் என்ன?

**அவசியம் என்பதென்ன?**

இக் கேள்விக்கு விடையளிக்க ஒரு உதாரணத்துடன் ஆரம்பிப்போம். ருஷ்யாவில் நடைபெற்ற மகத்தான அக்டோபர் சோஷலிசப் புரட்சியின் ஆதர்சத்தால், 1918 நவம்பரில், ஜெர்மனியில் ஒரு புரட்சி நடைபெற்றது. எனினும், சோஷல் டெமாகிரட்டுக்களின் துரோகத்தால் அது தோற்கடிக்கப்பட்டது. இது குறித்து, 1919 ஜனவரி 15ந் தேதி, ஜெர்மன் தொழிலாளர் தலைவரான கார்ல் லிப்க்னெச்ட் என்பாரால் எழுதப்பட்ட கட்டுரையொன்றை ரோத் பாஹ்னே (செங்கொடி) என்ற பத்திரிகை பிரசுரித்தது. புரட்சியில் பங்கெடுத்துக் கொண்டோரை விளித்து அவர் எழுதினார்: "அமைதியாக இருங்கள்! நாம் ஓடவில்லை' நாம் முறியடிக்கப்படவில்லை; நம்மை அவர்கள் சங்கிலியால் பிணைத்து வைத்தாலும், நாம் இருக்கத்தான் செய்வோம்; வெற்றி நமதே

நாம் உயிருடன் இருந்தாலும், இல்லாவிடிலும், நமது குறிக்கோளை நாம் அடையும்போது, நமது திட்டங்கள் வாழும்; விடுதலை பெற்ற மனிதகுல உலகிலே அவை நிலைத்திருக்கும்; எது வரினும் இது நடைபெறும்!" ஜெர்மன் தொழிலாளர் தலைவரின் அனல் கக்கும் சொற்கள், அவசியத்தின் கருத்தை, தவிர்க்க இயலாது நிகழப்போகும் ஒன்றை, சோஷலிசம், கம்யூனிசம் இவற்றின் வெற்றியை அழகாக எடுத்தோதுகிறது. "எது வரினும் இது நடைபெறும்!"

கம்யூனிச எதிரிகளிடம் பீதியைக் கிளப்பும், இந்த அறுதியிட்ட உரைக்கு ஆதாரம் என்ன? இயற்கை விதிகளைப்பற்றிய அறிவேதான். சிலமணி நேர இரவுப் பொழுதிற்குப் பிறகு, சூரியன் உதயமாகும், காலைப் பொழுது தோன்றும் என்பது குறித்து நாம் ஐயுறுவதேயில்லை. அதே போன்று, எவ்வளவுதான் உறை பனி கடுமையாகவிருந்த போதும், வசந்த காலம்—இயற்கை புதுப்பிக்கும் காலம்—அடுத்துவரும் என்பது பற்றிச் சந்தேகப்பட எந்தக் காரணமும் இல்லை. நடைமுறை, பல நூற்றுண்டு கால அனுபவம் இயற்கை, சமூகம் ஆகியவற்றின் விதிகளைப்பற்றிய அறிவு, இவற்றின் அடிப்படையில் எழுந்ததே இந்த ஐயமிலா நிலை. பூமி தனது அச்சில் சுழலுவதால் தோன்றுவதே இரவு, பகல் மாறி மாறி வரும் நிலை. சூரியனைச் சுற்றி பூமி செல்வதால் ஏற்படுவதே பருவகால மாற்றங்கள். புரையோடிப்போன உள் முரண்பாடுகள் முதலாளித்துவ அமைப்பைக் கிழித்தெறிவதால், அது தவிர்க்க முடியாத வீழ்ச்சியடைந்து அதற்குப் பதில் சோஷலிச அமைப்புமுறை ஏற்படுவதால் அடைவதே கம்யூனிச வெற்றி. சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் திட்டம் கூறுவதைப்போல: "எங்கணும், முதலாளித்து

வத்தின் பின்னர் தவிர்க்க முடியாதவாறு சோஷலிசம் தோன்றும். சமூக வளர்ச்சியின் புறவய விதி அதுவே. தடையிலா விடுதலைப் போக்கைத் தடுக்க ஏகாதிபத்தியம் சக்தியற்றது" (கம்யூனிசத்திற்கான பாதை; பக்கம் 449)

நிகழ்வுகளின் இந்த இடையருத பரஸ்பரத் தொடர்புதான் "அவசியம்" என்ற தத்துவார்த்த இனத்தினுல் குறிப்பிடப்படுகிறது. "அவசியம்" என்பது இருக்கும் ஏதோ ஒன்று மட்டுமல்ல' அது இல்லாமலும் இருக்கலாம். 'பூரணமாக ஏற்பட்டுத்தான் ஆகவேண்டுமென்ற ஒன்று அது. ஏனெனில், ஆழ்ந்து பொதிந்துள்ள காரணங்களினுலும், தொடர்புகளினுலும் உண்டாக்கப்படுவது அது' எனவே ஒரு நிகழ்வின் அடியாழ்ந்த தன்மையிலிருந்து, அதன் சாரத்திலிருந்து எழுவது அது.

உலகிலுள்ள அனைத்தும் அவசியம் தானென்ருல், தற்செயல் நிகழ்ச்சிகள் உள்ளனவா?

**தற்செயல் நிகழ்ச்சிகள் உண்டா?**

இங்கும் நாம் உதாரணங்களோடு ஆரம்பிப்பது பயனுடையதாகவிருக்கும். ஒரு தொழிற்சாலையில், பல தொழிலாளர்கள், ஒரே நேரத்தில் நோய் வாய்ப்படுகின்றனர். அதன் பலனுக, உற்பத்தித் திட்டம் பூர்த்தி செய்யப்படவில்லை. அல்லது, ஒரு மனிதன் கார் விபத்தில் சிக்கி, உயிரிழக்கிருன். இது போன்ற நிகழ்ச்சிகளை நாம் ஏன் விபத்து என்றழைக்கிருேம்?

அவசியம் என்று நாம் மேலே கூறியவற்றுடன் இதனை ஒப்பிட்டுப் பாருங்கள். அவசிய நிகழ்வு என்பது வளர்ச்சிப்போக்கின் முழுமையான உள்ளார்ந்த வழிமுறைகளின் காரணமாக எழுந்து, செழுமை

யடைந்து, தோன்ருமலிருக்க முடியாத தொன்று. (''எதுவரினும், இது நடைபெறும்'' என்ற வார்த்தைகளைநினைவில் கொள்ளுங்கள்) மாருக, தற்செயல் நிகழ்வுகளென்பது, ஏதோ தனிப்பட்ட, தற்காலிகமான தொன்று, தவிர்க்க முடியாத தொன்ருகக் கருத முடியாது.

ஒரு தற்செயல் நிகழ்ச்சி நடைபெறலாம், நடைபெருமலுமிருக்கலாம். ஒரே நேரத்தில், ஒரு தொழிற்சாலையின் எல்லாத் தொழிலாளர்களும் நோய்வாய்ப்படுவது தவிர்க்க் முடியாததொன்ரு? தவிர்க்க முடியாதபடி ஒரு விபத்தில் சிக்கி உயிரிழக்கவேண்டிய வகையில் இருந்ததா அந்த மனிதனின் வாழ்வு? நிச்சயமாக இல்லை. இப்படிப்பட்ட நிகழ்ச்சிகளை நாம் அவசியம் என்று கூறமுடியாது. அவை தற்செயல் நிகழ்ச்சிகளே. வளர்ச்சியின் முழுமையான அடி ஆழப்போக்குகளினுல் அந்தச் செயல் ஏற்பட்டதல்ல.

1957 அக்டோபரில், முதல் செயற்கைக் கோளை பூமியைச் சுற்றி ஏவிவிட்டு சோவியத் யூனியன் விண்வெளிச் சாதனையை ஏற்படுத்தியபோது, மேலை நாடுகளிலுள்ள சில பூர்ஷுவா பிரசாரகர்த்தாக்கள், இந்த சாதனை ஒரு தற்செயல் நிகழ்ச்சியென்றும், தனிப்பட்ட ஒரு சாதனையென்றும் உறுதி கூறினர். ஆனுல், அது உண்மையில் அப்படிப்பட்டதொன்றல்ல. சோஷலிச அமைப்பும், கம்யூனிஸ்டுக் கட்சி, சோவியத் அரசு இவையும் விஞ்ஞான வளர்ச்சிக்குச் செலுத்திய கவனமுமே இந்த வெற்றியின் மூல காரணம்.

சோவியத் தொழில் நுணுக்கவியல் அடைந்துள்ள பக்குவத்தையும், கணிதம், பௌதீகம், ரசாயனம், உலோகவியல் ஆகிய நிர்ணயத் துறைகளில் சோவியத்

விஞ்ஞானம் அடைந்துள்ள சாதனைகளையும் விண் வெளியில் செலுத்தப்பட்ட ஸ்புத்னிக் நிரூபித்துக் காட்டுகிறது. இதை எப்படி தற்செயல் நிகழ்ச்சி என்று கூற முடியும்? ஒரு குறிப்பிட்ட கிரியையின் தன்மையிலிருந்து பெறப்படாத ஒன்றையே தற்செயல் நிகழ்ச்சி என்கிறோம். ஆனால். ஸ்புத்னிக்கோ, சோவியத் யூனியன் வளர்ச்சியின் முழு வரலாற்றின் விளைவே யாகும்.

எனவே ஒரு குறிப்பிட்ட நிகழ்வு தற்செயலானதா, அல்லது அவசியமானதா என்ற கேள்விக்கு விடை யளிக்க, அந்நிகழ்வு அகக் காரணங்களினால் விளைந்ததா, புறக் காரணங்களால் விளைந்ததா என்பதைக் கண்டு பிடிக்க வேண்டும்.

விதை விதைத்து விவசாய வளர்ச்சித் துறை விதிகளின்படி நன்கு பேணி வளர்க்கப்பட்ட ஒரு கோதுமைப் பயிர், கல் மழை பெய்ததனால் அழிக்கப் பட்டால், அது தற்செயல் நிகழ்ச்சியா அல்லது அவசிய நிகழ்ச்சியா? கல் மழை பெய்ததற்குக் காரணங்கள் உண்டுதான். ஆனால், வயல் வெளியிலுள்ள கோது மையை அழிப்பதற்கென்றே தவிர்க்க முடியாதபடி தோன்றிய காரணங்களா அவை? இல்லை, ஏன்? பின் வரும் விளக்கம் அதைக் கூறும்.

அதற்குரிய காரணங்களின்றி கல்மழை தோன்று வதில்லை. ஆனால், இந்தக் குறிப்பிட்ட வயலைப் பொறுத்த வரை, அவை, கோதுமை வளர்ச்சியின் தேவையான நிலைமைகளிலிருந்து பெறப்படாத; நிலையற்ற புறக் காரணங்கள். ஆகவே, அந்த நிகழ்ச்சி தற்செயலா னதே. கோதுமையை அழிப்பது, அது செய்ய வேண் டிய கடன் அன்று. கல்மழையால் ஏற்பட்ட பலன்

இந்தக் குறிபபிட்ட வயலைப் பொறுத்தமட்டில் தற்செயல் நிகழ்ச்சியே.

இப்பொழுது கூறியவற்றிலிருந்து, தற்செயல் நிகழ்ச்சிகளும், அவசிய நிகழ்ச்சிகளும் எதிர்நிலையானவை என்று தெளிவாகிறது. ஆனால், அவற்றிடையே பொதுவான எதுவுமே இல்லை என்று கூறிவிடலாமா?

தற்செயல், அவசிய நிகழ்ச்சிகளுக்கிடையேயுள்ள பொதுவான ம்சம் என்ன ?

அப்பாலைத் தத்துவவாதிகள், அவசிய நிகழ்ச்சியாக விருப்பது தற்செயல் நிகழ்ச்சியாக விருக்க முடியாதென்றும், தற்செயல் நிகழ்ச்சி அவசிய நிகழ்ச்சியாக முடியாதென்றும் கூறுகின்றனர். சாதாரண பொது அறிவுகூட இந்த முடிவு சரியானது என்று ஆதரிப்பதுபோலத் தோன்றுகிறது. இது உண்மைதானா என்று பார்ப்போம்

முன்பு கூறிய உதாரணத்தை நினைவு படுத்திக் கொள்ளுங்கள். பெக்குவெரெலிற்கு ஏற்பட்ட காயம் தற்செயல் நிகழ்ச்சிதான்; ஏனெனில், ரேடியத்துடன் கூடிய அந்தக் குழலை அவர் தனது பைக்குள் போட்டிராவிட்டால், அது நிகழ்ந்திருக்காது. ஆனால், இந்தத் தற்செயல் நிகழ்ச்சியின் பின்னே காணப்படுவது என்ன? அதற்கு முன்பாக, யுரேனியம் தாதுவுடன் சேர்ந்து மிகச் சிறிய அளவிலேயே ரேடியம் கிடைத்து வந்தது. எனவே, ரேடியக் கதிர் வீச்சைக் கண்டு பிடிப்பது மிகவும் கடினமாக இருந்திருக்கக்கூடும். கியூரி தம்பதிகள் அதனைச் சுத்தமான நிலையில் தனிமைப்படுத்திய பின்னர் விஷயம் வேறுதான். அதன் பின்னர், எப்படியும் விரைவிலோ, காலங்கழித்தோ, உயிர்த்திசுவின்மீது அதன் கிரியை கண்டு பிடிக்கப்

பட்டுத்தானிருக்கும். பெக்குவெரெல் சம்பவத்தில் இதைக் காண்கிறோம். அவர் விஷயத்தில் அது நடைபெருமலிருந்தாலும், வேறொருவர் விஷயத்தில் அது நடைபெற்றிருக்கக்கூடும். இதிலிருந்து, வாழ்க்கையில், யதார்த்தத்தில், அவசிய நிகழ்ச்சிக்கும், தற்செயல் நிகழ்ச்சிக்கும் பல பொதுமைகள் இருப்பது; அவை ஒன்றுடன் ஒன்று நெருங்கிய இணைப்பைக் கொண்டிருப்பது தெரிய வருகிறது. ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரிப்பது அசாத்திய மானதாகிறது.

சில குறிப்பிட்ட நிலைமைகளில் ஒன்றை மற்றொன்ருக மாற்றவுங் கூடும் என்பதிலிருந்தும் அவசிய தற்செயல் நிகழ்ச்சிகளுக்குள்ள இணைப்பைத் தெரிந்து கொள்ளலாம்.

சில பிராணிகளிடம் தோன்றும் புதிய குண விசேஷங்கள் (உதாரணமாக, அடர்ந்த ரோமம்) தற்செயலாக ஏற்படக்கூடும். இந்தத் தற்செயல் நிகழ்ச்சி, வாழ்க்கைப் போராட்டத்தில் அதற்கு மிகப் பயனளிக்கக்கூடியதாக விருக்கலாம்: சுற்றுப்புறத்துடன் தன்னைத் தக அமைந்துக் கொள்ளும் போராட்டத்தில் அது, வடபுறத்தில் வாழும் ஒரு பிராணிக்கு உதவலாம். அதன் பின்னர், இவ்வாறு தற்செயலாகப் பெறப்பட்ட பண்புகள், அதன் சந்ததிகளுக்குச் செலுத்தப்படுகின்றன; பல தலைமுறைகளுக்குப் பின்னர், அடர்ந்த ரோமத்துடன் கூடிய ஒரு புதிய இனப் பிராணி தோன்றுகிறது இந்த விசேஷப் பண்பு, தற்செயலிலிருந்து அவசிய நிகழ்ச்சியாக மாற்றப்பட்டு விட்டது. அதனுல்தான், அவசிய நிகழ்ச்சியுடைய வெளிப்பாடின் ஒரு வகையே தற்செயல் நிகழ்ச்சி; அவசியத்தை உறுதிப்படுத்த அது உதவுகிறது என்று எங்கெல்ஸ் கூறுகிறார்.

தற்செயல் நிகழ்ச்சியின் பின்னே, அவசியத்தை அது உருவாகும் குறிப்பிட்ட ஒழுங்கு முறையைக் காணலாம். இயற்கையிலும், சமூகத்திலும், தன் பின்னே ஏதேனும் ஒரு அவசியத்தை, நியதியால் கட்டுப்பட்ட ஒரு முறையைக் கொண்டிராமல், எந்த தற்செயல் நிகழ்வுகளும் தோன்றுவதில்லை.

இவற்றிலிருந்து, இயற்கையிலோ, சமூகத்திலோ, அவசிய நிகழ்ச்சி "தான்" என்றோ, தற்செயல் நிகழ்ச்சி "தான்" என்றோ, எந்த நிகழ்வும் கிடையாது என்று தெரிய வருகிறது யதார்த்தத்தில், அவை யிரண்டும் ஒன்ருகவே, ஒன்றுடன் ஒன்று பின்னப்பட்டே உள்ளன, அவசிய நிகழ்ச்சி என்றுமே தற்செயல் நிகழ்ச்சி வடிவில் தான் தோன்றுகிறது. குறிப்பிட்ட தாவர வியல் விதிகளின்படியே ஒரு மரம் வளர்கிறது. ஆனால், அம்மரத்தில் இத்தனை இலைகள் உள்ளன. அவை ஒவ்வொன்றும் இன்னின்ன அளவுகளையும், உருவையும் கொண்டுள்ளன என்பது, அது கோடையில் எவ்வளவு மழையைப் பெற்றது, எப்படிப்பட்ட காற்று வீசிற்று போன்றவை உட்பட, பலப் பல தற்செயல் நிகழ்ச்சிகளின் தொகுப்பைப் பொறுத்ததாகும்; இதிலிருந்து அவசிய, தற்செயல் நிகழ்ச்சிகள் நெருக்கமாகப் பின்னிப் பிணைந்துள்ளன என்று தெரியவருகிறது.

அப்படியானல், அவசிய நிகழ்ச்சிக்கும், தற்செயல் நிகழ்ச்சிக்கும் எவ்வித வேறுபாடும் இல்லையா? வேறுபாடு இருக்கத்தான் செய்கிறது எனினும் அது சரியானபடி விளக்கப்பட வேண்டும். அவசிய நிகழ்ச்சிக்கு ஒரு காரணம் உண்டென்றும், தற்செயல் நிகழ்ச்சிக்குக் காரணம் இல்லையென்றும், அப்பாலைத் தத்துவவாதி கருதுகிருர். ஆனல், நாம் ஏற்கனவே பார்த்திருப்ப

தைப் போன்று, காரணமற்று எந்த நிகழ்வுமே ஏற்படுவ தில்லை. தற்செயல் நிகழ்வு ஒன்றிற்கும் அதற்குரிய காரணங்கள் உண்டு. எனில், வேறுபாடு எங்கு உள்ளது?

ஏற்கனவே ஹெகல் குறிப்பிட்டதைப் போன்று, அவசிய நிழ்ச்சியின்போது, அதன் காரணம் அதனுள் ளேயே, உள்ளார்ந்துள்ளதாகக் காணப்படுகிறது. தற் செயல் நிகழ்ச்சியின்போது, அந் நிகழ்ச்சியைப் பொறுத்து காரணம் புறத்தன்மையுடைத்து என்று புலனாகிறது. கீழ்க்கண்ட உதாரணத்தை எடுத்துக் கொள்ளுங்கள். 1930-ம் ஆண்டுகளில், முதலாளித்துவ உலகு முழுவதுமிருந்ததைப் போன்றே, ஜப்பானிலும் ஒரு பெரும் பொருளாதார நெருக்கடி இருந்தது. அதே சமயத்தில், ஜப்பானில் ஒரு சக்திமிகு பூகம்பமும் வெடித் தது. இது, அந் நாட்டின் பொருளாதார நிலையை மேலும் சீர்குலையச் செய்து விட்டது. இங்கு, சமூக— பொருளாதார காரணங்களே நெருக்கடியின் அவசிய மான காரணங்கள். நெருக்கடி என்ற சமூக நிகழ்வைப் பொருத்து பூகம்பம் ஏற்பட்டது ஒரு தற்செயலான, புற நிகழ்வே. எனினும், பூகம்பத்தைத் தோற்றுவித்த நிகழ்வுடன் அதைத் தொடர்புபடுத்திப் பார்த்தால், அது அவசிய நிகழ்ச்சியே.

இந்தத் தற்செயல் நிகழ்வின் அவசியம், அதன் காரண ரீதியான நிர்ணயிப்பு, மற்றொரு நிகழ்வுத் துறை யில் (அதாவது, புவியியல்) பொதிந்துள்ளது. ஆகவே தான், அந்தத் தற்செயல் நிகழ்ச்சியைத் தோற்றுவித்த நிகழ்வுடன் தொடர்புபடுத்திப் பார்க்குங்கால், அது ஒரு அவசிய நிகழ்ச்சியே.

அவசியம், தற்செயல் என்பவை சார்புச் சொற்களே.

உலகில் நடைபெறும் அனைத்திற்கும் காரணம் உண்டு என்பதை அங்கீகரிக்கும் அதே போதில், தற்செயல் காரணங்களுக்கும், (அதாவது, நிகழ்வோ, நிகழாமலோ இருக்கக் கூடியவைகளுக்கும்) அவசிய நிகழ்ச்சி காரணங்களுக்கும், (அதாவது, ஒரு நிகழ்வின் உள்ளார்ந்த வளர்ச்சியினடியாகத் தோன்றுபவைகளுக்கு) இடையே ஒரு வேறுபாடு செய்யப்பட வேண்டுமென்று தற்செயல் நிகழ்ச்சி குறித்த முரண் தர்க்கக் கருத்து கோருகிறது. ஆகவே, காரணத்தால் கட்டுப்பட்ட எல்லா நிகழ்வுகளும், அப்பாலைத் தத்துவ நிர்ணய வாதிகள் நம்புவது போன்று, அவசிய நிகழ்ச்சிகள் அன்று. முரண் தர்க்க நிர்ணய வாதமோ, உலகில் நடைபெறும் அனைத்தும் அததற்குரிய காரணத்தால் கட்டுப்பட்டவை என்பதை அங்கீகரிக்கும் அதே நேரத்தில், தற்செயல் நிகழ்ச்சிகளையும் அங்கீகரிக்கிறது.

மேற்கூறியவற்றிலிருந்து மற்றொரு முக்கியமான முடிவுக்கும் வரக் கூடும். அவசியம், வளர்ச்சியின் பிரதான திசை வழியை அல்லது போக்கை நிர்ணயிக்கிறது. எனினும், ஒவ்வொரு தனிப்பட்ட நிகழ்விலும், சில விசேஷ தொடர் அம்சங்களின் மூலம் தற்செயல் நிகழ்ச்சிகள், அவசியத்திற்கு உதவுகின்றன: இதன் மூலம், அவை அவசிய நிகழ்ச்சி வெளிப்படும் அந்தக் குறிப்பிட்ட உருவைத் தோற்றுவிக்கின்றன. அவசியத்தை உறுதிப்படுத்தவும், வளரும் நிகழ்ச்சியின் ஒழுங்கு முறையையும் குறித்து அறிய விஞ்ஞானம் விசேஷ கவனம் செலுத்துகிறது. ஏனெனில், அவற்றின் வளர்ச்சிப் போக்கைக் கண்டறிவது அதன் கடமையாகும்.

தற்செயல் கண்டு பிடிப்புக்களுடன் மட்டுமே அறிவியல் திருப்தியடைந்துவிட முடியாது. ஒரு விஞ்ஞானி

தற்செயல் நிகழ்ச்சிகளை மட்டுமே நம்பி தனது ஆராய்ச்சியை மேற்கொள்ள முடியாது; தட்டுத்தடுமாறிக் கொண்டல்லாது, எடுத்துக் கொண்ட பொருளைப் பற்றிய முழு அறிவுடன், திட்டவட்டமாக விரும்பிய இலக்கை அடைய முற்பட வேண்டும்.

இயற்கையின் வளர்ச்சி விதிகளைப் பற்றிய அறிவிற்குப் பதிலாக, தற்செயல் நிகழ்ச்சிகளையே நம்பிக் கொண்டிருந்த விஞ்ஞானிகளை, புகழ்பெற்ற சோவியத் உயிரியலாளரான மிச்சுரின் தீவிரமாக எதிர்த்தார். இயற்கை மனமுவந்து நம்மீது கருணை காட்டட்டும் என்று நாம் எதிர்நோக்கியிருக்கக் கூடாது; இயற்கையிடமிருந்து அதன் ரகசியங்களைப் பறிப்பதே அறிவியலின் கடமையாகும் என்றார் அவர். இயற்கை தற்செயலாக, மனிதனுக்குப் பயன்படும் ஏதேனும் ஒன்றைக் கொடுக்கட்டும் என்று காத்திருப்பது, தற்செயல் நிகழ்ச்சிகளையே, (புதையல்-வேட்டையை) நம்பியிருப்பதற்கு ஒப்பாகும்.

கீழ்க்கண்ட உதாரணம் இந்த சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமானது. கௌதமாலாவிலும், மெக்ஸிகோவிலும் வாழ்ந்த பழங்குடி மக்களான மாயா இந்தியர் எழுத்துக்களின் பொருளைக் கண்டுபிடிக்க, பல்லாண்டுகளாக விஞ்ஞானிகள் வீணே முயன்று வந்தனர். பண்டை எகிப்தியர்களின் சித்திர எழுத்துக்களை வாசித்தறிய ஒரு தற்செயல் நிகழ்ச்சி பேருதவி புரிந்தது என்பது பிரபலமானது: கிரீக, எகிப்து ஆகிய இரு மொழிகளிலும் எழுதப்பட்ட ஒரே வாசகம் தற்செயலாகக் கண்டுபிடிக்கப்பட்டது. இதே போன்ற, ஒரு அதிருஷ்ட தற்செயல் சம்பவம் நிகழும் என்று மாயா இந்தியர்களின் மொழி வடிவை ஆராயும் விஞ்ஞானிகள்

நம்பிக்கொண்டிருந்தனர். ஆனால் அப்படி ஏதும் நிகழ வில்லை; அவர்களது முயற்சிகள் பலனளிக்கவுமில்லை.

இளம் சோவியத் விஞ்ஞானியான யூரி க்னோரோ ஸோவ் முற்றிலும் ஒரு புதிய வழியைக் கடைப்பிடித் தார். மாயா மொழியைப் போன்றே, சித்திர எழுத்துக் களை அடிப்படையாகக் கொண்டு எழுந்த எகிப்து, சீனம் போன்ற பிற மொழிகளின் பொது விதிகளை ஆராய ஆரம்பித்தார். படிப்படியாகச் சென்று, ஒன்றன் பின் ஒன்றாக புதிர்களை விடுவித்துக்கொண்டு அந்த சோவியத் விஞ்ஞானி உலக முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றைக் கண்டு பிடித்தார்; மாயா மொழியின் வரிவடி வத்தைக் கண்டறியும் முறையை அவர் கண்டு பிடித் தார். அவர் அடைந்த வெற்றிக்குக் காரணம், எந்த அதிர்ஷ்ட சம்பவமும் தற்செயலாக ஏற்படட்டும் என்று காத்திராமல், அவர் தனது ஆராய்ச்சித் துறையில் ஆழ்த்து கவனம் செலுத்தியதே.

கனிவள ஆராய்ச்சியைத் தாறுமாறாக நடத்திக் கொண்டு சென்றால், பலனிருக்காது என்று எல்லா புவி யியல் வாதிகளுக்கும் தெரியும். பூமியின் மேற்பரப்பு அமைப்பைக் கட்டுப்படுத்தும் விதிகளை நன்கு கற்று, நடைமுறைச் செயல்களிலும் அதன் வழி நடத்தலே, வெற்றிகரமான கனிவள ஆராய்ச்சிக்கு அவசியமா னவை. அப்பொழுது எந்த அதிர்ஷ்ட சம்பவங்களையும் சார்ந்திருக்க வேண்டுவதில்லை; வெற்றிகரமான விளைவு களும் நிச்சயமாகக் கிடைக்கும்.

அவசிய நிகழ்ச்சிக்கும், தற்செயல் நிகழ்ச்சிக்கு மிடையேயுள்ள முரண் தர்க்கத் தொடர்பு, இயக்கவியல், நிலையியல் ஆகியவற்றுடன் தொடர்பு கொண்ட, நவீன நிர்ணயமற்ற வாதத்திற்கு எதிரான போராட்டத்தின்

ஒரு முக்கிய பிரச்சினையைப் புரிந்து கொள்ள, நமக்கு உதவும்.

**இயக்கவியல் நிலையியல் விதிகள்**

இருவிதமான விதிகளை—இயக்க விதிகளையும், நிலையியல் விதிகளையும் வேறுபடுத்துவது விஞ்ஞான மரபே. இதில் முதலில் கூறியவை பௌதீகவியலின் பாற்படும். "எல்லாப் பொருள்களும் சமமான கதியுடன் தான் கீழ்நோக்கி வருகின்றன," என்ற கலிலியோவின் விதியும், "கொடுக்கப்படும் விசைக்கு, திணிவு வேகம் நேர்விகிதப் பொறுத்த முடையது; விசையின் திசை வழியிலேயே திணிவு வேகம் அமைகிறது." என்ற நியூட்டனின் இரண்டாவது விதியும் இதன் பாற்பட்டதே.

இந்த விதிகளின் விசேஷ குணாம்சம் என்னவெனில், அவை சில நிகழ்வுகளுக்கோ, அல்லது பெருவாரியான நிகழ்வுகளுக்கோ அன்றி, அதன் செயலுக்குட்படுத்தப்படும் எல்லா நிகழ்வுகளுக்கும் பொருந்தும். அதனால்தான், குறிப்பிட்ட நிகழ்வுகளைத் தோற்றுவிக்கும் காரணங்களும், நிலைமைகளும் நமக்குத்தெரிந்தால், அந்த நிகழ்வைச் சரியானபடி முன் கூட்டியே அறிந்து கொள்ள முடியும்.

சூரிய, சந்திர கிரஹணங்கள் தோன்றுவதை பல பல ஆண்டுகட்கு முன்னதாகவே, வானியல் கண்டறிந்து கூறுவது இதற்குச் சிறந்த உதாரணம். ஏதேனும் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஒரு பொருளின் இடமும், அதன் கதியும் தெரிந்தால், எந்த நேரத்திலும் அது எங்கிருக்கும் என்பதை நிர்ணயித்துவிட சாஸ்திரிய பௌதீகம் நமக்கு உதவுகிறது. ஒரு ரயில் மணிக்கு 60 மைல் வேகத்தில் செல்வதாக நமக்குத் தெரியுமானால், இரண்டு

மணியோ, மூன்று மணியோ கழித்து அது எவ்வளவு தூரத்திலிருக்கும் என்பதை அறிவது சாத்தியம் தானே!

எனவே, பௌதீகவியலில், ஒரு பொருளின் இயக்கம், அதன் இயக்கத்தின் அவசியமான, தவிர்க்க முடியாத திசைவழியைத் தோற்றுவிக்கும் காரணங்களினுல் தான் கறாராக நிர்ணயிக்கப்படுவதாக வரையறுக்கப்பட்டுள்ளது. இந்த அவசியமான நிகழ்ச்சிப் போக்கை, பூரணமான துல்லியத்துடன் முன் கூட்டியே கூறிவிட முடியும்.

இயந்திர இயக்க விதிகளைப்பற்றிய ஆராய்ச்சி, பௌதீகவியலில், இயக்க விதிக்கருத்தைத் தோற்றுவித்தது. ('திஞமிகோஸ்' என்ற கிரேக்க வார்த்தையிலிருந்து;—அதன் பொருள்—சக்திவாய்ந்த, இயங்குகின்ற, என்பதாகும்.)

இயக்க விதிகளின்றி, புள்ளி விவர இயல் விதிகளின் பாற்படும் சில உண்மைகளையும் அறிவியல் அறியும். அவற்றின் தன்மையை அறிந்து கொள்ள ஒரு சிறிய சோதனையைச் செய்வோம். ஒரு நாணயத்தை, நீங்கள் மேல்நோக்கிச் சுண்டி விட்டால். பூவா, தலையா என்று முன்கூட்டியே கூறுவது முடியாது. ஆனல், 5000 முறை அதைச் சுண்டிவிட்டுப் பாருங்கள். அப்பொழுது ஏதோ ஒரு ஒழுங்கு முறையின்படி அது இயங்குவதாகத் தெரியும்; ஏறக்குறைய 2500 முறை பூவும், 2500 முறை தலையும் விழுந்திருக்கும். அதிக எண்ணிக்கையுள்ள பரிசோதனைகள் செய்யப்பட்ட போதெல்லாம் பாதி முறை பூவும், பாதிமுறை தலையுமே கிடைத்துள்ளன. இவ்விதமாக, அதிக எண்ணிக்கையுள்ள தற்செயல் நிகழ்வுகளிலிருந்து அவை அனைத்திற்கும்

பொருந்தும் ஒரு விதியை நாம் வரையறுக்க முடியும். இதனையே புள்ளிவிவர விதி என்கிறோம்.

ஒரு தனிப்பட்ட சோதனையில் பூவா, தலையா என்று முன் கூட்டியே கூறுவது முடியாத காரியம். குறிப்பிட்ட விளைவிற்கு இட்டுச் சென்ற எல்லா நிலைமைகளையும் நாம் நிர்ணயிப்பது எப்படி என்பதை அறிந்திருந்தால், ஒருவேளை இது சாத்தியமாகலாம். ஆனால், குறைந்த அளவுள்ள சோதனைகளில், எந்தவிதமான ஒழுங்கு முறையும் இல்லை. மிகப் பல முறை சோதனை செய்யப்படும்போதுதான், அதாவது, புள்ளிவிவர இயல்படி தான் அவ்வுண்மை தோன்றுகிறது.

தற்செயலான தனிப்பட்ட நிகழ்வுத் தொகுப்பின் விதிகள் பற்றி, அதாவது, அவற்றின் புள்ளிவிவர விதிகள் பற்றி நாம் கற்பதும் அவசியமாகிறது என்பதைக் காண்கிறோம். அந்தந்த நிகழ்வின் தன்மையைப் பொறுத்து, அவை, வாய்ப்புத் தத்துவத்தின் படியோ அல்லது சமூகப் புள்ளி விவரங்களின் மூலமோ ஆராயப் படுகின்றன. தற்செயல் நிகழ்ச்சிகள் கூட, வாய்ப்பு விதிகள், எனும் சில குறிப்பிட்ட விதிகளுக்குட்பட்டவையே. சில உதாரணங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

ஒரு வாயுவின் மூலக்கூறுகள் தாறுமாறாகப் பெயர்கின்றன என்பதை பௌதீகத்திலிருந்து நாம் அறிவோம். ஒவ்வொரு மூலக்கூறு இயக்கத்தின் திசையையும், வேகத்தையும் முன் கூட்டியே கூறுவது இயலாது. அவை வைக்கப்பட்டிருக்கும் பாத்திரத்தின் சுவர்களிலும், ஒன்றுடன் ஒன்றும் மோதிக் கொண்டு, அம்மூலக் கூறுகள், தங்களது இயக்கத்தின் திசையையும், வேகத்தையும் தொடர்ந்து மாற்றிக்கொண்டேயுள்ளன, ஒரு நிமிஷத்திற்கு எத்தனை முறை, ஒரு குறிப்பிட்ட மூலக்

கூறு, பாத்திரத்தின் சுவரில் மோதும் என்பது சந்தர்ப்ப வசத்தைப் பொறுத்தது. ஆனால், பாத்திரத்தின் சுவரில் அந்த வாயுவின் அழுத்தம் எவ்வளவு என்பது அளக்கப்படக் கூடியதே. எனினும் கூட பாத்திரத்தின் சுவர்களில் எத்தனை மூலக்கூறுகள், என்ன விசையுடன் மோதுகின்றன என்பதைப் பொறுத்ததே, அதாவது, மூலக் கூறுகளின் இந்தத் தற்செயலான குழம்பிய இயக்கங்களைப் பொறுத்ததே, அந்த அழுத்தம்!

ஒவ்வொரு வாயு மூலக்கூறின் இயக்கமும் தற்செயலானது.ஒவ்வொன்றிற்கும் தனித்தனியே எந்த ஒழுங்கு முறையும், நியதியும் இல்லை. ஆனால், பாத்திரச் சுவர்களின்மீது ஏற்படும் மொத்த வாயு அழுத்தம் ஒரு ஒழுங்கு முறையைக் காட்டுகிறது. குறிப்பிட்ட நிலைமைகளில் அந்த வாயு அழுத்தம் மாறாமலிருக்கிறது என்பதிலிருந்து இது தெரிய வருகிறது. இங்கு ஒரு புள்ளி விவர இயல் விதி இயங்குகிறது.

மற்றொரு உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். பிறக்கப் போகும் குழந்தை ஆணா, பெண்ணா என்பது எந்தக் குறிப்பிட்ட விதிக்கும் உட்பட்டதல்ல என்று தோன்றுகிறது. சில குடும்பங்களில் பையன்களே உள்ளனர்: வேறு சிலவற்றில் பெண்களே உளர். எனினும், பல குடும்பங்களிலுள்ள ஆண், பெண் புள்ளி விவரங்களைச் சேர்த்துப் பார்த்தால் ஒருஒழுங்கு முறை இருப்பது தெரியவரும்: ஒவ்வொரு 100 பெண் குழந்தைகளுக்கும், 105 ஆண்குழந்தைகள் பிறக்கின்றன.

இது எதைக் காட்டுகிறது? தற்செயல் நிகழ்வுகளின் மூலம் இயங்கும் விதி, குறைவான சில உதாரணங்களையே கொண்டு பார்க்கும்போது, புலனாவதில்லை; ஆனால் பெருமளவு உண்மைகளை ஒருசேரத் திரட்டிப் பார்க்கும் போது புலனாகின்றது.

இந்த விதிகளுக்குப் புள்ளிவிவர விதிகள் என்ற பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது; அதாவது, தற்செயல் நிகழ்வுகளின் ஒரு முழு இனத்திற்கும் பொருந்தும் விதிகள் அவை. புள்ளி விவர முறை இப்படிப்பட்ட விதிகளைக் கண்டு பிடிப்பதை சாத்தியமாக்குகிறது.

நியதிவாதத்திற்கும், நியதியின்மை வாதத்திற்கு மிடையே, இந்த உண்மை ஒரு பெரும் தீவிர வாதப் பிரச்சினையாக ஆயிற்று.

விஷயம் இதுதான்: 20வது நூற்றுண்டின் தொடக்க காலத்தில், விஞ்ஞானிகள், அணு நுண்துகள் களின் இயக்கம், இயக்க விதிகளாலல்லாது புள்ளி விவர விதிகளால் கட்டுப்படுத்தப்படுகின்றன என்று கண்டு பிடித்தனர். பௌதீக விதிகளின்படி, ஒரு குறிப்பிட்ட நுண்துகளின் இடத்தை நிர்ணயிப்பது தத்துவார்த்த ரீதியாக சாத்தியமல்ல வென்று கண்டு பிடிக்கப்பட்டது. அதன் இயக்கம், கருரான நிர்ணயிப்பிற்குட்பட்டதல்ல வென்பதே அதன் பொருள். ஒரு மின்னணுவின் எதிர் கால இயக்கம் நிர்ணயிக்கப்பட முடியாதது. அது எங்கு வேண்டுமானுலும் காணப் படலாம். அநேக இடங்களில் எந்த ஒரு இடத்திலும் இருக்கலாம். ஒரு மின்னணுவிற்கு, கருராக நிர்ணயிக்கப்பட்ட எந்த இயக் கப் பாதையும் அல்லது பயணப்பாதையும் கிடையாது. மேலே கூறிய இயக்கத்தை, கிரஹங்களின் இயக்கத் துடன் ஒப்பிட்டால், அவற்றிற்கு இயக்க விதிகளுக்குட் பட்ட கருரான குறிப்பிட்ட பாதைகள் உண்டு என்பதும், இரண்டிற்குமிடையேயுள்ள வேறுபாடுகள் மிக அதிகம் என்பதும் தெரியவரும்.

நவீன, பூர்ஷ்வா விஞ்ஞானிகள் என்ன முடிவிற்கு வந்தனர்? அவர்கள் கீழ்க்கண்டவாறு வாதம செயதனா. ஒரு மின்னணுவின் இயக்கத் திசை

வழி நமக்கு முன்கூட்டியே அறிந்து கொள்ள முடிய வில்லையாகையால் அது காரண ரீதியாக நிர்ணயிக்கப் படவில்லை என்று தெரிகிறது. இல்லையெனில், நாம் அதனை முன் கூட்டியே கணக்கிட்டு விடமுடியும். ஏனெனில், குறிப்பிட்ட ஒரு காரணம், குறிப்பிட்ட ஒரு விளைவையேதான் தோற்றுவிக்கும். ஆனால், மின்ன ணுவின் விஷயத்தில், எந்தக் குறிப்பிட்ட விளைவும் இல்லை; எனவே அதற்குக் குறிப்பிட்ட காரணமும் இல்லை. மின்னணு ஒரு "சுதந்திர இச்சை"யைப் பெற்றுள்ளது; அதாவது, எவ்விதக் காரணங்களுக்கும் கட்டுப்படாது, நிர்ணயிப்பின்றி, ஒரு குறிப்பிட்ட திசை யில்தான் நகரவேண்டுமென்ற கட்டுப்பாடின்றி, தான் நினைத்த இடத்திற்கு நகரும் திறமை படைத்துள்ளது.

இதைபோன்ற வாதங்களின் அடிப்படையில், தத் துவார்த்தக் கருத்துமுதல் வாதக் கோட்பாட்டை சுவீ கரித்துக் கொண்ட விஞ்ஞானிகள், 'நியதி வாதத்தின் வீழ்ச்சி' என்ற முடிவை வரையறுத்தார்கள்.

இந்த முடிவு ஒப்புக் கொள்ளப்படக் கூடியதுதானா?

நுண்ணுலகில், ஒரு தனியான துகளின் இயக்க விதியைக்கண்டறிய முடியாதெனினும், துகள் தொகு திகளின் இயக்க விதிகளை நாம் அறிவோம். அதாவது, அவை புள்ளிவிவர இயல் விதிகள்-என்பதை முதற்கண் மனதில் கொள்ள வேண்டும். ஆனால், மேலைய நாட்டு நவீன கருத்து முதல் வாதிகள் நிரூபிக்க முயலுவதைப் போன்று இந்த விதிகள் நியதியின்மையின் வெற்றி யைத்தான் குறிக்கின்றனவா? இந்த விதிகள் இருப்பது "நியதிவாத வீழ்ச்சி"யைத் தான் நிரூபிக்கின்றதா?

நிச்சயமாக இல்லை. பௌதீகவியலில் புதிதாகப் பெற்றுள்ள விவரங்கள், விஞ்ஞான விரோத நியதி யின்மை முடிவுகளை ஒப்புக் கொள்ளவில்லை என்பதுடன்

மட்டுமன்றி, அவற்றை மறுக்கவும் செய்கின்றன; இதுவே, முரண்தர்க்கப் பொருள் முதல்வாதநியதியின் சிறந்த நிரூபணம் ஆகும்.

தனியொரு மின்னணுவின் இயக்கம், நிர்ணயிக்கப் பட்டதன்று, அது தற்செயலானது என்ற உண்மை யிலிருந்து தான் கருத்து முதல்வாத தத்துவார்த்திகள் தொடங்குகின்றனர். ஆனால், உண்மை நிலை அது வல்ல. தற்செயலானவற்றிற்குக்கூட, நாம் ஏற்கனவே கண்டதைப் போன்று, ஒரு காரணம் உண்டு. அதுவும் கட்டுப்படுத்தப்பட்டதே. புள்ளி விவர இயல் விதிகள் இதைக் காட்டுகின்றன தனிப்பட்ட அணுத்துகள் தொகுப்பின் தற்செயல் இயக்கம் என்று மேலெழுந்த வாரியாக எது தோன்றுகிறதோ, அதற்கும், உண்மை யிலேயே ஒரு ஆழ்ந்த உட்தொடர்பு, புள்ளிவிவர விதி களின் ரூபத்தில் கணக்கிடக்கூடிய உட்தொடர்பு, இருக்கின்றது.

புள்ளிவிவரத் தொகுப்பு, தனிப்பட்ட நுண்துகள் களைக் கொண்டதே. தொகுப்பிற்கும், நுண்துகள் களுக்குமிடையே ஒரு ஆழ்ந்த முரண்தர்க்கத் தொடர்பு உண்டு ஒரு முழுமைக்கும், அதன் பகுதிகளுக்கும் இருப்பதைப் போன்றோ அல்லது பொதுமைக்கும், ஒரு மைக்கும் இருப்பதைப் போன்றோ ஒரு தொடர்பு உண்டு. ஆகவே, முழுமையாக ஒரு தொகுப்பு, சில குறிப்பிட்ட விதிகளுக்குட்பட்டு இயங்கும் போது ஒவ்வொரு நுண் துகளும் தனித்தனியே எந்த விதிக்கும் உட்பட்டதல்ல வென்றும், அது சுதந்திரமானது, காரண ரீதியான கட்டுப்பாடற்றது என்றும் எண்ணுவது தவறாகும். உண்மை நிலை இதற்கு நேர் மாறானதாகும்.

நாம் ஏற்கனவே பார்த்ததைப் போன்று, பொதுமை எப்பொழுதுமே ஒருமையுடன் தொடர்பு கொண்டுள்

ளது. முழுமையின், அல்லது பொதுமையின் விதிகளைப் பற்றிக் கற்கும்போதே (நுண் துகள்களின் தொகுப்பு) நாம் ஒருமையின், குறிப்பிட்டதன், தனிப்பட்ட ஒருநுண் துகளின், விதிகளைக் காண்கிறோம். மின்னணுவின் நடத்தையைப்பற்றி, வழக்கமான பௌதீகவியல் வழிகளில் நாம் கற்க இயலாமல், புள்ளிவிவர முறைகளைக் கடைப்பிடிக்கிறோம் என்றால், அது ஏதோ காரண காரியத் தொடர்பின்மையைக் குறிப்பதாகப் பொருள் அல்ல; உலகம் மிகவும் சிக்கலானதும், முரண்பாடுடையதென்றும், எல்லா இயங்கும் பொருள்களைப் பற்றியும், ஒரே குறிப்பிட்ட முறையில் கற்க இயலாதென்றும், எல்லா விதிகளையும் ஒரு தனிப்பட்ட இயக்க விதிக்குக் குறைத்துவிட முடியாதென்பதையும் தான் இது காட்டுகிறது.

புள்ளிவிவர விதி இருப்பது நியதியின்மையையும், காரண காரியத் தொடர்புக் கோட்பாடு, நுண்பௌதீகத்திற்குப் பொருந்தாது என்பதையும் நிரூபிக்கிறதென்று கருத்து முதல் வாதிகள் கூறுகின்றனர். யதார்த்தத்தில், புள்ளி விவர விதிகள் இதற்கு நேர்மாறானவற்றையே நிரூபிக்கின்றன. குறிப்பிட்ட காரணங்கள் இருப்பதை அவை திட்டவட்டமாக நிரூபிக்கின்றன. இதோ ஒரு சாதாரண உதாரணம்: ஒரு ரொட்டிக் கடையின் வாடிக்கைக்காரர்கள் 'நிரந்தரமானவர்கள் அல்லர்' ஆனால் மாறிக்கொண்டே இருப்பவர்கள் என்பது அனைவரும் அறிந்ததே. அது ஒரு தற்செயல் நிகழ்வுதான். எனினும், சில தினங்களுக்கோ, சில வாரங்களுக்கோ அக்கடையில் விற்று முதலான ரொட்டிகளின் எண்ணிக்கையைக் கணக்கிட்டால், அது அநேகமாக மாறாதிருப்பதைக் காணலாம். எண்ணிக்கையில் மிகுந்த உண்மைகளுடன் ஒரு புள்ளிவிவர விதி செயல்பட ஆரம்பிக்

கிறது. இது காரணமின்மையைக் காட்டுகின்றதா? அல்லது, மாருக, அது குறிப்பிட்ட காரணங்களின் விளைவு என்பதைக் காட்டுகின்றதா? இந்தப் பிரச்சினையை நாம் சற்று ஆராய்வோம்; ஏனெனில், இப்பிரச்சினையின் சாரத்தைப் புரிந்து கொள்வதற்கு இது மிகவும் முக்கியமானதாகும்.

சில குறிப்பிட்ட சுவைகளையும், விருப்பங்களையும் கொண்ட, குறிப்பிட்ட எண்ணிக்கையுடையோர் ஒவ்வொரு பகுதியிலும் உள்ளனர் என்பதை நீங்கள் ஒப்புக் கொள்வீர்கள். விற்றுமுதலான ரொட்டித் துண்டுகளின் மாருத எண்ணிக்கை, மாருத சிலபொதுவான காரணங்களையும், நிலைகளையுமே காட்டுகின்றன. தனித்தனியாக ஒவ்வொருவரது உதாரணத்தையும் எடுத்து ஆராய்ந்தால், இது தெளிவாவதில்லை; அப்படிப் பார்க்கும்போது எந்த ஒழுங்கு முறையும், நிலைப்பும் காணப்படுவதற்குப் பதில், தற்செயலான மாற்றங்களே காணப்படுகின்றன. ஆனால், பல பல உண்மைகளை எடுத்து ஆராயும்போது, ஒரு ஒழுங்கு முறை புலனாகின்றது; அதோடு, அவற்றை உண்டாக்கிய பொதுவான காரணங்களும்; நிலைகளும் புலனாகின்றன.

மொத்தத்தில், தற்செயல் நிகழ்வுகள் ஒரு குறிப்பிட்ட விதிக்குக் கீழ்ப்படிவதால், அவற்றைப் பொறுத்து எந்தக் குழப்பமும் இருக்க முடியாது என்பதை புள்ளி விவர விதிகள் நிரூபிக்கின்றன. நுண்ணுலகில் ஒழுங்கு முறையும், கட்டுப்பாடும் இருப்பதையே அவை தெளிவாகக் காட்டுகின்றன. (புறவய நிகழ்வுகளின் விதிக்குட்பட்ட வளர்ச்சியின் விசேஷ குணும்சம்) தற்செயல் நிகழ்வுகள், புறவய விதிகளுக்குட்பட்டிருப்பதனுல்தான் புள்ளிவிவர முறையின் மூலம், இந்த ஒழுங்கு முறைகளை நிர்ணயிப்பது சாத்தியமாகிறது,

ஆகவே, புள்ளி விவரவிதிகள், புறஉலகு நிகழ்வுகளின் சர்வாம்சத் தொடர்புகளையும், காரணகாரியச் சார்புத்தன்மையும் பற்றிய முரண்தர்க்க பொருள் முதல்வாதத் தத்துவத்தின் உண்மையை அறிவியல் ரீதியாக உறுதிப்படுத்துகின்றன. இது, நியதி வாதத்தின் வெற்றியே தவிர, மறுப்பு அல்ல.

பல தற்செயல் நிகழ்ச்சிகள் மனிதனுக்குச் சாதகமாக உள்ளன; மற்றும் பல, வறட்சி, வெள்ளம், போன்ற இதர இயற்கை விபத்துக்கள், அவனுக்குத் துன்பத்தையும், இன்னல்களையுமே அளிக்கின்றன. அவற்றின் அவசியத்தையும், விதிகளையும் ஆராய்ந்து அவற்றின் செயல்முறையைக் கட்டுப்படுத்த விஞ்ஞானம் முயல்கிறது.

**விரும்பத்தகாத விபத்துக்களுக்கெதிரான போராட்டம்**

தற்செயல் விபத்து என்பது ஒரு புறவயத்தன்மை படைத்ததாகையால் அவ்வாறு செய்வது சாத்தியமா? ''மனிதனைச் சார்ந்ததல்லாத ஒன்றின் செயல்முறையை கட்டுப்படுத்துவது எங்ஙனம் சாத்தியமாகும்?'' என்று நீங்கள் வினவலாம். தற்செயல் விபத்துக்களே இல்லாமல் செய்துவிடுவது சாத்தியமில்லைதான். ஆனால், அவற்றின் வேண்டத்தகாத விளைவுகளைத் தவிர்த்துவிடுவது சாத்தியமே. அவசியமும்கூட. உதாரணமாக, தற்போது தானிய அழிவையும், அறுவடை இழப்பையும் விளைவிக்கும் காலநிலைக் கோளாறுகளுடன் தொடர்புள்ள தற்செயல் நிகழ்வுகளை முற்றிலும் தவிர்ப்பது சாத்தியமாகவில்லை. எனினும், நிகழ்ச்சிகளின் வேண்டத்தகாத விளைவுகளைக் கட்டுப்படுத்துவது சாத்தியமே; ஏனெனில், எந்தெந்த சூழ்நிலைகளில் அந்நிகழ்ச்சிகள் எழுகின்றன என்பதைப் பொறுத்ததுதான் விளைவுகள் தோன்றுவது. ஆகவே, தற்செயல் விபத்

துக்களின் கோர விளைவுகள், குறைந்தபட்சமாகக் குறைக்கப்படவோ, அல்லது முற்றிலும் ஒழிக்கப்படவோ ஆன சூழ்நிலைகளை நாம் உண்டாக்க வேண்டும்.

இத்துறையில், சோவியத் அரசும், கம்யூனிஸ்டுக் கட்சியும் உண்மையிலேயே மகத்தான வேலையைச் செய்து கொண்டிருக்கின்றன. சோஷலிசத்திலிருந்து, கம்யூனிசத்திற்குப் படிப்படியான வளர்ச்சியடையும் காலத்து, விவசாயம் இயற்கையைச் சார்ந்திருப்பது பெருமளவு குறைந்து, இறுதியில் மிகக்குறைந்த பட்சமாக ஆகுமளவிற்கு, விவசாய உற்பத்தி சக்திகளின் வளர்ச்சி இருக்குமென சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் திட்டம் வலியுறுத்துகிறது.

இந்தக் குறிக்கோளைக் கருத்தில் கொண்டே, சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் திட்டம், பெரும் பொருளாதார நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது. விவசாயத்திலும், கால்நடை வளர்ப்பிலும் விஞ்ஞான அமைப்பு முறையைக் கைக்கொள்ளல் மேலும் நிலையான தீர்க்கமான விசேஷமுறைகளை விவசாயத்தில் சாதனையாக்கல்; விவசாயத்தின் எல்லாத்துறைகளிலும் விடாப்பிடியாக, ரசாயனப் பொருள்களைப் புகுத்தல; உயிரியல் துறையின் சாதனைகளைப் பரந்த அளவில் பயன்படுத்துதல்: பாசனத்திட்டங்களைப் பெரும் அளவில் நிறைவேற்றல்; வயல்வெளிகளைக் காக்கும் காடு வளர்ப்பு, நீர்த்தேக்கங்கள், மேய்ச்சல் நிலத்திற்கு நீர் பாய்ச்சல், ஆகியவற்றை விரிவுபடுத்துதல்; நிலத்தை நீர் அரிப்பு, காற்று அரிப்பினின்றும் முறையாகக் காத்தல்; இவையே அத்திட்டத்தின் அம்சங்கள்.

திடீரென, எதிர்பாராவிதமாக எந்தத் தற்செயல் நிகழ்ச்சிகளும் நாட்டைப் பாதிக்காமலிருக்க கம்யூனிஸ்டுக் கட்சியும், சோவியத் அரசும், நடைமுறையில் தங்

களால் முடிந்த அளவு நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகின்றன. இது, உள்நாட்டு வாழ்வு முறையையும் சர்வதேச விவகாரங்களில் அதன் நிலையையும் பொறுத்தது. ஹைடிரஜன் குண்டைச் சுமந்து செல்லும் விமானத்தின் தொழில் நுட்ப அமைப்பு பழுதுபடுவதனாலோ, அல்லது ஒரு விமானியின் மனக்கோளாறின் காரணமாகவோ விளையும் முட்டாள்தனமான ஒரு விபத்து, பெரும் உலக நாசத்தையே விளைவிக்கக் கூடுமென சோவியத் அரசு பலமுறை எச்சரித்துள்ளது. யுத்தமா, சமாதானமா என்ற கேள்வி வெறும் குருட்டுத்தனமான சந்தர்ப்பத்தைப் பொறுத்ததாக இருக்க நாம் அனுமதிக்க முடியாது.

கறாரான சர்வதேசக் கட்டுப்பாட்டின் கீழ், பொதுவான, பூரண படைக்குறைப்பு செய்ய வேண்டுமென சோவியத் அரசு பிரேரேபித்துள்ளது; ஏனெனில், ஆயுதங்களில்லா உலகே, மேற்கூறியவை போன்ற விபத்துக்களும், எதிர்பாராத தற்செயல் நெருக்கடிகளும் தோன்ருத வண்ணம் உத்தரவாதம் அளிக்கக்கூடியது. தற்போதுள்ள, நவீன சூழ்நிலைகளில், தற்செயலாகவே யுத்தம் வெடித்துவிடக் கூடுமாதலால்தான், உலக மக்கள் மிக எச்சரிக்கையுடன் இருக்க வேண்டியது முக்கியமாகிறது. நமது காலத்தின் மிக அவசரப் பிரச்சினையான—சமாதானப் பிரச்சினைக்குத் தீர்வுகாண—எல்லா நாடுகளும் ஒழிச்சலின்றிப் பாடுபடவேண்டுமென எல்லா நாடுகளிலுள்ள கம்யூனிஸ்டுகளும் அவசர வேண்டுகோள் விடுத்துள்ளனர்.

“அது சரிதான். அப்படிப்பட்ட தற்செயல் விபத்துக்களைத் தடுத்து விடலாம்; ஆனல் முன்பு நாம் கூறியது போன்று, ஒரே சமயத்தில் பல தொழிலாளிகள் ஒரே நிறுவனத்தில் நோய் வாய்ப்பட்டால், அதை எப்படித்

தடுப்பது? அல்லது, விபத்துக்களினுல் சிலர் உயிர் இழக்கிருர்களே, அதை எப்படித் தடுப்பது?'' என்று நீங்கள் வினவலாம். அப்படிப்பட்ட தற்செயல் விபத் துக்களையும், குறைந்தபட்சமாகக் குறைத்துவிடலாம். அத்தகைய விபத்துக்களையோ, அல்லது அவற்றினுல் ஏற்படும் நாசகர விளைவுகளையோ, ஏற்படாதவாறு செய்யும் சூழ்நிலைகளை நாம் உண்டாக்கினுல், அவற் றைக் குறைத்துவிடலாம். அப்படிப்பட்ட நடவடிக்கை கள் பலவற்றை எடுப்பதற்காக சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சி திட்டமிட்டுள்ளது. "தொழில் செய்யும்போது நேரக்கூடிய ஊனங்களையோ, நோய்களையோ தடுக்கும் நோக்குடன், நவீன தொழில் பாதுகாப்பு, தொழில் சுகாதார முறைகள் எல்லா நிறுவனங்களிலும் புகுத்தப் படும்'' என்று கூறுகிறது அத்திட்டம் (கம்யூனிசப் பாதை., பக்கம் 542).

விஞ்ஞான, தொழில் துறையில் தற்செயல் விபத் துக்களுக்கான சாத்தியக் கூறுகளை கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டியது மிக அவசியமாகிறது. உதார ணமாக, ஆற்றின் குறுக்கே, அணைகளோ, அல்லது ரயில்வேப் பாலங்களோ கட்டப்படுவதாகவிருந்தால, அந்த ஆற்றில் அதிகபட்சம் எவ்வளவு உயரத்திற்கு நீர் வரக்கூடும் என்பதைத் தெரிந்துகொள்வது அவசியம்; அதிக நீர் வரும்போது, பாதிக்கப்படாமலி ருக்கும் அளவிற்கு அந்த அணையோ, பாலமோ போது மானபடி உயரமாகவும், உறுதியாகவும் இருக்க வேண்டும்.

உயர்மட்ட நீரின் அளவையும் கணிப்பது அவ்வ ளவு சுலபமானதல்ல; ஏனெனில், அது, பனிக் காலத் திலுள்ள மழை, பனி, எந்த வேகத்தில் பனி உருகு கிறது, அருகேயுள்ள காடுகள், அவற்றின் தன்மை,

அந்தப் பகுதியிலுள்ள மண்ணின் தன்மை, பனியின் போது காற்றடிக்கும் வேகம், திசை என்பன போன்ற பல தற்செயல் சூழ்நிலைகளையும் பொறுத்துள்ளது. இத்தனை அம்சங்களின் பாதக நிலைகளும், ஒன்று சேர்ந்தால் தான், அத்தகையதொரு தற்செயல் நிகழ்வு தோன்றக்கூடும். ஐம்பது அல்லது நூறு ஆண்டு கட்கு ஒருமுறையே அவ்வாறு ஏற்படலாம். அப்படிப் பட்டதொரு நிகழ்ச்சி நாளையே ஏற்படுமா, அல்லது அடுத்த ஆண்டா, அல்லது நூறு ஆண்டுகட்குப் பின்னரா என்பதைக் கூறுவது முடியாதது; ஆனால், அந்த அணையைப் போதுமான உறுதியுடன் கட்டுவதன் மூலம், அதைப் போன்ற விபத்துக்களின் நாச விளைவு களை மக்கள் தடுத்து விடுகின்றனர்.

ஆக, வேண்டத் தகாத விபத்துக்களது விளைவுகளின் முன்னர், மனிதன் சக்தியற்றவன் அல்லன்; அவற்றின் அழிவு சக்தியைத் தடுக்கவோ, அல்லது குறைந்த பட்சமாக்கவோ, அவனுக்குச் சாத்தியப் பாடுகள் உண்டு

சுதந்திரம் என்ற பிரச்சனையும், அவசியம் என்ற வகையுடன் நெருங்கிய தொடர்பு உடையதே.

### அவசியமும், சுதந்திரமும்

முதலாளித்துவத்தின் மீது சோஷலிசம் வெற்றி காண வேண்டியதன் வரலாற்று ரீதியான அவசியம் பற்றி நாம் ஏற்கனவே கூறியுள்ளோம். தற்காலத்தில், சோஷலிச, முதலாளித்துவ, இரு அமைப்புகளுமே சமா தான சகவாழ்வு வாழ்வது, வரலாற்று பூர்வமாக அவசி யமானது.

இயற்கையான அவசியத்தின் விளைவாக, தடுக்க வியலாதவாறு எது நிகழவேண்டுமோ. அதனைக் கொண்டு வருவதற்காக, முயற்சிகளை மேற்கொள்வது தேவைதானா ?

இந்தக் கேள்வி, சில வேளைகளில் வேறு விதமாகக் கேட்கப்படுகிறது. எல்லாமே அவசியமானதாகவும் நியதியால் நிர்ணயிக்கப்பட்டதாகவும் உள்ள போது, செயலூக்கமுள்ள சுதந்திர நடவடிக்கைக்கான சாத்தியக் கூறு உண்டா? பல நூற்றுண்டுகளாக, இக் கேள்வி ஊழ்வலிக் கொள்கையாளர்களுக்கும், தன்னிச்சைச் செயலாளர்களுக்குமிடையே, ஒரு வாதத்திற்குரிய பொருளாகவே இருந்து வந்துள்ளது.

**ஊழ்வலிக் கொள்கையும் தன்னிச்சைச் செயல் கொள்கையும்**

தன்னிச்சைச் செயல்வாதிகள், உலக வளர்ச்சியில் மனித மனத்திற்கு ஒரு தீர்மானமான பங்கு உண்டு என்கின்றனர். அவர்கள், புறச்சூழ் நிலைகளையும், விதிகளையும், வரலாற்று பூர்வமான அவசியத்தையும் கணக்கிலெடுத்துக் கொள்வதில்லை. மனித மனத்தின்மீது "கட்டுப்பாடுகள்" எதுவும் இல்லாமையே சுதந்திரம் என்று அவர்கள் கருதுகின்றனர். இது தவருன கருத்தாகும். உலகில் எதுவுமே காரணமின்றி தோன்றுவதுமில்லை; நிகழ்வதுமில்லை. அதே போன்று, மனித மனமும் எதற்கும் அப்பாற்பட்டு, எதேச்சையாகச் செயல்பட முடியாது.

ஊழ்வலியாளர்கள் இதற்கு மாருன கருத்தைக் கொண்டுள்ளனர். அவர்கள் குருட்டுத்தனமான ஊழ்வலியை நம்புகின்றனர்; இந்த நம்பிக்கை, எல்லாமே கடவுளால் முன்கூட்டியே தீர்மானிக்கப்பட்டு விட்டது என்பதையும், எதையுமே மாற்றுவதற்கு மனிதன் இயலாதவனுயிருக்கிருன் என்பதையும் அடிப்படையாகக் கொண்டது.

ஊழ்வலியாளர்களின் கருத்து மக்களைச் செயலற்றவர்களாக்குகின்றது. ஊழ்வலிக் கோட்பாட்டை

மக்கள் இடைவிடாது கடைப் பிடிப்பதாகவிருந்தால், கடவுள் எல்லாவற்றையும் முன்கூட்டியே கணித்து விட்டதாலும், எல்லாவற்றையும் அவரது ''தீர்க்க தரிசன இசைவின்''படியே படைத்திருப்பதாலும், அவர்கள் வெறுமனே கைகளைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டியதுதான். இது கையாலாகாத்தன உணர்வு ஒன்றைத் தோற்றுவிக்கிறது. அப்படிப்பட்ட தத்துவம், உழைக்கும் மக்கள் தங்கள் சக்தியில் நம்பிக்கை வைப்பதையும், பிற்போக்கான சுரண்டும் அமைப்பை மாற்றும் சாத்தியப் பாட்டில் நம்பிக்கை வைப்பதையும் தகர்க்கிறது.

ஊழ்வலி நோக்கின் தீமையைக் கீழ்க்கண்ட உதாரணம் எடுத்துக் காட்டும். யுத்தமும், ஆயுதப் போட்டியும், 'ஊழ்வலிப்படி தடுக்கப்பட முடியாததொன்று' என்பதை நிருபிக்க மேலை நாடுகளில் சிலர் தயங்குவதில்லை. அவர்கள் நோக்கில், அதன் முன்னர் மனிதன் சக்தியற்றவன். ஆனால், உண்மை நிலை முற்றிலும் மாறுபட்டது. சோவியத் அரசு, ஆயுதப் போட்டி, ஊழ்வலிப்படி தடுக்கப்பட முடியாததென்பதை ஒப்புக்கொள்ள முடியாது என்றும், நாடுகளிடையேயுள்ள பரஸ்பர உறவுகளைப் பொறுத்தே அது ஏற்படுகிறதென்பதையும் கூறியுள்ளது.

இவ்வாறாக, இரண்டு எண்ணப் போக்குகளுமே—தன்னிச்சைச் செயல் வாதமும், ஊழ்வலிக் கோட்பாடும்—தவறானவை. பிரச்சினையை அவை அப்பாலைக் கோட்பாட்டின்படி அணுகுகின்றன; சுதந்திரத்தையோ அல்லது அவசியத்தையோ தான் அவை அங்கீகரிக்கின்றன. ஒன்று, எல்லாமே சுதந்திரமான மனிதச் செயல்களினால் தான் ஏற்படுகிறதே தவிர, அவசியம் என்பதே கிடையாது என்று கூறுகிறது; மற்றொன்று,

எல்லாமே ஒரு நியதிக்குட்பட்ட அவசியத்தினுல் தான் ஏற்படுகிறது என்றும், சுதந்திரம் இருக்க முடியாதென வும் கூறுகிறது. சுதந்திரமும், அவசியமும் ஒன்றுக் கொன்று ஒவ்வாதவை என்பதே இக் கருத்துக்களின் அடிப்படை.

இப்பிரச்சினைக்குச் சரியான தீர்வுதான் என்ன?

**சுதந்திரம் என்பது என்ன? அவசியத் துடன் அதன் தொடர்பு.**

தினசரி வாழ்வில் சுதந்திரம் என்பதன் பொருள் கட்டுப்பாடு கள் அல்லது தடைகள் இன் மையே, என்று கொள்ளப்படு கிறது. அவசியம்,—இயற்கை விதிக்குக் கீழ்ப்படிதல், சுதந் திரத்தைத் தடுத்து விடுகிறது என்றும் சில வேளை களில் கருதப்படுகிறது; அவசியம் என்பது ஒன்று இருப்பதால், 'தடை'களும் 'குந்தகங்'களும் உள்ளன; எனவே சுதந்திரம் இருக்க முடியாது. ஆகவே, இயற்கை அவசிய விதிகளுக்குட்பட்டே சுதந்திரமாக இருக்க முடியுமா என்ற கேள்வியைத் தீர்மானிப்பதன் மூலமே சுதந்திரம் எனும் பிரச்சினையை தீர்க்க முடியும்.

ஒரு உதாரணத்தை எடுத்துக்கொள்வோம். விண் வெளியை ஆராயும் பொருட்டு, மனிதன், தன்னை பூமி யுடன் பிணைத்து வைத்துள்ள சர்வ ஈர்ப்பு விதியை மிஞ்ச வேண்டியிருந்தது. ஆனல், இந்த விதியைக் கருத்தில் கொள்ளாது, அதைத் துச்சமென எண்ணி, அவன் அதை மிஞ்சியிருக்க முடியுமா? முடியாது என்பது தெளிவு.

ஒரு விண் கலன், அண்டப் பாதையில் செல்ல வேண்டுமெனில், அதன் மையம் விட்டோடும் விசை, பூமியின் ஈர்ப்பு விசையைக் காட்டிலும் (பூமியின் ஈர்ப்பு கதி செகண்டிற்கு 8 கிலோ மீட்டர்கள்) அதிகரிக்

கும் வகையில், அதன் கதி உயர வேண்டும். விண் வெளியில் விஞ்ஞானிகள் அண்டக்கப்பல்களைச் செலுத்துவது, ஈர்ப்பு விசை விதிகளை புறக்கணித்த தால் அல்ல; அதனை ஆழ்ந்து கற்றதன் விளைவாகவே அவர்கள் அவ்வாறு செய்ய முடிந்தது.

சோவியத் விஞ்ஞானிகள் சந்திரனுக்கு ராக்கெட் அனுப்பிய போது, அவர்கள் சர்வ வியாபக ஈர்ப்பு விதியையே அடிப்படையாகக் கொண்டார்கள். பூமியின் ஈர்ப்பு விசையை மீறுவதற்குத் தேவையான கதி அந்த ராக்கெட்டிற்குக் கொடுக்கப்பட்டது; அதைத் தொடர்ந்து, சந்திரனின் ஈர்ப்பு சக்தி அதனை சந்திரனுள் இறங்கச் செய்தது.

“இயற்கை விதிகளுக்கு, அவசியத்திற்கு, நாம் நம்மை உட்படுத்திக் கொண்டால், நமது சுதந்திரத்தை நாம் இழந்தவர்களாவோம்” என்ற வாதம் எவ்வளவு தவருனது என்பதை மேற்சொன்ன உதாரணம் காட்டுகிறது. அதைப் போன்றே, “சுதந்திரத்தைத் தடை செய்யும் இந்த அவசியத்தை” ஏமாற்றுவதற்கு வழிகளைத்தேடித்திரிவோரின் வாதமும் தவருனவையே. அப்படிப்பட்டோர், சுதந்திரம் என்பதற்கு, ‘எல்லா விதிகளிலிருந்தும் சுதந்திரம்’ என்பதையே பொருளாகக் கொள்ளுகின்றனர். அது தவறு.

நமது விஞ்ஞானிகள் அவசியத்திற்கு எதிராக அல்ல, ஆனுல் இயற்கை விதிகளுக்கு இயைந்து செயல் பட்டுள்ளனர் என்பதை நமது உதாரணம் காட்டுகிறது. இயற்கை விதிகளை, இயற்கை அவசியத்தைப் பயன் படுத்தியும் அவற்றை நன்கு கற்றறிந்துமே அவர்கள் இயற்கையின்மீது வெற்றி கண்டு தங்கள் சுதந்திரத்தையும் பெற்ருர்கள். இந்த வழியில், அவர்கள் பிரம்மாண்ட வெற்றிகளை அடைந்தார்கள். இயற்கை விதி

களுக்குக் கீழ்படிவதன் மூலமே இயற்கையை வெற்றி காண முடியும் என்று நீண்ட காலத்திற்கு முன்னர், பிரான்சிஸ் பேக்கன் கூறினர்.

அப்படியானல், உண்மையான சுதந்திரம் எங்கு தான் வெளிப்படுகிறது? எந்த விதியுமே அங்கீகரிக்கப் படாதவிடத்திலா, அல்லது இந்த விதிகளெல்லாம் உறுதிப் படுத்தப்பட்டு, பயன்படுத்தப்படும் இடத்திலா? இரண்டாவது கூறப்பட்டதுதான் சரியான விடை என்பது தெளிவு. 'அவசியம் என்பது அது அறியப்படும் வரை குருடாகவே இருக்கிறது' என்று லெனின் இக் கருத்தை வெளியிட்டார். ஆனல், அவசியம், விதி, என்பதைத் தெரிந்து கொண்டால், அவற்றின் கிரியைகளை நமது நலன்களுக்கு உட்படுத்தினல், நாம் இயற்கையின் எஜமானர்களாகிறோம். எங்கெல்ஸ் கீழ்வருமாறு எழுதினர்: "இயற்கை விதிகளிலிருந்து சுதந்திரம் பெற வேண்டுமென்ற கனவு அல்ல சுதந்திரம்; ஆனல், இந்த விதிகளை நன்கு அறிந்து, அவற்றைக் குறிப்பிட்ட நோக்கங்களுக்காக முறையாக இயக்கும் சாத்தியப்பாட்டில்தான் சுதந்திரம் அடங்கியுள்ளது" (எங்கெல்ஸ் டூரிங்கிற்கு மறுப்பு, பக்கம் 157).

இது இயற்கை, சமூக வாழ்வு இரண்டின் நிகழ்வுகளுக்குமே பொருந்தும். மார்க்சீஸம் தோன்றுவதற்கு முன்னர், சமூக வளர்ச்சியின் விதிகள் அறிந்து கொள்ளப் படவில்லை. வரலாற்று ரீதியான அவசிய நிகழ்ச்சிகளுக்கு மக்கள் அடிமைகளாக விருந்தனர். மார்க்சீஸம் இந்த விதிகளைப் புலப்படுத்திற்று. இந்த விதிகளினல் போதம் பெற்ற, தொழிலாள மக்கள் தங்களுக்குத் தாங்களே எஜமானர்களாகவும், தங்களது விதியைத் தாங்களே நிர்ணயித்துக் கொள்வதற்கும் ஆன ஒரு நிலை

மைக்கு முதற்படி இதுவேயாகும். இந்த சாத்தியப் பாட்டினை சோஷலிசப் புரட்சி யதார்த்தமாக்கிற்று

ஆக, தன்னிச்சை வாதிகள் கருதுவதைப் போல, விதிகளையும், புறவய முறைகளையும் கணக்கிலெடுத்துக் கொள்ளாமல் தம் விருப்பம் போல் நடந்து கொள்வது, மக்களின் சுதந்திர நடவடிக்கைகள் அல்ல; அவசிய நிகழ்ச்சிகளை அங்கீகரிப்பதே மெய்யான சுதந்திரம் என்று மார்க்ஸிஸம் கருதுகிறது; இயற்கை சமூகம் ஆகியவற்றின் வளர்ச்சி விதிகளை அறிந்து, யதார்த்தச் செயல் முறைகளில் அவ்விதிகளை திறம்படப் பிரயோகிப்பதே மனிதனின் சுதந்திரம். அவசிய நிகழ்ச்சிகளின் எல்லைகளை மனித சுதந்திரம் மீற முடியாது.

''அவசியத்தால் 'கட்டுப்படுத்தப் படுவதாயி'ன் அது எப்படி 'சுதந்திர நடவடிக்கை'யாகும்? அப்போது எப்படியும் அவசியம் ஆதிக்கம் வகிக்கிறது. ஆனால் ஒரு மனிதன் எல்லாவற்றையும் மீறி தனது செயல் முறைக்கு ஒரு முடிவைத் தேர்ந்து எடுக்கும் போதுதான் அவனை சுதந்திர மானவனாகக் கருதலாம்'' என்று பல சந்தர்ப்பங்களில் கூறப்படுகிறது.

உண்மை என்னவெனில் அப்படிப்பட்டதொரு சுதந்திரம் இல்லவே இல்லை, கீழ்க்கண்ட நீதிக் கதை இதற்கு ஒரு சிறந்த சான்று.

காற்றுத் திசை காட்டிக்கும், காந்தத் திசை காட்டிக்குமிடையே ஒரு முறை ஒரு தகராறு எழுந்தது.

"என்னைப்பார்; நான் சுதந்திரமானவன்; எந்தத் திசையிலும் நான் விரும்பியபடி திரும்ப முடியும்" என்று பெருமையடித்துக் கொண்டது காற்றுத் திசை காட்டி. "உன்னைப் பொறுத்தவரை, அவர்கள் உன்னை எப்புறமாகத் திருப்பினாலும், நீ ஒரே திசையைத் தான் காட்டிக் கொண்டிருக்க வேண்டும்'', என்றது அது.

'என்ன உன் சுதந்திரம்! உன்னிச்சைப்படி நீ அங்குமிங்கும் ஆட முடியாது. காற்றடிப்பதைத் தானே நீ நம்பிக் கொண்டிருக்கவேண்டும். அதனால்தான் நீ படபடத்துக் கொண்டிருக்கிறாய். ஒருமுறை காற்று வீசி, மீண்டும் அது வீசும்வரைதானே உனது சுதந்திரம்! எத்தனை சிறிய தென்றலானாலும் அது உன்னை அலக்கழிக்கிறது. நானோ, ஒரு குறிப்பிட்ட திசையை நிலையாகக் காட்டிக் கொண்டிருப்பேன். எனது காந்தத் தன்மைக்கு இயைப ஏற்படும் கவர்ச்சிக்கு நான் உண்மையுள்ளவனாக இருக்கிறேன் கால நிலையின் மாறிவரும் கோலத்தைப் பொறுத்தன்றி, ஒரே திசையை சுட்டிக் காட்டிக் கொண்டிருக்கிறேன், நான். அதன் மூலமாகத்தான், எங்கணும் மக்கள் சரியான பாதையைக் கண்டு பிடிக்கின்றனர்," என்று பதிலளித்தது காந்தத் திசைகாட்டி.

இந்த நீதிக் கதையின் பொருளை சற்று சிந்தித்துப் பாருங்கள்; எதையும் கணக்கிலெடுத்துக் கொள்ளாது ஒருவனது செயலில், தன்னிச்சையாக முடிவெடுப்பது அல்ல சுதந்திரம்; காற்றுத் திசைகாட்டி கூட தன்னிச்சையாக அசைவதாகத்தான் எண்ணிற்று; ஆனால், உண்மையில் அது காற்றுக்கு உட்பட்டுத்தானே இருக்கிறது!

முதலாளித்துவ நாட்டிலுள்ள ஒரு குட்டி பூர்ஷுவா அறிவாளி, தனது சிந்தனையின் போக்கு முற்றிலும் "சுதந்திரமான"தென்றும் அவனது 'தனிப்பட்ட சுதந்திரத்தின்' காரணமாகவே அவனது ஆசைகளும் பழக்கங்களும், தோன்றுகின்றன வென்றும் எண்ணுகிறான், ஆனால், உண்மையில், அவன் வசிக்கும் சூழ்நிலைகளுக்கும், அவனது வாழ்க்கை முறை அவன் மீது திணித்துள்ள 'தனிச் சொத்துரிமை' உணர்விற்கும் அவன் அடிமை. இதில் "தனிப்பட்டோர்

சுதந்திரம் என்று பூர்ஷுவா விஞ்ஞானிகள் எந்தக் கருத்தில் கூறுகிறார்களோ, அதைக்கொண்டு பார்த்தால் அத்தகைய சுதந்திரத்தின் சாயல் கூட எதுவும் இல்லை. இங்கு அனைத்துமே அவசியத்திற்குட்பட்டது. முதலாளித்துவத்தின் கீழ், குருட்டுத்தனமான சமூக சக்திகளின் உருவில், அவசியம் தோற்றமளிக்கிறது. மேற்சொன்ன கதையில் சொல்லப்பட்டது போன்று மக்களனைவரும், வீசிக் கொண்டிருக்கும் காற்றிற்கு அடிமைகள்.

சோஷலிசத்தின் கீழ், சுதந்திரம் என்பது முற்றிலும் வேறுபட்டது. அவசியத்தைப் பற்றிய அறிவின் அடிப்படையில் எழுவது அது. இங்கு விதிகள், குருட்டுத்தனமான சமூக சக்திகளாகச் செயல் படுவதில்லை. சமூக வளர்ச்சி விதிகளைப் பற்றிய ஆழ்ந்த அறிவை, மக்களின் செயல் முறைகள் அடிப் படையாகக் கொண்டுள்ளன.

**அவசியமும் மக்களின் இயக்கச் செயல் முறையும்**

தவிர்க்க இயலாதபடி, ஊழ் வலிவாதத்திற்கே, மார்க்சீசம் இட்டுச் செல்வதாக மார்க்சீய விரோதிகள் உரைக்கின்றனர்; மனிதனின் இச்சைக்கும், உணர்விற்கும் அப்பாற்பட்ட புறவய விதிகளினால் தான் உலக வளர்ச்சி ஏற்படு கிறது என்று கருதுவதனால், மக்களின் சுதந்திரமான இயக்கச் செயல் முறையை அது மறுக்கிறது என்கின் றனர். இதன் மூலம், உலக வளர்ச்சியை, முன்கூட்டியே நிர்ணயிக்கப்பட்டதொரு நிகழ்வு முறையாக மார்க்சிஸ்டு கள் கருதுகின்றனர் என்பதே அவர்களது கூற்று. அப்படியிருக்க, மார்க்சிஸ்டுகள் இயக்க பூர்வமான சுதந்திர மனிதச் செயல் முறைகள் பற்றிப் பேசும்போது

அவர்களது சொந்தக் கோட்பாட்டிற்கே அது முரணானது என்பதுதான் அவர்களது வாதம்

கம்யூனிசம் வருவது உறுதிதானென்ருல், ஏன் அதற்காக ஒருவன் போராட வேண்டும் என்பதுதான் அவர்களின் கேள்வி. பேசாமல் ஒருவன் அதை எதிர் நோக்கியிருக்க வேண்டியது தானே! கம்யூனிசத்தின் வெற்றிக்குத் தயாரிப்பாக, ஏன் கம்யூனிஸ்டுக் கட்சிகள் அமைக்கப்பட வேண்டும்? வசந்தத்தையும், கோடையையும் கொண்டு வர எவரேனும் கட்சிகளையா அமைக்கின்றனர் என்றும் அவர்கள் வினவுகின்றனர்.

முதலாளித்துவத்திலிருந்து சோஷலிசத்திற்கு "படிப்படியான மாற்றம்" ஏற்பட்டு விடும் என்றும், மக்களின் புரட்சிகரமான நடவடிக்கைகளின்றியே முதலாளித்துவம், "தானுகவே" வீழ்ச்சியடைந்து நசித்துவிடும் என்றும் நவீன திருத்தல் வாதிகள் பேசுகின்றனர்.

இப்படிப்பட்ட கீழ்த்தரமான, ஊழ்வலிக் கருத்திற்கும், மார்க்சிசத்திற்கும் எந்தப் பொதுவான அம்சமும் கிடையாது. சோஷலிசமும். கம்யூனிசமும் வெற்றிபெறும் அவசியத்தை மார்க்சிசம் அங்கீகரிக்கிறது தான்; ஆனுல், அது தானுகவே வந்துவிடும் என்ற பொருளிலல்ல.

சமூக நிகழ்வின் அவசியத்திலிருந்து, இயற்கை நிகழ்வின் அவசியம் முற்றிலும் மாறுபட்டது என்பது கவனிக்கப்பட வேண்டிய ஒரு அம்சம். இரவும், பகலும் மாறிமாறி வருவதிலோ, வசந்தமும், கோடையும் தோன்றுவதிலிருந்தோ மாறுபட்டு, அவசியம், சமூக வளர்ச்சியில் செயல்படுகிறது. இயற்கை நிகழ்வுகள், மனிதன் பங்கெடுக்காமலேயே ஏற்படுபவை.

சமூகத்தில் உள்ள அனைத்தும், மனிதனது வேலை, அவனது உழைப்பு, புரட்சிகர நடவடிக்கை ஆகிய வற்றின்விளைவு.

"அப்படியானால் சமூக அவசியமும், மக்களைச் சார்ந்துள்ளது. மக்களினாலேயே தோற்றுவிக்கப்படு கிறது என்பது தானே பொருள்?" என்று நீங்கள் கேட் கலாம். அல்ல. மக்களின் இச்சைக்கும், விழைவுக்கும் அப்பாற்பட்டே சமூக நிகழ்வுகள் தோன்றுகின்றன; பொருளாயத உற்பத்தி வளர்ச்சி விதிகளின் அடிப் படையிலேயே அவை தோன்றுகின்றன, சமூக அவசியம் என்பது, இயற்கையில் காணப்படும் அவசி யத்தைப் போன்றே புறவயமானது. ஆனால், நாம் ஏற்கனவே கூறியதைப் போன்று, ஒரு முக்கியமான வேறுபாடு உண்டு. இயற்கையில் உள்ள அவசியம் மனி தர்களது செயல் முறைகளைச் சார்ந்தது அல்ல; ஆனால், சமூக வாழ்விலோ, மனிதர்களின் நடவடிக்கைகளின்றி அவசியம் பெறப்படுவதில்லை; அது தோன்றுவதுமில்லை.

உதாரணமாக; யுத்தத்திற்கெதிராக மக்கள் செயலூக்கமுள்ள வகையில் போராடினாலன்றி யுத்தத் தைத் தவிர்க்க முடியுமா? நிச்சயமாக முடியாது. சமா தான சக்திகள் சோம்பியிருந்தால், இருண்ட யுத்த சக்திகள் தவிர்க்க முடியாதபடி, தீவிரமடைந்து விடு கின்றன. சமாதான சகவாழ்வு அச்சுறுத்தப்படுகிறது. இந்த இடத்தில், உலகில் சமாதானம் நிலவவேண்டுமா, அல்லது புதியதோர் உலகயுத்தம் எனும் பயங்கரச் சுழலில் மனிதகுலம் தள்ளப்படவேண்டுமா என்பது, மக்களை—அவர்களது உறுதியையும், செயல்முறை களையுமே—பொறுத்து உள்ளது.

யுத்தம் ஊழ்வினைப்படி தவிர்க்க முடியாதது என்று ஒப்புக் கொள்வது; சமாதானப் போராட்டத்தில் மக்க

ளின் செயல்த்திறனைக் குறைத்து, சமாதான சக்தி களின் உளத்திண்மையை அழிக்கிறது. அதற்கு மாறாக, யுத்தம் ஊழ்வினைப்படி தவிர்க்க முடியாதது அல்ல என்று அங்கீகரிப்பது, சமாதான ஆதரவாளர் களின் அணியைப் பெருக்கி, சமாதானப் போராட்ட வீரர்களுக்கு உள உறுதியையும் ஊட்டுகிறது.

ஆக, வெளி உலகில் நடைபெறும் நிகழ்ச்சிகள் குறித்த செயலூக்கமுள்ள மனப்பான்மையை வரலாற்று ரீதியான அவசியம் புறக்கணிப்பதில்லை; மாறாக அதை ஒரு முன்தேவையாகக் கருதுகிறது. மக்களின் சுதந்திரமான, இயக்க பூர்வ செயல்முறைக்கு மார்க் சீஸம் மிகுந்த முக்கியத்துவம் அளிக்கிறது. இதைத் தான் தன்நிலை அம்சம் என்று கூறுகிறார்கள். அதாவது தன்நிலையை, மக்களை—அவர்களது அறிவு இயக்கச் செயல்திறன், விஷயங்களைத் தெளிவுபடுத்தும் திறன் ஆகியவற்றை—சார்ந்த சக்திகளும் காரணங் களும், தன்னிலை அம்சம் எனப்படுகிறது.

கம்யூனிச சமூகத்தை நிர்மாணித்துக் கொண்டிருக் கும் சோவியத் மக்களின் வாழ்விலுள்ள மிகக் குறிப் பிடத் தக்க குணும்சம், அவர்களது உணர்வு பூர்வமான குறிக்கோளுடன் கூடிய செயல் முறை போலும்.

முன்கூட்டியே வகுக்கப்பட்ட திட்டத்தைக் கடைப் பிடித்து, கம்யூனிசத்திற்கான பொருளாயத, தொழில் நுட்ப அடிப்படையைச் சமைக்க உணர்வு பூர்வமாக மக்கள் செயல்படுவதாயின், அதன் பொருள், கம்யூனிச நிர்மாணம் புறவய நிலைகளாலும், அவசியத்தாலும். விதிகளாலும் நிர்ணயிக்கப்படவில்லை என்று ஆகி விடாதா? இல்லை; அவ்வாறு ஆகாது.

சோவியத் யூனியனில் கம்யூனிச நிர்மாணம், கறா ரான சமூக வளர்ச்சி விதிகளின்படியே நடைபெறுகின்

றது. இது வரலாற்று ரீதியான ஒரு அவசிய நிகழ்ச்சி முறை. சமூக வளர்ச்சியில் புறவய நிலைகளுக்குள்ள மிக முக்கியமான பங்கு, முழுமையான கம்யூனிச நிர்மாண காலகட்டத்திலும் உண்டு.

புறவய நிலைகளுக்குத்தான் தீர்மானமான முக்கியத்துவம் உண்டெனில், மக்களின் சுதந்திரமான, இயக்க பூர்வச் செயல் முறையின் பங்கு என்ன?

சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் திட்டத்தில், சோவியத் நாட்டில் கம்யூனிசத்தை நிர்மாணிப்பதற்கான சாத்தியக் கூறுகள், சமூக வளர்ச்சி விதிகளின் பலத்தைப் பொறுத்து பொருளாதார ரீதியாக உறுதிப்படுத்தப்பட்டுள்ளன. நாட்டின் பொருளாயத வளங்கள், சோஷலிசத் தொழில், விவசாயம் ஆகியவற்றில் அடங்கியுள்ள வாய்ப்புக்கள்—இவற்றின் அடிப்படையிலேயே, கம்யூனிசத்திற்கான பொருளாயத, தொழில் நுட்ப அடிப்படையை நிர்மாணிக்கும் வரலாற்று காலகட்டம் கணிக்கப்படுகிறது. எனினும், திட்டத்தில் கண்டுள்ள அம்சங்கள் தானாகவே கைகூடி விடுவதில்லை. லட்சோப லட்சம் தொழிலாள மக்களின் உற்சாகமான, உண்மையான ஆக்கபூர்வ உழைப்பு இவற்றிற்குத் தேவையாகிறது.

புறவய நிலைகளுக்கும், தன் நிலை அம்சங்களுக்கும் இடையேயுள்ள உறவு பற்றிய மார்க்சீயக் கோட்பாட்டிலிருந்து, இதற்கு முந்திய எல்லா சமூகங்களையும் போலன்றி, கம்யூனிச சமூகம் திடீரெனத் தானாகவே உண்டாவதில்லை; ஆனால் மார்க்சீய லெனினியக் கட்சியினால் வழிநடத்திச் செல்லப்படும் மக்களின் உணர்வு பூர்வமான, குறிக்கோளுடன் கூடிய நடவடிக்கைகளின் விளைவாகவே தோன்றுகிறது எனும் மிக முக்கியமான மார்க்சிய தத்துவத்திலிருந்துதான் சோவியத் யூனியன்

கம்யூனிஸ்டுக் கட்சியின் திட்டம் தொடங்குகிறது. முழு மூச்சான கம்யூனிச நிர்மாண கால கட்டத்தில், தன் நிலை அம்சத்தின்-தேசத்தின் சுதந்திரமான, இயக்கச் செயல் முறைகளின்—பங்கு பெருமளவு அதிகரிக்கிறது. இப்பெரும் நோக்கத்தின் வெற்றிக்கு, அது தீர்மானமான முக்கியத்துவம் வாய்ந்தது. எனினும், மக்களின் இயக்கச் செயல்முறை, புறவய நிலைகளை அடிப்படையாகக் கொண்டிருப்பதுடன், அவற்றிலிருந்தே பிறக்கின்றது.

**கம்யூனிசமே உலகின் சுதந்திரத்தை நிலை நாட்டுகிறது**

பூர்ஷுவா தத்துவார்த்திகளாலும், சமூக வியலாளர்களாலும் சுதந்திரம் எனும் கருத்து திரித்துக் கூறப்படுகிறது. அப்பிரச்சினை முழுவதையும் "ஆத்மாவின் இலட்சிய சுதந்திரமாக" அவர்கள் குறைத்து விடுகின்றனர். நீ ஒரு அடிமையாக இருக்கலாம்; சங்கிலிகளால் பிணைக்கப் பட்டிருக்கலாம்; ஆனாலும், உனது நிலைகளினால் உனது ஆத்மா தடைப்படுத்தப்படவில்லை என்று நீ கருதினால், நீ சுதந்திரமானவனே என்பது அவர்களது வாதம்.

பூர்ஷுவா சமூகத்தில், அனைவருமே சுதந்திரமானவர்கள் என்று கொள்ளப்படுகிறது. தொழிலாளியை வேலை செய்யுமாறோ, முதலாளியை அவனுக்கு வேலையளிக்குமாறோ எவரும் வற்புறுத்துவதில்லை. தொழிலாளி முதலாளியிடம் செல்லலாம்; அல்லது செல்லாமலும் இருக்கலாம். அவன் தன்னிச்சைப்படி நடந்து கொள்ளலாம் இந்தக் காரணங்களைக் காட்டி, பூர்ஷுவா பிரசாரகர்கள், முதலாளித்துவம் நிறுவப்பட்டவுடனேயே, சுதந்திரப் பிரச்சினை தீர்க்கப்பட்டு விடுவதாகக் கூறுகின்றனர். ஏகாதிபத்தியச் சித்தாந்தவாதிகளோ,

முதலாளித்துவ நாடுகளுக்கெல்லாம் — 'சுதந்திர உலகு' என்னும் ஒரு விசேஷப் பெயரையே கண்டுபிடித்துள்ளனர் ஆனால், இந்த "சுதந்திர உலகு" உண்மையிலேயே சுதந்திரமானது தானா என்று நாம் காண்போம்.

ஒரு மனிதன் சுதந்திரமாக விருக்க, அவன் சமூக வாழ்வின் எல்லா நிலைகளுக்கும் தானே எஜமானனாக இருக்க வேண்டும். ஒரு முதலாளித்துவ சமூகத்திலோ அல்லது வேறு எந்த சுரண்டும் அமைப்புள்ள சமூகத்திலோ இது சாத்தியமா?

வர்க்க சமூகம் ஒன்றில், ஒரு மனிதன் சுதந்திரமாக இருக்கிறானா இல்லையா என்பது முதன்மையாக, அவன் எந்த நிலைகளின் கீழ் வாழ்கிறான் என்பதை— அவன் சமூகத்தில் எந்த இடத்தை வகிக்கிறான் என்பதை—பொறுத்தே உள்ளது. முரண்பட்ட வர்க்கங்கள் உள்ள எந்த சமூகத்திலும், ஒரு வர்க்கத்தின் சுதந்திரம் என்பது, மற்றொரு வர்க்கத்தின் அடிமைத்தனம் என்று தான் பொருள் என்பதை வரலாறு காட்டுகிறது. சுதந்திரம் என்பது ஒரு வர்க்க உரிமை என்று வலியுறுத்தினார் லெனின். பொருளாதார நிலைகளிலிருந்தும் கொடுக்கப்பட்ட சமூக-பொருளாதார அமைப்பின் வர்க்கத் தன்மையைப் பகுத்தாராய்வதிலிருந்தும், தனிப்படுத்தப்பட்ட சுதந்திரத்தைத்தேடுவது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதாகும்; அல்லது அது ஒரு மாயையாகும்.

உற்பத்தி சாதனங்களின் உடமையாளர்கள் எவரோ, அவர்கள் தான் சுதந்திரத்தை உடையவர்கள். உற்பத்திச் சாதனங்களின் தனியுடைமையும்—அதன் பின் விளைவான மனிதனை மனிதன் சுரண்டும் அமைப்பும், எங்கு உள்ளதோ, அங்கு உழைக்கும் மக்களுக்குச் சுதந்திரம் கிடையாது. ஏனெனில், அந்த நிலைமைகளில், மக்களுக்குச் சுதந்

திரம் என்பதற்கான புறவய அடிப்படை இல்லை. அந்தச் சூழ்நிலைகளில், சுதந்திரம் என்பது மக்களுக்கு வெறும் பெயரளவில் உள்ள ஒரு சொல்லே; அவர்கள் அதைப் பயன் படுத்த முடியாது. சுரண்டுபவர்கள்தான் சுதந்திரத்தை அனுபவிக்கின்றனர். சககால ஜப்பானிய தத்துவார்த்தியான ஜனகிதா கெஞ்சுரோ என்பார் 'சுதந்திரத் தத்துவம்' என்ற தனது நூலில் கீழ் வருமாறு எழுதுகிறார்: "வெறும் சுதந்திரம் என்பது,—பொருளாயத அடிப்படையிலிருந்து தனிப்படுத்தப்பட்ட சுதந்திரம் என்பது வேர்களில்லாத ஒரு மலரைப்போன்றது. அது எவ்வளவு தான் அழகாக இருந்த போதும், விரைவில் காய்ந்து கருகி வாடுவது நிச்சயம்". லெனின் போதித்தபடி, பணத்தின் சக்தியை அடிப்படையாகக் கொண்டதொரு சமூகத்தில், ஒரு சில பணம் படைத்த புல்லுருவிகளுடன் வறுமையில் வாடும் பெரும் தொழிலாள மக்களும் வாழும் ஒரு சமூகத்தில், மெய்யான சுதந்திரம் ஏதும் இருக்கமுடியாது.

ஏகபோக மூலதனம். மிகத் தெளிவாக, தனது பிற்போக்கான, ஜனநாயக விரோதத் தன்மையை வெளிக்காட்டுகிறது என்று சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் திட்டம் கூறுகிறது. அதற்கு முன்பிருந்த, ஒரு வரம்பிற்குட்பட்ட பூர்ஷுவா-ஜனநாயக உரிமைகளைக் கூட அது ஒப்புக்கொள்வதில்லை, பூர்ஷுவா ஜனநாயக "வாதங்களில்," போலீஸ் குண்டாந் தடியும், துப்பாக்கிக் குண்டுகளுமே, மேன் மேலும் அதிக பங்கு வகிக்கின்றன. அதுதான், அவர்களது "சுதந்திர உலகு." எந்தவித மெய்யான சுதந்திரமோ, ஜனநாயகமோ இல்லாத, சமூக, தேசீய ஒடுக்கு முறையையும், சமத்துவமற்ற தன்மையையும், மனிதனை மனிதன் சுரண்டுவதையும், மனித கண்ணியத்தையும், கௌர

வத்தையும் தூக்கி யெறிவதையும் அடிப்படையாகக் கொண்ட சமூகம் அது.

ஆக, முதலாளித்துவ சமூகத்தில், உழைக்கும் மக்களுக்கு உண்மையான சுதந்திரம் கிடையாது; இருக்கவும் முடியாது. "சுதந்திரமான, முதலாளித்துவ உலகு" என்பது பூர்ஷுவா பிரசாரகர்களின் ஒரு கண்டுபிடிப்பே.

சமூக சுதந்திரத்தைப் பெற்று, சோஷலிச சமூகத்தைக் கட்டுவதன் மூலமே, பாட்டாளிகளும், தொழிலாள விவசாயிகளும், எல்லா உழைப்பாளிகளும், மெய்யான சுதந்திரத்தைப் பெறுகின்றனர். ஏனெனில், தனது குறிக்கோள்களையும், எண்ணங்களையும் அடைவதற்கான பொருளாயத அடிப்படையை அவன் பெறும்போதுதான், மனிதன் சுதந்திரமான உணர்வைப் பெறுகிறான். சோஷலிச சமூகம், உழைக்கும் மக்களுக்கு இத்தகையதொரு அடிப்படையைக் கொடுக்கிறது. இந்தக் காரணத்தால் தான், சோஷலிசம் என்பது 'தேவை' எனும் சாம்ராஜ்யத்திலிருந்து சுதந்திரம் என்னும் சாம்ராஜ்யத்திற்குக் குதிப்பதே என்று எங்கெல்ஸ் கூறினார். சோஷலிசத்தின் கீழ்தான், மக்கள் சமூக வளர்ச்சியைக் கட்டுப்படுத்தி, குருட்டுத்தனமான அவசியத்தை சுதந்திரம் என்பதாக மாற்ற முடியும்.

சோவியத் யூனியனிலும், பிற நாடுகளிலும் சோஷலிச நிர்மாண அனுபவம், எங்கெல்ஸின் முடிவை உறுதிப்படுத்துகிறது. சோஷலிசத்தின் கீழ், மனிதன் வேலையில்லாத் திண்டாட்டம் என்னும் பயத்திலிருந்தும், எதிர்காலத்தைப் பற்றிய நிலையின்மையிலிருந்தும், சுரண்டலிலிருந்தும் விடுதலையடைகிறான். இதை ஏற்கனவே சோஷலிச நாடுகள் அடைந்து விட்டன. ஆனால், சுதந்திரப் பாதையில் மனிதனது முன்னேற்றம்

இத்துடன் நின்றுவிடுவதில்லை. கம்யூனிச சமூகத்தை நிர்மாணிப்பது, இயற்கையின் அடிப்படை சக்திகளினின்றும், மனிதன் விடுதலை பெறுவதன் ஒரு உயர் கட்டம் சுதந்திரமான ஆக்க உழைப்பு அனைத்திற்கும், மனிதத் திறனும், மேதா விலாசமும் வளர்ச்சியடைவதற்கும் ஆன சூழ்நிலைகள் எல்லாம் உருவாக்கப்படுகின்றன. அதன் மூலம், சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சித் திட்டம் குறிப்பிடுவது போன்று, மெய்யான சுதந்திர சாம்ராஜ்யத்திற்கான மனித குலத்தின் பாதையிலுள்ள கடைசித் தடையும் அகற்றப்படுகிறது. இதன் பொருள், கம்யூனிசம், உலகிலே உண்மையான சுதந்திரத்தை ஸ்தாபிக்கிறது என்பதே. இதிலிருந்து, மனிதன், சமூகத்திற்கும், கூட்டமைப்பின் பிற அங்கத்தினர்களுக்கும் தான் ஆற்ற வேண்டிய கடமைகளிலிருந்தோ, நடத்தையின் சமூக விதிகளிலிருந்தோ விடுவிக்கப் பட்டு விடுகிறான் என்பது பொருளல்ல. அவசியத்தை அங்கீகரிப்பது எனும் சுதந்திரம், கட்டுப்பாட்டுடன் இணைந்துள்ளது; பின்னது அதன் முன்னோடியும் கூட.

**சுதந்திரமும் கட்டுப்பாடும்.** கம்யூனிஸ்டுக் கட்சி, தனது உறுப்பினர்களுக்கு, கட்சி, உழைப்பு ஆகியவற்றின் கட்டுப்பாடு விதிகளைக் கண்டிப்பாகக் கடைப்பிடிக்கும் உணர்வில் அவர்களை வளர்க்கிறது. உழைப்பின் கம்யூனிச ஸ்தாபன முறை என்பது, தொழிலாள மக்கள் தாங்களாகவே வகுத்துக் கொண்ட சுதந்திரமான, உணர்வு பூர்வமான கட்டுப்பாட்டிலேயே நிலைக்கிறது என்று லெனின் சுட்டிக் காட்டினார். அது வளர வளர, கட்டுப்பாட்டை அனுஷ்டித்தலும் கண்டிப்பாகிறது. "கம்யூனிச உற்பத்தியில், மிக உயர்ந்த ஸ்தாபனத் தரமும், நுட்பமும், கட்

டுப்பாடும் தேவைப்படுகிறது; அவை கட்டாயத்தின் மூலம் பெறப்படுவதில்லை; ஆனால், பொதுக் கடமையைப் புரிந்து கொள்ளும் திறனாலும், கம்யூனிச சமூகத்திலுள்ள வாழ்வுக் கோலம் அனைத்தாலுமே நிர்ணயிக்கப்படுகிறது,'' என்று சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் திட்டம் கூறுகிறது (கம்யூனிசத்திற்கான பாதை; பக்கம் 511).

கட்சியின் ஒழுங்கு முறைகளைக் கடைப்பிடிப்பதை லெனின் விடாது வலியுறுத்தி வந்தார். எண்ண ஐக்கியமும், உருக்குப் போன்ற கட்டுப்பாடுமே கட்சியை ஒரே அமைப்பாகப் பிணைப்பதுடன், அதற்குத் தகர்க்க முடியாத பலத்தையும் அளிக்கிறது. உண்மையில், வரலாற்று வளர்ச்சியின் விதிகளையும், போக்குகளையும் கம்யூனிஸ்டுக் கட்சி என்றுமே வெளியிட்டு வருகிறது. அதன் திட்டம், சமூகத்தின பொருளாயதத் தேவைகளையும், தேசத்தின் அபிலாஷைகளையும் பிரதிபலிக்கிறது. இந்தத் திட்டம் வெற்றிகரமாக செயலாக்கப்பட, ஒவ்வொரு கம்யூனிஸ்டும் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் எனவும் சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் விதிகள் வரையறுக்கின்றன.

எனவே, இந்தத் தஸ்தாவேஜுகளால் வழி நடத்தப்பட்டு, மக்களின் நலன்களுக்கும், சமூக வளர்ச்சி விதிகளுக்கும், கட்சியின் கொள்கை முற்றிலும் உடன்பாடானதே என்பதை அங்கீகரித்து, கட்சி உறுப்பினர்கள், கட்சியினதும், அரசினதும் ஒழுங்கு முறையின் அடிப்படையில், தங்கள் முயற்சி அனைத்தையும், உணர்வு பூர்வமாக, ஈடுபடுத்துகின்றனர். அதனால்தான், ஒரு கம்யூனிச சமூகம் சுதந்திரமாகச் செயல்படுகிறது. ஒரு கம்யூனிஸ்டுக்கு, கட்டுப்பாடு என்பது, வரலாற்று பூர்வமான அவசியத்தின் பிரதிபலிப்பே;

அதை அங்கீகரிக்காவிடில், மெய்யான சுதந்திரம் ஏதும் கிடையாது.

ஆக, மெய்யான சுதந்திரம் என்பது கட்டுப்பாட்டுடன் இயைந்ததோடு மட்டுமன்றி, அதனையே அடிப்படையாகவும் கொண்டுள்ளது. அதன் வர்க்க நலன்களின் ஐக்கியத்தாலும், எண்ணம், செயல் ஆகியவற்றின் ஐக்கியத்தாலும் தான் சோஷலிச சமூகம் பலம் பொருந்தியதாக உள்ளது. அந்த ஐக்கியமே அதன் உறுப்பினர்களின் உணர்வு பூர்வமான கட்டுப்பாட்டைத் தோற்றுவிக்கிறது. இந்த அடிப்படையில், தனி மனிதனின் மெய்யான சுதந்திரம் வளர்ச்சியடைகிறது; சோஷலிசத்தின் கீழ் அது மேலும் அதிகரிக்கிறது.

தனி நபர் சுதந்திரம். போலியான- மெய்யான மனிதாபிமானம்.

சுதந்திரப் பிரச்சினை அதன் சமூக அரசியல் அம்சத்தில், எவ்வகையான சமூக அமைப்பு, தொழிலாள மக்களின் சகஜமான இன்ப வாழ்க்கைக்கான சூழ்நிலையை மெய்யாகவே உண்டாக்கும் என்ற கேள்வியையும் தன்னுள் அடக்கியுள்ளது. வேறுவிதமாகக் கூறின், "எல்லாம் மனிதனுக்காக" என்ற கோட்பாட்டை எவ்வகையான சமூகம் நடைமுறையில் செயல் படுத்த முடியும்? இது மிக முக்கியமான கேள்விகளில் ஒன்றாகும்; ஏனெனில் இறுதியாகப் பார்க்கப் போனால், இரு அமைப்புக்களிடையே நடைபெறும் சமாதானப் போட்டியின் விளைவு, எது மனிதனின் ஆன்மீக, பொருளாயதத் தேவைகளை முழுமையாகப் பூர்த்தி செய்ய முடியும் என்பதைப் பொறுத்துள்ளது.

பூர்ஷுவாத் தலைவர்களும், அவர்களது சித்தாந்தச் செம்மல்களும், மேலைய "சுதந்திர உலகு" தான் பெருமைப்படத் தக்க சமூகம் என்று அறுதியிட்டு-

உரைக்கின்றனர். ''உண்மையான மனிதாபிமானிகள்'' என்ற பாத்திரத்தை அவர்கள் தாங்கி, மனித குலத்தின் மீது தங்களுக்குள்ள வரம்பற்ற பிரேமை பற்றிச் சத்தியம் செய்கின்றனர். அவர்களில் சிலர் உதாரணமாக, வலதுசாரி சோஷலிஸ்டுகள், தாங்கள் ஒரு ''மனிதாபிமான சோஷலிசத்தை'' சிருஷ்டிக்க விரும்புவதாகக் கூறுகின்றனர். வேறுசிலர், முதலாளித்துவத்திற்கு ''பொருளாதார மனிதாபிமானம்'' என்று புதிய வண்ணம் தீட்டுகின்றனர். மதவாதிகளோ, மனிதாபிமானத்தை கடவுள் நம்பிக்கையுடன் இணைக்கின்றனர். தெய்வீக சிருஷ்டியின் உன்னத சிகரம் மனிதன் தானென்றும், இயற்கை அனைத்தும் மனிதனுக்காகவே கடவுளால் படைக்கப்பட்டதென்றும் அவர்கள் உரைக்கின்றனர். கடவுளின் மீது நல்லெண்ணங்களைத் தூண்டுவதற்காகவும், திருச்சபையின்மீது, அதன் மனிதாபிமானத்திற்கும் 'மனிதகுல அன்பிற்காகவும்' நன்றியுணர்வைக் கிளர்த்துவதற்காகவுமே இவ்வாறு செய்யப்படுகிறது.

முதலாளித்துவ அமைப்பின், பிரதானமான மனித விரோதப் பண்பை தொழிலாள மக்கள் புரிந்துகொள்வதைத் தடுப்பதே மனிதாபிமானம் பற்றிய இப்படிப்பட்ட கருத்துக்களின் நோக்கம். முதலாளித்துவ அமைப்பில், அனைத்தும் தொழிலாள மக்களின் நலன்களுக்கு அன்றி, அவர்களது அடிமைத்தனத்திற்கே உட்பட்டது.

''பொருளாதார மனிதாபிமான''க் கொள்கையைப் பின்பற்றுவோர், முதலாளித்துவ நாடுகளில் உற்பத்தியின் நோக்கம், லாபம் திரட்டுவது அல்லவென்றும், மக்களின் தேவைகளைத் திருப்திப் படுத்துவதே என்றும் நிரூபிக்க முயலுகின்றனர். இது ஒரு அப்

பட்டமான ஏமாற்றே. மனிதகுலத்திற்குப் பணிபுரிவது முதலாளித்துவ நாடுகளது பொருளாதாரத்தின் நோக்க மல்ல. அதன் ஒரே நோக்கமும், இயக்கும் விசையும் பணத்தைப் பெருக்குதலே. சுரண்டும் சமூகத்தையே கிழித்தெறியும் முரண்பாடுகளை மூடி மறைப்பதற்காக, "பொருளாதார மனிதாபிமானம்" பற்றிய பேச்சு, சுரண்டுவோருக்குத் தேவைப்படுகிறது. இரு வர்க்கத்தையும் சேர்ந்த மக்களுக்கும் – சுரண்டுவோருக்கும், சுரண்டப்படுவோருக்கும்-அனைத்தும் தழுவிய அன்பை அவர்கள் போதிக்கின்றனர். அப்படிப்பட்டதொரு அன்பே, "முழுமுதல் மனிதாபிமானத்திற்கு" மிகச் சிறந்த சான்று என்றுரைக்கின்றனர் அவர்கள்.

எனவே, பூர்ஷுவா சித்தாந்தவாதிகளின் மனிதாபிமானத் தத்துவங்கள் என்றழைக்கப்படுபவை அனைத்தும் முற்றிலும் பொய்யானவை. முதலாளித்துவ நாடுகளிலுள்ள தொழிலாள மக்களின் உரிமையற்ற நிலையைப் பூசி மெழுகுவதே, அவர்கள் பேசும் மனிதாபிமானத்தின் நோக்கம்.

உண்மையான மனிதாபிமானத்தின் சாரம் என்ன?

மனிதாபிமானம் என்பது, அனைத்திற்கும் மேலாக, உழைக்கும் மக்கள் பால், பரந்த வெகு ஜனங்களின்மீது அன்பு; அவர்களது இன்பத்திற்காகவும், அவர்களது வாழ்வை எவ்வளவு சாத்தியமோ, அவ்வளவு வளமும், பயனும் உடையதாக்கவும் போராடுதல். சுரண்டலையும், தனிநபர் செல்வச் சிறப்படைதலையும் அடிப்படையாகக் கொண்ட சமூகத்தில் இது ஒருக்காலும் கைகூடாது. நாம் ஏற்கனவே பார்த்ததைப் போன்று, சோஷலிசம், கம்யூனிசம் இவற்றின் வெற்றியின் மூலம்தான் உண்மையான மனிதாபிமானம் சாத்தியம். எனவே, கம்யூனிசத்திற்கும், உண்மையான மனிதாபிமானத்

திற்குமிடையே ஒரு தொடர்பு இருக்கிறது. இந்தத் தொடர்பு எங்கனம் பிரதிபலிக்கிறது?

தனிநபரின் ஒருங்கிணைந்த வளர்ச்சிக்கான பொருளாயத நிலைகளைச் சிருஷ்டிக்க வேண்டிய அவசியத்திலிருந்து மார்க்சிய - லெனினியம் செயல்படுகிறது. சுரண்டலும், நாளையைப் பற்றிய அநித்தியமும் சமூகத்திலிருந்து மறைந்தால்தான் தனிநபர் சுதந்திரமாக இருக்க முடியும். சமூகத்திலுள்ள ஒவ்வொரு நபரையும் விடுவிக்காது, சமூகம் சுதந்திரமானதாக முடியாது. ஆகவே, சோஷலிசம், கம்யூனிசம் ஆகியவற்றின் கீழ் தோற்றுவிக்கப்படும், மெய்யான, புற நிலைகளைப் பொறுத்தே ஒரு தனி நபரின் சுதந்திர வளர்ச்சி உள்ளது. சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் திட்டம் கூறுவது போன்று. "சோவியத் சமூகம், தனிநபரின் மெய்யான சுதந்திரத்தை உறுதிப்படுத்துகிறது. இந்த சுதந்திரத்தின் மிக உயர்ந்த பிரதிபலிப்பு, மனிதன் சுரண்டலிலிருந்து மீள்வதே......" (கம்யூனிசத்திற்கான பாதை, பக்கம் 460)

சுதந்திரமான மனிதனின், திறமையும், ஆக்க சக்தியும், திண்ணிய பண்புகளும் நன்கு திரண்டு, முழுமையாக மலர்ச்சியடையும் ஒரு அமைப்பே கம்யூனிசம். கம்யூனிச சமூகம், "ஒவ்வொருவனது திறமைக்குத் தகுந்த உழைப்பு அவனது தேவைக்குத் தகுந்த ஊதியம்," என்பதையே தனது பதாகையில் பொறித்துள்ளது; இதனாலேயே, அது "அனைத்தும் மனிதனுக்காக, அனைத்தும் மனிதனின் நலனுக்காக" என்ற உரையை கம்யூனிஸ்டுக் கட்சி தனது கோஷமாகக் கொண்டுள்ளது.

மனித நேசமே, கம்யூனிசத்தின் தனிப்பட்ட பண்பு ஆகும். ஆனால் பூர்ஷ்வா நலன்களுக்குகந்த

ஆசீர்வாதங்களையும், போதனைகளையும் மட்டுமே கொண்ட மலட்டுத்தனமான, பண்பியலான, கிறிஸ்தவ "அன்பு" அல்ல. செயல்களுக்கு, கம்யூனிச நிர்மாணத்திற்கான நடைமுறைக் கடமைகளுக்கு, அறைகூவல் விடுக்கும் மனிதாபிமானம் அது; "அனைத்தும் மனிதனுக்காக," என்ற மாபெரும் கோஷத்தை நனவாக்குவது அது.

கம்யூனிசம் என்பது மனிதகுல வளர்ச்சியிலும், தனிநபர் வளர்ச்சியிலும் மிக உன்னதமான சிகரம் ஆகும்.

இதிலிருந்து, தனிநபரின் வளர்ச்சிக்கான எல்லாச் சூழ்நிலைகளையும் கம்யூனிஸ்டுக் கட்சி சிருஷ்டிக்கிறது என்பது பெறப்படுகிறது. கம்யூனிச நிர்மாண தத்துவம், நடைமுறை ஆகியவற்றை விரித்துக்கூறும் மார்க்ஸிசமே உண்மையான மனிதாபிமானம்—நமது காலத்தின் மனிதாபிமானம். உழைக்கும் மக்களுக்கு மெய்யான சுதந்திரத்தையும் அது தன்னுடன் கொணர்கிறது.

ஒவ்வொரு நிகழ்வுக்கும், முறைக்கும் தீர்மானமான முக்கியத்துவம் வாய்ந்த குறிப்பிட்ட சூழ்நிலைகள் இருந்தால்தான், மெய்யான சுதந்திரத்தைப் பெறுதல் யதார்த்தமாகும் என்பதை நாம் கண்டோம். இதனுடன் இணைந்தவைதான் சாத்தியப்பாடு, மெய்ம்மை என்ற இனங்கள்.

## சாத்தியப்பாடும் மெய்நடப்பும்

**சாத்தியப்பாடு, மெய்நடப்பு என்பன எவை?**

சில வேளைகளில், ஏதேனும் ஒரு எண்ணம், நோக்கம், அல்லது குறிக்கோள் சாத்தியமா, அல்லவா என்று நீங்கள் தீர்மானிக்க வேண்டி வரலாம். எது ஒன்று அடையப்படக் கூடியதோ அல்லது நிகழக்கூடியதோ அதனை

சாத்தியம் என்று நாம் சாதாரணமாகக் குறிப்பிடுகிறோம்.

சியால்கோவ்ஸ்க்கி ராக்கெட்டியல் தத்துவத்தைக் கண்டு பிடித்த பிறகு, ஜெட் முறையில் இயங்கும் என்ஜின்களும் கண்டு பிடிக்கப்பட்ட பின்னர், சந்திரனுக்குப் பயணம் செய்வதற்கு சாத்தியப்பாடுகள் உண்டாயின. எனினும், சந்திரனுக்கு சோவியத் ராக்கெட், பதக்கம் ஒன்றைக் கொண்டு சேர்த்தபோது, நம் கண் முன்னுலேயே சாத்தியப்பாடு மெய்நடப்பானதைக் கண்டோம்.

ஆக, சாத்தியப்பாடு என்பது இதுவரை சாதிக்கப்படாதது; இன்னமும் நடைமுறையில் வராதது; ஆனால், மெய்யாக ஆவதற்கான எல்லா வாய்ப்புகளேயும் உடையது. மெய்நடப்பு என்பதோ, ஏற்கனவே கை கூடியது, யதார்த்தமாக இன்று இருப்பது, புறவய விதிகளின் மூலமும், இயற்கை அவசியத்தின் மூலமும் சாதிக்கப்பட்டது.

சாத்தியப்பாடும், மெய்நடப்பும் எதிர்நிலையானவை. ஆனல் அவை இணைந்துள்ளனவா?

அப்பாலைத் தத்துவவாதிகள் அவற்றினிடையே தொடர்பில்லை என்கின்றனர்; ஒன்றை மற்றதிலிருந்து பிரித்தெடுக்கின்றனர். சிலர் கூறுகின்றனர் : சாத்தியப்பாடு என்று ஒன்றில்லை. இதுவரை ஒரு நிகழ்வு இல்லையாயின், அது தோன்றுவதற்கான சூழ்நிலைகளோ, ஆதாரங்களோ எதுவும் கிடையாது என்பதுதான் பொருள். ஒரு நிகழ்வு தோன்றிக் கொண்டிருக்கிறது எனில், அதைத் தோற்றுவிப்பதற்கான சூழ்நிலைகள் அப்பொழுதுதான் தோன்றியுள்ளன என்றும், அதற்கு முன்பிருந்த சாத்தியப் பாடுகள் இதில் எந்தப் பாத்திரத்தையும் வகிக்கவில்லை என்பதுமே பொருள்.'

வேறுசில அப்பாலைத் தத்துவவாதிகள், எதுவும் சாத்தியமே என்றுரைக்கின்றனர். அசாத்தியம் என்பது எதுவும் இல்லை. கடவுள் எல்லாம் வல்லவர்; அவர் கடல்களை வற்ற வைக்க முடியும்; அல்லது அதைப் பற்றி எரியச் செய்யவுங் கூடும். அல்லது சூரியனையே அவனது பாதையில் தடுத்து நிறுத்தி விடவும் முடியும். எந்த வித மாயாவித்தையையும் அவன் செய்ய முடியும். மனிதன்கூட, ஒரு 'சக்திவாய்ந்த தன்மை படைத்தவனாக' இருப்பின் அவனும் இதனையெல்லாம் செய்தல் கூடும். அப்படிப்பட்ட ஒருவனுக்கு, சாத்தியப்பாடு என்பதும் மெய்நடப்பு என்பதும் சரிசமமானதே.

இந்த இரண்டு கண்ணோட்டங்களும் பெருந் தவறானவை, சாத்தியப்பாடு இருப்பதை ஒரேயடியாக மறுப்பவர்களும், சாத்தியப்பாடுதான் மெய்நடப்பு என்று கூறுவோரும் இருவருமே தவறு செய்கின்றனர்.

இப்படிப்பட்ட தவறுகளின் ஆணிவேர் என்ன? வாழ்க்கையில் என்ன நடைபெறுகிறது என்பதிலிருந்து முற்றிலும் வேறுபட்ட ஒரு வழியில் சாத்தியப்பாடு மெய்நடப்பு என்ற கேள்விகளுக்கு விளககம் தரும் முனைப்பில்தான் தவறு அடங்கியுள்ளது. எதுமுடியும், எது முடியாது என்பது மக்களின் விருப்பங்களினால் நிர்ணயிக்கப் படுபவை அல்ல. ஆனால், அவை வாழ்க்கையில் நிலவும் விதிகளினாலும், நிலைகளினாலும், காரணங்களினாலுமே நிர்ணயிக்கப் படுகின்றன. கீழ்க்கண்ட உதாரணத்தைச் சற்று கவனியுங்கள். அனைவருக்கும் சமமான வாய்ப்புக்கள் உள்ள ஒரு நாடு அமெரிக்கா என்று அமெரிக்க பூர்ஷுவா பிரசாரகர்கள் உறுதி கூறுகின்றனர். ஒவ்வொருவனுக்கும் பணக்காரனாவதற்கு சம வாய்ப்புக்கள் உள்ளன. எனினும், இது உண்மைக்கு எத்துணை புறம்பானது?

முதலாளித்துவ நாடுகளில், பணக்காரர்கள் மேலும் பணக்காரராவதற்கும், ஏழைகள் மேலும் ஏழைகளாவதற்குமான காரணங்கள் உள்ளன. அதன் விளைவாக, தொழிலாள மக்கள் இவ்வுலகில் முன்னேற மெய்யான சாத்தியப்பாடுகள் எதுவும் கிடையாது

மற்றொரு உதாரணத்தை நாம் எடுத்துக் கொள்வோம். மதகுருக்கள் பேசும் அற்புதங்கள் நிகழ்வதற்கான சாத்தியப்பாடுகள் ஏதேனும் உண்டா? மந்திரம் அல்லது அற்புதம் என்பது, இயற்கை விதிகளுக்கு முரண்பட்டதொரு நிகழ்வு; அந்த விதிகளினால் அற்புதத்தை விளக்க முடியாது. ஆனால், இயற்கை, சமூகம் ஆகியவற்றின் விதிகளுக்குப் புறம்பாக, இவ்வுலகில் எந்த நிகழ்வும், நிகழ்ச்சியும் தோன்றுவதில்லை, தோன்றவும் முடியாது என்று நாம் ஏற்கனவே பார்த்தோம். எனவே அற்புதங்களை நம்புவது, அசாத்தியத்தை நம்புவதாகும்.

ஆக, இயற்கை, சமூகவிதிகளுக்கு ஒவ்வ இருப்பவை மட்டுமே சாத்தியப்பாடுகள் ஆகும். மெய்நடப்பும் இயற்கை. சமூக விதிகளுக்கு இயைந்ததே இரண்டு வகைகளும் புறவயமானவையே; ஏனெனில், நமது உணர்விலிருந்து முற்றிலும் தனித்து விலகி நிற்கும் பொருள்கள். நிகழ்வுகளின் தன்மைகளைப் பிரதிபலிப்பவையே அவை.

“இந்த வரையறையின் அடிப்படையில், ஆயிரம் ஆண்டுகட்கு முன்னரும் சந்திரனுக்குச் செல்லுதல் சாத்தியமாகத்தானே இருந்தது! ஏனெனில், அன்றும் அது இயற்கை விதிகளை மீறவில்லை எனினும், முப்பது ஆண்டுகட்கு முன்னர் கூட, அப்படிப்பட்டதொரு பயணம் கைகூட முடியாத கனவாகத்தானே கருதப்பட்டது! இதை எப்படி விளக்குவது?” என்று நீங்கள்

கூறலாம். விஷயம் என்னவெனில் வேறுபட்ட பலவகை சாத்தியப்பாடுகள் உள்ளன.

விதிமுறை (பண்பியலான) சாத்தியப் பாடுகளும் மெய்யான சாத்தியப் பாடுகளும்

ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர், விண்வெளிப் பயணம் சாத்தியமானது என்று யாரேனும் கூறியிருந்தால், அவனது கூற்று பொய்யானது என்று கருதப்பட்டிருக்கும். இன்று அப்படிப்பட்ட பயணங்கள் சாத்தியம் என்பதை அனைவரும் அறிவர். முற்றிலும் ஒரே சாத்தியப்பாடு, ஏன் ஒரு சமயம் கைகூடாக் கனவு என்றும், இரண்டாவது சமயம் கைகூடுவதற்கான ஒரு முன்நிலை என்றும் கருதப்படுகிறது?

ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர், விண்வெளிப் பயணத்திற்கான ஸ்தூலமான சூழ்நிலை இருக்கவில்லை. எனினும் அன்றுகூட, இயற்கை விதிகளின் அடிப்படையில் விண்வெளிப் பயணம் சாத்தியமானதுதான் என்பதை நிரூபித்திருக்க முடியும். மெய் நடப்புடன் அதற்கு எந்தவித உறவும் இருந்திருக்க முடியாது; நடைமுறையில் அதனை அடைவதற்கான எந்தச் சூழ்நிலையும் அன்று இல்லாததால், அந்த சாத்தியப்பாட்டினை அடைவதற்கான எண்ணமே இருந்திருக்க முடியாது. ஒரு காரியத்தை அடைவதற்கு இன்றியமையாத ஸ்தூலமான சூழ்நிலைகளுடன் சற்றும் தொடர்பற்ற சாத்தியப்பாட்டினையே விதிமுறை அல்லது பண்பியலான சாத்தியப்பாடு என்கிறோம்.

விண்வெளிப் பயணத்தை சாத்தியமாக்கும் ஸ்தூலமான சூழ்நிலைகள் இன்று உண்டாக்கப்பட்டுள்ளன. ராக்கெட் பயணவியல் நன்கு வளர்ச்சியடைந்துள்ளது; சக்தி மிகுந்த ராக்கெட் கருவிகள் நிருமிக்கப்பட்டுள்ளன;

அவற்றை உபயோகப்படுத்தக் கூடிய விண்வெளி விமானிகளுக்கு பயிற்சியளிக்கப்பட்டுள்ளது. எதன் மூலம் அடையக் கூடுமோ, அப்படிப்பட்ட ஸ்தூலமான சூழ்நிலை களுடன் பிரிக்கவியலாதவாறு தொடர்புள்ள இதுபோன்றதொரு சாத்தியப்பாட்டினையே மெய்யான சாத்தியப்பாடு என்கிறோம்.

மெய்யான சாத்தியப்பாடுகளே, நடைமுறைச் செயல்களில் ஒருவனை வழி நடத்திச் செல்லவேண்டும். விதிமுறை சாத்தியப்பாடுகள், மெய்யான சாத்தியப் பாடுகளை வெளிக்கொணர உதவும்போது பயனுள்ள வையாகின்றன: உதாரணமாக, விஞ்ஞானக் கற்பனை களில் இவ்வாறுதான் நிகழ்கின்றன.

புறவய, தன்வய சூழ்நிலைகளின் பங்கு

அதற்குத் தகுந்த சூழ்நிலைகள் பக்குவமடையும் போதுதான் ஒரு குறிப்பிட்ட சாத்தியப்பாடு தோன்றுகிறது என்று நாம் கண்டோம். ஆனால், சாத்தியப்பாட்டினை, மெய் நடப் பாக்குவதற்கு இதுவே போதுமானதா? இல்லை. சமூக வாழ்வில், இவை மக்களைப் பொறுத்தே உள்ளது; தங்க ளது இடைவிடா உழைப்பின் மூலம் அவர்கள் சாத்தி யப்பாடடினை, இன்னமும் மெய் நடப்பாக மாற்ற வேண்டியுள்ளது.

சமூக வளர்ச்சியில், சாத்தியப்பாடு, மெய் நடப்பாக மாறு வதற்கான தேவைகள் எவை? முதற்கண், புறவயச் சூழ்நிலைகள், இரண்டாவதாக, தகுந்த தன்வய நிலைகளைச் சிருஷ்டிக்கும் மக்க ளின் நடவடிக்கைகள். இந்த நடவடிக்கைகளே தன்நிலை அம்சம்; இதனை மிக முக்கியமானதாகக் கம்யூனிஸ்டுக் கட்சி கருதுகிறது. அவசியமான, தீர்மான நடவடிக் கைக்கான சூழ்நிலை பக்குவமடைந்துள்ளபோது, சாத்தி யப் பாட்டினை, மெய் நடப்பாக மாற்றுவதற்கான எல்லா முயற்சிகளும் மேற்கொள்ளப்பட வேண்டும். அக்டோ

பர் புரட்சிக்கு சற்று முன்னர் லெனின் கூறிய வார்த்தைகளை அனைவரும் அறிந்திருப்பர்: ஒரு நிமிடம் கூடத் காத்திராமல், வேகமாகவும் தீர்மானமாகவும் செயல்பட வேண்டியது அவசியம்; ஏனெனில் "தாமதம் மரணத்தை விளைவிக்கும்." இதன் பொருள், தொழிலாள வர்க்கம் அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கான புறவயச் சூழ்நிலைகள் உள்ளன என்றும் அதை உபயோகப்படுத்தும் திறமையைப் பொறுத்தும், தொழிலாள மக்களின் போராட்டத் தயார் நிலையையும், ஸ்தாபன அமைப்பையும் பொறுத்தும் தான் அனைத்தும் உள்ளன என்பதே.

ஒரு புரட்சியின்போது, தீர்மானமின்மையும் தவறுகள் இழைத்தலும் புரட்சி தோல்வியடைவதிலேயே முடிந்துள்ளது என்பதற்கு வரலாற்றில் உதாரணங்கள் உண்டு. பாரிஸ் கம்யூனின் அனுபவம் உணர்த்துவது அதுதான்; 1871 மார்ச்சு மாத எழுச்சிக்குப் பின்னர், பாரிஸ் தொழிலாளர்கள் அமைத்த புரட்சிகரத் தொழிலாளர் அரசின் கதி அதைத்தான் காட்டுகிறது.

தன்நிலை அம்சக் கருத்தில் அடங்கியுள்ளதென்ன? அதில், கட்சி ஊழியர்களின் எல்லா அரசியல், ஸ்தாபன வேலைகளும், மக்களின் இயக்க பூர்வமான, ஆக்க நடவடிக்கைகளும் அடங்கும். திட்டம் தீட்டப்பட்ட பின்னர், சேமிப்புக்களும் வாய்ப்புக்களும் நன்கு கணிக்கப்பட்ட பின்னர், ஸ்தாபனப் பணியே தலையாய முக்கியத்துவம் வாய்ந்தது. கட்சியின் ஸ்தாபனப் பணிக்கே, தலையாய முக்கியத்துவம் அளிக்கிறது கம்யூனிஸ்டு கட்சியின் மத்திய கமிட்டி. அதுவே, ஏற்கனவேயுள்ள வாய்ப்புக்களை நடைமுறை சாத்தியமாக்குவதில் தீர்மானமான கண்ணியாகும். இந்த அடிப்படையில்தான், கம்யூனிஸ்டுக் கட்சியின்

கொள்கையை நடைமுறையில் செயல்படுத்துவது சாத்தியம்.

சரியான கோஷங்களை முன்வைத்து, திறமையுடன் கடமைகளை வகுப்பது மட்டுமே போதுமானதல்ல என்றும், இக் கடமைகளை ஆற்ற நடத்தும் போராட்டத்திற்கு சாதாரண மக்கள் தயாராகவிருக்க வேண்டும் என்றும், நடைமுறைப் பணியை ஆற்ற மக்களை நன்கு திரட்ட வேண்டும் என்றும் லெனின் போதித்தார். திட்டங்களை செயல்படுத்தவும், வாய்ப்புக்களைப் பயன்படுத்திக்கொள்ளவும் புறவயச் சூழ்நிலைகளை மட்டுமின்றி, தன்வயச் சூழ்நிலைகளையும் சிருஷ்டிக்கவேண்டும் என்பது இதில் அடங்கியுள்ளது. ஆகவே, சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் திட்டம் வலியுறுத்துகிறது: "கம்யூனிச வெற்றி மக்களையே சார்ந்துள்ளது; கம்யூனிசம் மக்களுக்காகவே கட்டப்படுகிறது. தனது உழைப்பின்மூலம் ஒவ்வொரு சோவியத் மனிதனும் கம்யூனிச வெற்றியை அருகே கொணர்கிறான்." (கம்யூனிசப் பாதை; பக்கம் 589) கம்யூனிச சமூகத்தைக் கட்டுவதற்கான சாத்தியப்பாடு, சோவியத் மக்களின் தினசரி உழைப்பின் மூலமும், மக்களின் முன்னணிப் படையான—கம்யூனிஸ்டுக் கட்சியினது பணியின் மூலமும் மெய் நடப்பாக மாற்றப்படுகிறது.

சாத்தியப்பாடுகள் கைகூட தன்நிலை அம்சத்தை முழுமையாகப் பயன்படுத்த உதவுவது விஞ்ஞான அணுகல் முறையே. சாத்தியப்பாடுகளையும், முன்னேற்ற வழிகளையும் சரிவர நிர்ணயிப்பதற்கும், அவற்றை நடைமுறையில் திறம்படச் செயல்படுத்தவும், மார்க்சீய—லெனினியத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட ஆழ்ந்த அறிவு உதவுகிறது. மக்களின் நடவடிக்கைகள் விஞ்ஞான பூர்வ அடிப்படையில் அமையா

விட்டால், புறவயச் சாத்தியப்பாடுகள் மறைந்தே நிற்கும்; அது பெரும் தீங்கையே விளைவிக்கிறது.

தன்நிலை அம்சம், கீழே கண்ட முறையிலும் முக்கியமானது தான். சமூக வாழ்வில, சாத்தியப்பாடுகள் முற்போக்குத் தன்மை படைத்ததாகவோ, பிற்போக்குத் தன்மை படைத்ததாகவோ இருக்கக் கூடும். உதாரணமாக, நமது காலத்தில், யுத்தத்தைத் தடுப்பதற்கான முற்போக்குச் சாத்தியப்பாட்டின் முன்னா, பிறம்பாகருச சக்திகள் யுத்தத்தைக் கட்டவிழ்த்து விடுவதற்கான பிற்போக்குச் சாத்தியப்பாடு நிற்கின்றது இவற்றில் எந்த சாத்தியப்பாடு வெற்றி பெறும் என்பது, பெருவாரியான மககளின் நடவடிக்கைகளையும், முற்போக்குச் சக்திகள், சமாதான போராட்ட வீரர்கள் ஆகியோரது செயல் முறைகளையுமே பொறுத்துள்ளது. முற்போக்கான சாத்தியப்பாடு வெற்றி பெறுவதற்கான வாய்ப்பினை சிருஷ்டிப்பதே அவர்களது கடமையாகும்.

கறாரான விஞ்ஞான அடிப்படையில் அமைந்துள்ள, கம்யூனிஸ்டுக் கட்சி, சோவியத் மக்களின் நடவடிக்கைகள், மனித சாத்தியப்பாட்டின் எல்லைகளை விரிவு படுத்தியுள்ளன. இதன் பொருள், இதற்கு முன்னர் மறைந்து கிடந்த சாத்தியப்பாடுகள் தற்போது உச்சத் திறனுடன் பயன்படுத்தப்படுகின்றன என்பதே.

மெய் நடப்பாகிவிட்ட உண்மையில இருந்து வரும் முறைகள், நிகழ்வுகள் ஆகிய கைகூடிய சாத்தியப்பாடுகளுக்குத் திட்டவட்டமான உள்ளடக்கமும், அதற்கு இயைந்த உருவும் உண்டு.

**உள்ளடக்கமும், உருவும்.**

**உள்ளடக்கம், உரு என்றால் என்ன?**

ஒவ்வொரு பொருளுக்கும், நிகழ்வுக்கும் போக்கிற்கும், அதற்குரிய குறிப்பிட்ட பண்பியலான அம்சங்கள்

அல்லது அவசியமான பண்புகள் உண்டு. அவற்றின் மொத்தமே கொடுக்கப்பட்ட பொருளின் உள்ளடக்கம் ஆகும்.

மாபெரும் அக்டோபர் புரட்சி ஆரம்பித்து வைத்த, முதலாளித்துவத்திலிருந்து சோஷலிசத்திற்கான மாற்றமே நமது சகாப்தத்தின் அடிப்படை உள்ளடக்கம் ஆகும். இதன் விளைவாக, உலக சரித்திரத்தில் தற்கால கட்டத்தின் சாராம்சத்தையோ, குணும்சத்தையோ இது தான் நிர்ணயிக்கிறது.

ஒரு கலைப் படைப்பை எடுத்துக்கொண்டால், அப் படைப்பிலே காணப்படும் சமூக உறவுகளின் சாரத்தை வெளியிடும் முக்கியமான கருத்தோட்டமே அதன் உள்ளடக்கம் ஆகும். ஒரு சொற்பொழிவில் வெளியிடப்படும் முக்கியமான கருத்துக்களே கேட்பவர்களுக்கு கொடுக்கப்படுவதும், அவர்களை பாதிப்பதுமான கருத்துக்களே—அதன் உள்ளடக்கம் ஆகும்.

உள்ளடக்கம் தனித்து நிற்க முடியுமா? அதுபற்றி ஆராய்வோம்.

ஒரு வீடு கட்டுவதற்கான எல்லாப் பாகங்களுடனும் நீங்கள் ஒரு மனையில் நின்றுகொண்டிருப்பதாகக் கற்பனை செய்து கொள்ளுங்கள். உங்கள் முன்னுல் ஒரு வீடு இருப்பதாக நீங்கள் நிச்சயமாகக் கூறமாட்டீர்கள். வீட்டின் எல்லாப் பாகங்களும் சரியானபடி பொருத்தப்பட்டு, ஒரு உருவம் அளிக்கப்படும்போது தான், அது வீடாகிறது

உள்ளடக்கத்திற்கு ஒரு உருவம் வேண்டும் என்பதைக் காண்கிறீர்கள். ஒரு உருவமின்றி அது இருப்பதில்லை; இருக்கவும் முடியாது. ஒவ்வொரு பொருளுக்கும், நிகழ்விற்கும் ஒரு உருவமும் உண்டு, உள்ளடக்கமும் உண்டு. உள்ளடக்கத்தின் அக ஒழுங்கே—அக

அமைப்பே—அதன் உருவமாகும், உருவம்தான் உள்ளடக்கம் இருப்பதை சாத்தியமாக்குகிறது.

எனில், ஒரு புத்தகத்தின் உருவம்—அதன் பைண்டிங், அச்சு ஆகியவை—மாறினுல், அதன் உள்ளடக்கமும் மாறுகிறதா? இல்லே. உண்மை என்னவெனில், உருவங்கள், அக உருவங்களாகவோ புற உருவங்களாகவோ இருத்தல் கூடும். நாம் ஏற்கனவே அக உருவம் பற்றிக் கூறினேம். உள்ளடக்கத்தைப் பொறுத்து ஒரு புத்தகத்தின் 'பைண்டிங்'கோ, ஒரு பொருளின் வண்ணமோ புற உருவமேயாகும்.

புற உருவம் உள்ளடக்கத்தின்மேல் எந்த விசேஷ ஆதிக்கத்தையும் செலுத்துவதில்லே; உள்ளடக்கத்திற்குத்தீர்மானமான முக்கியத்துவம் வாய்ந்ததும் அதுவல்ல. எனினும், அக உருவம், உதாரணமாக, எப்படி பிரதான கருத்து ஒரு நூலில் வெளியிடப்பட்டுள்ளது என்பதோ அல்லது ஒரு வீட்டின் பல பாகங்களுக்கும் இடையேயுள்ள உறவு, குறிப்பிட்ட தோற்றத்தை அளிக்கும் அவற்றின் அளவு, ஆகியவை அதன் உள்ளடக்கத்தை நேரடியாக பாதிக்கிறது. இங்கு உள்ளடக்கத்திற்கே அதற்குரிய உருவம் உள்ளது

உருவமும், உள்ளடக்கமும் ஒரு ஐக்கியத்தில் உள்ளன எந்தப் பொருளிலும், போக்கிலும், அவை எப்பொழுதும் நெருக்கமாக இணைந்துள்ளன. அப்படியானுல் இந்த இனங்கள் ஒவ்வொன்றின் பங்கும் என்ன, இந்த ஐக்கியத்தில் எது தலேயாய, தீர்மானமான அம்சம், என்ற கேள்விகள் எழுகின்றன.

உள்ளடக்கமே உருவத்தை நிர்ணயிக்கிறது.

கற்கும் விஷயத்தில், உள்ளடக்கம் தான் பிரதானமானது, உருவம் அதற்கேற்பத்தான் நிர்ணயிக்கப்பட்டுள்ளது என்பதை

நமது அனுபவம் காட்டுகிறது. சொற்பொழிவுகள், கருத்தரங்குகள், தனிப்பட்ட ஆராய்ச்சிப் பணி இவை யனைத்தும் உருவங்களே; என்ன போதிக்கப்படுகின் றது, மாணவர்களின் இயைபு என்ன, அவர்கள் எந்த அளவு தயார் நிலையில் உள்ளனர் என்பதைப் பொறுத் துத்தான் - அதாவது, உள்ளடக்கத்தைப் பொறுத்துத் தான், அவ்வுருவங்கள் தீர்மானிக்கப்படுகின்றன. இது தான் எப்பொழுதும் நடைபெறுகிறது. உள்ளடக்கமே உருவத்தை நிர்ணயிக்கிறது.

பெரும் புதிய கடமைகளை கட்சி ஏற்கும்போது, அக்கடமைகள் சரிவர நிறைவேற்றப்படுவதை உறுதிப் படுத்தும் வகையில், ஸ்தாபன முறைகளையும், உட் கட்சி வாழ்வின் விதிகளையும், தரங்களையும் அது வகுத் துக்கொள்ள வேண்டுமென லெனின் போதித்தார். எனவே, ஒரு பொருளின் உருவம், நிர்ணயமான பங்கு வகிக் கும் அதன் நோக்கத்தையே, - உள்ளடக்கத்தையே சார்ந்துள் ளது.

உருவம் உள்ளடக்கத்தைச் சார்ந்துள்ளது என்று கூறினால், ஒரு குறிப்பிட்ட உள்ளடக்கம் ஒரு தனி உருவத்தைத்தான் தோற்றுவிக்கும் என்று பொரு ளல்ல. சமூக வாழ்வின் உதாரணங்களிலிருந்து இதனை நன்கு தெரிந்து கொள்ளலாம். உள்ளடக்கத்தினால் உருவம் எழுகின்றது. உள்ளடக்கமோ, என்றும், யதார்த்த வரலாற்று நிலைகளுடன் கட்டுண்டு கிடக் கிறது. ஆகவே, ஒரே, கருரான உருவம் தான் இருக்க வேண்டும் என்பதில்லை.

சமூகக் கொந்தளிப்பின் உள்ளடக்கமான சோஷ லிசப் புரட்சி பல்வேறு உருவங்களில் ஏற்படுகின்றது. அது சமாதான முறையிலோ, அல்லது சமாதான மற்ற முறையிலோ நிகழலாம். அதன் போக்கில், பாராளு

மன்றமும் உபயோகிக்கப்படலாம்; அதுபோன்ற சந்தர்ப்பத்தில், பூர்ஷுவா பாராளுமன்றத்தைக் குறிப்பிடவில்லை; மக்களின் சேவைக்கான ஒரு புதிய உள்ளடக்கத்தைக் கொண்ட ஆட்சியின் பாராளுமன்ற உருவத்தையே குறிப்பிடுகிறோம், என்பதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்.

நீங்கள் வினவலாம்: ''உருவம், உள்ளடக்கத்திற்கு உட்பட்ட தாயின், அதன் பொருள், உருவத்திற்கு எந்த பாத்திரமும் இல்லையென்றும், இதனை அசட்டை செய்யலாம் என்றும் ஆகாதா?''

உருவத்தின் செயலூக்கப் பாத்திரம்

இல்லை; ஆகாது. உருவத்தை அசட்டை செய்யலாகாது. உள்ளடக்கத்தையே அது சார்ந்திருந்த போதும், அது உள்ளடக்கத்தை தீவிரமாகப் பாதிக்கிறது. கீழ்க்கண்ட உதாரணத்தைப் பாருங்கள்: சர்வதேச நிலை பற்றி ஒரு விரிவுரையாளர் சொற்பொழிவாற்றிக்கொண்டிருக்கிறார். தற்போதைய, சூடான பிரச்சினைகள் பற்றி அவர் விவரங்கள் சேகரித்துள்ளார்; உறுதியான உண்மைகளே அவரது பேச்சின் அடிப்படை. ஆனால், அவரது விரிவுரை தெளிவற்றதாகவும், சுவையற்றதாகவும் இருக்கிறது. அவரது 'மொழியோ' 'சப்'பென்றிருக்கிறது. அப்படிப்பட்ட உருவம், உள்ளடக்கத்தைப் பாதிக்கிறதா? சந்தேக மன்னியில், ஆம் என்றுதான் கூறவேண்டும். கேட்போருக்கு, அவரது பேச்சின் உள்ளடக்கம் சென்றடைவது கடினம். விரிவுரையாளரின் குறிக்கோள் பூர்த்தியாகவில்லை. மற்றொரு விரிவுரையாளர் அதே உண்மைகளை, தெள்ளிய சுவையான முறையில் அளிக்கலாம். அப்பொழுது விளைவு வேறு விதமாகவிருக்கிறது; கேட்பவர்கள்

அதனை நன்கு கிரஹித்துக் கொள்கின்றனர்; விரிவுரை யாளரின் நோக்கம் பூர்த்தியாகின்றது.

இதிலிருந்து, உள்ளடக்கம் உருவத்தின்மீது வினைபுரிவதுடன் மட்டுமன்றி, உருவம் உள்ளடக்கத்தின்மீது எதிர்வினை புரிகின்றது என்பதும் தெரிய வருகிறது. மேலும், இரு வகைப்பட்ட கிரியைகள் சாத்தியமே. மேலே கூறப்பட்ட இரண்டாவது உதாரணத்தைப் போன்று, உருவம் உள்ளடக்கத்திற்கு ஒத்திருப்பின், அது வளர்ச்சிக்கு உதவுகின்றது. ஆனால், உருவம், உள்ளடக்கத்திற்கு ஒத்து இல்லையாயின், அது வளர்ச்சிக்கு ஊறு செய்கிறது. முதல் உதாரணத்தில் அவ்வாறுதான் நிகழ்கின்றது. ஆனால் உருவத்தின் பங்கு எப்பொழுதும் செயலாக்கம் நிறைந்ததே. அது உள்ளடக்கத்தின்மீது வினைபுரிகிறது.

மேலே கூறப்பட்ட உதாரணங்களிலிருந்து நடைமுறை வேலைகளில், உருவத்தின் செயலாக்கத் தன்மையை ஒதுக்கித் தள்ளி, உள்ளடக்கத்திற்கே நிர்ணயமான பங்கை அளித்தல் கூடாது என்பது தெளிவாகிறது. உருவத்தின் பரஸ்பரக் கிரியையையும் ஒருவர் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும், சொற்பொழிவுகள் (விரிவுரைகள்) உள்ளடக்கத்தில் மட்டும் நல்லவையாக அமைவதுடன் நில்லாது, தெளிவான, சுவையான உருவத்தையும் பெற்றிருத்தல் வேண்டும்.

தனது செயல் முறைகளின் உள்ளடக்கத்திற்கு முதன்மையான முக்கியத்துவம் கொடுக்கும் கம்யூனிஸ்டுக் கட்சி, அவற்றின் வெளிப்பாடுகளுக்குத் தகுந்த உருவம் தரவும் ஒருபோதும் மறப்பதில்லை. உதாரணமாக, கட்சி, அரசு ஆகியவற்றின் முடிவுகள் நிறைவேற்றப்படுவதைச் சரிவர கட்டுப்படுத்துதல், கட்டுப்பாட்டு அமைப்புக்கள் சரிவர சிந்திக்கப்பட்டு, குறிப்பிட்ட கட்டுப்பாட்டு அமைப்பு கண்டுபிடிக்கப்பட்டால்

தான் சாத்தியம். இதனால்தான், தொழில், வர்த்தக நிறுவனங்களிலுள்ள மூலாதார கட்சி அமைப்புக்களில், நிர்வாகத்தின்மீது கட்டுப்பாட்டை அமுலாக்க கமிஷன்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இவ்வாறாக, கவனமாகச் சிந்தித்தெடுக்கப்பட்ட ஸ்தாபன உருவங்கள்,உள்ளடக்கத்தின் வளர்ச்சிக்கு உதவுகின்றன. "தனது வேலையின் உருவங்களையும், முறைகளையும் கட்சி சதா முன்னேற்றமடையச் செய்து கொண்டேயிருக்கும்: அதன் மூலம், கம்யூனிசத்திற்கான பொருளாயத, தொழில்நுட்ப அடிப்படையை அமைப்பதிலும், சமூகத்தின் ஆன்மீக வாழ்வை வளர்ச்சியுறச் செய்வதிலும், அதன் தலைமை, கம்யூனிச நிர்மாண சகாப்தத்தின் வளர்ந்து வரும் தேவைகளுக்குத் தகுந்தாற்போலிருக்க முடியும்,' என்று சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் திட்டம் கூறுகிறது. (கம்யூனிசப் பாதை: பக்கம் 584)

உள்ளடக்கத்தின் வளர்ச்சிக்கு உருவம் உதவுகிறது என்பது தெளிவுதான்; என்றாலும், வாசகர் கேட்கலாம்: "உள்ளடக்கத்தைச் சார்ந்துதான் உருவம் உள்ளது என்றும், அதனுடன் ஐக்கியப்பாடு கொண்டது என்றும் நாம் கூறியதால், உள்ளடக்கத்தின் வளர்ச்சிக்கு உருவம் எப்படி ஊறு விளைவிக்க முடியும்?"

### உருவத்திற்கும் உள்ளடக்கத்திற்கும் உள்ள முரண்பாடு

அனைத்தும் வளர்ச்சிப் போக்கிலேயே உள்ளது என்பதை நாம் மனதில் கொண்டால், இதனை எளிதில் புரிந்து கொள்ளலாம். ஆக, உள்ளடக்கம் நிரந்தரமாக எப்பொழுதும் ஒரே மட்டத்திலிருப்பதில்லை. அது வளர்கிறது; அத்துடன் உருவமும் வளர்ச்சியடைகிறது. ஆனால், உருவம், உள்ளடக்கத்தை விட

நிலையானதும், குறைந்த நெகிழ்வு உடையதும் ஆகும். உள்ளடக்கத்தின் பின்னே தங்குகிறது அது. உருவமும், உள்ளடக்கமும் எதிர் நிலையானவை. இந்த எதிர் நிலைப்பண்பு, உருவத்திற்கும், உள்ளடக்கத்திற்குமிடையே ஒரு முரண்பாடாக வளர்ச்சியடையுமானால், அது தீர்க்கப்பட வேண்டும்.

சாதாரணமாக, ஒரு புதிய கண்டுபிடிப்பு பழைய உருவிலேயே பிறக்கிறது. முதன் முதல் கண்டு பிடிக்கப்பட்ட மோட்டார் கார், அதற்கு முன்னுள்ள குதிரை வண்டியையே ஒத்திருந்தது. ஆரம்பகால தையல் யந்திரங்களில் "யந்திரக் கைகள்" இருந்தன. ஆனால், யந்திரத்தின் புதிய தன்மைகளுக்கும், புதிய உள்ளடக்கத்தின் வளர்ச்சிக்கும் பழைய உருவம் முட்டுக்கட்டையாகின்றது. மோட்டாரின் பழைய உருவம் அதன் வேக வளர்ச்சிக்குத் தடையாக விருந்தது; அதனால் அதன் அமைப்பைச் செழுமைப் படுத்தவேண்டி வந்தது.

உருவத்திற்கும் உள்ளடக்கத்திற்குமுள்ள எதிர்ப்பு ஒரேயடியாகத் தோன்றி விடுவதல்ல; அது படிப்படியாக வளர்ச்சியடைகிறது. ஆரம்பத்தில், அவற்றிடையே சிறுசிறு வேறுபாடுகளே தோன்றுகின்றன. எவ்வாறு இவை ஏற்படுகின்றனவென்பது தெளிவாகவே உள்ளது: வளரும் உள்ளடக்கம் புதிய அம்சங்களைப் பெறுகின்றது; ஆனால், உருவமோ நாள்தோறும் மாறுவதில்லை; பழைய உருவம் குறிப்பிட்ட காலத்திற்கு நிலைக்கின்றது. ஆனால், வேறுபாடுகள் படிப்படியாக சேர்ந்து கொண்டே வருகின்றன; குறிப்பிட்ட கட்டத்தில், அவை உருவத்திற்கும் உள்ளடக்கத்திற்கும் இடையே ஒரு முரண்பாடாக வளர்கின்றன. அவற்றிடையே முரண்பாடுகள், எதிர்ப்புக்கள், மோதல்கள்

ஏற்படுகின்றன. சமூக வாழ்வின் வேறுபட்ட பல துறைகளிலும், அவை வெவ்வேறு வகையாகத் தீர்க்கப் படுகின்றன. முதலாளித்துவத்தின் கீழ், சமூக வளர்ச் சியில் ஏற்படும் உருவ, உள்ளடக்க முரண்பாடுகள், தொழிலாளி வர்க்கப் புரட்சியினுல் தீர்த்து வைக்கப் படுகிறது.

சோஷலிச சமூகத்தில், இந்த முரண்பாடுகளைனத் தும், பழைய உருவங்கள் படிப்படியாக மாற்றியமைக் கப்படுவதன் மூலம் தீர்க்கப்படுகின்றன கம்யூனிஸ்டுக் கட்சியின் முன்முயற்சியினுல் இது செய்து முடிக்கப் படுகின்றது. ஆனுல், எந்தத் துறையில் முரண்பாடு கள் தோன்றிய போதும், அங்கு அவை எவ்வழியில் தீர்க்கப்படுகின்றது? லெனின் கூறியது போல; "உருவத்துடன் உள்ளடக்கம் ஒரு போராட்டத்தை நடத்துகிறது. உருவம் தூக்கியெறியப்பட்டு, உள்ள டக்கம் மாற்றமடைவதிலேயே அது முடிகிறது." §

மேற்கூறியவற்றிலிருந்து ஒரு முக்கியமான முடிவு பெறப்படுகிறது. நடைமுறையில், எவ்விதத்திலும் ஒருவர் காலாவதியான சமூக வாழ்வு உருவங்களை இறுகப் பற்றிக் கொண்டிருக்கக் கூடாது. புதியனவற்றை புகும் உணர்வுடன், தைரியமாக பழைமையினின்றும் தன்னை அறுத்தெறிந்து கொள்ள வேண்டும்.

ஒவ்வொரு படியிலும் இதற்கான உதாரணங்களை நாம் காணலாம். உதாரணமாக, சோவியத் கிராமப் புறங்களின் வாழ்க்கையை எடுத்துக்கொள்வோம். முதலாளித்துவத்தின் கீழ், விவசாயிகள் வறுமையில் உழன்று ஓட்டைக் குடிசையில் வாழுமாறு நிர்ப்பந்திக் கப்பட்டனர். விவசாயம் கூட்டுச் சொத்தாக ஆன போது, விவசாயிகள் புனர்ஜென்மம் எடுத்தனர். அவர்

§ (லெனின், தொகுப்பு நூல்கள்: தொகுதி 38 பக்: 222)

களது வாழ்வின் உள்ளடக்கம் தீவிரமாக மாறிற்று. இது, கிராமங்களின் புறத்தோற்றத்தை பாதிக்காமலிருக்க முடியாது. உதாரணத்திற்கு, ட்னீஸ்தர் அருகேயுள்ள பெஸராபிய கிராமமாகிய கோபன்காவை எடுத்துக்கொள்வோம். பெஸராபியா, சோவியத் குடும்பத்தில் சேருவதற்கு முன்னர், 1940-ல், அது வறுமை தாண்டவமாடும் ஒரு பின்தங்கிய கிராமமாகவிருந்தது. கூட்டுப் பண்ணைகள் ஸ்தாபிக்கப்பட்டபோது, புது வாழ்வு மலர ஆரம்பித்தது. இப்புதிய உள்ளடக்கம் புதிய உருவை வேகமாகத் தோற்றுவித்தது; கிராமப் புறங்களின் தோற்றமே மாறியது. நகரங்களிலுள்ளதைப் போல, இரண்டடுக்கு வீடுகள் கட்டப்பட்டன; 'போர்டிங்' பள்ளிக்கூடமும், தார் ரோடுகளும் தோன்றின.

சோவியத் யூனியனின் பல குடியரசுகளிலும், பிரதேசங்களிலும் இதைப் போன்ற பல உதாரணங்கள் காணக் கிடக்கின்றன. எனினும், பழைய உருவம் முற்றிலும் எல்லாவிடங்களிலும் களைந்தெறியப்பட்டு விட்டது என்றோ கூட்டுப் பண்ணை வாழ்விலுள்ள புதிய உள்ளடக்கத்துடன் அது இயைந்துள்ளது என்றோ கூறிவிட முடியாது. கிராமப் புறங்களில், இங்கும் அங்கும், இன்னமும் சமூக, கலாசாரப் பணியில் சில குறைபாடுகள் உள்ளன. கூட்டுப்பண்ணை வாழ்வின் புதிய உள்ளடக்கத்திற்கும், பழைய உருவத்திற்குமிடையேயுள்ள இந்த முரண்பாடுகள், முழு மூச்சான கம்யூனிச நிர்மாண கால கட்டத்தில் படிப்படியாக அகற்றப்படும். கம்யூனிசத்தை நோக்கி நாடு முன்னேறும்போது, "பிரதானமாக, பழைய காலத்திய அமைப்புடைய விவசாயிகளின் வீடுகள் மாறி, புதிய குடியிருப்புக்கள் தோன்றும்; எங்கெல்லாம் சாத்தி

யமோ, அங்கு அவை புதிதாகக் கட்டப்படும்; அல்லது தகுந்த முறையில் மாற்றியமைக்கப்படும்,'' § என்று சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் திட்டம் குறிப்பிடுவது தற்செயலானதல்ல.

ஆக, பழைய உருவத்திற்கும், புதிய உள்ளடக்கத்திற்கும் உள்ள முரண்பாடுகள், அவற்றிடையேயுள்ள பரஸ்பர உறவுகளைச் சரியானபடி புரிந்து கொள்ளும் திறமைக்கேற்ப, தீர்க்கப்படுகின்றன.

### சாராம்சமும், புறத்தோற்றமும்

சாராம்சம், புறத்தோற்றம் என்றால் என்ன ?

இவ்வுலகிலுள்ள பொருள்கள், முறைகள் ஆகியவற்றிற்கு இரு அம்சங்கள் உள்ளன என்பதை விஞ்ஞானமும், நடைமுறை வாழ்வும் நமக்குக் காட்டுகின்றன: ஒன்று, நம்மிடமிருந்து மறைக்கப்பட்டுள்ள அக அம்சம்; மற்றொன்று, நமது புலனுக்குக் காட்சியளிக்கும் புற அம்சம். நமது புலனுறுப்புகளின் மூலம், நாம் பொருள்களைக் காணும்போது, அவற்றிடையேயுள்ள புறத் தொடர்புகளையே நாம் காண்கிறோம். இதன் மூலம், புறப்பரப்பில் உள்ளனவற்றையே, - எது நம் கண்களுக்குப் புலனாகின்றதோ அதையே, - நிகழ்வுகளுக்கிடையேயுள்ள புறத் தொடர்புகளையே நாம் தெரிந்து கொள்கிறோம். வேறு வார்த்தைகளில் கூறப் போனால், முதலில், தோற்ற உலகு நம்முன் நேருக்கு நேர் நிற்கின்றது.

ஆனால், விஞ்ஞானத்தையோ, மனித நடை முறையையோ, தனிப்பட்ட நிகழ்வுகள், உண்மைகள், நிகழ்ச்சிகள் இவற்றை வெறுமே பார்த்து விவரிப்பதாகக் குறுக்கிவிட முடியாது; நிகழ்வுகளின் இன்றியமை

§ (கம்யூனிசப் பாதை: பக் 540-41)

யாத, நிரந்தர விதிகளேயும், அவற்றின் காரணச் சார்பையும், அகத் தொடர்புகளையும் கண்டு பிடிப்பதே அவற்றின் நோக்கம். இயற்கை, சமூகம் ஆகியவற்றின் விதிகளை நேரடியாகப் பார்க்க முடியாது; அவை தோற்றத்துடன் ஒன்றியிருப்பதில்லை. நிகழ்ச்சிகளின் விதிமுறை வளர்ச்சிப் போக்கினைத் தெரிந்து கொள்ள, அவற்றின் அகத்தன்மையைத் தெரிந்து கொள்ள வேண்டும்; அதாவது, பலதரப்பட்ட நிகழ்வுகளையும், ஒரே தனி முழுமையானதாக எது இணைக்கிறதோ, எது அவற்றின் அடிப்படையான பிரதான விஷயமாகவிருக்கிறதோ, அதை ஆழ்ந்து ஊடுருவிக் காண வேண்டும்.

கீழே கொடுக்கப்பட்டுள்ள உதாரணங்கள் இதனை விளக்க உதவும்.

இவ்வுலகில் எளிய உயிர்ப் பொருள் அமைப்பிலிருந்து மனிதன் ஈருக, பற்பல உயிர்ப் பொருள்களின் கூட்டம் உள்ளது. ஒவ்வொன்றும், மற்றவற்றிலிருந்து மாறுபட்டது; ஆனால், அவையனைத்தையும் ஒரே முழுமையானதாகப் பிணைக்கும் ஒரு பொது அடிப்படை உண்டு. புரோட்டீன் பொருள்களின் மாறுபட்ட பல உருவங்களே இவை என்று குறிப்பிடுவதன் மூலம் எங்கெல்ஸ் இதன் சாரத்தை வரையறுத்தார்.

தோற்றப் பல் வகைமையின் பின்னே, அவற்றின் சாரம், அதாவது, அவற்றின் அகத் தொடர்பு, அவற்றின் அடிப்படை, அவற்றின் வளர்ச்சி விதிகள் காணக் கிடக்கின்றன. எனவே தான், லெனின் குறிப்பிட்டார்: "நியதியும், சாரமும் ஒரே வகையைச் சேர்ந்த (ஒரே இனத்தைச் சேர்ந்த) கோட்பாடுகளே; அல்லது, நிகழ்வுகள், உலகு ஆகியவை குறித்த மனித அறிவின் செறிவை வெளிப்படுத்தும் ஒரே படித்தானவையே.' §

§(லெனின் தொகுப்பு நூல்கள் : தொ 38. பக் 152)

"சாராம்சத்தினுள்ளே ஊடுருவிச் செல்லல்" என்ற சொற்றொடருக்கு, பொருள்களின் அடிப்படையை, நிகழ்ச்சிப் போக்குகளின் விதிகளை, நிகழ்வுகளுக் கிடையேயுள்ள அங்கக அகத் தொடர்புகளை அறிந்து கொள்ளுதல், குறிப்பிட்ட வகையைச் சேர்ந்த நிகழ்வு களனைத்திற்கும் மிக விசேஷமான தன்மைகளினுள் ஊடுருவிச் செல்லல், அவற்றின் வளர்ச்சி விதிகளை ஊடுருவி ஆராய்தல் என்பதைத் தவிர வேறு பொரு ளில்லை.

புறவய உலகின் அகத் தொடர்பை, சாராம்சம் விளக்குகிறது என்பது இதிலிருந்து தெளிவு; அதுவே நிகழ்வுகளின் பல் வகைமையின் அடிப்படை. எனி னும், புறத் தோற்றம் என்பது சாராம்சத்திற்குப் பண்பு ருக் கற்பித்தலே; சாராம்ச வெளிப்பாட்டின் புற உரு வமே. அதனால்தான், சாராம்சம் என்பது புறத் தோற் றத்திற்கு முன்பிருந்த ஒன்றோ, அல்லது புறத் தோற் றத்தினின்றும் சுயேச்சையான தொன்றோ அல்ல. ஒரே உண்மையின் மாறுபட்ட அம்சங்களைப் பிரதிபலிப்ப வையே சாராம்சமும், புறத்தோற்றமும்; அடிப்படை யான, அக அம்சங்களை சாராம்சமும், உடனடியான, புற அம்சங்களை புறத் தோற்றமும் பிரதிபலிக்கின்றன.

**சாராம்சம், புறத் தோற்றம் இவற்றி டையேயுள்ள தொடர் பும், முரண்பாடும்**

சாராம்சத்திற்கும், புறத் தோற் றத்திற்கும் இடையேயுள்ள பரஸ் பர உறவு என்ன? முதற்கண், அவை பிரிக்க முடியா ஐக்கியத் தைப் பெற்றிருக்க வேண்டும். "சாராம்சம் தோன்றுகிறது; தோற்றம் சாரமுடைத்து,"* என்றார் லெனின் ஒரு மனித னின் அக உள்ளடக்கத்திற்கும், அவனது நடத்தை

* லெனின் தொகுப்பு நூல்கள் : பக்கம் 253.

செய்கைகள் ஆகியவற்றின் புறவெளிப்பாடுகளுக்கு மிடையே, கடக்கமுடியா எல்லைக் கோடுகள் ஏதும் கிடையாது அதனால்தான்; 'ஒரு மனிதனின் செயல் களால் அவனைத் தெரிந்து கொள்ளுகிறோம்' என்று கூறப்படுகிறது. அவை, அவனது அக உள்ளடக் கத்தை, அவனது சாராம்சத்தைக் காட்டுகின்றன. சமூக குழுக்கள், வர்க்கங்கள், அரசியல் கட்சிகள் ஆகிய வற்றிற்கும் இது பொருந்தும்.

ஒவ்வொரு தோற்றத்திலும், முழுமையாக இல்லா விடினும், ஓரளவாவது சாராம்ச வெளியீடு அடங்கி யுள்ளது; ஆனால், லெனின் கூறியது போன்று, "அதன் நிர்ணயிப்புகளில் ஒன்றில், அதன் அம்சங் களில் ஒன்றில், ஏதேனும் ஒரு கணத்தில், சாராம்சம் வெளிக்காட்டப்படுகிறது."§

உழைக்கும் மக்களின் நலன்களிலும், ஆரோக்கியத் திலும் சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சி காட்டும் பெரும் அக்கரை, சோஷலிச அமைப்பின் முழு சாராம்சத்தையும் கொண்டிருக்கவில்லை; மனிதனின்மீது கம்யூனிஸ்டுக் கட்சி செலுத்தும் அக்கரை என்ற ஒரு அம்சத்தையே அது காட்டுகிறது.

சாராம்சம், புறத்தோற்றம் இவற்றின் ஐக்கியம் என்றால், அவை நேரடியாக ஒத்திசைந்து விடுகின்றன என்று கொள்ளக் கூடாது. மார்க்ஸ் குறிப்பிட்டார்: "பொருள்களின் புறத்தோற்றமும் சாராம்சமும் நேரடி யாக ஒத்திசைந்து விட்டால், எல்லா விஞ்ஞானமும் தேவையற்றதாகிவிடும்." (மார்க்ஸ் – மூலதனம் தொ: III பக் 797.) வெளிப்படையான புறத்தோற்றம், அனைத் தையும் பிரதிபலிக்கும்; மேலெழுந்த வாரியான ஒரு

---

§(லெனின் தேர்குப்பு நூல்கள் : பக் 133)

பார்வையிலேயே, இயற்கை, சமூகம் ஆகியவற்றின் வளர்ச்சி விதிகள் தெரிந்துவிடும். ஆனால் இதுபோல் நடப்பதில்லை. சாராம்சத்தைக் கண்டு பிடிப்பதற்கு, விஞ்ஞானிகள், பொறியாளர்கள், வேளாண்மையாளர்கள், இன்னும் பல லட்சம் மக்களின் தீவிர, சிக்கலான உழைப்புத் தேவைப்படுகிறது. ஒவ்வொருவரது தனிப்பட்ட அனுபவமும் நிருபிப்பது போல, நடைமுறையடிப்படையில் எழுந்த விஞ்ஞானப் பகுப்பாய்வு அதற்குத் தேவைப்படுகிறது. பல சமயங்களில், தோற்றமும், நிகழ்ச்சிகளின் புறக் கூறுகளும் சாராம்சத்துடன் ஒத்திசைவதில்லை என்பதுடன், அதனைத் திரித்தும் விடுகின்றது.

உதாரணமாக, நிலையாகவிருப்பதைப் போலத் தோன்றும் பூமியை சூரியன் சுற்றுவது போல நமக்குத் தோன்றுகிறது. இந்தத் தோற்றம், சாராம்சத்திற்கு முரண்பட்டது, என்று போலிஷ் வானியலாளரான கோபர்னிகஸ் கண்டு பிடித்தார்.

சமூக வாழ்வில், காலாவதியான பிற்போக்குச் சக்திகளால், சாராம்சம் அடிக்கடி திரிக்கப்படுகிறது; அல்லது மறைக்கப்படுகிறது. "எனவே, நீங்கள் பாம்புகளைப் போல புத்திசாலிகளாகவும், புருக்களைப் போலத் தீங்கற்றவர்களாகவும் இருப்பீர்களாக!" என்று போதனையாளர்கள் தங்களது சீடர்களுக்கு உரைக்கின்றனர் இதுபோன்ற சந்தர்ப்பங்களில் ஒருவர் என்ன கூற வேண்டுமெனில், "போதனைகளின் புறத்தோற்றக் கூறுகளை மட்டும் நம்பி விடாதீர்கள்; அவற்றின் சாராம்சத்தை ஊடுருவிக் காணுங்கள்; இல்லையெனில் நீங்கள் ஏமாற்றப்படுவீர்கள்," என்றே கூறவேண்டும். அல்லது முதலாளித்துவத்தின் கீழ், தொழிலாள வர்க்கத்தின் சுரண்டலை எடுத்துக் கொள்வோம் அதுவும், மறைந்து

முகமூடியணிந்தே உள்ளது. வெளிப்படையாகக் காணும்போது, தொழிலாளிகளுக்கும், முதலாளிகளுக்குமிடையேயுள்ள உறவுகள், சுதந்திரமான சமத்துவப் பண்ட உரிமையாளர்களுக்கிடையேயுள்ள உறவுகளைப் போன்றே தோன்றுகின்றன. அதையும் விட, தொழிலாளிக்கும், முதலாளிக்குமிடையே நடைபெறுவது சாதாரண விற்றல், வாங்கல் தான் எனவும், தொழிலாளி தனது உழைப்பை விற்பதாகவும், முதலாளி அதற்குரிய விலையைக் கொடுப்பதாகவும்கூட காட்டப்படுகிறது.

ஒரு தொழிலாளிக்கும், ஒரு பூர்ஷுவாக்குமுள்ள பரஸ்பர உறவுகளின் அடிப்படையான சுரண்டலின் சாராம்சத்தை விளக்கிக் கூற மார்க்ஸின் நுண்ணறிவு தேவைப்பட்டது. மார்க்ஸின் மூலதனம், முதலாளித்துவ உற்பத்தி முறையின் ஆழ்ந்த சாராம்சத்தை ஊடுருவி நோக்குதலுக்கு ஒரு அற்புதமான உதாரணமாகும். மார்க்ஸ் எழுதினர்: "எல்லாமே வெளிப்படையாக எல்லோரது முன்னிலையிலும் நடைபெறும் இந்த இரைச்சல் மிகுந்த துறையிலிருந்து சற்று ஓய்வு பெற்று, மறைந்திருக்கும் உற்பத்தியின் மூலஸ்தானத்திற்குச் செல்லோம்; அதன் முற்றத்திலேயே "அலுவலின் பேரிலேயே நுழைவிற்கு அனுமதி" என்ற அறிவிப்புப் பலகை நம்மை விறைத்துப் பார்க்கிறது. இங்கு நாம் மூலதனம் எப்படி உற்பத்தி செய்கிறது என்பதை மட்டுமின்றி, மூலதனம் எப்படி உற்பத்தி செய்யப்படுகிறது என்பதையும் காணலாம். இறுதியில், லாப வேட்டையின் ரகசியத்தை நாம் வெளிக் கொணருவோம்."*

தொழிலாளியின் உழைப்பு முழுமைக்கும் அன்றி அதன் ஒரு பகுதிக்கே முதலாளி ஊதியம் கொடுக்கிறுர்

* மார்க்ஸ். மூலதனம் தொகுதி I—பக் 176

என்பதை மார்க்ஸ் நிரூபித்தார். உழைபபின் கூலி யில்லாப் பகுதியே உபரி மதிப்பு எனப்படுகிறது இதை முதலாளி தனதாக்கிக் கொள்கிறார். பூர்ஷுவா, தொழிலாளியைச் சுரண்டுகிறார். அதனால்தான், முதலாளித்துவ சமூகத்தில், வெகு ஜனங்களின் ஏழ்மையும், பசியும், வேலையில்லாத் திண்டாட்டமும் ஒரு துருவத்தில் மட்டுமே ஒருமுகப்பட்டுள்ளது; மற்றொரு துருவத்தில், புல்லுருவிகளான முதலாளிகளின் செல்வச் செழிப்பும், சொகுசும்–காணப்படுகிறது.

விஞ்ஞான ஆய்வுகளின்போது, தோற்றம் எனும் புறத்தின் வழியே, சாராம்சம் எனும் அகத்தினுள்ளே நாம் ஊடுருவிச் செல்கின்றோம் என்பது தெளிவு. இவ்வாறுதான் மார்க்சிஸ்டுத் தத்துவ இயல், சாராம்சத்திற்கும், தோற்றத்திற்கும் உள்ள பரஸ்பரத் தொடர்புப் பிரச்சினையைத் தீர்க்கிறது. இந்தத் தீர்வுக்கு எதிராகச் செல்வது கருத்து முதல் வாதிகளின் எண்ணம்.

கருத்து முதல் வாதிகள், சாராம்சத்தையும், தோற்றத்தையும் ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரிக்கின்றனர். இதற்கு ஒரு சிறந்த உதாரணம் காண்ட்டின் தத்துவ இயல். அவர், யதார்த்தத்தைத், "தோற்ற" உலகு என்றும், "சாராம்ச" உலகு என்றும், பிரித்தார். இந்த சாராம்ச உலகு நாம் அடைய முடியாததொன்று; அது தோற்றங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டது.

சாராம்சத்திற்கும், தோற்றத்திற்கு முள்ள உறவை சற்று வேறுபட்ட முறையில் ஹெகல் ஆராய்ந்தார். பாலமில்லாப் பள்ளத்தினால், சாராம்சத்தையும் தோற்றத்தையும் பிரித்ததற்காக, காண்ட்டை அவர் விமர்சித்தார். சாராம்சத்திற்கும், தோற்றத்திற்குமுள்ள தொடர்பை ஹெகல் கண்டார். ஆனால், பருப் பொருள் உலகின் அக உள்ளடக்கமாக சாராம்சத்தைக் காணாமல்,

அவர் பருப் பொருள் உலகின் வெளிப் பாடான "முழு முதற் கருத்து" என அதைக் கண்டார். தோற்றத்தின் மூலம் வெளியிடப்படுவது, பொருள்களின் சாராம்சம் அல்ல; ஆனால் முழு முதற் கருத்தே.

நவீன தோமிசம் எனும் மத—கருத்து முதல்வாதத்தைச் சேர்ந்த தற்கால நபர்கள், மதக் கோட்பாடுகளின் படி சாராம்சத்தையும், தோற்றத்தையும் காண்கின்றனர். இதன்படி, இருக்கும் அனைத்தின் அடிப்படையிலும், ஒரு நிலைபேறுடைய, மாறாத தெய்வீக சாராம்சம் பொதிந்து கிடக்கிறது. கண்டு பிடிக்கப்படும் ஒவ்வொரு விதியும், ஒவ்வொரு சாராம்சமும் ஆண்டவனின் இச்சை, நடைமுறைப்படுதலே. தனிப்பட்ட பொருள்கள் அனைத்தும், தெய்வீக சாராம்சத்தின் பிரதிபலிப்பாகவே கருதப்படுகிறது.

**தோற்றம், சாராம்சம் ஆகிய இனங்களின் முக்கியத்துவம்.**

தோற்றம், சாராம்சம் பற்றிய பிரச்சினையின் இப்படிப்பட்டதொரு கருத்து முதல் வாத, மதக் கருத்து, இவ்வுலகில் நிலவும் உண்மையான இணைப்புக்களை திரிக்கிறது. அதன் பயனாக, நிகழ்ச்சிகளின் சாராம்சத்தில் மக்கள் ஊடுருவிப் பார்க்க இயலாது, அவற்றின் முன் கதியற்றவர்கள் ஆகின்றனர். தோற்றம், சாராம்சம் குறித்த முரண் தர்க்க பொருள் முதல் வாதத் தத்துவம், மகத்தான தத்துவார்த்த, நடைமுறை மதிப்பு வாய்ந்தது. எவனொருவன், நிகழ்வுகள், நிகழ்ச்சிகள் ஆகியவற்றின் சாராம்சத்தை ஊடுருவிப் பார்க்க முடிகிறதோ, அவன்தான் தன்னை எதிர்நோக்கும் கடமைகளைச் செவ்வனே ஆற்ற முடியும். ஒவ்வொரு துறையிலும், - அது பெரிதோ, சிறிதோ, அப்படிப்பட்ட அறிவே நமக்குத் தேவைப்படுகிறது.

இன்று, உலக சோஷலிச அமைபபு நிறுவப் பட்டுள்ளபோது, ஏகாதிபத்தியத்திற்கு எதிராக காலனி மக்கள் கிளர்ந்தெழுந்துள்ளபோது, வளர்ச்சியின் மேற் கொண்ட போக்குகளையும், வாய்ப்புகளையும், நமது சகாப்தத்தின் மிக முக்கியமான தன்மையைப் பற்றி ஆழ்ந்து பகுப்பாய்வதன் மூலமே அறிந்து கொள்ள முடியும். சமாதானம், ஜனநாயகம், சோஷலிசம் ஆகியவற்றிற்கான கம்யூனிஸ்டுகளது போராட்டத் தின் திறனும், போர்த் தந்திரமும், நமது சகாப்தத்தின் குணாதிசயத்துடன் பிரிக்க முடியாதபடி இணைந்துள் ளன. இவ்வாருக, வரலாற்றுப் போக்கின் சாராம்சத் தைப் பற்றிய அறிவு, நடவடிக்கைக்கு வழிகாட்டியாக அமைகின்றது.

நிகழ்வுகளின் சாராம்சத்தை ஊடுருவி நோக்கும் போது, அது, எந்த யதார்த்த வரலாற்றுச் சூழ்நிலையில் வெளியிடப்படுகிறது என்பதையும் ஒருவர் கணக்கி லெடுத்துக் கொள்ள வேண்டும். ஆக, லெனின் குறிப் பிட்டதைப் போன்று, ஏகாதிபத்தியத்தின் சாராம்சம், நிலையாக, யுத்தங்களுடனும், உலகைப் பங்கு போடு தல், மறுபங்கு போடுதல் ஆகியவற்றிற்கான போராட் டத்துடனும், தேசங்களை அடிமைப்படுத்துதலுடனும் தான் இணைந்துள்ளது. இன்றும் நிலைமை அதுவே. எனினும், தற்காலச் சூழ்நிலைகளில், புதிய உலக யுத் தத்தை ஏகாதிபத்தியவாதிகள் கட்டவிழ்த்து விடுவதற் கான சந்தர்ப்பங்கள் பெருமளவு குறைந்துள்ளன. ஏனெனில் இன்றைய சக்திகளின் பரஸ்பர நிலை, சமாதா னம், ஜனநாயகம் ஆகியவற்றிற்குச் சாதகமாக உள்ளது. இதைக் கணக்கிலெடுத்துக் கொண்டு தான், இரு அமைப்புக்களும் சமாதான சகவாழ்வு வாழ வேண்டுமென்ற நோக்கத்தை கம்யூனிஸ்டுக் கட்சியும்

சோவியத் அரசும் முன் வைக்கின்றன. எனவே, ஏகாதிபத்திய வெளிப்பாடுகளின் சூழ்நிலைகளைக் கணக்கில் எடுத்துக் கொள்ளாது, வறட்டுத் தத்துவவாதிகள் செய்வதைப் போன்று, "ஏகாதிபத்தியத்தின் சாராம்சம்" பற்றிய பொதுவான சூத்திரத்தை மீண்டும் மீண்டும் ஒப்பித்துக்கொண்டு, நமக்கு நாமே வரம்புகளை ஏற்படுத்திக் கொள்வது முடியாத காரியம். இங்கும் வறட்டுத் தத்துவவாதம் பெரும் தீங்கு விளைவிக்கிறது. எந்த யதார்த்தச் சூழ்நிலைகளில் அது வெளியிடப்படுகிறதோ, அவற்றினின்றும் சாராம்சத்தைப் பிரித்து உண்மையுடன் தொடர்பற்ற ஒரு அருபப் பொருளாக்கி விடுகிறது அது.

பொருள் முதல்வாத முரண் தர்க்கத்தின் முக்கியமான விதிகளையும், இனங்களையும் நாம் ஆராய்ந்தோம். இப்பொழுது; இந்தத் தொடர்புகள், இணைப்புகள், விதிகள் ஆகியன பற்றிய அறிவை, விஞ்ஞானம் எவ்வாறு பெறுகிறது என்ற கேள்வி எழுகிறது. இது குறித்து நமது அடுத்த உரையில் விளக்குவோம்.

ஒன்பதாவது உரை.

## சுற்றுப்புற உலகைப் பற்றிய அறிவை நாம் எவ்வாறு பெறுகிறோம்.

உலகைப்பற்றி அறியும் சாத்தியக் கூற்றை மறுத்தல்

அறிவின் சக்தி மிகப் பெரிது. அறிவாயுதத்தைப் பெற்ற மனிதன் வெல்லற்கரியவன். ஆனால் அந்த அறிவு நமக்கு கிட்டக்கூடியதா? இந்தக் கேள்வியை இப்படி எழுப்பக் கூடாதென நீங்கள் கூறலாம். இந்த உலகில் என்ன நடந்துகொண்டிருந்தது என்பதை நாம் அறியாவிட்டால், அதில் நாம் வசிப்பதோ, வேலை செய்வதோ முடியாத காரியம். அறிவின் துணையின்றி, மனித ஆற்றலின் படைப்புக்களான ஸ்புத்னிக்குகள், விண்வெளி ராக்கெட்டுகள், அணு சக்தி, ஆகியவை நமக்கு எட்டியிருக்காது என்பது மட்டுமன்றி, மிக எளிய காரியத்தையும் செய்தல் முடியாததெனத் தோன்றும்.

எனினும், உலகைப் பற்றிய உண்மையான கருத்தை மனிதன் பெறமுடியாது என்று அறுதியிட்டுரைக்கும் நபர்களும் உள்ளனர்; அதாவது, மனிதன் அதைத் தெரிந்து கொள்ள முடியாது. இக்கருத்து எவ்வாறு ஏற்பட்டது என்பதை நாம் ஆராய்வோம்.

பழங்காலத்திய முதுமொழி ஒன்றின்படி அறிவு என்பது ஒளி. ஆனாலும், எல்லா மக்களும் ஒளியை நேசிப்பதில்லை. ஏனெனில், மனிதனின் பகுத்தறிவு என்னும் சக்தி மிகு ஒளியில் உலகைக் காண்பதென்பது, அதில் பல விஷயங்களைக் காண்பது, அதைக் குறித்து பல விஷயங்களைத் தெரிந்து கொள்வது, அதில் பலவற்றைச் செய்ய முடிவது என்று பொருள் படும்.

இருளைப் பேணுவோர் அனைவருக்கும் இந்த விஷயம் தான் அச்சம் தருவதாகும்; ஏனெனில், சமூக, அரசியல் இதர அடிமைத் தனத்திலிருந்து மனிதன் விடுதலைபெற்று, தனக்குத் தானே எஜமானனுகி விட்டால், அவன் தன்னை ஆட்டுவிப்பவர்களையும், அடிமைப்படுத்துபவர்களையும் - அவர்கள் தேவர்களாயினும், நரர்களாயினும், — தூக்கியெறிந்து விடுகிருன். இதே காரணத்தால்தான், 'அறிவெனும் தருவை' நோக்கிக் கரம் நீட்டிய மனிதனுக்கெதிராகக் கொதித்தெழுகிறது மதம். அறிவு என்பது கடவுளர்க்கு மட்டுமே என்றும், மக்களுக்கு அது எட்டாதது என்றும், இந்த 'அறிவு எல்லை'யைக் கடந்து செல்வதும், கடக்க முயற்சிப்பதும் ஒரு பெரும் பாவம் என்றும் கதைக்கிறது மதம்.

"இது ஒரு பெரும் புரியாத புதிர்; தெய்வீக அறிவின் உள்ளார்ந்த ரகசியத்தை அறிந்து கொள்வது சாதாரண மானுடர்களுக்கு முடியாது," என்று மத

குருக்கள் தங்களது போதனைகளில் சீடர்களுக்குக் கூறுகின்றனர். அப்படியானால் மனிதன் செய்யக் கூடியது தான் என்ன? "தன் செயலால் ஆவதொன்றில்லை என்று, அவனை நம்பி, அவனையே தொழுவது தான்," என்று பதிலிறுத்தது மதம். பகுத்தறிவும் ஒளியும், அறிவும், ஒழிக! - இதுவே அம்மாதிரியான கூற்றுக்களின் பொருள். "ஆண்டவனின் விளையாட்டு நமது அறிவுக்கெட்டாதது; அது நம்மிடையேயிருந்து மறைத்து வைக்கப்பட்டது."

இவ்விஷயத்தில், மதகுருக்களுக்கு சில கருத்து முதல் வாத தத்துவ இயலாளர்களும் ஆதரவு தருகின்றனர். அறிவிற்கெட்டாததே உலகம் என்று அறுதியிட்டுரைக்கின்றனர் அவர்கள். அவர்களை அறியொணுமைக் கொள்கை வாதிகள் † என்கிறோம்.

ஹ்யூம், காண்ட் என்ற இருவரும் மிகப் பிரபலமான அறியொணுமைக் கொள்கை வாதிகள். உதாரணமாக, காண்ட் கூறினார்: 'உலகிலுள்ள பொருள்களனைத்தும் நம்மிடையேயிருந்து மறைத்து வைக்கப்பட்டுள்ளன; ஒரு கூட்டினுள் அடைபட்டுக் கிடக்கும் அவற்றின்

---

† இந்த தத்துவவாதப் போக்கை லெனின் கீழ்க்கண்டவாறு வரையறுத்தார். 'அக்னோஸ்டிக்' என்பது கிரேக்கப் பதம் : 'அ' என்றால் கிரேக்க மொழியில் 'இல்லை' என்றும் 'க்னோஸிஸ்' 'அறிவு' என்றும் பொருள்படும். அதை நம்புபவன் "நமது உணர்வுகளில் பிம்பமாகப் பிரதிபலிக்கும் ஒரு புற வய யதார்த்த உண்மை ஒன்று உண்டா என்பதை நான் அறியேன் ; அதைத் தெரிந்துகொள்ளும் வழி யாதொன்றுமில்லை என்று நான் கூறுகிறேன்" என்கிறான்.

(லெனின்; தொகுப்பு நூல்கள் தொ: 14; பக்கம் 128)

உட்பொருளை நாம் அறிந்துகொள்வது சாத்தியமில்லை. அதன் புற உருவையே நாம் அடைய முடியும் நவீன பூர்ஷுவா தத்துவத்தில் அறியொணாமைக் கொள்கையின் போதனையைப் பரக்கக் காணலாம் மாபெரும் மத உண்மை நமக்கு அறிவிப்பதின்றி, 'கிறிஸ்துவ ரகசியங்கள்'' அறிவிப்பதின்றி பிரபஞ்சத்தின் முடிவான புதிர்களின் முன்னர் நமது அறிவு பலனற்று நிற்கிறது, என்று மேற்கு ஜெர்மன் தத்துவ இயலாளரான பீட்டர்ஸ் டார்ஃப் உரைக்கிறார்.

தங்களது எண்ணங்களுக்கு ஆதரவாக, அறியொணாமைக் கொள்கை வாதிகள் என்ன வாதங்களை முன்வைக்கின்றனர்? அவை தகுந்தவைதானா? பார்வை, கேள்வி, தொடு உணர்வு போன்றவற்றை அறிவிக்கும் நமது புலனுருப்புக்களால் தான் இவ்வுலகை நாம் அறிந்து கொள்கிறோம் என்பதை நாம் அறிவோம். ஆனால், இவையோ நம்ப முடியாத சாட்சியங்கள் என்கின்றனர் அறியொணாமைக் கொள்கைவாதிகள். நமது புலனுறுப்புக்கள் நம்மை அடிக்கடி ஏமாற்றிவிடுகின்றன. உதாரணமாக, நீருக்குள் பாதி மூழ்கியிருக்கும் ஒரு பென்சில் வளைந்தது போன்று தோன்றுகிறது. இதைப் போன்ற விஷயங்களால், நமது புலனுறுப்புக்களை நம்புவது சாத்தியமில்லை என்கின்றனர் அறியொணாமைக் கொள்கை வாதிகள். இது உண்மையா?

தன்னைச் சுற்றியுள்ள பொருள்களை, ஏதுமியலா நிலையில் வெறுமனே பார்த்துக்கொண்டிருப்பதைத் தவிர மனிதன் வேறு ஒன்றும் செய்ய முடியாதென, அறியொணாமைக் கொள்கை வாதிகளின் கூற்றிற்குச் செவி சாய்க்கும் ஒருவன் எண்ணக்கூடும். ஆனால், இவ்வுலகில் மனிதனின் பங்கு வெறும் பார்வையாளராக அல்ல: ஆக்குபவனாக, சிருஷ்டிப்பவனாக அவன் இயங்குகிறான்.

தனது புலனுறுப்புக்களின் சாட்சியங்களைத் துல்லியமானதாக்கவும், பொருள்களின் சாரத்தில் ஆழ்ந்து ஊடுருவிக் காணவும், ஆராயும் நிகழ்வின் ஆழத்தில் செல்லவும் தேவையான அனைத்தையும் தனது உழைப்பின் மூலமும், நடைமுறைச் செயல் மூலமும் அவன் பெறுகிறான். மேற்சொன்ன உதாரணத்தில், நீரிலிருந்து பென்சிலை வெளியே எடுப்பது, அது வளைந்திருக்கவில்லை என்று காட்டப் போதுமானது.

எனவே, உலகம் அறியப்படக் கூடியது தானா என்பது நடைமுறையில், வாழ்வில் தீர்மானிக்கப்படுகிறது. தனது உழைப்பினாலும், உற்பத்திச் செயல் முறையினாலும், தன்னைச் சுற்றியுள்ள உலகின் சாராம்சத்தை, மனிதன் ஊடுருவி நோக்கி, அதனை அறிந்து கொள்கிறான்.

**அறிதல் எவ்வாறு சாத்தியமாகிறது.**

ஒரு தொழிற்சாலையின் வேலை பற்றி நீங்கள் கற்க வேண்டுமென வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் எப்படி ஆரம்பிப்பீர்கள்? சில உண்மைகளைச் சேகரிப்பதன் மூலம், - எத்தனை தொழிலாளர்கள் அதில் வேலை செய்கின்றனர், அதிலுள்ள சாதனங்கள் எவ்வளவு நவீனமானது என்பன போன்ற விஷயங்களைச் சேகரிப்பதன் மூலம் - ஆரம்பிப்பீர்கள். அப்பொழுது தான், அந்தத் தொழிற்சாலையின் வாழ்வு பற்றிய சில திட்டவட்டமான முடிவுகளை நாம் வரையறுக்க முடியும்.

வேறு எந்த விஷயமும் குறித்து, மக்கள் அவ்வாறு தான் செயல்படுகின்றனர். விபரங்களைச் சேகரிப்பதிலிருந்துதான் இயற்கையின் விதிகளைக் கண்டுபிடித்தல், அறிதல் என்ற வேலை ஆரம்பமாகிறது. இது எளிய முறையில் காண்பதன் மூலமோ, பரிசோதனையின் மூலமோ பெறப்படுகிறது: எனினும் எப்பொழுதும் புலனுறுப்புக்களாலேயே இது செய்யப்படுகின்றது.

அறிதலின் முதல் கட்டம் இதுவே — இது புலனுணர் அறிவு அல்லது ஜீவித உணர்வு எனப்படுவது.

போதுமான அளவு விவரங்கள் சேகரிக்கப்பட்ட பின்னர், நமது அறிவு அவற்றைப் பகுத்தாராய்கிறது; ஒத்திட்டும், மாறுபடுத்தியும் கண்டு, சில குறிப்பிட்ட முடிவுகளெடுக்கிறது. இதுதான் அறிதலின் இரண்டாவது கட்டம்—தர்க்க ரீதியான அறிதல் அல்லது அருவச் சிந்தனை. அறிதலின் இந்த இரு கட்டங்களுமே நடைமுறைச் செயல்பாட்டின் அடிப்படையிலேயே எழுந்தவை. அவற்றைப் பகுப்பாய்வதற்காக, விவரங்களை நமது நடைமுறையினின்றும், யதார்த்த வாழ்வினின்றும் நாம் எடுக்கிறோம். அதே போன்று, இவ்வுண்மைகளிலிருந்து நாம் பெறும் முடிவுகள் வாழ்க்கைக்கு, நடைமுறைக்கு அவசியமானவை. உதாரணமாக, நாம் சோதனை செய்த தொழிற்கூடத்தின் வேலையைச் செம்மையாக்கவோ, அல்லது நாம் ஆராயும் பயிர்களின் விளைவை மேம்படுத்தவோ அவை நமக்குத் தேவைப் படுகின்றன.

இவ்வாறாக, அறிதல் என்பது, நடைமுறையினடிப்படையில் இயங்கும் புலன் உணர் அறிதல், தர்க்க அறிதல் என்றவற்றில் அடங்கியுள்ளது. "ஜீவித உணர்விலிருந்து அருவச் சிந்தனைக்கும், அதிலிருந்து நடைமுறைக்கும் - இதுவே, உண்மையை அறிதலின், புறவய யதார்த்தத்தை அறிதலின் முரண் தர்க்கப் பாதை ஆகும்," என்று எழுதினார் லெனின். *

---

*(லெனின் தொகுப்பு நூல்கள்; தொகுதி 38; பக்கம் 171)

புலன் உணர்வே அறிதலின் ஆரம்ப கட்டம்.

கீழ்க்கண்ட சம்பவம் விஞ்ஞான வரலாற்றில் காணப்படுகிறது; மருத்துவர் போட்கின் என்பாரின் வார்த்தைகளில், உடலியலாளரான ஸெசெனேவ் இதனை வர்ணித்துள்ளார். ஒரு நோயாளியின் பிரதான புலனுறுப்புக்கள் அனைத்தும் செயலிழந்த நிலையில் அவன் வைத்தியக் கூடத்தில் சேர்க்கப்பட்டான்; அவனால் பார்க்கவோ, கேட்கவோ, வாசனை, ருசியறியவோ முடியாது. ஒரு கையின் தோலில் தொடு உணர்ச்சி ஒன்றுதான் அவனுக்கு இருந்தது. இது ஒன்றுதான், வெளியுலகுடன் அவனுக்குள்ள ஒரே தொடர்பு. ஆனால், அவனது அறிவு எவ்வளவு குறைவானது! அந்த நோயாளி, அநேகமாக, எப்பொழுதும் இவ்வுலகை மறந்த நிலையிலேயே இருந்தான். இது எதைக் காட்டுகிறது? சுற்றுப்புற உலகைப் பற்றிய அறிவு, மனித உணர்வை ஊடுருவிச் செல்வதற்கான, பாதை புலனுறுப்புகளே என்பதை இது காட்டுகிறது. புற உலகின் கிரியை, நமது புலனுறுப்புக்களில் உணர்வுகளைத் தோற்றுவிக்கிறது. உணர்வுகளின் மூலமாக அன்றி, நம்மைச் சுற்றியுள்ள உலகைப் பற்றிய அறிவை நாம் பெற முடியாது என்று குறிப்பிட்டார் லெனின்.

நீங்கள் கூறலாம்: "ஆனால், ஒன்று அல்லது இரண்டு உணர் உறுப்புக்களை இழப்பதனால், மக்களின் உள நடவடிக்கைகள் பெருமளவு பாதிக்கப்படுவதில்லை என்பது நமக்கு நன்கு தெரியும். அவ்வாறிருக்க, நமது புலனுறுப்புகளின் மூலமாக அன்றி, இவ்வுலகைப் பற்றிய எதையுமே தெரிந்து கொள்வது முடியாத காரியம் என்று கூறுவது மிகைப்படுத்துதல் அல்லவா?" ஓரிரு உணர் உறுப்புக்களை இழப்பதன் மூலம்,

இவ்வுலகில் என்ன நடைபெறுகிறதென்பதை அறியும் உணர்வை மனிதன் இழப்பதில்லை என்று கூறுவது, ஒன்றுதான் இங்கு, சரியானது. பார்வை, கேள்வி, பேச்சு என்ற உணர்வை இழந்தவர்கள், எழுதப்படிக்கக் கற்றுக்கொண்டதோடு மட்டுமன்றி, மிக உயர்ந்த மன வளர்ச்சியும் அடைந்துள்ளனர் என்பதற்கு உதாரணங் கள் பல உண்டு.

ஒரு உணர் உறுப்பை இழந்த மனிதனுக்கு, அதன் இழப்பு, பிற உறுப்புக்களால் ஈடு செய்யப்படுகிறது. ஆனால், எல்லாப் புலனறி உறுப்புக்களையும் அவன் இழந்துவிட்டால், யதார்த்த உண்மையைப் பற்றி ஆராய அவன் சக்தியற்றவனாகின்றான். இவ்வுலகைப் பற்றி அவன் ஒன்றுமே தெரிந்து கொள்ள முடியாது.

எனினும், உணர்வுகளின் பெரும் முக்கியத்து வத்தை அங்கீகரிப்பது மட்டும் இங்கு போதுமானதல்ல. உணர்வுகள் என்பதன் பொருளை நன்கு அறிந்து கொள்வதும் இங்கு அவசியமாகும்; ஏனெனில், உணர் வுகளின் பங்கு பற்றிப் பேசும்போது, நமது புலனுறுப் புகளின் மீது, புற உலகின் வினைத் தொடர்பு இன்றியே, ஒரு மனிதனினுள் அவை தோன்றக்கூடும் என்று கருதும் தத்துவ இயலாளரும் (தன்வயக் கருத்து முதல் வாதிகள்) உள்ளனர். ஒரு ஆப்பிளுக்கு அதற் குரிய மஞ்சள் நிறமோ, அல்லது; தனிச் சிறப்பான உருவோ கிடையாது என அவர்கள் கூறுகின்றனர். மனிதன் தான் இந்த ஆப்பிள்களுக்கு அப்பண்புகளை ஏற்றிக் கூறுகிறான்; அவனது எல்லா உணர்வுகளின் வெறும் தொகுப்பே அது என்பது அவர்களது கருத்து.

இவ்வாறாக பொருள்கள் ஒரு சிக்கலான, உணர்வு களின் கூட்டே என்ற முடிவிற்கு அவர்கள் வருகின்ற னர். ஆனால், உண்மையில் மாறானதே நடைபெறு

கின்றது. நம்மினின்றும் தனித்து, தனது எல்லாத் தன்மைகளையும் கொண்ட ஆப்பிள் இருக்கிறது. அது நம் புலனுறுப்புக்களின் மீது வினை செய்யும் போது, நிறம், மணம், ருசி போன்ற அததற்குரிய உணர்வு களைத் தோற்றுவிக்கின்றது. நமது உணர்வு உறுப்புக் களின் மீது, புற உலகின் பொருள்கள் வினைபுரிவதன் விளைவே உணர்வு என்று லெனின் சுட்டிக் காட்டினார். அந்தக் காரணத்தினால்தான், நம்மைச் சுற்றியுள்ள உலகைப் பற்றிய உண்மையான, சரியான அறிவை நாம் பெறு கிறோம்.

அறியொணாமைக் கொள்கைவாதிகள், இதற்கு எதிரானதையே வலியுறுத்துவதை நினைவில் கொண்டு, நீங்கள் கேட்கலாம்: "உணர்வுகள், உலகைப் பற்றிய சரியான அறிவைக் கொடுக்கின்றன என்பதை எவ் வாறு நிரூபிக்க முடியும்?" நமது நடைமுறைச் செயல் களின் மூலமே அது நிரூபிக்கப்படுகிறது. மொத்தத்தில் பொருள்களைப் பற்றிய சரியான அறிவை உணர்வுகள் தராவிட்டால், வெளியுலகின் பொருள்களை நடை முறை யில் மனிதன் உபயோகிக்க முடியாது. ஏனெனில், அவ்வாறிருப்பின், நமக்குப் பயனுள்ளது என நமது உணர்வுகள் அறிவிக்கும் பொருள்கள் தீங்கு தருவன வாகவும், தீங்கு தருவனவாகக் கருதப்படுபவை நன்மை பயப்பனவாகவும் இருக்கக் கூடும்.

உதாரணமாக, நாம் நோக்கும் பொருளை நமது கண் படமெடுக்கிறது. அப்பொருள் நகர்ந்தால், நகரும் பொருளின் பிம்பம், விழித்திரையில் தோன்றுகிறது. அது நகராவிடில், ஓய்வுற்றிருக்கும் பொருளின் பிம்பமே கிடைக்கிறது. ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும், உலகில் நடைபெற்றுக்கொண்டிருப்பனவற்றைக் கண் பிரதிபலிக் கிறது; நகல் எடுக்கிறது; இது எல்லா உணர் உறுப்புக்

களுக்கும் பொருந்தும். இதிலிருந்து, நமது புலனுறுப்புகள் நம்பகமற்ற சாட்சியங்கள் என்று அறியொணுமைக் கொள்கை வாதிகள் உரைப்பது தவறு என்பது பெறப்படுகிறது.

ஆனுல், சில சமயங்களில் சந்தேகத்திற்கிடமின்றி நமது புலன்கள் ஏமாற்றுகின்றனவே! அது குறித்து என்ன சொல்வது? எனினும் நடைபெறுவது என்ன? தனது உணர்வுகளின் மூலமாக மட்டுமே மனிதன் இவ்வுலகைக் கண்டால், அவன் உண்மையில் பொருள்களின் வெளி அம்சங்களை மட்டுமே தெரிந்து கொள்கிருன். நமது உணர்வுகள் சில வேளைகளில் நம்மை ஏமாற்றியும் விடுகின்றன. நமது உணர்வுகளின்படி பார்த்தால், "சூரியன் உதித்து, அஸ்தமனம் ஆகிருன்." ஆனுல், இது ஒரு தோற்ற மயக்கம் என்பதை நாம் அறிவோம். அதே போன்று, ஒரு கண்ணுடிக் குவளையிலுள்ள நீர் படிகம் போன்று சுத்தமானதெனக் கருதுகிருேம். ஆனுல், உண்மையில் அதில் லட்சக்கணக்கான நுண்ணுயிர்கள் உள்ளன. எனினும், நமது புலனுறுப்புக்கள் அறிவிப்பதை, நமது சிந்தனையின் மூலம் நாம் கட்டுப்படுத்தி, சரிபார்த்து, அதனை மேலும் துல்லியமானதாக்குகிருேம். அதனுல் தான், உணர்வுகளை விட்டு அதற்கு அப்பால் செல்லாததற்காக, அறியொணுமைக் கொள்கைவாதிகளை லெனின் விமர்சித்தார். தனது சிந்தனையின் மூலமே, மனிதன் உணர்வுகளுக்கு அப்பால் செல்கிருன். அதாவது, உணர்வுகளை நம்பி, அவற்றின் அறிகுறிகளையும் பயன்படுத்தும் அதே போதில், மனிதனின் பகுத்தறிவு, நமது உணர்வுகளுக்கு எட்டாத பகுதிகளினுள்ளும், ஊடுருவிச் செல்கிறது.

பண்பியலான சிந்தனையே அறிதலின் உயர் கட்டம்

குர்ஸ்க் என்ற சோவியத் நகருக் கருகே, ரஸமான இயற்கை நிகழ்வு ஒன்றைக் கண்டனர்: திசையறி காந்த ஊசி ஒன்று வழக்கத்திற்கு மாருக அங்கு செயல்பட்டது. இந்த விவரங் களின் அடிப்படையில், அந்தப் பகுதியில் பெருமளவு இரும்புத் தாதுப் படிவங்கள் இருப்பதனுலேயே, காந்த ஊசியின் அசைவில் திரிபுகள் தோன்றுகின்றன என்று விஞ்ஞானிகள் முடிவு கட்டினர். புவிவியல் சோதனை கள் இந்த முடிவை உறுதிப்படுத்தின. இதே வழியில், குஸ்தனுய் பிராந்தியத்திலும் இரும்புத்தாது கண்டு பிடிக்கப்பட்டது. காஸக்ஸ்தானில் இந்தப் பிராந்தியத் தின் மீது விமானங்கள் பறக்கும் போதெல்லாம், காந்த ஊசி, அப்பழுக்கற்ற வடக்கு, தெற்கு நிலையிலிருந்து சற்று மாறுபட்டது. "இங்கு இரும்புத் தாது இருக்க வேண்டும்," என்று புவியலாளர்கள் கருதினர்.

நமது புலனுறுப்புக்களது குறியீடுகளின் அடிப் படையிலேயே இந்த ஊகம் செய்யப்பட்டிருந்தபோதும், நமது புலன்களால் மட்டுமே அது செய்யப்பட்டதல்ல. நமது பொறிகள், நேரடியாகப் பார்ப்பனவற்றையோ கேட்பனவற்றையோ தான் உணர முடியும். விஞ்ஞானி யும், இரும்புத் தாதுவைக் காணவில்லை; அந்த நிகழ் வின் புறப் பரப்பிலுள்ள, காந்த ஊசியின் ஒழுங்கு மீறிய நடத்தையையே கண்டார். இரும்புத் தாதுவோ, பூமியினடியில் பொதிந்து கிடக்கிறது.

இந்த உண்மைகளிலிருந்து, ஒரு சரியான முடி விற்கு வர, விஞ்ஞானிகள் பெருமளவு, விரிவான மன உழைப்பில் ஈடுபட வேண்டியிருந்தது. இவ்வாருக, சிந்தனையின்மூலமாக இயற்கையின் உட்தொடர்புகளைப் பற்றிய

முடிவுகளை அதாவது, நிகழ்வுகளின் வளர்ச்சியை ஆளும் விதிகளைப் பற்றிய முடிவுகளை அவன் பெறுகிறான். உணர்வு, புற உலகுடன் மனிதனை நேரடியாக இணைக்க, சிந்தனையோ அவ்வுலகை மறைமுகமாகப் பிரதிபலிக்கிறது. மறைமுகமாகக் கிடைக்கும் விவரங்களின் அடிப்படையில், முடிவுகள் உய்த்துணரப்படுகின்றன என்பதே இதற்குப் பொருள். உதாரணமாக, தனது உயிருக்கு ஆபத்தின்றி, ஒரு மனிதன் விண்வெளிக் கப்பலில் பயணம் செய்ய முடியுமா என்பதைக் கண்டறிய பிராணிகளை வைத்துப் பரிசோதனைகள் செய்யப்பட்டன: லெய்கா, பெல்கா, ஸ்டிரெல்கா என்ற நாய்கள் ராக்கெட்களிலும், விண்வெளிக் கப்பல்களிலும் பயணம் செய்தன. அதிலிருந்து பெற்ற விவரங்களின்படி, மனிதர்கள் அண்ட வெளியில் பறக்கும்போது பாதுகாப்புடன் இருக்கமுடியும் என்ற முடிவுகளுக்கு சோவியத் விஞ்ஞானிகள் வந்தனர். இந்த முடிவுகள் சரியானவையே என்று சோவியத் அண்டப் பயணிகள் நிரூபித்து விட்டனர்.

விவரங்களின்றி, முடிவுகளிருக்க முடியாது. அவை ஒரு விஞ்ஞானிக்கு அவர் சுவாசிக்கும் காற்றைப்போல அவ்வளவு உயிர்நிலையானவை; உணர்வுகளும் புலனுறுப்புக்களுமே அவற்றைக் கொடுக்கின்றன. ஆனால் விவரங்களைச் சேகரிப்பதுடன் ஒருவர் நிறுத்திக் கொள்ளக்கூடாது. சோவியத் இளைஞர்களுக்கு ரஷிய விஞ்ஞானியான பாவ்லோவ் எழுதிய ஒரு கடிதத்தில் பின்வருமாறு கூறினார் :

"சுவடிக்கூட உண்மை சேகரிப்பாளர்கள் ஆகாதீர்கள். அவற்றின் தோற்ற ரகசியத்தில் ஊடுருவ முயலுங்கள். அவற்றை ஆளும் விதிகளை விடாமுயற்சியுடன் தேடுங்கள்." இதனை பண்பியலான சிந்தனையின் மூலமே சாதிக்க முடியும்.

விவரங்களினின்றும் எவ்வாறு முடிவுகள் பெறப்படுகின்றன?

கல்லூரி ஆசிரியர்களின் வேலை அனுபவத்தைப் பொதுமைப்படுத்துவது அவசியமாகிறது என்று வைத்துக் கொள்ளுவோம். இதற்கு, நேர்முகமான சில்லரை அனுபவங்களை ஒன்று கூட்டி, நல்ல பலன்களை விளைவிப்பதற்காக எவ்வாறு அவர்களது பணி இருக்கவேண்டும் என்ற பொதுவான முடிவை வரையறுக்க வேண்டும். இந்த நோக்கத்திற்கு முதற்கண் ஒருவருக்கு ஆசிரியர்களின் பணியைப் பற்றித் தெரிந்திருக்க வேண்டும்.

பிற எல்லாக் காரியங்களையும் போன்றே, இங்கும் இன்றியமையாத முக்கியமான அம்சங்களும் முக்கியமற்ற அவசியமில்லாத அம்சங்களும் உள்ளன. எவ்வாறு ஆசிரியர்கள் தங்களது விரிவுரைகளைத் தயாரிக்கின்றனர் என்பதும், அவற்றைச் சுவையானதாக்க அவர்கள் என்ன செய்கின்றனர் என்பதும் இன்றியமையாத அம்சங்களாகும், ஆனால் அவர்கள் இதனை பகலிலா, இரவிலா, எந்த நேரத்தில் செய்கின்றனர் என்பது அவசியமற்றது; அது குறிப்பிட்ட தனி நபரின் சூழ்நிலைகளைப் பொறுத்தது. இங்கு பொதுமைப் படுத்தப்பட வேண்டியது இந்தத் தனி நபர் விசேஷத் தன்மைகளை அல்ல; ஆனால் இன்றியமையாத பிரதான அம்சங்களையே; போதனையின் தரம் அவற்றைச் சார்ந்தே உள்ளது அவசியமற்றனவற்றிலிருந்து சிந்தனை விலகிச் செல்லுகிறது. அதாவது அவற்றை சிந்தனை கவனிப்பதில்லை.

அறிந்து கொண்ட நிகழ்வுகளிலிருந்து இன்றியமையாத கூறுகளை மட்டுமே தனிப்படுத்துவது சிந்தனையின் விசேஷ அம்சமாகும். இப்படித்தான் கோட்பாடு

கள் உருவாகின்றன. இதிலிருந்து சிந்தனையில், பிரித்தெடுத்தல் பொதுமைப்பாட்டுடன் நெருக்கமாக இணைந்துள்ளது என்பது தெளிவு.

ஆக, பண்பியல்பு என்பது ஆராயப்படும் நிகழ்வுகளிலிருந்து அவசியமற்ற அம்சங்களை விலக்கி அவற்றின் இன்றியமையாத அம்சங்களையும் சிறப்பியல்புகளையும் சிந்தனையில் தனிமைப் படுத்தும் முறையேயாகும். முக்கியமானவற்றையும் சிறப்பானவற்றையும் மட்டுமே ஒருமுகப்பட்ட நிலையில் கொண்டுள்ள பொதுமைப்பாட்டினை இதனின்றும் பெறுகிறோம்.

ஒவ்வொரு முடிவும் ஏன் பொதுத்தன்மை பெற்றுள்ளது, ஒரு சிலவற்றை மட்டுமன்றி நிகழ்வுத் தொகுதி முழுவதையுமே பொறுத்ததாக உள்ளது என்பது இப்பொழுது தெளிவாகும். சிந்தனையின் பொதுமைப்படுத்தும் திறன் காரணமாகவே பொது முடிவுகள் கிடைக்கின்றன. இதற்குக் காரணம், விவரங்களிலிருந்து பெற்ற பிரதான இன்றியமையாத அம்சங்களை சிந்தனை ஒரு முழுமையானதாக்குகிறது; கோட்பாடுகளையும், பொதுக் கருத்துக்களையும், பிம்பங்களையும் தோற்றுவிக்கிறது; ஒரு பெரும் வகையைச் சேர்ந்த நிகழ்வுகளின் பொதுவான முக்கியத்துவம் பற்றிய முடிவுகளை வரையறுக்கிறது. இச்செயலை, விசேஷ தர்க்கவியல் முறையான தூண்டுதல், ஊகித்தல் என்பனவற்றின் மூலம், சிந்தனை, செய்து முடிக்கிறது. தூண்டுதல், ஊகித்தல் என்றால் என்ன?

தூண்டுதல் முடிவுகள், குறிப்பிட்ட உண்மைகளை ஆராய்வதையே அடிப்படையாகக் கொண்டுள்ளன. லெய்க்கா என்ற நாய் ராக்கெட்டில் பறந்து திரும்பியபொழுது, வான மண்டலத்தின் உயர் அடுக்குகளிலிருந்து ஒரு உயிர்ப் பிராணி பூமிக்குப் பத்திரமாக வந்து சேர முடியும் என்ற விஞ்ஞான முக்கியத்துவ

முள்ள உண்மை கிடைத்தது. இதே பரிசோதனையை சோவியத் விஞ்ஞானிகள் முயல்களை வைத்துச் செய்த போது, மற்றொரு உண்மையும் கிடைத்தது. இப்படிப் பட்ட பல உண்மைகளை ஒன்று சேர்த்து, விஞ்ஞானி கள் கீழ்க்கண்ட முடிவிற்கு வந்தனர்: "மனிதன் உட் பட, எந்த உயிர்ப் பிராணியும், அண்டவெளிப் பயணச் சூழ்நிலைகளைத் தாங்கிக் கொள்ள முடியும்." தனிப்பட்ட உண்மைகளைப் பொதுமைப் படுத்தியதன் மூலமாக இந்த முடிவு கிட்டியது. இந்த முடிவு இன்றி, சோவியத் விண்வெளியாளர்களின் பயணங்கள் நடை பெற்றிருக்க முடியாது.

இவ்வாறாக, தனிப்பட்ட அல்லது அரைத் தீர்ப்புகளி லிருந்து, ஒரு பொதுவான தீர்ப்பைப் பெறுவதையே தூண்டுதல் அல்லது தூண்டுதல் முடிவு என்று கூறுகிறோம்.

இதற்கு நேர்மாறான வழியிலும், ஒரு முடிவை அடைய முடியும். உதாரணமாக, காலாவதியான உற் பத்தி சாதனத்திற்கு, மிகக்குறைந்த பொருளாதாரத் திறனே உண்டு என்பது நமக்குத் தெரியும். ஒரு குறிப் பிட்ட தொழிற் கூடத்தில் அப்படிப்பட்ட காலாவதி யான உற்பத்தி சாதனம் பொறுத்தப்பட்டுள்ளதாக வைத்துக் கொள்வோம். இதிலிருந்து, அத்தொழிற் கூடத்தில் பொறுத்தப்பட்டுள்ள உற்பத்தி சாதனத் திற்கு குறைந்த பொருளாதாரத் திறனே உண்டு என்ற முடிவிற்கு நாம் வர முடியும். இங்கு, நமது சிந்தனை பொது முடிவு ஒன்றிலிருந்து, குறிப்பிட்ட ஒன்றினுக்கு வந்துள்ளது.

காலாவாதியான எல்லாச் சாதனமுமே குறைந்த பொருளாதாரத்திறன் கொண்டவை என்று கடந்த கால அனுபவம் நமக்குப் போதித்துள்ளது. ஆகவே, இந்த குறிப்பிட்ட சாதனமும் இதற்கு விதிவிலக்கு அல்ல

என்ற முடிவிற்கு நாம் வருகிறோம். ஒரு வகையைச் சேர்ந்த நிகழ்வுகள் அனைத்தையும் பற்றிய பொதுவான அறிவின் அடிப்படையிலேயே அதன் குறிப்பிட்ட ஒரு பகுதியைப் பற்றிய முடிவிற்கு நாம் வருகிறோம். இது ஊக முடிவு என்றழைக்கப் படுகிறது. ஊக முடிவு அல்லது ஊகம் என்பது, நமது சிந்தனை பொதுவான தீர்ப்பிலிருந்து அதைவிடக் குறைவான பொதுத் தன்மையுடைய ஒன்றிற்கோ அல்லது தனிப்பட்ட ஒன்றிற்கோ செல்லுதலே ஆகும்.

பண்பியலான சிந்தனையின் தன்மை பற்றி விளக்குவது இப்பொழுது எளிதாகிறது. அகற்றல், திரும்பப் பெறுதல் என்று பொருள்படும் இலத்தீன் வார்த்தையிலிருந்து தோன்றிய பதமே "பண்பியல்பு" என்பது. பண்பியலான சிந்தனை பருப் பொருள்களிலிருந்து விலகுகிறது அல்லது தனித்து நிற்கிறது.

இங்கு ஒரு புதிய முக்கியமான கேள்வி எழுகிறது: அதிக அறிவைக் கொடுப்பது எது - சிந்தனையா அல்லது உணர்வா? மேற்சொன்ன உதாரணத்தின் மூலம் இதற்கு விடையளிக்க முடியும். கல்லூரியின் வேலையைப் பற்றி யாருக்கு அதிகமாகத் தெரியும் :- ஒரு வகுப்பிற்கு மட்டுமே சென்று, ஒரே ஒரு விரிவுரையின் சிறந்த அம்சங்களையும் பலவீன அம்சங்களையும் தெரிந்து கொண்ட ஒருவருக்கா அல்லது ஒரு ஆண்டு முழுவதும் கல்லூரி ஆசிரியர்கள் வேலையைப் பற்றியும் அவர்களது வேலையின் இன்றியமையாத முக்கியத்துவம் பற்றிய அனைத்தையும் அறிந்து அதனைப் பொதுமைப் படுத்திய ஒருவருக்கா? வேலையின் சாராம்சத்தை யார் ஆழ்ந்து அலசிப் பார்த்திருக்கிறாரோ, அவருக்குத்தான் அதிகமாகத் தெரியும் என்று கூறத் தேவையில்லை. ஆனால் சாராம்சம் என்பது நிகழ்வுகளின்

புறப்பரப்பில் கிடப்பதல்ல என்பதை நாம் அறிவோம். அறிதலுக்கு அளவு கடந்த உழைப்பு தேவைப் படுகிறது.

முதலில் விவரங்களனைத்தும் கவனமாகச் சோதிக் கப்பட வேண்டும். தாறுமாருக அவற்றைச் சேகரித்ததி லிருந்து அவற்றைச் சோதித்திராவிட்டால் அவற்றின் அடிப்படையில் சாராம்சத்தை நாம் அறிய முடியாது. விவரங்கள் 'பிடிவாதமான' வஸ்துக்கள் என்றும் அவற்றை மிகக் கவனமாகத் தேர்ந்தெடுத்து பூரண மாக ஆராய்ந்தால் மட்டுமே அவை நிரூபணத்தை அளிக் கும் என்றும் லெனின் சதா வலியுறுத்தி வந்தார். மாருக, தன்னிச்சையாக விவரங்களை எடுத்தால் அவை அவர் கூறுவது போன்று "வெறும் விளையாட்டுப் பொருளாகவோ அல்லது அதைவிட மோசமானதா கவோ இருக்கும்."⊗

ஆகவே நிகழ்வுகளின் சாராம்சம், சேகரிக்கப்பட்ட விவரங் களின் அடிப்படையிலேயே தோன்றுகிறது என்ற முடிவிற்கு நாம் வந்துள்ளோம். அவற்றைக் கவனமாகவும் போது மான அளவிலும் சரி பார்க்க வேண்டும். அவற்றிலி ருந்து பெறும் முடிவுகள் குறித்து நன்கு சிந்திக்க வேண்டும்.

உணர் அறிவு பற்றியும், பகுத்தறிவு பற்றியும் இதுவரை நாம் கூறியவற்றிலிருந்து, அவற்றிடையே ஒரு ஐக்கியம் உள்ளது என்றும் அவை ஒன்றுக் கொன்று ஈடு செய்கின்றது என்றும் தெளிவாகிறது.

---

⊗ (லெனின் தொகுப்பு நூல்கள், தொகுதி 23, பக்கம் 216.)

**பகுத்தறிவிலிருந்து உணர் அறிவைப் பிரிப்பவர்கள்**

உணர்வுகள் மனத்திற்குத் தகுந்த விபரங்களையும் உண்மைகளையும் கொடுக்கின்றன. அவற்றின் அடிப்படையில் மனம் முடிவுகளை வரையறுக்கிறது; பொதுமைப்பாடுகளைத் தோற்றுவிக்கிறது. உணர் உறுப்புக்களின்றி மூளைக்கு — மனதிற்கு — எந்த வித வேலையும் இருக்க முடியாது. அதே போதில் மனத்தின் கட்டுப்படுத்தும் வேலையின்றி புலனறிதலும் இருக்க முடியாது. ஆகவே அறிதல் எனும் ஒரே தொடர் நிகழ்ச்சியின் இரு கட்டங்களே உணர் அறிதலும், பகுத்தறிதலும் ஆகும்; இது, நடைமுறை செயற்பாட்டை அடிப்படையாகக் கொண்டது. ஒன்றிலிருந்து மற்றொன்றை வேறுபடுத்தக் கூடாது. எனினும் தத்துவ இயலாளர்கள் அதைச் செய்ய பல முறை முயன்றனர். சில தத்துவ இயலாளர்கள், பகுத்தறிவின் மூலமாக மட்டுமே இவ்வுலகைப் பற்றிய அறிவை மனிதன் பெறுகிறான் என்றனர். அதனாலேயே இவர்கள் பகுத்தறிவு வாதிகள் என அழைக்கப்பட்டனர்.

பகுத்தறிவு வாதம் என்பது, புலனுணர்வு வாதம், அல்லது அனுபவ வாதம் என்று சொல்லப்படுவதற்கு முரணானது. உணர்ச்சி என்று பொருள்படும், 'சென்ஸுஸ்' என்ற லத்தீன் சொல்லிலிருந்து புலனுணர்வு வாதத்தின் ஆங்கிலப் பதமான 'சென்ஸுவலிசம்' என்பதும்; அனுபவம் என்று பொருள்படும் 'எம்பிரா' என்ற கிரேக்கப் பதத்திலிருந்து, அனுபவவாதம் என்பதை 'எம்பிரிஸிஸம்' என்ற சொல்லும் தோன்றின. பகுத்தறிவுவாதிகளுக்கு மாறாக, இந்தப் போக்கினைக் கொண்ட தத்துவ இயலாளர்கள், மனித அறிவு அனைத்தும் புலனுறுப்புக்களின் மூலமும் உணர் அனுபவத்

தின் மூலமும் மட்டுமே கிடைக்கிறது என்றும் உணர்ச்சிகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் பகுத்தறிவு எதையுமே புதிதாக சாதிக்கவில்லை என்றும் கருதுகின்றனர்.

ஆங்கில தத்துவ இயலாளரான ஜான்லாக்கும் (1632-1704) பிரெஞ்சுத்தத்துவ இயலாளர்களான எட்டியனே கோண்டிலாக் (1715-1780), கிளாடி ஹெல்விடியஸ் ஆகியோர் புலனுணர்வு வாதத் தத்துவத்தின் மிக முக்கியமான பிரச்சாரகர்கள். அவர்கள் முற்போக்கான தத்துவ இயலாளர்கள் - பொருள் முதல் வாதிகள் தான்; எனினும், அவர்களது அறிதல் தத்துவம் ஒருதலைப் பட்சமானது; அவர்கள் அறிவின் ஒரே மூல த்தானம் புலனுணர்வு அனுபவம் தான் என்று கருதினர். தத்துவார்த்தச் சிந்தனையின் பங்கை குறைத்து மதிப்பிட்டனர்.

இங்கு கூறப்பட்டுள்ள, பொருள் முதல் வாத அனுபவ வாதத்தைக் கருத்து முதல்வாத அனுபவாதத்திலிருந்து வேறுபடுத்துவது அவசியம். கருத்து முதல்வாத அனுபவவாதத்தின் பிரசாரகராக, தன்வயக் கருத்து முதல்வாதியான பெர்க்லி திகழ்ந்தார். அவரும், எல்லா அறிவும், புலனுணர்வு அறிவையே சார்ந்துள்ளதாகக் கருதினார். ஆனால், "அனுபவம்" பற்றிய அவரது கருத்து, பொருள் முதல்வாதிகளின் கருத்திலிருந்தும் மாறுபட்டது. ஒரு பொருளை உணர்தலையும், அப்பொருளையும் அவர் ஒன்றென்றே கருதினார். வஸ்துக்கள் புறவய நிலையில் இருக்கவில்லை யென்றும், நமது "அனுபவத்திலேயே" அவை உள்ளன என்பதும்தான்- அதாவது, மக்கள் அவற்றை உணரும்போதுதான் அவை உள்ளன என்பதும்தான், - அதன் பொருள்.

பொருள் முதல்வாத அனுபவவாதமும் (அல்லது புலனுணர்வு வாதமும்) கூட, அறிதல் பற்றிய சரியான

கருத்தைக் கொடுக்கவில்லை. இப்படிப்பட்ட கருத்துக் களை மேற்கொள்வது, நம்மை, பகுத்தறிவு, பொதுமைப் பாடு, முடிவுகள், இவற்றின் பங்கை மறுத்து புலனு றுப்புக்கள் அறிவுறுத்துதலையும், ''சொந்த அனுபவத் தையும்'' மட்டுமே அங்கீகரிப்பதற்கு இட்டுச் செல்லும்.

ஆகவே, அறிதலில் பகுத்தறிவு, புலன்கள் ஆகியவற்றின் பங்கு பற்றி, பகுத்தறிவு வாதிகளும், அனுபவவாதிகளும் ஒரு தரப்பான தீர்வையே அளிக்கின்றனர் என்பது தெளிவா கிறது.

புலனுணர்வுகள் அளிக்கும் விவரங்களையும், சொந்த அனுபவத்தையும் ஒதுக்கி விடுவதே பகுத் தறிவுவாதிகளிடமுள்ள குறைபாடு. எனினும், உண் மையில், அனுபவ விபரங்களினுலும், வஸ்துக்கள் நிகழ் வுகள் ஆகியவற்றை நடைமுறையில் உணர்தலின் மூலமாகப் பெறும் விபரங்களினுலும், பகுத்தறிவு செழுமைப்படுத்தப்பட்டால்தான் புதிய அறிவு கிடைக் கிறது. தான் ஆற்றவேண்டிய பணியைப் பற்றிய வளமான, சொந்த அனுபவம் உள்ள ஒரு தலைவர்தான் பிரச்சினைகளின் சாரத்தினுள் ஆழ்ந்து உட்புக முடியும் என்பதே இதன் பொருள்.

அனுபவவாதிகளைப் போன்றே, சொந்த அனுபவம் மட்டுமே - புலனுறுப்புகளின் மூலம் உடனடியாக யதார்த்தத்தை உணர்தல் மட்டுமே - புற உலகைப் பற்றிய அறிவை நமக்குக் கொடுக்கக் கூடியது என்று கூறுவோரும் தவறு செய்பவர்களே. சொந்த அனு பவத்தை மட்டுமே அங்கீகரித்து, நமது சிந்தனையின் மூலம் கிடைக்கும் பொதுவான அறிவை மறுப்பதற்கு நடைமுறையில் என்ன பொருள்? இதன் பொருள், தான் சொந்தமாகக் கண்ட, உணர்ந்த, ஆராய்ந்த உண்மை களை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு ஒருவரது

கண்ணேட்டத்தைச் செயற்கையாகக் குறுக்கிக் கொள்வது, பரந்த சாத்தியக் கூறுகளைப் பாராதிருப்பது, என்பது தான். என்ருலும், ஒரு மனிதன் எவ்வளவு தான் திறனுள்ளவனுயினும், அவனது சொந்த அனுபவம் எவ்வளவு தான் அளப்பரிய முக்கியத்துவம் வாய்ந்ததெனினும், அது (அவனது சொந்த அனுபவம்-மொ-ர்) பெருங் கடலில் ஒரு நீர்த்துளியே.

ஆகவே, அறிவின் ஒரு கட்டத்தின் பங்கை மட்டும் மிகைப்படுத்தி, மற்றதன் பங்கை மறுப்பது கூடாது என்பது தெளிவு. உணர் அறிவும், பகுத்தறிவும், இரண்டுமே அறிதலுக்கு மிக முக்கியமானது ஒன்று இன்றி, மற்றது இருக்க முடியாது. இதிலிருந்து பெறப்படும் முக்கியமான முடிவு என்னவெனில், தத்துவத்திற்கும், நடைமுறைக்கும் ஒரு ஐக்கியம் இருக்க வேண்டும் என்பதே.

**நடைமுறையே அறிதலின் ஊக்கு விசையும் அடிப்படையுமாகும்; தத்துவம் நடைமுறை இவற்றின் ஐக்கியம்.**

உணர் அறிவும், பகுத்தறிவும் நடைமுறைச் செயல்களின் மூலம் கிடைக்கின்றன. மக்கள் எதுவுமே செய்யாமலிருந்தால், அவர்களுக்கு எவ்வித அறிவும் இருக்காது என்பதுடன், அவர்கள் இருப்பதே முடியாததாகி விடும். பிராணி உலகினின்றும், மக்களினம் தோன்றியபோது, இயற்கையின் வளர்ச்சியைப் பற்றிய எந்த தத்துவ அறிவும் அவர்களுக்குக் கிடையாது; ஆனல், அவர்கள் ஏற்கனவே உழைப்பில் ஈடுபட்டிருந்தனர்: அவர்கள் உணவு தேடிப் பெற்றனர். தங்குமிடங்களைக் கட்டினர்; ஆடைகளைத் தயாரிக்கக் கற்றனர். மனித சமூகத்தின் அடிப்படை, உழைப்பும், நடைமுறைச் செயலுமே என

வலியுறுத்தினர் எங்கெல்ஸ். தினசரி வாழ்வின் நடைமுறையில், இயற்கை சக்திகளுக்கெதிராகப் போராடுவதற்குத் தேவையான அனைத்தையும் மனிதன் கற்றுக் கொண்டான்.

நமது அன்றாட அனுபவத்தால், இது உறுதி செய்யப்படுகிறது. எந்தவித அறிவுமின்றித்தான் மனிதன் இவ்வுலகில் தோன்றுகின்றான். தனது நடைமுறைச் செயல்களின்போது தன்னைச் சுற்றியுள்ள நிகழ்வுகளுடன் தொடர்பு கொள்ளும்போது, அவன் அறிவைப் பெறுகிறான். தீயை எட்டிப்பற்ற தனது கரத்தை நீட்டும் குழந்தை, அதன் தன்மையைப் பற்றி எதுவும் அறியாது. ஆனால், விரைவில் தனது நடவடிக்கைகளின் மூலம், தீயின் தன்மைகளைப் பற்றித் தெரிந்து கொண்ட பின்னர், தீயைத் தீண்டும் முயற்சியில் அது ஈடுபடுவதில்லை. அது ஓரளவு அறிவைப் பெற்றுவிட்டது.

இதிலிருந்து, மக்களின் சொந்த அனுபவம் மட்டுமே, நடைமுறைச் செயல்களின் பாற்படும் என்று பொருள் கொள்ளக் கூடாது. நடைமுறையில் நாம் நமது அனுபவத்தை மட்டுமன்றி, பிறரது அனுபவத்தையும் பயன்படுத்துகிறோம்; அதாவது, மனிதகுலம் முழுவதன் சமூக அனுபவத்தையும் பயன்படுத்துகிறோம். அதனால்தான், சமூக நடைமுறை பற்றிப் பேசுகிறது மார்க்சீசம். பருப்பொருள் உலகின் மீது வினை புரிந்து, அதனை மாற்றும் மக்களின் எல்லாச் செயல் முறைகளும் - உற்பத்தி, வர்க்கப் போராட்டம், சோஷலிச, கம்யூனிச நிர்மாணம், விஞ்ஞான ஆராய்ச்சி போன்ற அனைத்தும் – இதில் அடங்கும். இறுதியாகப் பார்க்கப் போனால், எல்லா அறிவும், மனித குலத்தின் சமூக நடைமுறையிலிருந்து பெறப்பட்டதே.

விஞ்ஞானத்தின் வரலாற்றிலிருந்து இதனை நன்கு தெரிந்து கொள்ளலாம்.

உதாரணமாக க்ஷேத்திர கணிதம் எவ்வாறு தோன்றிற்று? பழங்காலத்திலிருந்தே, வயல்களைப் பயிரிடுவதிலோ, வீடுகளைக் கட்டுவதிலோ ஈடுபட்ட மக்கள், பல்வேறு உருவங்களையும் அளவுகளையும் கொண்ட நிலப்பகுதிகளை அளப்பது அவசியம் எனக் கண்டனர். படிப்படியாக, எந்தக் குறிப்பிட்ட உருவமுடைய (உதாரணமாக, முக்கோணம், நாற்கரம் போன்றவை) நிலப்பகுதிக்கும் பொருந்தும் சில பொது அளவுமுறைகள் உண்டென்பதை அவர்கள் கண்டார்கள். இவ்வாறு, நடைமுறையைப் பொதுமைப்படுத்தி எல்லா விஞ்ஞானமும் தோன்றிற்று. குறிப்பிட்ட சம்பவங்களும் நிகழ்வுகளும் உலகில் ஏற்படுகின்றன. அவற்றை ஆராய்ந்து பின்னர் பொதுமைப் படுத்துவன் மூலம் தத்துவமும், விஞ்ஞானமும் கிடைக்கின்றன. இவ்வாறு, விஞ்ஞான அறிவு - தத்துவம், – அறிதலின் அடிப்படையான நடை முறையிலிருந்தே தோன்றுகிறது.

இங்கு, கீழ்க்கண்ட கேள்வி எழலாம்: இதற்கு முன்னர் கூறியனவற்றிலிருந்து, மனிதன், வெளியுலகின் ஆதிக்கத்திற்கு பூரணமாக உட்பட்ட, ஒரு செயல் திறனற்றவன் தான் என்று பொருளில்லையா? நிச்சயமாக இல்லை. மார்க்ஸிற்கு முந்திய காலத்திய, அப்பாலைத்தத்துவப் பொருள் முதல் வாதிகள், நடைமுறை என்பதை மனிதனின் மீது செயல்படும் வெளியுலக ஆதிக்கத்தின் விளைவுதான் என்று ஒருதலைப் பட்சமாகக் கருதினர். ஆனால், மார்க்ஸின் நடைமுறை பற்றிய கருத்தோ, மிக ஆழமானது; மனிதனின் மீது வெளியுலகின் வினையையும், வெளியுலகின் மீது மனிதனது வினையையும் - இரண்டையும் அது தன்னகத்தே கொண்டது

தொழிற்சாலைகளையும், வீடுகளையும் கட்டும்போதும் - நிலங்களைப் பண்படுத்தும் போதும், தாங்கள் வாழும் சுற்றுப்புறத்தைத் தங்களது உழைப்பின் மூலம் மாற்றுகின்றனர் மக்கள். அவர்களது பொருளாயதச் செயல் முறைகள், சுற்றியுள்ள பருப்பொருள் யதார்த்தத்தில் தங்களது சுவடுகளைப் பொறிக்கின்றன. மனிதனின் சமூக, இயற்கைச் சூழல் என்பது, பல பல தலைமுறையினரின் நடைமுறைச் செயல்களின் விளைவேயாகும். மக்கள், கட்சிகள், வர்க்கங்கள் ஆகியவற்றின் புரட்சிகர நடவடிக்கையைப் பொறுத்த மட்டில், அது சமூக உறவு, சமூக வாழ்வு ஆகிய அம்சங்களை அடிப்படையிலேயே மாற்றியமைக்கிறது. அதனால்தான், மக்களது வாழ்வில், சமூக நடைமுறையின் தீர்மானமான பங்கு பற்றி, மார்க்ஸ் கூறினார். மனிதனின் அறிதற் செயலிலும், நடைமுறை மிகப் பெரும் பங்கு வகிக்கிறது. மனிதனின் உழைப்புச் செயல்முறையின் விளைவாகவே மொழியும், விஞ்ஞானத் தத்துவங்களும் தோன்றின என்பதை நினைவில் கொள்வதே போதுமானது.

நடைமுறை என்பது அறிதலின் அடிப்படை மட்டுமன்றி. அறிதலிற்கான உந்து விசையும் ஆகும். உதாரணமாக, ஒரு குறிப்பிட்ட வகை மண்ணில் எவ்வாறு பயிர் செய்வது என்ற பிரச்சினையை விவசாயயியலாளர்கள் தீர்க்க வேண்டியிருந்தால், நடைமுறையில் மேற்கொள்ளப்படும் பணி, விவசாயயியல் வளர்ச்சியடைவதற்கான சக்தி வாய்ந்த தூண்டுகோலாக அமைகிறது. நடைமுறைப் பணிகளைத் தீர்ப்பதற்கு, புதிய பொதுமைகள் விஞ்ஞானத்திற்கு மிகவும் அவசியமானவை. புதிய பொதுமைப் பாடுகளின் மூலம்தான் அவை வளம்பெற்று, வளர்ச்சியுமடைகின்றன. வாழ்விலிருந்தும், நடைமுறையிலிருந்தும் விஞ்ஞானம் விலகினால்,

இந்த சக்தி வாய்ந்த உந்து விசையை அது இழந்து விடுகிறது. தத்துவார்த்த அறிவை விட நடைமுறை உயர்ந்தது என்று இந்தப் பொருளில்தான் லெனின் கூறினார். வாழ்க்கையின், நடைமுறையின் கண்ணோட்டமே அறிவுத் தத்துவத்திற்கு முதன்மையான, அடிப்படையான கண்ணோட்டமாக இருக்க வேண்டும் என்று அவர் போதித்தார்.

மக்களின் உழைப்பு அல்லது புரட்சிகரமான நடவடிக்கையில், தத்துவத்தின் – விஞ்ஞானத்தின் முக்கியத்துவத்தை இது குறைத்து விடவில்லையா? அறிதலுக்கு, நடைமுறையே பிரதான முக்கியத்துவம்வாய்ந்ததெனக் கூறுவதன் மூலம், மார்க்சிஸ்ட் - லெனினிஸ்டுகள் தத்துவத்தின் பங்கை மறுக்கின்றனர் என்று மார்க்சீசத்தின் எதிரிகள் - திருத்தல் வாதிகள் - நிரூபிக்க முயலுகின்றனர் ஆனால் இது அவர்களது வெறும் கற்பனையே. தத்துவத்திற்கு என்றுமே கம்யூனிஸ்டுக் கட்சி அளவு கடந்த முக்கியத்துவம் அளித்துள்ளது. நடைமுறைப் பாதையில், தத்துவம் ஒளி காட்டுகிறது என்று லெனின் போதித்தார்.

''நடைமுறைப் பாதையில் தத்துவம் தொடர்ந்து ஒளி காட்ட வேண்டும்; வெற்றிகரமான கம்யூனிச நிர்மாணத்தைத் தடைப் படுத்தும் இன்னல்களையும் இடையூறுகளையும் எடுத்துக் காட்ட அது உதவ வேண்டும்,''⊗ என்று சோவியத் கம்யூனிஸ்டு கட்சியின் திட்டம் கூறுகிறது.

கம்யூனிச நிர்மாணத்தின் தற்போதய கட்டத்தில், நடைமுறைப் பிரச்சினைகளைத் தீர்ப்பதென்பது, அதே நேரத்தில், தத்துவப் பிரச்சினைகளையும் தீர்ப்பதுதான்

⊗ [கம்யூனிஸப் பாதை; பக்கம் 565]

ஆகும். அதாவது கட்சியின் முன்னும், நாட்டின் முன்னும் உள்ள நடைமுறைப் பணிகளை ஆற்றுவதிலிருந்து, தத்துவார்த்த பொதுமைப்பாடுகள் தொடர வேண்டும் என்பதுதான் இதன் பொருள். நடைமுறையிலிருந்து தனித்து மார்க்சிஸ்ட் - லெனினிஸ்ட் தத்துவம் வளர்ச்சியடைய முடியாது.

ஆகவே, நடைமுறையின் முக்கியத்துவத்தை 'மட்டுமோ', தத்துவத்தின் முக்கியத்துவத்தை 'மட்டுமோ' அங்கீகரிப்பது, பொருள் முதல்வாத முரண் தர்க்கத்திற்குப் புறம்பானது ஆகும்.

தத்துவம், நடைமுறை ஆகியவற்றிற்கு ஒரு முரணில்ல ஐக்கியம் உண்டு. ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரிப்பது முடியாதது. நடைமுறையிலிருந்து பிறப்பதுதான் தத்துவம். ஆனால், அதே போதில், தத்துவம் நடைமுறைக்கு உதவி அதனைச் செழுமைப் படுத்துகிறது. நடைமுறையின்றித் தத்துவம் இருக்க முடியாது. ஆனால், புரட்சிகரமான தத்துவமின்றி, புரட்சிகரமான நடைமுறை இருக்க முடியாது. நடைமுறையின்றி, தத்துவம் உயிரற்றது; தத்துவார்த்த வரையறைகள் வெறும் அர்த்தமற்ற சுமைகளே. ஆனால், விஞ்ஞான தத்துவமின்றி, நடைமுறை குருடாகவும், குறிக்கோளற்றதாகவும் ஆகிவிடும்.

ஆக தத்துவம், நடைமுறை ஆகியவற்றின் பிரித்தெடுக்க முடியாத ஐக்கியம், மார்க்சிஸ்ட் அறிவுத் தத்துவத்தின் மிக முக்கியமான முடிவு ஆகும்.

இந்த ஐக்கியத்தில் முக்கியமான தலைமைப் பங்கு வகிப்பது எது? நாம் ஏற்கனவே கண்டது போல், நடைமுறைதான். ஆனால், நாம் தத்துவத்தின் சிறப்பைக் குறைத்து மதிப்பிட்டு விடுகிறோம் என்பது இதன்

பொருளல்ல. மாருக, அதன் பங்கு அசாதாரணமான அளவு பெரிது. பார்க்கப் போனுல், மனிதன் இவ்வுலகை நன்கறிந்து கொள்ள வேண்டுமென்று கருதுவது வெறும் கேளிக்கைக்காக அல்ல; ஆனுல், இன்றியமை யாத நடைமுறை முடிவுகளைப் பெறவேண்டுமென்பதற் காகவே. உலகை மாற்றியமைக்கும் போக்கிலேயே இதனை அடைய முடியும். ஆகவே, இவ்வுலகை மாற்றி யமைக்க உதவும் ஒரு தத்துவமே பலனுள்ளது; தத்து வம் என்றழைக்கத் தகுதியானது. இந்த மாற்றமே, மக் களின் நடைமுறைச் செயல்கள். ஆக, தத்துவம் எப் பொழுதும் நடைமுறைக்கு உதவ வேண்டும்; இவ்வாறு கூறுவது அதன் ‘மதிப்பை’ எந்த அளவிலும்குறைத்து விடுவதாகாது.

வாழ்வின் சூழலிலிருந்து ஒதுக்கி, மார்க்சீய லெனி னியத்தைக் காணக் கூடாது. சோஷலிசம் கட்டப்படும் போது, ‘‘தத்துவம் நடைமுறையாகி, அதனை ஊக்கி, சரி செய்து, திருத்தும்’’ காலம் ஒன்று வரும் என்று லெனின் எழுதினுர். ⊗ வாழ்வுடன், மார்க்சீய லெனி னியம் கொண்டிருக்கும் உடைக்க முடியாத இணைப் பிலும், யதார்த்தத்தை முறையாக பகுப்பாய்வு செய்வத ஞல் அது தன்னையே சதா வளப்படுத்திக் கொள்வதி லும்தான், அதன் அளப்பரிய சாதகங்கள் உள்ளன.

**அறியற்பாலதே உலகம்**

முன்னர் கூறியவற்றிலிருந்து, இவ்வுலகின் நிகழ்ச்சிகளை நமது அறிவு உண்மையாகப் பிரதி பலிக்கின்றதென்றும், இவ்வுல கில் என்ன நடைபெறுகிறதென்பதை நமக்குச் சரிவர அறிவிக்கின்றதென்றும் தெளிவாகத் தெரிகிறது.

⊗ லெனின் தொகுப்பு நூல்கள்; தொகுதி 25; பக் 374-75

ஆனால், உங்களைச் சுற்றி நீங்கள் கவனித்தால், எத்தனை எத்தனை விஷயங்கள் மூடுமந்திரங்களான - தாமேயான – வஸ்துக்களாக உள்ளன என்பது தெரிய வரும். இயற்கை எனும் நூலை முழுமையாகப் படிக்க முடியாது. இதுதான், அறியொணாமைக் கொள்கை வாதிகளின் பரந்த 'வாதங்களில்' ஒன்று. இதுவரை விஞ்ஞானம் செய்ய முடியாத ஒன்றை அவர்கள் தேடிக் கண்டு பிடித்து ஏதோ ஒரு ஆனந்த பரவசம் அடைந் ததுபோல் கூறுகின்றனர்: 'இதோ பாருங்கள், விஞ்ஞா னத்தில் எத்தனை சூன்யப் புள்ளிகள் உள்ளன; அப்படி யிருந்தும் அதன் வன்மை பற்றிப் பேசுகிறீர்களே!'' ஆனால், ஒவ்வொரு அடியிலும், இந்தக் கருத்தை நடை முறை மறுதலிக்கிறது.

நடைமுறைப் போக்கில், இயற்கையின் ஒவ்வொரு 'ரகசியமும்' அம்பலமாகிக் கொண்டே வருகிறது. நேற்று 'தானேயான' வஸ்துவாகவிருந்தது, இன்று அறியப் பட்டு மனிதனின் சேவைக்குப் பயன்படுத்தப் படுகிறது.

மனித அறிதிறனின் வெற்றிக்குச் சான்ருக, எங்கெல்ஸ் ஒரு நிகழ்வை நினைவு கூறுகிருர். அலிஸா ரின் என்ற ஒரு சாயப் பொருள் மனிதனுக்கு ஒரு செடி யின் வேரிலிருந்து கிடைத்தது; ஆனால், அதே பொருளை, அவன் கரித்தாரிலிருந்து தயாரிக்கக் கற்று விட்டான். இந்த 'தானே யான வஸ்து', மனித நடை முறையின் விளைவாக, 'நமக்கான வஸ்து'வாகி விட் டது; அதாவது, அது அறியப்பட்டுவிட்டது, என்று எங்கெல்ஸ் கூறினுர்.

அப்படிப்பட்ட செயற்கை கூட்டுப் பொருள்களை நூறு, ஆயிரக் கணக்கில் ரசாயனம் உற்பத்தி செய் கிறது என்னும்போது. மனித நடைமுறையின் சக்தி

தான் எத்துணை பெரிது! எல்லா அறிவுத் துறைகளிலும் இதுவேதான் நடைபெற்றுக் கொண்டுள்ளது. இயற்கைப் புத்தகம், படிப்படியாக, பக்கம் பக்கமாக வாசித்தறியப்படுகிறது; மக்கள் அதனைப் புரிந்து கொள்ளுகின்றனர்.

பூமியின் எத்தனை ரகசியங்களை புவியியலாளர்கள் மட்டுமே வெளிக் கொணர்ந்துள்ளனர்! ருஷ்யாவின் முதல் புவி இயல் வரை படம் ஏறக்குறைய 70 ஆண்டுகட்கு முன்னர் வெளியிடப்பட்டது. நாட்டின் இயற்கை வளத்தைப் பற்றி அறியப்பட முடியாத பல வெற்றுப் புள்ளிகள் அந்த வரை படத்தில் நிறைய இருந்தன. ஆனால், சில ஆண்டுகள் கழித்து, புதிய சமூக அமைப்பு - சோஷலிசம் - வெற்றி பெற்றது; அப்பொழுது, உற்பத்தியில் பிரம்மாண்ட வளர்ச்சி ஏற்படுவதற்கான வாய்ப்புக்கள் ஏற்பட்டன. பின்னர் என்ன நிகழ்ந்தது? சோவியத் யூனியனின் நிலவள அமைப்பைப் பற்றிய பூரணமான ஆய்வு செய்யப்படவேண்டிய நடைமுறை அவசியம் உண்டாயிற்று. இதன் மூலம், அபூர்வமான பலன்கள் கிட்டின. யாகூதியாவில் வைரங்களும், சைபீரியாவில் எண்ணெயும், காஸக்ஸ்தானில் இரும்புத் தாதுவும், மத்திய ஆசியாவில் எரிவாயுவும், கண்டு பிடிக்கப்பட்டன. சென்ற சில ஆண்டுகளில் மட்டும், வேறுபல தாதுப் படிவங்களையும் புவி இயலாளர்கள் கண்டு பிடித்துள்ளனர்.

பேரண்டத்தின் ரகசியங்களை வெளிப்படுத்த சோவியத் விஞ்ஞானிகள் மேற்கொண்ட அரும்பெரும் முயற்சிகளை இங்கு நினைவுபடுத்தாமலிருக்க முடியாது. நூற்றாண்டுகளாக, சந்திரனின் மறுபுறம் அறியப்பட முடியாத - தானே யான வஸ்துவாக - இருந்து வந்தது.

நமது கோளிலிருந்து மறைந்திருக்கும் சந்திரனின் மறு புற ரகசியங்களை மனிதன் என்றுமே கண்டு கொள்ள முடியாது என்று பிரெஞ்சு சமூக இயலாளரான அகஸ்தி காம்தே, அப்பட்டமாகக் கூறினார். ஆனால் இது பொய் யாகிவிட்டது. சோவியத் விஞ்ஞானிகள், ஒரு தானி யங்கு கோளிடை நிலையத்தைக் கண்டுபிடித்தனர்; அது சந்திரனைச் சுற்றிப் பறந்து, அதன் மறுபுறத் தைப் படமெடுத்தது.

இந்த விஞ்ஞான சாதனை, அறியொணாமைக் கொள்கையை மறுக்கும் மற்றுமொரு யதார்த்தச் சான்றாகும். மனிதன் விண்வெளியில் பறந்த பின்னர், பேரண்டத்தைப் பற்றிய நமது அறிவின் எல்லைகளை மேலும் விரிவாக்கிய பின்னர், மனித அறிவிற்கு சில வகையான எல்லைகள் உண்டு என்று அறியொணாமைக் கொள்கை வாதிகள் கூறுவதை யார் தான் நம்ப முடியும்?

இயற்கையைப் பற்றிய அறிவைப் பெறும்போது, மனிதன் ஒன்றன் பின் ஒன்றாகப் பல தடைகளைக் கடக்கிறான். "அனைத்தையும் நான் கடந்து விடுவேன்" என்று அவன் கூறக் காரணம் உண்டு. இது, மார்க்சீய - லெனினிய தத்துவத்தின் ஆழ்ந்த நம்பிக்கையுடனும், அதன் வாழ்வு உடன்பாட்டுடனும், மனித அறிவின் மீது அது கொண்டுள்ள ஆழ்ந்த நம்பிக்கையுடனும் பிணைந்துள்ளது.

தற்கால அறியொணாமைக் கொள்கை வாதிகளுக்கு 'அறிவின் எல்லைக் கோடுகள்' பற்றிப் பேசுவது மேன் மேலும் கடினமாகி வருகிறது. ஏனெனில், உலகைப் பற்றிய அறிவைப் பெறுவதில் விஞ்ஞானம் வியத்தகு வெற்றிகளைப் பெற்று வருகின்றது. ஆகவே, மனித அறிவின் இயலாமை பற்றிய மதக் கூற்றுக்களுடன்,

விஞ்ஞான உண்மைகளைப் பொருத்திவிட கடவுட் கொள்கை வாதிகள் முயலுகின்றனர். நவீன விஞ்ஞானக் கண்டு பிடிப்புக்கள், 'படைத்தவனின்' அதீத அறிவைப் பற்றித் தெரிந்து கொள்ள உதவுவதாகவும், அவனது எண்ணங்களை மனித மொழியில் பெயர்த்துக் கூறுவனவே அவை என்றும் அவர்கள் அறுதியிட்டு உரைக்கின்றனர். ஆனால் மதவாதிகளின் முயற்சிகளனைத்தும் வீணே! மதத்திற்கும் மாதா கோவிலின் கொடுங்கோன்மைக்கும், எதிராகப் போராடித்தான், ஒவ்வொரு அடி முன்னேற்றமும் ஏற்பட்டுள்ளது என்பதை விஞ்ஞானத்தின் வரலாறு எடுத்துரைக்கிறது. பெரும்பாலானோர் நாத்திகர்களாக உள்ள விஞ்ஞானிகளின் மூலம், தனது ரகசியங்களை, எதற்காக அந்தக் கடவுள் வெளியிட வேண்டும்?

இவையனைத்திலிருந்தும் பெறப்படுவது என்ன? அறியாமையிலிருந்து அறிவு நோக்கியும், பூரணமற்ற அறிவிலிருந்து, மேலும் அதிகமான அறிவு நோக்கியும் மனித அறிவு வளர்ச்சியடைகிறது. அறியப்பட முடியாத, தாமேயான வஸ்துக்கள் என்பது இயற்கையில் யாதொன்றும் கிடையாது; இன்னமும் அறிந்து கொள்ளப்படாதவையே உள்ளன; அவையும், விஞ்ஞானம், நடைமுறை ஆகியவற்றின் சக்தியால் வெளிப்படுத்தப்படும்.

அறிதல் எனும் வினையின் போது பெறப்படும் அறிவு உண்மையானதென்று நாம் எவ்வாறு நிச்சயமாகக் கூறுவது? இந்தக் கேள்வியைத் தனியாகத்தான் பரிசிலிக்க வேண்டும்.

பத்தாவது உரை

## உண்மை என்பதென்ன ?

"உண்மை என்பதென்ன?" என்று தன்னைத்தானே கேட்டுக்கொள்ளாத வாசகர் யாரும் இருக்கமுடியாது. அதைப் பற்றிச் சற்றும் கவலையுருதார் எவருமிலர். "உண்மை என்பது பகுத்தறிவின் ஒளி; உடலின் ஒளி சூரியன். ஆத்மாவின் ஒளி உண்மை," என்ற ரஷ்யப் பழமொழி தற்செயலாக எழுந்ததல்ல.

ஹெகல எழுதினுர்: "உண்மை என்பது பெரும் சொல்; மாபெரும் பொருள்; 'ஒரு மனிதனின் ஆத்மாவும் உணர்வும் ஆரோக்கியமானதாக விருந்தால், இந்த வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் அவனது நெஞ்சகம் விம்மிப் பெருகும்."

மார்க்சீய லெனினியத் தத்துவத்தின் ஸ்தாபகர்கள், உண்மைக்குச் செய்த ஊழியத்திற்கு மாபெரும் சான்ருகத் திகழ்பவர்கள். ஜெர்மன் தொழிலாள வர்க்க இயக்கத்தின் புகழ்பெற்ற தலைவரும், கார்ல் மார்க்ஸின் நெருங்கிய தோழருமான லிப்னெக்ட், தனது நினைவுக் குறிப்புகளில், மார்க்ஸிற்கு உண்மையைத்தவிர வேறு

எந்த மதமும் தெரியாதென்றும், உண்மைக்குத் தவிர வேறு எதற்கும் அவர் தலை வணங்கியதில்லை என்றும், உண்மையைப் போன்று வேறு எதையுமே அவர் அத்துணை மதிப்பதில்லை என்றும் எழுதினுர். "உயிருள்ள வளமான, மெய்யான, சக்திமிகுந்த, எங்கும் நிறைந்த, புறவயமான, வரம்பற்ற மனித அறிவின்"⊗ சக்தி குறித்து லெனின் பெருமையடைந்தார்.

உண்மையைத் தேடுவது விஞ்ஞானிகள், தத்துவ இயலாளர்கள், எழுத்தாளர்கள், அரசியல்வாதிகள் ஆகியோரது கடமைதான் என்று சில வேளைகளில் கூறப்படுகிறது. "உண்மையைத் தேடி ஓடாமல் சாதாரண மக்கள் தங்கள் வாழ்க்கையைக் கழிக்கமுடியும்," என்றும் கூறப்படுகிறது. இதைவிடத் தவருன அபிப்பிராயம் வேறு எதுவும் இருக்கமுடியாது. மக்கள் சதா உண்மையைத் தேடிக் கண்டுகொள்ள வேண்டியுள்ளது; அதாவது உண்மையை அறிந்துகொள்ள வேண்டியுள்ளது. பள்ளியிலும், தொழிற்கூடங்களிலும், பரிசோதனைச் சாலைகளிலும், தினசரி வாழ்வில் எங்கும் அறிவு தேவைப்படுகிறது. சிறிய விஷயங்களுக்கு சிறிதளவு அறிவும், பெரிய விஷயங்களுக்கு பெரிய அளவு அறிவும் தேவையாகிறது; ஆனுல், எப்பொழுதும் உண்மையான அறிவே இன்றியமையாததாகிறது. இதனை மக்கள் விஞ்ஞான, உற்பத்தி, சமூக நடவடிக்கைகளின் மூலம் நாடுகின்றனர்.

எந்த வகையான அறிவை நாம் உண்மை என்கின்ருேம்?

---

⊗(லெனின், தொகுப்பு நூல்கள்; தொ 38 பக்: 363)

உண்மை என்பது எது? எது இட்டுக் கட்டப்படாததோ எது வாழ்வில் இருப்பதுடன் ஒத்துள்ளதோ அந்தக் கூற்றையே உண்மை என நாம் விவரிக்கிறோம் என்பதை தினசரி அனுபவத்திலிருந்து நீங்கள் அறிவீர்கள். யதார்த்தத்துடன் உடன்பாடுள்ள அனைத்தும் உண்மையே. தவறுக்கு, பொய்க்கு எதிரானது உண்மை. யதார்த்தத்தில் இல்லாத ஒன்றை நமது கூற்றுக்கள் உரைத்தால் அவற்றைப் பொய் என்கிறோம்.

மனிதகுல அனுபவத்தின் விளைவாகப் பெற்ற இந்தப் பொருள்தான், தத்துவார்த்த வரையறைகளிலும் கூறப்படும் பொருளா? ஆம்! உண்மை பற்றிய பொருள் முதல் வாதக்கோட்பாட்டில் அது அடக்கம். ஆனால், கருத்து முதல் வாதிகள் அதனை எல்லா வழிகளிலும் திரித்துப் புரட்டுகின்றனர். அவர்கள் இயற்கையை இரண்டாம் பட்சமானதாகக் கருதுகின்றனர். அதனால் அவர்கள் சிந்தனையை, யதார்த்த உண்மையுடன் ஒப்பிடுவதில்லை; ஆனால், மாறாக, யதார்த்தத்தை அவர்கள் கண்டுபிடித்துள்ள "கோட்பாடுகளுக்கும்", "வரையறைகளுக்"கும் பொருத்திக் கொள்கின்றனர்.

உண்மையைப் பற்றிய கருத்து முதல்வாதக் கருத்து', மத, ஆத்மார்த்திகக் கருத்துக்களுடன் நெருங்கிப் பிணைந்தது; அதன் பொருள், கடவுளே ஒரே முழுமுதல் உண்மை என்பதாகும். ஆனால், கடவுள் என்பவர் விஞ்ஞானத்திற்கு எட்டாதவர் என்கின்றனர். மதவாதிகள். எனவே உண்மையும் அதற்கு எட்டாதது என்பது அவர்களது வாதம். அறிதல் எனும் வினையின் மூலம் தெரிந்து கொள்ளப்பட முடியாதது உண்மை என்றும், மனிதனது ஆக்க நடவடிக்கைகளின் மூலமாகவும் அடையப்பட முடியாததென்றும், கடவுள்மீது

நம்பிக்கை கொண்டால்மட்டுமே அறிந்துகொள்ளப்பட முடியும் என்றும் அவர்கள் உரைக்கின்றனர்.

“மதம் கூறும் அறிவுரைகளனைத்தும்,” விண்ணையும் மண்ணையும் போன்று உண்மையினின்றும் விலகியிருப்பவை என்பதை விஞ்ஞானம் நீண்டகாலத்திற்கு முன்னரே நிரூபித்துவிட்டது. இன்றும்கூட, மறைபொருள்வாதிகள் தங்களது தீயசெயல்களை ‘உண்மை’ எனும் பெரும் சொல்லால் மூடிமறைக்க முயலுகின்றனர். “உண்மையைப் புரிந்துகொள்ளுங்கள், அதனை மதியுங்கள்,” என்று அவர்கள் போதித்து, “தாங்கள்தான் “விண்ணுறைந்த உண்மை”- “தெய்வீக உண்மையின்” ஊழியர்கள் என்று பாசாங்கு செய்கின்றனர்.

அப்படிப்பட்ட கருத்துக்கள், விஞ்ஞான உண்மையை மறுப்பதைத்தவிர வேறொன்றுமில்லை; ஒரு மதத்திற்காக விஞ்ஞானத்தை மறுப்பதாகும்; சில மத சேவகர்களது உரையின்படி பார்த்தால், மக்களுக்கு உண்மையின்பாலுள்ள கவர்ச்சியை வைத்து வியாபாரம் செய்வதாகும் அது.

கருத்து முதல் வாதமும், மதமும், மனிதகுலம் வரையறுத்த உண்மை, பொய் என்ற கோட்பாடுகளின் பொருளைச் சரிவரக் கைக்கொள்ளவில்லை என்பது மட்டுமன்றி, அவற்றை திரிக்கவும் செய்கின்றன.

பொருள்முதல் வாதம் மட்டுமே உண்மையைப் பற்றிய சரியான விளக்கத்தை அளிக்கிறது. மக்களின் நடைமுறைச் செயல்களினடியாக வரையறுக்கப்பட்ட அதன் பொருளைப் பாதுகாத்து வருகிறது. உதாரணமாக, “உண்மையை யதார்த்தத்திலிருந்தும், யதார்த்தத்தை உண்மையிலிருந்தும்” பிரிக்கும் முயற்சிகளை பொருள் முதல்வாதியான பியூயர்பாக் வன்மையாக எதிர்த்தார். ரஷ்யப் புரட்சிகர ஜனநாயகவாதியான

செர்னிஷெவ்ஸ்கி மனித மனத்தின் சக்தியிலும், யதார்த்தத்தைப் பற்றிய விஞ்ஞான அறிவின் சாத்தியப் பாட்டிலும் நம்பிக்கை வைத்தார். "யதார்த்தத்தைத் துல்லியமாக, முழுமையாகப் பரிசீலித்தால்தான் உண்மை பெறப்படும்," என்று அவர் எழுதினுர்.

சுருங்கக்கூறின், மனித அறிவு யதார்த்தத்துடன் தொடர்புடையதாக உள்ளபோது உண்மையாகவிருப் பதால், மக்களின் ஒருதலைப்பட்சமான விருப்பு வெறுப்பு களை அது சார்ந்திருப்பதில்லை. உண்மையின் புறவயத் தன்மையே இதன் உள்ளார்ந்த கருத்து ஆகும். மார்க் சிய—லெனினிய தத்துவமே, இப்பிரச்னையை முதன் முதலாகத் தீர்த்ததுடன் இதனை மேலும் முன்னேறச் செய்தது.

புறவய உண்மை

எந்த மனித எண்ணங்களின் உள்ளடக்கம் ஒரு பொருளையோ ஒரு மனிதனையோ, மனிதகுலம் அனைத்தையுமோ, சார்ந்து இல்லையோ, அதுவே புறவயமான உண்மை என்று லெனின் தனது பொருள்முதல் வாதமும், அனுபவவாத விமரிசனமும் என்ற நூலில் விவரிக் கிருர்.⊗

இதனை எப்படிப் புரிந்துகொள்வது? மனிதனி லிருந்தும் தனித்து புறவய ரீதியாக உண்மை இருப் பதால், ஒருவேளை, உண்மை என்பது இயற்கையே தானே என்று கேட்கப்படலாம். அல்ல; புறவய உண்மை யைப் பற்றிய அப்படிப்பட்ட கருத்து தவறுனதாகும். இருக்கும் ஒன்று உண்மையாகவோ, பொய்யாகவோ இல்லாமலிருக்கலாம். அது வெறுமே இருக்கின்றது;

---

⊗(லெனின், தொகுப்பு நூல்கள்: தொகுதி 14 பக்: 122)

அவ்வளவுதான். எது இருக்கிறதோ அதைப் பற்றிய மக்களின் அறிவு, அவர்களது அபிப்பிராயங்கள், அவர்களது உரைகள் ஆகியவைதான் உண்மையாகவோ, பொய்யாகவோ இருக்கமுடியுமே தவிர, யதார்த்தமே அல்ல.

இங்கு மற்ளெருரு கேள்வி எழலாம்: மக்களின் அறிவுதான் உண்மை எனப்படுவதெனில், அது மனிதனைச் சார்ந்ததல்ல என்று நாம் ஏன் கூறுகிறோம்? மக்கள் தங்களது உழைப்பின் மூலமும், விஞ்ஞான ஆராய்ச்சியின் மூலமும்தானே ஏதேனும் ஒரு விஞ்ஞான அறிவைப் பெறுகின்றனர்? மாசிஸ்டான போக்தனேவ் இவ்வாறுதான் வாதிட்டார்; மனிதனின்றி உண்மை இல்லையாதலால், புறவயஉண்மை என்று யாதொன்றும் இல்லை என்றும், அது எப்பொழுதும் மனிதனைச் சார்ந்து தன்வயமானதாகவே உள்ளது என்றும் அவர் கூறினர். ஆனல், இக்கருத்து தவருனது.

மனிதனின்றி எந்த உண்மையும் இல்லைதான். ஆனல் அதன் உள்ளடக்கம் மனிதனைச் சார்ந்தது அல்ல. மனிதனைச் சுற்றியுள்ள உலகிலிருந்து பெறப் படுவது உண்மை. கூற்றுக்கள் அபிப்பிராயங்கள் இவற்றின் உண்மையை நிர்ணயிப்பது மக்களின் விருப் பங்கள் அல்ல; ஆனல், புறவய யதார்த்தத்துடன் அவை கொண்டிருக்கும் உடன்பாடே; மனிதனிலிருந்தும் தனித்து இவ்வுலகில் என்ன உள்ளதோ அவற்றுடன் கொண்டுள்ள உடன்பாடே. அதனுல்தான் புறவய உண்மை மனிதனைச் சார்ந்ததல்ல என்றுர் லெனின். வேறு வார்த்தைகளில் கூறப்போனல், மக்களின் யதேச்சையான நடவடிக்கையைச் சார்ந்ததல்ல அது. மனிதன் உண்மையைச் சிருஷ்டிப்பதில்லை: புறவய

யதார்த்தத்தில் எது உள்ளதோ அதன்படி அதனைப் பிரதிபலிக்கிறான்.

முக்கியமான சில நடைமுறை விளைவுகள் இதிலிருந்தும் தொடர்கின்றன.

உண்மைகளைத் துர்ப்பிரயோகம் செய்வதற்கும், வரலாற்று ரீதியான புறவயஉண்மையை மீறுவதற்கும் கம்யூனிஸ்டுக் கட்சி எதிரியாகும். உண்மைக்கும், மக்களுக்கும் ஊழியம் செய்வதே ஒரு கம்யூனிஸ்டின் உயர்ந்த கவுரவமாகும். அவனது நடைமுறைச் செயல்களில், சிறிதளவும் உண்மையைத் திரிப்பதை அவன் அனுமதிக்கமுடியாது. எல்லா இடங்களிலும், எல்லா விஷயங்களிலும் அவன் உண்மையை நேருக்குநேராக நோக்கவேண்டும்; மக்களை ஏமாற்றுவதையோ, உண்மையைத் திரிப்பதையோ அவன் அம்பலப்படுத்த வேண்டும்.

மக்களுக்கு உண்மையைக் கூறுவதால்தான் கம்யூனிஸ்டுக் கட்சி பலம்பொருந்தியதாக விருக்கிறது. அதனால்தான் அதன்பால் மக்களுக்கு என்றும் நம்பிக்கை உள்ளது.

கருத்து முதல்வாத உலகக் கண்ணோட்டத்திலிருந்து பெறப்படும் முடிவுகள் இதற்கு முற்றிலும் மாறான தன்மையுடையது. இந்தக் கண்ணோட்டத்தைத்தான் பூர்ஷுவா தத்துவயியலாளர்களும், ராஜீயவாதிகளும், பத்திரிகையாளர்களும் பின்பற்றுகின்றனர். உதாரணமாக, ஒரு நியூயார்க் பத்திரிகையாளர் உண்மையைத் திரித்து, பச்சையாகப் பொய் கூறி, சம்பவங்களைப் புரட்டி, சிலரை அவமானம் செய்து, பணத்தின் முன் மண்டியிட வேண்டியுள்ளதாக அமெரிக்க பத்திரிகையாளரான ஜான் ஸ்வின்டன்

எழுதுகிறார். அமெரிக்க உளவு இலாக்கா முக்கியஸ்தர்களில் ஒருவரான எஸ்.டி. ஜாக்ஸனே, சோவியத் யூனியனுக்கும், சோஷலிச நாடுகளுக்கும் எதிரான போராட்டத்தில், அமெரிக்காவிற்குத் தேவையானது உண்மை அல்லவென்றும், கவிழ்ப்பு நடவடிக்கைகளே என்றும் பச்சையாகக் கூறினார். இவைதான் இருவித உலகக் கண்ணோட்டங்கள் யதார்த்தத்திற்கு இரு வேறுபட்ட அணுகல்முறைகள்.

இவ்வாறாக, நமது நடைமுறைச் செயல்களிலும் தினசரி வாழ்விலும், யதார்த்தத்திற்கு உடன்பாடாக உள்ள கூற்றுக்களையும், தீர்ப்புகளையுமே நாம் அடிப்படையாகக் கொள்ளவேண்டும். ஆனால், அறிவின் உண்மைக்கும், யதார்த்தத்துடன் அதற்குள்ள உடன்பாட்டிற்கும், மக்களுக்கு உத்திரவாதமளிப்பது எது? வேறு வார்த்தைகளில் கூறப்புகின், நமது அறிவின் உண்மைக்கு உரைகல் எது?

**உண்மைக்கு உரைகல் எது?**

ஒரு கருத்து, பயனுள்ளதாகவிருந்தால, அல்லது மக்களுக்கு அதுவே சாதகமானதாகவிருந்தால் உண்மை என்கின்றனர் பூர்ஷ்ஷுவா தத்துவ இயலாளர்கள். அப்படிப்பட்ட தத்துவ இயலாளர்கள் தங்களைக் 'காரிய வாதிகள்' என்றழைத்துக் கொள்கின்றனர். 'காரியவாதம்' பரந்த அளவில் அமெரிக்காவில் நிலவுகிறது. உண்மை பற்றிய ஒரு காரிய வாதியின் உரைகல் புறவய மானதல்ல; தன்வயமானதே. பொய்யான, படுமோசமான தத்துவமும் சில வேளைகளில் ஒரு குறிப்பிட்டநபருக்கோ ஒரு வர்க்கத்திற்கோ பயனுள்ளதாக இருக்கக் கூடும். உதாரணமாக, இறப்பிற்கு அப்பால் உள்ள வாழ்வு பற்றியும், சுவர்க்க, நரகலோகங்

களைப்பற்றிய மதத் தத்துவங்களும் இப்படிப்பட்டவை தான். அவை சுரண்டும் வர்க்கத்திற்குச் சாதகமாக உள்ளன. மதத்தின் மூலமாக, சுரண்டுவோருக்கு ஆதா யம் கிடைத்த போதிலும், அந்த போதனை பொய் யானதே.

“உண்மையான தத்துவங்கள் பயனுள்ளவை அல் லவா? கணிதம், பௌதீகம் ஆகியவற்றின் வரையறை கள் நமது நோக்கங்களைப் பூர்த்தி செய்ய வில்லையா?” என்று கேட்கப்படலாம். சந்தேகமன்னியில் அவை பயனுள்ளவைதான். ஆனால், அதனால் தான் அவை உண்மையாக உள்ளன என்று பொருளல்ல. மாறாக, அவை உண்மையாகவும், மெய்யான உலகைச் சரி யானபடி பிரதிபலிப்பதாலும் தான் அவை மக்களுக்குப் பயனுள்ளதாக விருக்கின்றன.

மாசிஸ்ட் போக்ததனேவைப் போன்ற பிற தத்துவ இயலாளர்கள் கூறுகின்றனர்; எல்லா மக்களும் ஒத்துக் கொண்ட ஒன்றே, சகலராலும் அங்கீகரிக்கப்பட்டதே உண்மை என்பது. உலகத்தின் அங்கீகாரம் பெறு தலையே உண்மையின் உரைகல்லாகக் கருதுகின்றனர் அவர்கள். இந்த உரைகல்லும் நம்பகமானதல்ல; தன்வய மானதே. ஒரு சிலரது விருப்பத்திற்குப்பதிலாக பலரது விருப்பத்தை உண்மை சார்ந்திருக்குமாறு செய்வதில் எந்தவிதமான வேறுபாடும் இல்லை. ஒரு சிலர் மட்டு மன்றி, மிகப்பலரும் தவறாக விருக்கும் சூழ்நிலைகளும் ஏற்படுகின்றன.

மதக் கட்டுக்கதைகள் “சகலராலும் அங்கீகரிக்கப் பட்ட” காலம் ஒன்றிருந்தது என்பதை நாமறிவோம். இதனால் அது சிறிதளவாவது உண்மைக்கு அருகே வந்து விட்டதாகக் கருத முடியாது. இறுதியாக, முரண் பட்ட வர்க்கங்களால் பிரிக்கப்பட்டிருக்கும் சமூகத்தில்,

அவை வர்க்க நலன்களைப் பாதிக்கும்போது, 'சகலராலும் அங்கீகரிக்கப்பட்ட' உண்மை என்று எதுவும் இருப்பதில்லை, இருக்கவும் முடியாது. எதனை ஒரு வர்க்கம் உண்மை யென்று கருதுகிறதோ, அதனை மற்றொன்று பொய்யென்று உரைக்கிறது; ஒரு வர்க்கம் பொய் என்பதை, மற்றொன்று உண்மை என்கிறது.

மக்களின் விருப்புக்கள், அபிப்பிராயங்கள் ஆகியவற்றினின்றும் தனித்து நிற்கும் உண்மையின் உரைகல்-புறவயத் தன்மை வாய்ந்த உரைகல்-தான் எது? சமூக நடைமுறைதான் இந்த உரைகல். மக்களின் சமூக நடவடிக்கை ஒன்றுதான் நமது அபிப்பிராயங்களையும், தத்துவங்களையும், எண்ணங்களையும் உண்மையா பொய்யா என்று சோதித்தறியும் நம்பகமான முறையாகும். "மனிதன் நடை முறையில் உண்மையை நிரூபிக்கவேண்டும்; அதாவது, யதார்த்தத்தையும், உண்மையின் சக்தியையும், அவனது எண்ணத்தின் ஒரு குறிப்பிட்ட தன்மையையும், நடை முறையில் நிரூபிக்க வேண்டும்;" என்று எழுதினார் மார்க்ஸ். ¶

யதார்த்தத்தைக் கற்பதன் மூலமாக நாம் பெற்ற அறிவு நடைமுறையில் உறுதிபடுத்தப் பட்டால், அது உண்மை யெனவும், நம்பகமான தெனவும், ஐயத்திற்கு அப்பாற்பட்டதெனவும் பொருள் படும். நிலவிற்குச் செலுத்தப்பட்ட சோவியத் ராக்கெட்டின் பயணம் நிமிஷங்கள், விநாடிகள் துல்லியமாகக் கணக்கிடப்பட்டது. சந்திரனில் ஏற்கனவே குறிப்பிடப்பட்ட இடத்தில், கணிக்கப்பட்ட நேரத்தில் ராக்கெட் போய்ச் சேருமாறு செய்தது, சோவியத் விஞ்ஞானிகளின் கணக்கீடுகளின்

---

¶ (மார்க்ஸ் எங்கெல்ஸ், தேர்வு நூல்கள்-1955 தொ: II பக்கம் -03)

உண்மைத் தன்மைக்கு, ஒரு நடைமுறை ஊர்ஜிதமாகும் மாருக, வாழ்வின், நடைமுறையின் சோதனைகளின் முன்னர் நிற்க முடியாத தத்துவங்கள் பொய்யான தத்துவங்களாகும். ஆக, நடைமுறையே எல்லாத் தத்துவங்களுக்கும் உரைகல் ஆகும்.

நமது அறிவின் உண்மையை நாம் ஏன் நடைமுறையில் சோதிக்கிறோம்? இதற்குக் கீழ் வருமாறு விளக்கம் கொடுக்கலாம். அர்த்தமற்ற ஆவலின் காரணமாக மட்டுமே நாம் யதார்த்தத்தைப் பற்றிய அறிவைத் தேடவில்லை. ஒருகண்டுபிடிப்பாளர் அல்லது விஞ்ஞானியின் கருத்து, நடைமுறையில் கொண்டு வரப்படுமேயாஞல் மதிப்பிற்குரியது. எனினும், எல்லாக் கருத்துக்களையும் நடைமுறையில் பிரயோகித்து விட முடியாது; உண்மையான, சரியான எண்ணங்களையே பிரயோகிக்க முடியும். யதார்த்தத்துடன் ஒத்து இல்லையாதலால், தவருன கருத்துக்களைப் பிரயோகிக்க முடியாது. அதனுல்தான், நமது கருத்துக்களின் உண்மையை நாம் நடை முறையின் மூலம் சோதிக்கிறோம்.

அதன்படி, நடை முறையில் உறுதிப்படுத்தப்பட்டதும், அதன் பயனுக நடை முறையில் கொண்டுவரக் கூடியதுமே, யதார்த்தத்திற்கு இயைந்ததாகும். நடைமுறை எனும் உரைகல்லும், பிரதிபலிப்புக் கோட்பாடும் (தத்துவம், நடை முறையில் பிரதிபலிப்பது—மொ-ர்) புறவய உண்மையின் வரையறையிலேயே சேர்க்கப்பட வேண்டியதாகும். புறவய உண்மை என்பது, அனுபவத்திலும் நடைமுறையிலும் நன்கு சோதிக்கப்பட்டதும், சுற்றுப்புறப் பருப்பொருள் யதார்த்தத்தை சரியானபடி பிரதிபலிக்கக் கூடியதுமான மனித அறிவே யாகும். "மனித மூளையில் இயற்கை பிரதிபலிக்கிறது. இந்த பிரதிபலிப்புக்களின் சரியான தன்மையைச் சோதித்தும், அவற்றை நடைமுறை

யிலும், தொழில் நுட்ப முறையிலும் பிரயோகிப்பதன் மூலமும், மனிதன் புறவய உண்மையை அடைகிருன்,¶ என்று லெனின் எழுதினுர்.

உண்மையின் உரைகல் பற்றி நாம் கூறியவற்றிலி ருந்து தினசரி வாழ்க்கைக்கு முக்கியமான சில முடிவு கள் தொடர்கின்றன. உதாரணமாக, நமது உற்பத்தி, விஞ்ஞான, பொருளாதார, அரசியல் நடவடிக்கைகளை நாம் மதிப்பீடு செய்ய, அவற்றின் நடைமுறை விளைவு கள் எனும் உரைகல்லே நமக்கு வழிகாட்டியாகவிருக்க வேண்டும். அது போன்ற சந்தர்ப்பங்களில், வாழ்க் கையே சர்வ வல்லமையுள்ள நீதிபதியாகும். நமது கணக்கீடுகளையும், பிரேரணைகளையும், அனுமானங்களை யும் யதார்த்தம் மறுத்தால், அவற்றை ஒதுக்கி எறியும் மனோதிடம் நமக்கு வேண்டும்; நமது அறிவை ஆழப் படுத்துவதன் மூலம், அதனை அனுபவத்துடனும், நடை முறையுடனும் ஒத்திசையச் செய்ய வேண்டும். நாம் விடாப்பிடியாக, வாழ்வின் உண்மைகளுடன் ஒத்துப் போக மறுத்து முரண்டு பிடித்தால், துயரத்திற்கே உள்ளாவோம்.

நடைமுறை தான் உண்மையின் உரைகல், அறிவின் ஊற் றும் குறிக்கோளும் ஆகும் என்று நாம் பார்த்தோம். அது தான் தொடக்கப் புள்ளி: அறிவின் அவசியத்தைத் தோற்றுவிக்கும் காரணமும் அதுவே. இயற்கையை மாற்றியமைக்கும் குறிக்கோளுடன் மக்கள் ஈடுபட்டுள்ள உற் பத்தி நடவடிக்கைகளின் மொத்த விளைவே நடைமுறை (தொழில், விவசாய வளர்ச்சியின் முழு வரலாற்று அனுபவம்). சமூகத்தை மாற்றியமைக்கும் நோக்குடன் நடை பெறும் சமூக அரசியல் நடவடிக்கைகளின் (வர்க்கப் போராட் டம், சமூகப் புரட்சிகள், சோஷலிச கம்யூனிச நிர்மாணம்.

¶(லெனின் தொகுப்பு நூல்கள், தொ: 38, பக் 201

தேச விடுதலைப் போராட்டம், சமாதானத்திற்கான போராட்டம்) மொத்த விளைவே நடைமுறை. அது, விஞ்ஞான-பரிசோதனை நடவடிக்கையும் ஆகும். வேறு வார்த்தைகளில் கூறப்போனல், நடைமுறை என்பது பருப்பொருள் யதார்த்தத்தை மாற்றும் குறிக்கோளுடன் மனிதன் ஈடுபடும் செயல் முறைகளே.

'பொருள் முதல் வாதமும் அனுபவவாத விமரிசனமும்' என்ற தனது நூலில், லெனின் உண்மை எனும் பிரச்சினையில் இரு கேள்விகள் உள்ளடங்கியுள்ளன என்று சுட்டிக் காட்டுகிறுர். (1) புறவய உண்மை என்று ஒன்று உண்டா? (2) அப்படியிருந்தால், புறவய உண்மைக்கு உருக்கொடுக்கும் மனித கருத்துக்கள், ஒரே நேரத்தில், மொத்தமாக, நிபந்தனையற்று, முழு முதன்மையாக, அதை வெளியிட முடியுமா? அல்லது தோராயமாகவோ, ஓரளவாகவோ தான் கூற முடியுமா?''‡ ஏற்கனவே நாம் முதற் கேள்வியை பரிசீலித்து அதற்கு ''ஆம்'' என்று பதிலளித்து விட்டோம். இப்பொழுது நாம் முழு முதன்மை உண்மைக்கும் - சார்பு நிலை உண்மைக்கும் உள்ள தொடர்பு என்ற இரண்டாவது கேள்விக்குச் செல்வோம்.

ஒவ்வொருவனும் வாழ்வதன்
சார்பு நிலை உண்மை. மூலம் கற்றுக் கொள்கிறுன்.
உடனடியாகவும், முழுமையாக
வும், பூரணமாகவும், நிபந்தனையற்றும் நாம் உண்மையை அறிய முடியுமா என்ற மேற் குறிப்பிட்ட கேள்விக்கு இந்தப் பழமொழி விடையாகும். ரஷ்ய விஞ்ஞானியான பாவ்லோவ், ஒரு விஞ்ஞானியின் வாழ்நாள் மிகமிகக் குறுகியது என்றுரைத்தார். எத்தனை

‡ லெனின் தொகுப்பு நூல்கள்; தொ. 14 பக்கம் 122

எத்தனை ரகசியங்களை விஞ்ஞானி வெளிப்படுத்தின போதிலும், மேலும் பல பல பிரச்சினைகள் விடுவிக்கப் படாமலே உள்ளன. அறிதல் எனும் கிரியையை விஞ் ஞானம் முழுமையும் கூட பூர்த்தி செய்ய முடியாது. ஒரு விஞ்ஞான உண்மை முழுமையாக ஒரே நேரத்தில் கண்டு பிடிக்கப்பட்டு விடுவதில்லை; படிப்படியாக மெள்ள மெள்ள தான் கண்டு பிடிக்கப்படுகின்றது என்பதை விஞ்ஞானத்தின் வரலாறு காட்டுகின்றது. இது ஏன்?

இந்தக் கேள்விக்கு விடையளிப்பதற்கு, மனித சிந்தனையின் தன்மை குறித்து நாம் சற்று ஆராய் வோம். மனித சிந்தனை என்பது ஒரு தனி நபரின் சிந்தனையா? அல்ல. உலகைப் பற்றி ஆராய்ந்து, அறிந்த எல்லா மக்களின் சிந்தனையே அது. அதில் லட்சோப லட்சக் கணக்கானோர் சேருவர்; கடந்த, நிகழ் கால, எதிர்கால தலைமுறைகளும் அதில் அடங்கும். ஆனால் இந்த லட்சோப லட்சம் மக்களும், இயற்கையை ஒரேயடியாக ஆராய்ந்து விடுவதில்லை. ஒவ்வொரு வனும், சமூகத்திலிருந்து தான் பெற்றுள்ள வழிகளைக் கொண்டு இயற்கையைக் கற்கிறான். அந்தந்தத் தலை முறையினர் வரித்துக் கொண்டுள்ள உற்பத்தித் தரம், விஞ்ஞான தொழில் நுட்ப அளவு ஆகியவற்றின் வரம் புக்குட்பட்டே ஒவ்வொரு தனி மனிதனின் சிந்தனையும் உள்ளது.

சாதாரண எடை பார்க்கும் கருவிகளும், உஷ்ண மானிகளும் கூட விஞ்ஞானிகளிடம் இல்லாத காலம் ஒன்றிருந்தது; மைக்ராஸ் கோப்பையோ, டெலிஸ்கோப் பையோ பற்றிப் பேச வேண்டியதில்லை. அந்நிலை அவர்க ளது உலகைப் பற்றிய அறிவுக்கு வரம்பிட்டது. இன்றோ, மிகச் சிக்கலான கருவிகள் விஞ்ஞானத்

திடம் உண்டு. இன்னும் வருங்காலத்தில், விஞ் ஞானக் கருவிகள் மேலும் முழுமையாக்கப்படும்; அப்பொழுது மனிதன் இயற்கையைப் பற்றி தற் போதை விட, அதிகமாக அறிந்து கொள்வான் என்பது உறுதி. ஆகவே, இன்றுங்கூட, "இறுதியான" அல்லது "பரந்த" அறிவு பற்றி ஒருவரும் பேச முடி யாது. தற்போது, அது சார்பு நிலைத்தே; துல்லிய மற்றதே.

ஆக, லெனினது வார்த்தைகளில், "ஒவ்வொரு விஞ்ஞான உண்மையின் வரம்பும் சார்புடையதே; அது அறிவு வளர வளர குறுகவோ விரிவடையவோ செய் கின்றது"; சமூகத்தின் வளர்ச்சி மட்டத்தினுல் மனித அறிதிறன் கட்டுப்படுத்தப்படுகிறது; அதாவது கொடுக்கப்பட்ட அந்த வரலாற்று சகாப்தத்தின் எல்லைக்குள்ளும், ஏற்கனவே நாம் பெற்றுள்ள அறிவின் தரத்திற்கும் தகுந்தாற்போல், மனித அறி திறன் உள்ளது. இந்த நிபந்தனைகளை அசட்டை செய் யவோ, அல்லது இந்த வரம்புகளிலிருந்து விடுபடவோ எவராலும் முடியாது. ஒவ்வொரு விஞ்ஞான தத்துவ மும், ஒவ்வொரு உண்மையும், வரலாற்று வரம்புகள் என்ற முத்திரையைப் பெற்றுள்ளன. ஆகவே, ஒவ் வொரு வரலாற்று கால கட்டத்திலும், மக்களின் அறிவு என்பது சார்பு அறிவே. அடிப்படையில் சரியானதும், அதா வது யதார்த்தத்துடன் இயைந்துள்ளதும், ஆனுல் பூரணத்துவம் பெருது, விஞ்ஞானமும் நடைமுறையும் வளர்ச்சி அடையும்போது மேலும் துல்லியமாகவும், ஆழமாகவும் ஆவதும் ஆன ஒரு கருத்தோ கோட்பாடோ, கூற்ருே தான் சார்பு உண்மை எனப் படுவது.

---

(லெனின்; தொகுப்பு நூல்கள்: தொ: 14 பக்: 135)

முழு முதன்மையான உண்மை.

முழுமையான, இறுதியான அறிவு என்பது இல்லையாயின், - அது எப்பொழுதுமே சார்பு நிலை படைத்தது என்பதாயின், முழு முதன்மையான உண்மை என்று ஒன்று இருக்க முடியுமா? அதாவது, இறுதியான, பூரணமான, அனைத்தையும் தன்னகத்தே கொண்ட உண்மை என்று ஏதேனும் உண்டா என்று இந்த சந்தர்ப்பத்தில் நீங்கள் கேட்கக் கூடும்.

இதற்கு சில தத்துவ இயலாளர்கள் கீழ் வருமாறு பதிலளிக்கின்றனர். அறிதல் எனும் கிரியை நமக்கு பல சந்தர்ப்பங்களில் காலங்கடந்துவிடுவதும், மறுதலிக்கப் படுவதுமான அறிவைத் தான் கொடுக்கிறது; அதனால், முழு முதன்மையான உண்மை என்று ஏதுங் கிடையாது; சார்பு நிலை உண்மைதான் உண்டு. நமது அறிவின்படி, அனைத்தும் தற்காலிகமானவையே, மாறிக்கொண்டிருப்பனவே; எதுவும் மாருதிருப்பதில்லை. எல்லாமே சார்புதான் என்கின்றனர் இந்தத் தத்துவயியலாளர்கள். அதனால், அவர்கள் சார்பு நிலை வாதிகள் என்றழைக்கப்படுகின்றனர்.

பிற தத்துவ இயலாளர்கள் வேறு வகையாக விவாதிக்கின்றனர். காலங் கடந்தவைகளாக ஆகும் உண்மைகளும், இன்னும் அதிகமான துல்லியமோ, சிறந்த ஆராய்வோ தேவைப்படும் உண்மைகளும், உண்மைகளே அல்ல. 'மெய்யான' உண்மைகள் காலங் கடந்தவைகளாக ஆவதில்லை; அவை நிரந்தரமானவை. தோன்றியபின் மறைவதில்லை; அவை முழு முதன்மையானவை, பூரணமானவை; இறுதியானவை. இவ்விதம் விவாதிக்கும் தத்துவ இயலாளர்கள் வறட்டுச் சித்தாந்த வாதிகள் ஆவர்; அவர்களுக்கு உண்மைகள் என்பவை

வறட்டுத் தத்துவங்களே; அதாவது, தோன்றிய பின் மறையாத, நிரந்தரமான, மாருத கோட்பாடுகள் ஆகும்.

முதற்கண், இந்த வரட்டுச் சித்தாந்த வாதிகள், முழு முதன்மை உண்மை எனும் பிரச்சினையை "நிரந்தர" உண்மை என்ற பிரச்சினையாக மட்டும் குறைத்து விடுகிருர்கள் என்பது கவனத்திற்குரியது. அவர்களது வாதம் இதுதான்: இரண்டும் இரண்டும் நான்கு என்பதையோ, மூன்று கோணங்களின் கூட்டுத் தொகை இரண்டு நேர் கோணங்களுக்குச் சமமாக உள்ளது, என்றென்றும் சமமாகவிருக்கும் என்பதையோ, பாரிஸ் மாநகரம் பிரான்சில் இருக்கிறது என்பதையோ யாரும் சந்தேகிக்க முடியாது. இவை நிரந்தரமான, இறுதியான, உண்மைகள், அதாவது, முழு முதன்மை உண்மைகள்.

"அப்படிப்பட்ட உண்மைகளும் இருக்கத்தானே செய்கின்றன, பிரச்சினையை வறட்டுத்தத்துவ முறைப் படி விளக்குவது அது என்று ஏன் கூறவேண்டும்?" என்று நீங்கள் கூறலாம்,

ஆம்! அப்படிப்பட்ட உண்மைகள் இருக்கத்தான் செய்கின்றன. கணிதம், வானியல், இயக்கவியல் போன்ற அனங்கக இயற்கை விஞ்ஞானங்களில் அவை காணப்படுகின்றன. இரண்டும் இரண்டும் நான்கு என்பது போன்ற உண்மைகள் அவற்றில் உண்டு. எனினும் துல்லிய விஞ்ஞானம் என்றழைக்கப்படும் அந்த அறிவுத்துறைகளில்கூட, வறட்டுத் தத்துவ வாதிகள் நினைப்பதைப்போன்று எல்லா வரையறை களும் நிரந்தரமானவை அல்ல. வானியலிலும், பௌ தீகத்திலும், ரசாயனத்திலும் நூற்றுக்கணக்கான அனு மானங்கள், பின்னர் ஏற்பட்ட விஞ்ஞான வளர்ச்சியின்

போது மறுக்கப்பட்டுவிட்டன. உயிரியல் போன்ற துறைகளில், அப்படிப்பட்ட "நிரந்தர" உண்மைகள் மிகச் சிலவே என்பதையும், சமூக அறிவியல் துறையில் மிக மிகக் குறைவே என்பதையும் நீங்கள் நிச்சயமாக ஒப்புக்கொள்வீர்கள். நெப்போலியன் 1821-ம் ஆண்டு மே 5-ம் நாள் இறந்தான் என்பது போன்ற வரையறைகளே சமூக அறிவியல் துறையில், நிரந்தர உண்மைகளாக விருக்கும்.

ஆகவே, இப்படிப்பட்ட நிரந்தர உண்மைகளில் பெரும்பாலானவை வெறும் அற்பமான, விவரங்களே. எனினும், நமது நடைமுறைச் செயல்களில் நாம் இது போன்ற சாதாரண உண்மைகளைத் தேடுவதில்லை; ஆனால், புதிதாக நமக்கு எதையேனும் அளிக்கும் அறிவையே தேடுகிறோம்.

அப்படியானால், வருங்காலத்தால் மறுக்கப்படமுடியாத நிரந்தர, விஞ்ஞான உண்மைகள் என்பவை கிடையாதா? பூரணமான இயற்கை அறிவில், நிரந்தரமான, மறுக்கமுடியாத, முழு முதன்மையான உண்மை அடங்கியிருக்கவில்லையா?

இயற்கை பற்றிய மனித அறிவிற்கு உண்மையாகவே எல்லைகள் கிடையாது என்பதனால் இந்தக் கேள்வியையும் நாம் கவனமாக ஆராயவேண்டும். நேற்று அறியப்படாததாக விருந்ததை இன்று நாம் அறிகிறோம்; இன்று நாம் அறிந்திராதவற்றை நாளையோ அதன் பின்னரோ நாம் அறிவோம்.

எனினும், மொத்தத்தில் இயற்கை பற்றிய இறுதியான அறிவு என்பது முழு முதன்மையான உண்மை என்று பேசுவது சாத்தியமில்லைதான். ஏதேனும் ஒரு காலத்தில், மனிதகுலம், இவ்வுலகில் இருக்கும் அனைத்தையும், இந்தப் பிரபஞ்சத்தைப் பற்றி அனைத்தையும்

பூரணமாகக் கற்று, அதன்மூலம் முழு முதன்மையான உண்மையைப் பெறும் என்று மெய்யாகவே கற்பனே செய்தல் சாத்தியம்தானு? முடிவுவரை இவ்வுலகைப் பற்றி அறிந்துகொள்ளுதல் மக்களால் முடியாது; ஏனெனில், இயற்கை முடிவற்றது; என்றென்றும் வளர்ந்துகொண் டிருப்பது; ஆகவே, மனித அறிவிற்கு எல்லேகள் நிர்ணயிப்பது மூடத்தனமானது.

அப்படியாயின், முழு முதன்மையான உண்மை பற்றிய, அதாவது, இறுதியான, நிரந்தரமான முழு முதன்மையான அறிவு பற்றிய விஷயம்தானென்ன என்று நீங்கள் கேட்கக்கூடும். மக்களால் அடையமுடி யாத தொன்ரு அது?

அத்தகைய அறிவை, அறிதலுக்கு முற்றுப்புள்ளி வைக்கும் நிரந்தர உண்மைகள் என்று அப்பாலே ரீதியில் கருதுவோமானுல், அதுபோன்ற "இறுதியான" உண் மைகள் மெய்யாகவே கிடையாது. எனினும், ஒரே சரி யான முரண்தர்க்கப் பொருள் முதல்வாதக் கண்ணேட் டத்தின்படி, பிரச்சினேயை அணுகினுல், முழுமுதன்மை யான உண்மை இருக்கிறது என்பதையும், அதை அடைதல் சாத்தியமே என்பதையும் நாம் அங்கீகரிப் போம்.

இதனேத் தெளிவாக்குவதற்கு, உண்மை என்பது ஒரு கிரியை என்றும் அதனேப் பெறுதலும் ஒரு கிரியையே என்றும் லெனின் கூறியதை நாம் நினேவு படுத்திக்கொள்வோம். ஒரு முற்றுப்பெற்ற, அனேத்தை யும் தன்னுட்கொண்ட, இயற்கையனேத்தையும் காட்சி யாகத் தரும் பிம்பமாக, உண்மையை நாம் கருதக் கூடாது. முழு முதன்மையான உண்மையை நாம் அடையும் வினே ஒரு திடீர்ச் செயலல்ல; அது ஒரு சிக்க லான, வரலாற்று ரீதியாக முடிவற்ற, அறிதல் கிரியை;

அதனை மனிதகுலம் பூரணமாக ஒருகாலும் பூர்த்தி செய்யமுடியாது.

பல சார்பு நிலை உண்மைகள் சேருவதன் மூலமாகத் தான், முழுமுதன்மையான உண்மை பெறப்படுகிறது. படிப்படியாகச் சேர்ந்து வந்துள்ள சார்பு நிலை உண்மைகள், மொத்தத்தில் இயற்கையையும், அதன் நிகழ்வுகளையும், விதிகளையும் பற்றிய அறிவுக்கு அருகே மனிதகுலத்தை கொணர்கிறது என்பதில்தான், அறிவு வளர்ச்சி அடங்கியுள்ளது. பல பகுதிகள் சேர்ந்து ஒரு முழுமையாவதுபோல அறிவு வளர்ச்சியின் நிரந்தரமான கிரியையில், சார்புநிலை உண்மைகளினால் ஆனதே முழுமுதன்மையான அறிவு ஆகும்.

அவற்றின் வளர்ச்சிக் கிரியையின்போது பல சார்பு நிலை உண்மைகளின் மொத்தமே முழு முதன்மையான உண்மை எனும் கருத்து, முழுமுதல் உண்மையையும், சார்புநிலை உண்மையையும் அப்பாலைத் தத்துவப்படி பிரித்தலுக்கு எதிரானது. அவற்றிற்கிடையே தாண்ட முடியாத தடைகள் ஏதுமில்லை என்பதை இதிலிருந்து தெளிவாகத் தெரிந்துகொள்கிறோம். சார்பு நிலை உண்மைகளை அறிவதன்மூலம், முழுமுதல் உண்மையின் அரிய துணுக்குகளை நாம் அடைகிறோம்.

நமது அறிவு, முழுமுதலானதும், சார்பு நிலையானதும் ஆகும். சாராம்சத்தில் அது முழுமுதன்மையானதே; ஏனெனில், யதார்த்தத்தை மேன்மேலும் ஆழ்ந்து ஆராயும் மனித குல ஆற்றலுக்குத் தடைகள் ஏதுங்கிடையாது. அதே சமயம், அது சார்பு நிலையும் உடையதே; ஏனெனில் ஒரு குறிப்பிட்ட சகாப்தத்தின் வரம்பிற்குட்பட்ட சாத்தியப்பாடுகளினால் அது கட்டுப்படுத்தப்படுகிறது.

"இங்கு ஒரு முரண்பாடு இல்லையா?" என்று வாசகர்கள் கேட்கலாம். ஆம்! முரண்பாடு இருக்கத்தான்

செய்கிறது. ஒருபுறம், உலகிலுள்ள அனைத்தையும் அறிந்துகொள்ளும் திறன் படைத்தது மனித சிந்தனை; மற்றொருபுறம், இந்த அறிவு, அனைத்தையும் தழுவுவதாக இருக்கமுடியாது. ஏனெனில் வரம்பிற்குட்பட்ட சிந்தனையைக் கொண்ட தனிப்பட்டவர்களால் அது பெறப்பட்டது. எனினும் இது ஒரு முரண்தர்க்க முரண்பாடே; அம் முரண்பாடு விஞ்ஞான முன்னேற்றத்தை ஏற்படுத்தி, அதன் தேக்கத்தைத் தடுக்கிறது.

"ஆனால், மனிதகுலம் அடைய முயற்சித்து அது என்றுமே அடையாத குறிக்கோள்தானே முழு முதன்மை உண்மை என்பது," என்று நீங்கள் கேட்கலாம். இல்லை; அதுபோலக் காணப்படுகிறது; அவ்வளவுதான். சற்று சிந்தித்துப் பார்த்தால் இது தெளிவாகும். "உயிரற்ற பொருளிலிருந்தே உயிர் தோன்றிற்று," "சிந்தனையின் உறுப்பு மூளை," "அணுக்களால் ஆனது வஸ்துக்கள்," - இவையும், இவைபோன்ற எல்லாக் கூற்றுக்களும் மறுக்கமுடியாதவை; விஞ்ஞானமும் நடைமுறையும் அவற்றை ஏற்கனவே நிரூபித்துவிட்டன. முழுமுதல் அறிவின் மெய்யான துணுக்குகள் அவை. ஆனால், அப்படிப்பட்ட கோட்பாடுகளே "இறுதி" உண்மைகள் என்பது பொருளல்ல. முழுமுதன்மையான உண்மை வரலாற்றுச் சூழ்நிலைகளைச் சார்ந்ததல்ல என்றும், அவற்றை மேலும் துல்லியமாகவும், பூரணமாகவும் ஆக்கவேண்டியதில்லை என்றும், அவற்றில் எதையேனும் சேர்ப்பதோ, அவற்றிலிருந்து எதையேனும் குறைப்பதோ முடியாததென்றும், விஞ்ஞான தொழில்நுணுக்க வளர்ச்சியினால் அது பாதிக்கப்படுவதில்லை என்றும் கருதுவது தவறானது. அப்படிப்பட்டதொரு உண்மை யதார்த்தத்தில் இருப்பதில்லை; அதைத் தேடும் முயற்சி வீணானதே.

பின்வரும் உதாரணத்தைப் பாருங்கள். "அணுக்கள் எனும் நுண்ணிய பிரிக்கமுடியாத துகள்களால் ஆனதே எல்லா வஸ்துக்களும்," என்று 2000 ஆண்டுகட்கு முன்னர் டெமாகிரிட்டிஸ் போதித்தார். வஸ்துக்கள் அணுக்களால் ஆனவைதான், ஆனால் அந்த அணுக்கள் பிரிக்கப்படக் கூடியவையே என்று இன்றைய விஞ்ஞானம் நிரூபித்துவிட்டது; ஆகவே டெமாகிரிட்டிஸின் அறுதியிட்ட உரை, சார்பு நிலை உண்மையாகத் தானிருந்தது. ஆனாலும், முழு முதன்மையான உண்மையின் துணுக்குகளும் அதில் இருந்தன. அவரது தத்துவத்தை பின்னர் விஞ்ஞானம் செழுமையுறச் செய்துள்ளது. அணுவில் நேர் மின்னேற்றமுடைய நியூக்ளியஸும், எதிர்மின்னேற்றமுடைய எலக்டிரான்களும் உள்ளன என்பதும், பயன்படுத்தப்படக்கூடிய சக்தி அணுநியூக்ளியஸில் பொதிந்துள்ளது என்பதும், இதுபோன்ற பல அணு தத்துவக் கோட்பாடுகளும் வருங்காலத்திலும் மறுக்கப்படமுடியாத முழுமுதல் உண்மைகளாகும். ஆனால், இத்துறையில் விஞ்ஞானம் எல்லா சாத்தியக்கூறுகளையும் கண்டுபிடித்துவிட்டது என்பது பொருளல்ல. அணுவின் அமைப்பு மேன்மேலும் ஆழமாக ஆராயப்படும்; அதனால், அணுத் தத்துவம் தவிர்க்க இயலாதபடி வளர்ச்சியுறும். இதிலிருந்து, மனித அறிவு சார்பு நிலையுடைத்து என்ற போதிலும் அதற்கு முழுமுதன்மையான உள்ளடக்கம் எதுவுமே கிடையாது என்று பொருளல்ல. ஒவ்வொரு சார்பு நிலை உண்மையும், முழுமுதல் உண்மையின் அம்சமே.

ஒவ்வொரு விஞ்ஞானக் கண்டுபிடிப்பும், விஞ்ஞான உண்மையும், ஒவ்வொரு இயற்கை விதியும். முழுமுதல் உண்மை, சார்பு நிலை உண்மை இவற்றின் ஒரு ஐக்கியமே.

இதிலிருந்து, புறவய உண்மையைப் பற்றிய அறிவு: உடனடியாகவும் பூரணமாகவும் கிடைத்துவிடுவதில்லை என்றும், படிப்படியாக, சார்பு நிலை உண்மைகள் பற்றிய அறிவின் வாயிலாகக் கிடைக்கிறது என்பதும் தெரியவருகிறது. வளர்ச்சியடைந்து கொண்டிருக்கும் சார்பு நிலை உண்மைகளின் ஒட்டு மொத்தம், நமக்கு, பரந்த இயற்கையினைத்தையும் பற்றியும், புறவய யதார்த்தத்தின் குறிப்பிட்ட அம்சங்களைப் பற்றியும் ஆழ்ந்த, நிறைவான, முழுமுதல் அறிவைக் கொடுக்கிறது.

மக்களின் நடைமுறைச் செயல்களையும், விஞ்ஞான முன்னேற்றத்தையும் பொறுத்த அளவில் இந்தப் பிரச்சினை தீர்க்கப்படுவதன் முக்கியத்துவம் என்ன?

"முடிவான," "இறுதியான" உண்மைகள் என்பன யாதொன்றும் கிடையாது; எல்லா விஞ்ஞான உண்மையும் சார்பு நிலையுடையது; முழுமுதல் உண்மையை அறிவதில் அது ஒரு கட்டமே என்ற மார்க்சீய லெனினியக் கண்ணோட்டமே விஞ்ஞான வளர்ச்சியில் எல்லைகளுண்டு என்ற எல்லாத் தத்துவங்களுக்கும் எதிரான கம்யூனிஸ்டுக் கட்சியின் போராட்டத்தில் அதன் தத்துவார்த்த அடிப்படையாகும். ஏற்கனவே சாதித்துள்ளன குறித்து திருப்தியடைந்து விடுவதற்குப் பதிலாக, எல்லாப் புதிய விஞ்ஞான கண்டுபிடிப்புகளும் உற்பத்தியில் பிரயோகப்படுத்தப்படவேண்டும் என்று கோருகிறது கம்யூனிஸ்டுக் கட்சி. விஞ்ஞானமும் உற்பத்தியும் அடைந்த தரம் எவ்வளவுதான் உயர்ந்ததெனினும், அதுவே வரம்பாகி விடாது. உண்மை நேரடியாக ஒரே சமயத்தில் வெளியிடப்படுவதில்லை; அதைக் கண்டுபிடிப்பதற்கான பாதை சிக்கலானது என்ற கூற்றுக்கும் மிகுந்த நடைமுறை முக்கியத்துவம் உண்டு.

ஆகவே, விஞ்ஞானத்தில் பரீட்சார்த்த முடிவு களைப் பரஸ்பரம் சோதித்தல் இன்றியமையாதது. அபிப்பிராயங்களுக்கிடையே போராட்டத்தை அது ஏற்படுத்துகிறது. பகிரங்கச் சச்சரவுகளின்றி, விவாதங் களின்றி ''மனித உணர்ச்சி''ப் பெருக்கின்றி, உண் மையை மனிதன் தேடுவது நடைபெருது; நடைபெற வும்முடியாது என்று லெனின் கூறியதை நாம் எப் பொழுதும் மனதில் கொள்ளல்வேண்டும்.

விஞ்ஞான ஆராய்ச்சியிலீடுபட்டுள்ளவர்கள் தவறு களையும், பிழைகளையும் அநேகமாகத் தவிர்த்துவிட முடியாது; ஏனெனில், முதற்கண் ஒவ்வொரு தனிப் பட்ட மனிதனுக்கும் இவ்வுலகை அறியும் திறன் வரம்பு களுக்குட்பட்டது; இரண்டாவதாக, அனுபவத்திற்கு முடிவு கிடையாது. எனவே அறிதல் எனும் நிகழ்ச்சி யிலேயே சில குறிப்பிட்ட தவறுகளின் மூலஸ்தானம் உள்ளது.

எனினும், தவறுகள் பலவகைப்படும் என்று போதிக்கிறது கம்யூனிஸ்டுக் கட்சி. கவனக் குறை வான, சில வேளைகளில் பொறுப்பற்ற நோக்கின் விளை வாகவும் தவறுகள் ஏற்படுகின்றன. இவை பெருந் தீங்கு விளைவிப்பன ஆகும்; அவற்றை ஓய்வு ஒழிச்ச லின்றி எதிர்த்துப் போரிட வேண்டும். ஆனல், புதி தாக, இதுகாறும் தெரிந்து கொள்ளாத ஒன்றன் ஆராய்ச்சியிலும் தவறுகள் தோன்றுகின்றன. அரும் பெரும் காரியங்களை அங்குரார்ப்பணம் செய்வோர் இழைக்கும் தவறுகள் அவை; அவர்களோ நடைமுறை யில் கற்று தங்களது தவறுகளைத் திருத்திக் கொள்ளு கின்றனர். உண்மையைத் தேடுவதில் அப்படிப்பட்ட தவறுகளும், பிழைகளும் ஏற்படுதல் சாத்தியமே. அது போன்ற சந்தர்ப்பங்களில், இன்னல்களைக் களைந்தெறிய

பெரு முயற்சியை மேற்கொள்ளுவது அவசியம்; இங்கு ஆக்க ரீதியான கிரியை என்பது, தனது சொந்த வேலை யையே சுய விமர்சன நோக்குடன் அணுகுவதற்குச் சமமாகும். தனது சொந்தத் தவறுகளையும், பிழைகளை யும் திருத்திக் கொண்டு தான் முன்னேறுவது சாத்திய மாகிறது.

ஒருவரது சொந்த முயற்சிகளின் விளைவுகள் குறித்த விமர்சனக் கண்ணோட்டம், வெற்றிகரமான ஆக்கபூர்வ உழைப்பிற்கு இன்றியமையாத நிபந்தனை யாகும். மாருக, ஒருவரது தவறுகளைத் திருத்திக் கொள்ளாமலிருத்தல், சுய - விமரிசனத்திற்கு அஞ்சு தல், "முடிவான உண்மை"யை ஏற்கனவே அடைந்து விட்டதாகவும் அடைந்துள்ள முடிவுகளை மேலும் முன்னேற்றுவது சாத்தியமில்லை என்றும் கருதுதல், நிச்சயமாகப் பெருந் தீங்கு விளைவிக்கும்.

பெரிய விஷயமாயினும், சிறிய விஷயமாயினும், சார்பு நிலை உண்மைகளினின்றும் தொடங்கி, மனித நடவடிக்கையின் ஏதேனும் ஒரு துறையைப் பற்றிய முழுமையான ஆராய்ச்சிக்குச் செல்வதன் மூலம், இன் னல்களையும், பிழைகளையும் நீக்கி நமது அறிவை மேன் மேலும் நாம் முழுமையுறச் செய்கிறோம் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

அறிதல் எனும் வினையின் போது, "இறுதியான," முழுமுதல் அறிவையே ஒருவர் எதிர்நோக்கக்கூடாது. அதே போது, மெத்தன உணர்விற்கோ, சுய திருப்தி உணர்விற்கோ இடமளிக்கவும் கூடாது; ஏனெனில், அறிவைப் பூரணப்படுத்துதல் என்பது முடிவற்ற ஒரு கிரியை; குறிப்பிட்ட ஸ்தூலமான சூழ்நிலைகளிலேயே உண்மை எப்பொழுதும் அறியப்படுகிறது என்ற விவ ரத்துடன் இது இணைந்துள்ளது.

உண்மை: எப்பொழுதுமே ஸ்தூலமானது

"பயிர்களை எவ்வாறு கவனித்துக்கொள்வது?" என்ற கேள்விக்கு நீங்கள் விடையளிக்க வேண்டியுள்ளது என்று வைத்துக்கொள்வோம். எந்த விவசாயப் பிராந்தியம் என்றும், வருஷத்தில் எந்தப் பருவத்திற்கு என்றும் நீங்கள் தெரிந்து கொள்வது அவசியம் என்று கூறுவீர்கள்.

அந்தக் கேள்வி தெளிவாக இல்லை. நடப்பு நிலைமைகளை ஒருவர் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும் என்றும், ஒரே மாதிரியான முறையில் செயலாற்றக் கூடாது என்றும் கூறுவதன் மூலம் அக்கேள்வியை மேலும் துல்லியமானதாக்க நீங்கள் முயலுகின்றீர்கள். அதே போன்று கீழ்க்கண்ட கேள்விக்கு விடையளிப்பதும் அசாத்தியமானதே: 'சமாதானம், ஜனநாயகம், சோஷலிசத்திற்கான கம்யூனிஸ்டுகளின் போராட்டத்தில் கடைப்பிடிக்க வேண்டிய முறைகளும், வழிகளும் எவை?" அந்தந்த வளர்ச்சிப் போக்குகள் நிகழும். மெய்யான சூழ்நிலைகள் கூறப்பட்டால் தான், அப்படிப்பட்ட கேள்விகளுக்கு விடையளிக்க முடியும். "பண்பியலான உண்மை என்று எதுவுமே இல்லை. உண்மை எப்பொழுதும் ஸ்தூலமானதே," என்ற முரண் தர்க்கத்தின் முக்கியமான கோட்பாட்டை நாம் இங்கு பெறுகிறோம். ஸ்தூலமான சிந்தனைக்கான கோரிக்கையே - அதாவது, குறிப்பிட்ட நிகழ்வு அல்லது நிகழ்ச்சியின் வளர்ச்சிக்கான சூழ்நிலைகளைப் பகுத்தாராய்வதே - "முரண் தர்க்கத்தின் சாரத்தையும்; ஆத்மாவையும்" வெளியிடுவதாகும் என்று லெனின் சுட்டிக் காட்டினார். ⊗

---

⊗ (லெனின், தொகுப்பு நூல்கள்; தொ 7 பக் 412)

ஸ்தூலமான உண்மை என்பது, ஒரு குறிப்பிட்ட நிகழ்வுகள் அவை வளர்ச்சியடையும் நிலைகள் இவற்றின் சாராம்சத்தை பிரதிபலிப்பதே ஆகும். இதற்கு மாறாக, பண்பியலான உண்மை, நிகழ்வுகள் உண்டாவதற்கான ஸ்தூலச் சூழ்நிலைகளையும், நிபந்தனைகளையும் ஒதுக்கி விடுகிறது.

யதார்த்தத்தைப் பகுத்தாராயும்போது பொதுவான வரையறைகளினாலும், பண்பியலான உண்மைகளினாலும் வழி நடத்தப்பட்டு, ஒருவர் செயல்பட வேண்டிய சூழ்நிலைகளைக் கணக்கிலெடுத்துக் கொள்ளாமலே அவற்றை நடைமுறையாக்குவது, வறட்டுத் தத்துவ வாதத்தின் விசேஷப் பண்பாகும். "ஸ்தூலமான நிலையின் ஸ்தூலமான பகுப்பாய்வே" ஆக்க பூர்வ மார்க்சீஸத்தின் சாராம்சம் என்று மீண்டும் மீண்டும் லெனின் வலியுறுத்தி வந்தார். ¶

நாம் ஏற்கனவே கூறியது போல, வளர்ச்சிப் போக்குகள், சூழ்நிலைகளையும், சம்பவம் நடைபெறும் காலத்தையுமே சார்ந்தது. நமது செயல் முறைகள் நடைபெற வேண்டிய ஸ்தூலமான நிலைமைகளுக்கும், வரலாற்றுச் சூழ்நிலைகளுக்கும் கவனம் செலுத்த வேண்டுமென ஆக்க பூர்வ மார்க்சிஸம் கோருகிறது. அதுவே யதார்த்தம் குறித்த ஸ்தூலமான வரலாற்று அணுகல் முறையின் சாராம்சம்.

வாழ்வில் நடைபெறும் அனைத்திற்கும், நன்கு தெரிந்த பொதுவான வரையறைகளை யாந்திரிகமாகப் பொறுத்துவது மார்க்சீய லெனினியத்திற்குப் புறம்பானது. சூழ்நிலைகள் மாறும்போது, புதிய சூழ்நிலைகளுக்கும், நடைமுறைக்கும், பழைய தத்துவார்த்த

¶(லெனின், தொகுப்பு நூல்கள், தொ 31 பக் 143;)

வரையறைகளும், போராட்டத்திற்கான போர்த் தந்திர முறைகளும் ஒத்து வராதபோது, அவற்றைத் தைரியமாக மாற்ற வேண்டும்; செம்மையுறச் செய்ய வேண்டும். அனைத்திலும் ஒரு ஆக்க உணர்வையும், மெய்யான கண்டு பிடிப்பையும் வெளிப்படுத்தும் இந்த வகையில் தான் கம்யூனிஸ்டுக் கட்சி எப்பொழுதும் செயல்படுகிறது.

கம்யூனிஸ்டுக் கட்சியின் போர்த்தந்திரமும், தொழிலாள வர்க்கத்தின் வெற்றிக்கான போராட்டத்தில் அதன் வழிமுறைகளும் என்றுமே "மாறுதனவாகவும்," "நிரந்தரமானதாகவும்" இருந்ததில்லை. வரலாற்றுச் சூழ்நிலைகளுக்கேற்ப அவை மாறிவந்துள்ளன. வாழ்வின் உயிர்த்துடிப்பை உணரும் தெள்ளிய கேள்வி ஞானம் கம்யூனிஸ்டுக் கட்சிக்கு உண்டு. நிரந்தரமான அச்சுகளில் வாழ்க்கை வார்க்கப்பட முடியாதது; அது பன்முகங்களையுடையது; மிகவும் சிக்கலானது. வாழ்க்கையை ஆராயும் ஒருவன், தொடர்ந்து தெரியாத இனங்கள் பல கொண்ட "அரசியல் சமன்பாடுகளை" விடுவிக்க வேண்டி உள்ளது. வறட்டுத் தத்துவவாதிகளால் அவற்றைத் தீர்க்கமுடியாது. பழைய உருவங்களை விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டு, வாழ்வின் வளமனைத்தையும் அவற்றினுள் அடைக்க, வறட்டுத் தத்துவவாதி முயல்கிறான். அப்படிப்பட்ட அணுகல் முறையை கம்யூனிஸ்டுக் கட்சி தத்துவார்த்த ரீதியாக மறுத்தொதுக்குகிறது. போர்த் தந்திரத்திலும், வேலையின் உருவங்கள், முறைகளிலும் நெகிழ்வு தேவை என போதித்த லெனினின் தாக்கீதுகளால்கட்சி என்றுமே வழி நடத்தப்படுகிறது.

கம்யூனிஸத்தை நிர்மாணிப் போர் அனைவரும் தங்களது நடிவடிக்கைகளில் ஒரு ஆக்கரீதியான அணுகல்

முறையினைக் கைக்கொள்ள வேண்டுமென சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் 22வது காங்கிரஸ் அறை கூவிற்று. அப்படிப்பட்ட ஆக்கத்திறன், ஒரே அச்சில் வார்த்தெடுக்கப்பட்ட எல்லா வகைக்கும் முரண்பட்டதே யாகும். பொருளாதார, அரசியல் நடவடிக்கைகளில், அனைத்துமே இடம், காலம் ஆகிய சந்தர்ப்பங்களைச் சார்ந்தே உள்ளன.

இவ்வாருக, உற்பத்தி, அரசியல், விஞ்ஞான நடவடிக்கை களின் எல்லாத் துறைகளிலும், கம்யூனிஸ்டுக் கட்சி, யதார்த்தம் குறித்த ஸ்தூலமான வரலாற்றுப் பகுப்பாய்வின் அடிப்படையில் ஒரு நெகிழ்வையும், ஆக்கபூர்வ அணுகல் முறையையுமே கடைப் பிடித்து வருகிறது.

ஸ்தூலமான வரலாற்றுச் சூழ்நிலைகளுக்கியைந்து, மிக முக்கியமான பிரச்சினைகளை எடுத்து அவற்றைப் பிரதானமாகத் தீர்க்கிறது கம்யூனிஸ்டுக் கட்சி. லெனின் அப்படிப்பட்ட பிரச்சினைகளை ''பிரதான கண் ணிகள்'' என்று உருவகித்தார். கட்சி, நாடு இவற்றின் வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும், நிகழ்ச்சிச் சங்கிலி யின் பிரதான கண்ணி எது என்று நிர்ணயிக்கும் திறன் வேண்டும் என்று லெனின் போதித்தார். அதைப் பற்றிக்கொள்வதன் மூலம் சங்கிலி முழுவதையும் நாம் பற்றிக்கொள்ள முடியும்.

நமது நடைமுறைச் செயல்களில் ஒரு பெரும் பிரச் சினைகளின் தொகுப்பு நம்மை எதிர்நோக்குகிறது; அவை அனைத்தும் விடுவிக்கப்பட வேண்டியவையே. இதனைச் செய்ய நாம் பிரதானப் பிரச்சினையிலிருந்து தொடங்கவேண்டும். அதனை விடுவிப்பதன்மூலம் பிற எல்லாப் பிரச்சினைகளையும் தீர்ப்பதை சாத்தியமாக்கு கிறோம்; லெனின் கூறியதுபோல முழுமையான சங்கி லியையே நாம் கைப்பற்றுகிறோம்.

இருபதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் கம்யூனிஸ்ட் கட்சியைத் தோற்றுவிக்கும் பணியில் லெனின் இறங்கியபோது அவர்முன் தோன்றிய கேள்வி: இது எவ்வகையில் அமைக்கப்பட வேண்டும்? இப் பொருள் பற்றி விசேஷக் கட்டுரை ஒன்றும் அவர் எழுதிஞர். அதில் பிரதான கண்ணி எது என்பதையும் அதனைப் பற்றுவதன் மூலம் ரஷிய மார்க்ஸிஸ்டுகள் முன்னுள்ள எல்லாப் பிரச்சினைகளும் தீர்க்கப்படமுடியும் என்பதையும் அவர் குறிப்பிட்டார். மார்க்ஸிஸ்டுகள், ஒரு அகில ரஷிய செய்திப் பத்திரிகையை நிறுவுவதில் தங்களது வேலையைத் தொடங்கவேண்டும் என்று லெனின் பிரேரேபித்தார். மார்க்ஸிஸ்ட் கருத்துக்களின் ஒரு கூட்டுப் பிரச்சாரகனுகவும், கூட்டு அமைப்பாளராகவும், மிகச் சிறந்தனவற்றையும் மிக முற்போக்கானவற்றையும் தன்னைச் சுற்றித் திரட்டும் ஒரு பிரதான அம்சமாகவும் அது மலரவேண்டும் என்பது அவரது கணிப்பு.

அத்தகையதொரு செய்தித்தாளே அனைவரும் நன்கறிந்த லெனினிஸ்ட் 'இஸ்க்ரா' (தீப்பொறி—மொ-ர்)

சோவியத் யூனியனின் தொழில்துறை வளர்ச்சியில், தொழில்நுட்ப முன்னேற்றமே பிரதான கண்ணியாகும், அதன் மூலமே கட்சியும் மக்களும், சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் திட்டத்தில் விவரித்துள்ள திட்டங்களை வெற்றிகரமாக நடைமுறையாக்கவும், கம்யூனிஸத்திற்கான பொருளாயத தொழில்நுட்ப அடித்தளத்தைத் தோற்றுவிக்கவும் முடிந்தது. சோவியத் விவசாய வளர்ச்சியின் பிரதானப் போக்கு தானிய விளைவை மேலும் தொடர்ந்து கூடுதலாக்குவதாகவே இருந்துவருகிறது. "தானிய உற்பத்தியின் துரிதமான வளர்ச்சியே மேலும் விவசாயம் முன்னேற பிரதான கண்ணியாகவும் கால்நடை பராமரிப்பில் துரித வளர்ச்சி ஏற்

படும் அடிப்படையாகவும் உள்ளது'' என்று சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் திட்டம் உரைக்கிறது. *

சமாதானத்திற்காகவும், சமாதான சகவாழ்விற்காகவும், ஒரு புதிய அழிவு யுத்தத்தைத் தடுப்பதற்குமான போராட்டமே சோவியத் அயல்துறைக் கொள்கையின் பிரதான கண்ணியாகும். உலக நாடுகளின் கம்யூனிஸ்ட் கட்சிகள் ''சமாதானத்திற்கான போராட்டத்தையே தங்களது பிரதான கடமையாகக் கருதுகின்றன.‡''

எனவே உற்பத்தியிலும் அரசியல் வாழ்விலும் உள்ள எல்லாத் துறைகளிலும் நிகழ்ச்சித்தொடர் சங்கிலியின் பிரதான கண்ணி எது என்பதை நிர்ணயிப்பதே மிக முக்கியமானதாகும் என்பது தெளிவு. யதார்த்தத்தைப் பகுப்பாய்வதில் ஆக்கபூர்வமான அணுகல் முறைக்கு இதுவே மிக முக்கியமான தேவையாகும்

---

* கம்யூனிஸத்திற்கான பாதை. பக்கம் 524-525

‡சமாதானம் ஜனநாயகம் சோஷலிசத்திற்கான போராட்டம் பக். 57

# முடிவுரை

முரண் தர்க்கப் பொருள்முதல் வாதத்தின் முக்கிய மான தத்துவங்களை மட்டுமே, இந்நூல் வாசகர்களுக்கு அறிமுகப் படுத்துகிறது, ஆனால் முரண்தர்க்கப் பொருள் முதல் வாதத்தின் தத்துவம் பற்றிய கல்வி, அத்தோடு முடிவடைந்து' விடக்கூடாது. இந்தப் பொருளில் முதிர் திறன் பெறத் தொடர்ந்து செய்ய வேண்டியது என்ன? மூல நூல்களை, மார்க்ஸீஸ-லெனினிஸத்தின், ஸ்தாபகர்கள் எழுதிய நூல்களைப் படிப்பது தான் இதற்குச் சிறந்த வழி. இவற்றுள், எந்த நூலை முதலில் படிக்க வேண்டும்? இந்தக் கேள்விக்கு விடை அளிப்பது எளிதல்ல.

பொதுவான உலகக் கண்ணோட்டத்தின் பிரச்சனை களைப்பற்றி ஓரளவாவது கூறாத மார்க்ஸ், எங்கல்ஸ், அல்லது லெனினின் நூல் எதுவுமே இல்லை. மார்க்ஸின் நூல்களே இதற்குச் சிறந்த சான்று. மார்க்ஸின் மூலதனம் எனும் நூல் அரசியல் பொருளாதாரத்தைப் பற்றிய மிகச் சிறந்த நூல் என்பது நன்கு தெரிந்ததே. ஆனால் அதில் எவ்வளவு தத்துவ ஞானக் கருத்துக்கள் அடங்கி உள்ளன! பொருளாதார விஞ்ஞானம், புரட்சிகரச் செயல்முறை ஆகியவற்றின் ஸ்தூலமான பிரச்

சனைகளைப் பகுத்தாய்வதில், மார்க்ஸினால் தோற்று விக்கப்பட்ட முரண் தர்க்க முறையை எப்படிப் பயன் படுத்துவது என்பதற்கு அது ஒரு சிறந்த முன் உதா ரணமாகும். பொருள் முதல்வாத முரண் தர்க்கத்தின் ஒவ்வொரு வகையின் வளர்ச்சியும் இந்த நூலைச் சார்ந்தே யிருந்தது. இதில்தான் மார்க்ஸ், "அவரிடத் தில் (ஹெகல்) முரண் தர்க்கம் தலை கீழாக நிற்கிறது. மறைபொருள் எனும் ஓட்டினுள் இருக்கும் அறிவார்ந்த வித்தைக் காணவேண்டுமானால், முதலில் அதை நேரா க்த் திருப்பி நிறுத்த வேண்டும்"† என்று எழுதினார். பொருள் முதல்வாத முரண் தர்க்கமும் ஹெகலின் கருத்து முதல்வாத முரண் தாக்கமும், முற்றிலும் முர ணானவை என்பதை மார்க்ஸ் இந்த நூலில் வெளிப் படுத்தினார். மாாக்ஸ் அளவை இயலைப் பற்றிய ஒரு ஆய்வுரையை நமக்கு விட்டுச் செல்லவில்லை, ஆனால் மூலதனத்தின் அளவையை நமக்கு விட்டுச் சென்றிருக் கிறார், என்று லெனின் கூறியது முற்றிலும் நியாய மானதே.

மார்க்ஸிஸ தத்துவ ஞானத்தைப் பற்றித் தெரிந்து கொள்வதற்குத் தனிப்பட்ட முக்கியத்துவம் வாய்ந்த நூல்கள் பல மார்க்ஸிஸ-லெனினிஸ இலக்கியங்களில் உள்ளன. அவற்றைப் பற்றிச் சுருக்கமாகக் கூறு வோம்.

**டூரிங்குக்கு மறுப்பு**

எங்கெல்ஸின், 'டூரிங்கிற்கு மறுப்பு' என்ற நூல், ஜெர்மன் குட்டி பூர்ஷுவா, கருத்து முதல் வாதியான, யூஜென் டூரிங்கிற்கு எதிராக எழுதப்பட்ட போராட்ட ஆர்வமிக்க ஒரு சொல்

---

† மார்க்ஸ்: மூலதனம், பாகம் 1, பக். 20.

லோவியம். யூஜென் டூரிங் தன்னை ஒரு ''பொருள் முதல் வாதி'' யென்றும் ''சோஷலிஸ்டு'' என்றும் கூறிக் கொண்டார். ஆனால் உண்மையில் அவர் பொருள்முதல் வாதம், சோஷலிஸம் இரண்டையும் பற்றிய ஒரு கொச்சையான கருத்தையே வெளியிட்டார். ஒரு நேரடியான சொற் சிலம்பம் என்பதுமட்டுமல்ல, எங் கல்ஸுடைய நூலின் முக்கியத்துவம். மார்க்ஸிஸத் தின் மூன்று பகுதிகளாகிய தத்துவ ஞானம், அரசியல் பொருளாதாரம், விஞ்ஞான ரீதியான கம்யூனிஸம், ஆகிய மூன்றையும், விரிவாகவும், தெளிவாகவும், விளக்கும் நூல் என்று அதை வரலாறு போற்றுகிறது. இந்த நூலை சிருஷ்டிப்பதில் மார்க்ஸ் முக்கியமான பங்கு வகித்தார். அவர் எங்கெல்ஸின் கையெழுத்துப் பிரதியைப் படித்து, அதைப்பற்றிய தனது கருத்துக் களைக் கூறினார். அவர் அதைத் தொகுத்ததோடு, அதில் ஒரு அத்தியாயத்தையும் எழுதினார்.

தத்துவஞானம், அரசியல் பொருளாதாரம், சோஷ லிஸம், என்ற மூன்று பகுதிகளைக் கொண்டது இந்த நூல். முரண் தர்க்கப் பொருள் முதல் வாதத்தைப் பற்றிய ஒரு விரிவான விளக்கம் முதல் பகுதியில் உள்ளது.

உலகம் புறவயமாக உள்ளது, அதில் நடைபெறும் நிகழ்ச்சிகளை மனிதன் பிரதிபலிக்கிறான் என்ற மிக முக்கியமான கோட்பாட்டைப் பற்றிய ஒருவரது அறிவு, இந்த முதல் பாகத்தைப் படிப்பதன் மூலம் விரிவடையும். ஒவ்வொரு விஞ்ஞானமும், யதார்த்தத்தைப் பிரதி பலிக்கிறது என்று எங்கெல்ஸ் கூறுகிறார். கணி தத்தை உதாரணமாகக் கொண்டு இதை விளக்கும் போது, அவர், ''இலக்கம், எண், என்ற கருத்துக்கள், யதார்த்த உலகிலிருந்து அன்றி வேறு எங்கிருந்தும்

தோன்றிவிடவில்லை, மற்ற எல்லா விஞ்ஞானங்களையும் போலவே, கணிதமும், மனிதனின் தேவைகளிலிருந்தே-நிலத்தை அளத்தல், கலனில் இருக்கும் பொருளை அளத்தல், நேரத்தைக் கணக்கிடல், இயந்திர உற்பத்தி, ஆகிய தேவைகளிலிருந்தே—தோன்றியது"†என்று எழுதினர்.

எங்கெல்ஸின் மிக முக்கியமான கருத்தாகிய "உலகின் உண்மையான ஒருமை, அதன் பருப்பொருள் தன்மையிலுள்ளது. தத்துவ ஞானம், இயற்கை விஞ்ஞானம், இவற்றின் ஒரு நீண்ட கால வளர்ச்சியினுல் இது நிரூபிக்கப் பட்டுள்ளது", என்ற கருத்தும் இதில் தான் காணப்படுகிறது.$ எங்கெல்ஸின் இந்த வாசகம் பரந்த முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ஒரே ஒரு, பருப்பொருள் தன்மையான, "இந்த" உலகம்தான் இருக்கிறது என்பதை விஞ்ஞானம், தத்துவஞானம், இவற்றின் வரலாறு உறுதிப்படுத்தியுள்ளது. அதன்மூலம் கருத்து முதல் வாதத்திற்கும், மதத்திற்கும், மரண அடி கொடுக்கப்பட்டுள்ளது.

பொருள், இயக்கம் இவற்றின் ஒருமை, அவற்றிடையேயுள்ள பிரிக்க முடியாத தொடர்பு, என்ற மிக முக்கியமான பிரச்சனையை, எங்கெல்ஸின் நூல் மிக விரிவாக விளக்குகிறது. மார்க்ஸிஸத்தின் ஒரு அடிப்படையான கருத்தை, அதாவது, "இயக்க மற்ற பொருள் எப்போதும், எங்கும், இருந்ததில்லை, அது இருக்கவும் முடியாது"‡ என்ற கருத்தை அவர் முன் வைக்கிருர். இந்தக் கருத்து ஆழ்ந்த நாத்திக முக்கியத்

† எங்கெல்ஸ் : டூரிங்கிற்கு மறுப்பு, 1954. பக் (58-59)

$ எங்கெல்ஸ், டூரிங்குக்கு மறுப்பு; பக். 65-66

‡ ,, ,, ,, பக். 86

துவம் வாய்ந்ததாகும். இயக்கம் என்பது பொருளின் நிரந்தரமான குணும்சமெனும் போது, ஒரு "தெய்வீக முதல் தூண்டல்" என்ற பிரச்சனைக்கே இடமில்லாது போகிறது.

பொருள் முதல் வாத முரண் தர்க்கத்தின், முக்கியமான விதிகளை வெளியிடும் பகுதிகள் குறிப்பிட்ட முக்கியத்துவம் வாய்ந்தவை.* பௌதீகம், இரசாயனம், உயிரியல், கணிதம் ஆகிய இயற்கை விஞ்ஞானங்களது புள்ளி விவரங்களின் அடிப்படையிலே அவை விளக்கப்பட்டுள்ளன.

புறவயமான உண்மை, ஓரளவான உண்மை, முழுமுதன்மையான உண்மை என்ற பிரச்சனையையும் எங்கெல்ஸின் நூல், விரிவாகவும், நுணுக்கமாகவும் ஆராய்கிறது. டூரிங்கின், முடிவான, இறுதியாக உண்மைகளை எங்கெல்ஸ் இங்கு விமர்சித்து இருப்பது அடிப்படை முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.‡ வறட்டுக் கொள்கை வாதத்தைப் பற்றிய ஒரு பொதுவான விமரிசனம் அது. மார்க்ஸிஸக் கோட்பாட்டின் பல்வேறு கருத்துக்களை, வரலாற்று நிலைகளிலிருந்து தனித்து நிற்கும், "நிரந்தரமான", "மாற்ற முடியாத" வறட்டுக் கொள்கைகளாக மாற்ற விரும்பும், நவீன வறட்டுக் கொள்கையாளர்களுக்கு எதிரான போராட்டத்தில், இந்த விமரிசனம் எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை வாசகர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

---

* ஒருமையும் போராட்டமும் என்ற விதி பற்றி பக் 165, 166ல் காண்க எண்ணியலான மாற்றங்கள் பண்பியலான மாற்றங்கள் ஆதல் எனும் விதி பற்றி பக் 95, 173ல் காண்க. மறுப்பின் மறுப்பு என்ற விதி பற்றி பக் 190, 194–195. காண்க.

‡ எங்கெல்ஸ், டூரிங்கிற்கு மறுப்பு. பக்: 119-122

சுதந்திரம் எனும் பிரச்சினையை எங்கெல்ஸ் இந்த நூலின் மூன்றாவது பகுதியில் விவாதிக்கிறார். "தேவைகளின் உலகிலிருந்து, சுதந்திர உலகிற்கு மனிதன் உயர்வதே"§ கம்யூனிஸம் என்ற அவரது புகழ்பெற்ற வாசகம் இங்குதான் காணப்படுகிறது. கம்யூனிஸ மாளிகையைக் கட்டிக் கொண்டிருக்கும் சோவியத் மக்கள், இன்று இதைத்தான் சாதித்துக்கொண்டு வருகிறார்கள்.

**லுட்விக் ப்யூர்பாக்—ம் சாஸ்திரிய ஜெர்மன் தத்துவஞானத்தின் முடிவும்**

இது ஒரு சிறந்த படைப்பு. இதில் மார்க்ஸீய தத்துவ ஞானத்தின் சாரத்தை எங்கெல்ஸ் சுருக்கமாக விளக்குகிறார். லுட்விக் ப்யூர்பாக், டூரிங்கிற்கு மறுப்பு ஆகிய இரு நூல்களும், "கம்யூனிஸ்டு அறிக்கையைப் போலவே, வர்க்க உணர்ச்சி பெற்ற ஒவ்வொரு தொழிலாளியின் கையிலும் இருக்கவேண்டிய நூல்கள்"† என்று லெனின் எழுதினார்.

லுட்விக் ப்யூர் பாக்கின் முதல் அத்தியாயத்தைப் படிக்கும் போது, ஹெகலின் தத்துவஞானம் பற்றிய நுணுக்கமான விமர்சனத்திற்கு முக்கிய கவனம் அளிக்கவேண்டும். குறிப்பாக, ஹெகலின் முரண்தர்க்க முறைக்கும், அவரது தத்துவஞானத்தின் கருத்து முதல் வாத உட்பொருளுக்குமிடையேயுள்ள முரண்பாடுகளைப் பற்றிய பகுப்பாய்வுக்கு முக்கியமான கவனம் அளிக்க வேண்டும். இந்த முரண்பாட்டைப் பற்றி, ஏற்கனவே வாசகர்கள் இரண்டாவது சொற்பொழிவில் தெரிந்து கொண்டுள்ளார்கள்.

---

§ ஏங்கெல்ஸ், டூரிங்கிற்கு மறுப்பு பக்: 391

† லெனின், கட்டுரைத் தொகுப்பு, பாகம்:19, பக்:24

தத்துவஞானத்தின் அடிப்படைக் கேள்வியை—சிந்தனைக்கும், உருவுக்கும் உள்ள உறவு, ஆன்மாவுக்கும், இயற்கைக்கும் உள்ள உறவு என்ற கேள்வியை* —எங்கெல்ஸ் இரண்டாவது அத்தியாயத்தில் அற்புதமாக வரையறை செய்கிறார். எந்தத் தத்துவஞானத்தையும் புரிந்துகொள்ள, இது மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததாகும், தத்துவ ஞானத்திலுள்ள, கருத்து முதல் வாதப் போக்கை, அது எந்த முகமூடிக்குள் மறைந்திருந்த போதிலும் கண்டுபிடித்து, அம்பலப்படுத்த இது உதவுகிறது. யதார்த்த உலகைப் புரிந்து கொள்வதே, பொருள் முதல் வாதக் கண்ணோட்டத்தின் பொருள், முன்னரே தோற்றுவிக்கப்பட்ட கருத்து முதல் வாதத் தளைகளிலிருந்து விடுபட்டு அதை அணுக வேண்டும் என்பதையும் இதில்தான் எங்கெல்ஸ் கூறுகிறார். ¶

தத்துவ ஞானத்தின், அடிப்படைக் கேள்வியின் இரண்டாவது அம்சத்தை, அதாவது மனித மனத்தால் புற உலகை அறியக் கூடுமா என்ற அம்சத்தைப் பற்றிய வரையறையையும் லுட்விக் ப்யூர்பாக்கில் காணலாம். இந்தக் கேள்விக்கு விடையளிக்கும் போது, எங்கெல்ஸ் அறியொணாமைத் தத்துவத்தைக் கண்டிப்பதோடு, அதை மறுதலிப்பதில் சமூகச் செயல் முறைக்குள்ள நிர்ணயமான பங்கையும் வலியுறுத்துகிறார். ப்யூர்பாக் பற்றிய ஆய்வுரை என்ற கட்டுரையில் மார்க்ஸ் வெளியிட்ட கருத்தை மேலும் அபிவிருத்தி செய்யும் எங்கெல்ஸ், அறிவின் தத்துவார்த்தத்திற்கு அடிப்படை

---

* மார்க்ஸ், எங்கெல்ஸ் தேர்ந்தெடுக்கப்பட்ட கட்டுரைகள், பாகம் II பக் 368-69

¶ ,, ,, ,, பக்: 386

யாகவும், உண்மைக்கு ஓர் உரை கல்லாகவும், இருப்பது செயல் முறையே என்று கூறுகிருர். நம்மைச் சுற்றி யுள்ள உலகம் அறிந்து கொள்ளக் கூடியதுதான் என் பதற்குச் செயல் முறையே ஒரு தனிச் சான்ருகும் என்ற கருத்தை அவர் வலுப்படுத்துகிருர்.

முரண் தர்க்கப் பொருள் முதல் வாதத் தத்து வார்த்தத்தின் சாரத்தை, 4வது அத்தியாயம் விளக்கு கிறது. ஹெகலின் தத்துவ ஞானத்தை முற்றிலும் புறக்கணித்து விட்டதற்காக, அவர் ப்யூர்பாக்கைக் கண்டிக்கிருர். மாருக, அவரது (ஹெகலது) தத்துவ ஞானத்தின் 'அறிவார்ந்த வித்தாகிய' முரண் தர்க் கத்தைப் பாதுகாக்கக் கூடிய முறையில் அதன் பிற் போக்கு அம்சங்களைக் களைத்திருக்க வேண்டுமென்பது அவர் கருத்து. மார்க்ஸிஸத்தின் சிருஷ்டி கர்த்தாக்கள் இதைத்தான் சாதித்தனர். ப்யூர்பாக்கின் பொருள் முதல் வாதத்தையும், ஹெகலின் முரண் தர்க்கத்தை யும், அடிப்படையில் மாற்றி அமைத்து; முரண் தர்க்கப் பொருள் முதல் வாதம் எனும் உண்மையான, விஞ் ஞான ரீதியான, தத்துவ ஞானத்தை அவர்கள் தோற்று வித்தனர்.

**பொருள் முதல் வாதமும் அனுபவ வாத விமர்சனமும்,**

மார்க்ஸீய தத்துவ ஞானத்தின் வளர்ச்சியில், லெனினுடைய இந்த நூல் ஒரு புதிய சகாப்தத் தைக் குறிக்கிறது. 1905—07ல், முதல் ரஷ்ய பூர்ஷுவா—ஜன நாயகப் புரட்சி. தோல்வியடைந்த பின் தோன்றிய பிற் போக்குக் காலத்தில், மே, 1909ல் இந்த நூல் வெளியிடப் பட்டது. லெனினுடைய, பொருள் முதல் வாதமும் அனுபவ வாத விமர்சனமும் எனும் நூலின் வரலாற்று முக்கியத்து

வத்தைப் புரிந்துகொள்ள, இந்தச் சூழ்நிலையை மனதில் வைத்துக் கொள்ள வேண்டியது அவசியம்.

பொருளாதாரம், அரசியல், தத்துவார்த்தம் ஆகிய எல்லாத் துறைகளிலும், பிற்போக்காளர்கள் தங்கள் தாக்குதலைத் தொடுத்திருந்தார்கள். அந்த நிலைகளின் கீழ், மார்க்ஸிய தத்துவ ஞானத்தைத் திருத்துவதற்கு எடுத்துக் கொள்ளப்படும் எந்த முயற்சியும் ஆபத்தானதாகவே இருந்திருக்கும், போக்தனேவ். பாஸரோவ், யுஷ்கேவிச். வாலந்திேனேவ், முதலிய ரஷ்ய சோஸல்—டெமாக்ரட்களின் குழு ஒன்று அத்தகைய திருத்தல் பணியை மேற்கொண்டது. முரண் தர்க்க, மற்றும் வரலாற்று ரீதியான பொருள் முதல் வாதத்தின் அடிப்படைகளைத் தாக்கி, அவர்கள் வரிசையாகப் பல கட்டுரைகளையும் நூல்களையும் வெளியிட்டார்கள்.

முரண் தர்க்கப் பொருள் முதல் வாதம் ''காலங் கடந்தது'' என்றும்; விஞ்ஞானத்தின் புதிய மட்டத்திற்கு ''இயைந்தது அல்ல'' என்றும், எனவே அதை ''செம்மைப்'' படுத்தி ''புனருத்தாரணம்'' செய்வது அவசியமென்றுங் கூறித் தங்கள் திருத்தப் பணியை அவர்கள் நியாயப்படுத்த முயற்சித்தனர். அந்தக் காலத்தில் மேலை நாடுகளில் பிரசித்தி பெற்று இருந்த கருத்து முதல் வாதப் போக்கை ''அனுபவம்'' எனும் தத்துவ ஞானமாகிய ''அனுபவ வாத விமர்சனத்தை'', அவர்கள் மார்க்ஸிஸத் தத்துவ ஞானத்திற்குப் பதிலாக முன் வைத்தார்கள். இந்தப் போலி—விஞ்ஞானப் பெயரால், அவர்களது கோட்பாட்டின் தன்வயக் கருத்து முதல் வாத சாரத்தை அவர்கள் மூடி மறைத்தார்கள். இந்தக் கோட்பாட்டைக் கண்டுபிடித்தவரும், ஆஸ்திரிய நாட்டு பௌதீக வாதியும், தத்துவ ஞானியுமாகிய எர்ன்ஸ்ட்

மாஷ் என்பவரின் பெயரால், இந்தத் தத்துவ ஞானத்தை மாஷிஸம் என்று லெனின் அழைத்தார்.

மற்றுமொரு முக்கியமான நிலையையும் நாம் கவனிக்க வேண்டும். இந்த நூற்றுண்டின் தொடக்கத்தில், பௌதீகத்தில் பல முக்கியமான கண்டுபிடிப்புகள் தோன்றின. அவை தத்துவ ஞானத்தில் பல புதிய பிரச்சனைகளைக் கிளப்பின. இதைப் பற்றி நாம் மூன்ருவது சொற்பொழிவிலே பார்த்தோம். மாஷிஸ்டுகள், பொருள்வாதத்தை "மறுதலிப்பதற்கு" இந்தக் கண்டுபிடிப்புகளைப் பயன்படுத்திக் கொண்டு, தங்கள் தத்துவ ஞானத்தை, 20வது நூற்றுண்டின் "இயற்கை விஞ்ஞானத்தின் தத்துவ ஞானம்" என்று கூறிக் கொண்டார்கள் என்பதை இங்கு வலியுறுத்த வேண்டும். ரஷ்ய மாஷிஸ்டுகள், இந்தப் பொய்யைப் பற்றிக் கொண்டுதான், மாாக்ஸிஸம் 'காலங் கடந்தது" என்று குற்றஞ் சாட்டினுர்கள். எனவே லெனின் தனது நூலில், இயற்கை விஞ்ஞானத்தின், குறிப்பாக பௌதீகத்தின் புதிய புள்ளி விவரங்கள் அனைத்தையும் ஆழ்ந்து பரிசீலனை செய்து அவற்றைப் பொதுமைப் படுத்தினுர். இந்த நூற்றுண்டின் தொடக்கத்தில் பௌதீகத்தில் ஏற்பட்ட புரட்சியின் சாரத்தையும், முக்கியத்துவத்தையும், மாஷிஸம் திரித்துக் கூறுகிறது என்பதை எடுத்துக் காட்டினுர்.

லெனின் இந்த நூலில் வெளியிட்டுள்ள முடிவுகளில் எவற்றிற்கு முக்கிய கவனம் அளிக்க வேண்டும்?

தத்துவ ஞானத்தின் வரலாறு முழுவதும், பொருள் முதல் வாதத்திற்கும், கருத்து முதல் வாதத்திற்கும் இடைப்பட்ட போராட்டத்தாலானது என்பதை நாம் ஏற்கனவே பார்த்தோம். ஆனுல் மாஷிஸ்டுகள், தாங்கள்

பொருள்முதல் வாதத்திற்கும், கருத்து முதல் வாதத்திற்கும் ''அப்பாற் பட்டவர்கள்'' என்றும், ஒரு ''நடு நிலை'' தத்துவ ஞானத்தைத் தாங்கள் தோற்றுவித்து விட்டதாகவும், எடுத்துக் காட்ட முயற்சித்தனர். மாஷிஸ்டுகள், எவ்வகையான 'புதிய'', ''நடு நிலை'' தத்துவ ஞானத்தையும் சிருஷ்டித்து விடவில்லை என்பதை லெனின் தனது முன்னுரையில் விளக்கிக் காட்டினார். பெர்க்கிலியின், தன்வயக் கருத்து முதல் வாதத்தின் புத்துயிர்ப்பே, அவர்களது தத்துவ ஞானம். ''சில 'மார்க்ஸிஸ்டுகள்' 1908லும், சில கருத்து முதல் வாதிகள் 1910லும், எப்படி மார்க்ஸிஸத்தை மறுதலித்தார்கள்'' என்பது முன்னுரையின் தலைப்பாகும். ரஷ்ய மாஷிஸ்டுகளின் கூற்றுக்களை, அவர்களுக்கு 200 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த பெர்க்லியின் கூற்றுக்களோடு ஒப்பிட்டு, அவர்களது கருத்துக்கள் முழுமையாக ஒத்திருப்பதை லெனின் எடுத்துக் காட்டினார்.

அறிவின் கோட்பாடு எனும் அடிப்படைப் பிரச்சனை பற்றிய மாஷிஸ்டுகளின் ''வாதங்களை''. லெனின் முதல் மூன்று அத்தியாயங்களில் அம்பலப் படுத்துவதோடு, முரண் தர்க்கப் பொருள் முதல் வாதத்தின் கொள்கைகள் அசைக்க முடியாதவை என்பதை நிலைநாட்டுகிறார் மாஷிஸ்டுகளே தங்கள் கருத்துக்களை மிகக் குழப்பமான முறையில்தான் விளக்கினார்கள். ஆதலால், இந்த அத்தியாயங்களைப் படிப்பது சற்றுச் சிரமமாக இருக்கலாம்.

மாஷிஸ்டு கோட்பாடுகளின் உண்மையான உட்பொருளை லெனின் வெளிப்படுத்தினார். உதாரணமாக மாஷின் ''உலக—மூலகங்கள்'' கோட்பாட்டைப் பற்றியும், அவெனரியஸின் (மாஷிஸ்டுகளில் ஒருவர்) ''முக்

கியமான இணைப்பு'' எனும் கோட்பாட்டைப் பற்றியும் லெனின் செய்த விமரிசனத்தைப் பார்க்கலாம்*

புலன் உணர்ச்சிகள் என்னும் பிரச்சனையைப் பொருத்து, மாஷின் ''உலக—மூலகங்கள்'' கோட்பாடு விமர்சிக்கப்பட்டுள்ளது. இங்கு, பொருள் முதல் வாத வழி, கருத்துமுதல் வாத வழி, என இரண்டு வழிகளை லெனின் வரையறை செய்தார். ''நாம் வஸ்துக்களிலிருந்து தொடங்கி, புலன் உணர்ச்சிகளையும், எண்ணங்களையும் நோக்கிச் செல்ல வேண்டுமா? அல்லது எண்ணம், புலன் உணர்ச்சி இவற்றிலிருந்து வஸ்துவை நோக்கிச் செல்ல வேண்டுமா? முதல் வழி, அதாவது, பொருள் முதல்வாத வழி எங்கெல்ஸால் ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளது. இரண்டாவது வழி (அது) கருத்து முதல்வாத வழி மாஷினுல் ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளது''. †

மாஷின் ''உலக—மூலகங்கள்'' கோட்பாட்டில், புலன் உணர்வு பற்றிய பிரச்சனை, கருத்து முதல் வாத வழியில் கையாளப் பட்டுள்ளது. மாஷ், புலன் உணர்வுகளை ''உலக மூலகங்கள்'' என்று கூறுகிறார். உலகம் புறவயமான வஸ்துக்களாலன்றி, ''உலக மூலகங்களான'' புலன் உணர்வுகளாலானது என்று அவர் கூறுகிறார். புலன் உணர்வுகளின் தொகுதிகளே வஸ்துக்கள். எனவே நாம் வஸ்துக்களை அன்றி, புலன் உணர்வுகளையே ஆராய வேண்டுமென்று கூறப்படுகிறது. இது ஒரு தன்வய-கருத்து முதலவாதக் கண்ணோட்டம். வாசகர்களைக் குழப்புவதற்கு மாஷ் போலி

---

* லெனின் கட்டுரைத் தொர்குப்பு, பாகம். 14, பக். 53-74

† லெனின், கட்டுரைத் தொகுப்பு பாகம் 14, பக். 42.

வாதத்தைக் கைக்கொள்கிறுர். மாஷின் ''உலக மூல கங்கள்'' கோட்பாட்டின் போலி வாதத்தை லெனின் அம்பலப் படுத்தினுர்.

இதைப் புரிந்து கொள்ள பின்வரும் விஷயத்தைக் கவனியுங்கள். மூலகங்களின் இரண்டு தொகுதிகள் இருக்கின்றன என்று மாஷ் கூறுகிறுர் : (1) மனிதனைச் சாராது இருப்பவை (இவற்றை அவர் பௌதீக மூலகங்கள் என்று கூறுகிறுர்) (2) மனிதனைச் சார்ந்திருப்பவை (இவற்றை அவர் உள மூலகங்கள் என்கிறுர்) இதில், பொய்மை, போலிவாதம், எங்கு இருக்கிறது? பௌதீக, உள, மூலகங்களின் இரு தொகுதிகளும், நிரந்தரமாகச் சேர்ந்து இருக்கின்றன என்பதிலேயே அது உள்ளடங்கியுள்ளது. யதார்த்த உலகம், ''பௌதீகத் தொகுதி'', புற வயமாக இல்லை, ''உளத் தொகுதியை''ச் சார்ந்தே உள்ளது என்ற கருத்து இதில் உள்ளார்ந்துள்ளது. ஆனுல் இதுதான் தன்வயக் கருத்து முதல் வாதத்தின் சாரமுமாகும். அக் கோட்பாட்டின்படி தன்னிலையால், மனிதனுல், உணரப்படும் போதுதான் வஸ்துக்கள் இருக்கின்றன.

அவெனுரியஸின் ''முக்கிய இணைப்பை''ப் பற்றியும் இதைத் தான் கூற வேண்டி இருக்கிறது. அவர் கருத்துப்படி, தன்னிலைக்கும், பருப்பொருள் சூழ்நிலைக்குமிடையே, அல்லது அவரது வார்த்தையிலேயே சொன்னுல் தன்னிலைக்கும், தன்னிலை சுற்றத்திற்கும் இடையே ஒரு பிரிக்க முடியாத தொடர்பு (இணைப்பு) இருக்கிறது. வேறொரு முறையில் சொன்னுல், இயற்கையும், தன்னிலையும் சேர்ந்துதான் இருக்க முடியும். இந்தக் கண்ணோட்டத்தை லெனின் எப்படி மறுதலிக்கிறுர்?

லெனின் மிக எளிய, ஆனுல் விஞ்ஞான ரீதியில் ஆழ்ந்த ஒரு கேள்வியை கேட்கிறுர். ''இயற்கை மனி

தனுக்கு முன் இருந்ததா"? இந்தக் கேள்விக்கு விஞ்ஞான ரீதியான விடை, பொருளின் முதன்மையையும், தன்னறிவின் இரண்டாம் பட்சமான தன்மையையும் பற்றிய பொருள் முதல் வாதக் கோட்பாட்டை அற்புதமாக உறுதிப் படுத்துகிறது என்று நாலாவது சொற்பொழிவில் நாம் கூறியுள்ளோம். அதே சமயத்தில் "முக்கிய இணைப்புக்" கோட்பாட்டை உறுதியாக அது மறுதலிக்கிறது.

மனிதன் தோன்றுவதற்கு வெகு காலத்திற்கு முன்பே இயற்கை இருந்தது. எனவே மனிதனும், இயற்கையும் பிரிக்க முடியாதபடி இணைந்து இல்லை. வேறு வழியில் சொன்னால் இயற்கை மனிதனிடமிருந்து தனித்து, சுயேச்சையாக இருக்கிறது.

மாஷிஸத்தை விமர்சித்து, அதன் வாதங்களை அம்பலப்படுத்தும் அதே சமயத்தில், லெனின் அறிவு பற்றிய மார்க்ஸிஸக் கோட்பாட்டை விரிவாக வலுப்படுத்தி வளர்க்கிறார். நமது அறிவு, யதார்த்தத்தின் ஒரு பிரதிபலிப்பு, ஒரு நகல், என்பதை இங்குதான் அவர் ஒரு விரிவான விளக்கத்தின் மூலம் எடுத்துக் காட்டுகிறார். அனேகமாக இரண்டாவது அத்தியாயம் முழுவதுமே இந்தப் பொருளைப் பற்றித் தான் இருக்கிறது.* அறியொணுமைத் தத்துவம் பற்றிய தனது விமர்சனத்தின் அடிப்படையில் லெனின் எடுத்த, மூன்று மிக முக்கியமான அறிவியல்சார்ந்த முடிவுகளை 'வாசகர்கள் இங்கு காணலாம்:

(1) வஸ்துக்கள் நமது தன்னறிவிலிருந்து சுயேச்சையாக, நமது புலன் அறிவிலிருந்து சுயேச்சையாக

---

* லெனின் கட்டுரைத் தொகுதி-பாகம்: 14, பக் 99, 103, 114, 107, 114, 115

நமக்கு வெளியே இருக்கின்றன. (2) வஸ்துவிற்கும், அதன் வெளித்தோற்றத்துக்குமிடையே- கொள்கை யளவில் வேறுபாடு எதுவுமில்லே. அத்தகைய வேறு பாடு இருக்கவும் முடியாது நமக்கு அதைப் பற்றித் தெரிந்ததற்கும், இன்னும் தெரியாததற்குமிடையே தான் வேறுபாடு உள்ளது. (3) விஞ்ஞானத்தின் மற்ற எல்லாத் துறைகளேயும் போலவே, அறிவு பற்றிய கோட்பாட்டிலும், நாம் முரண்தர்க்க ரீதியில் சிந்திக்க வேண்டும். அதாவது நாம், அறிவை ஏற்கனவே தயாரிக்கப்பட்டதாகவும், மாற்ற முடியாததாகவும் கருதக் கூடாது. ஆனல் அறியாமையிலிருந்து அறிவு எப்படித் தோன்றுகிறது என்பதையும், அறைகுறை யான, துல்லியமற்ற அறிவு எப்படி முழுமையடைந்து, மேலும் துல்லியமாகிறது என்பதையும் நாம் நிர்ண யிக்க வேண்டும்.

அறிவின் பிரச்சனேகளேப் பற்றி ஆராயும்போது, குறியீடுகள் கோட்பாட்டைப் பற்றி லெனின் செய்த விமரிசனத்திற்கு கவனம் அளிக்கவேண்டும். நான் காவது அத்தியாயத்தில் இதற்கு ஒரு தனிப்பட்ட பகுதி உள்ளது. ‡ குறியீடுக் கோட்பாட்டின்—இது சித்திர எழுத்துக் கோட்பாடு என்றுங் கூறப்படுகிறது— சாரத்தை இங்கு லெனின் அம்பலப்படுத்துகிருர்

நமது அறிவு, யதார்த்தத்தின் பிம்பங்களால், நகல் களாலானது என்பதை ஏற்கனவே பார்த்தோம். ஆனல் மேற்கண்ட கோட்பாட்டைப் பின்பற்றுபவர்கள், மனித அறிவு, யதார்த்த வஸ்துக்களின் ''சித்திர எழுத்துக் களால'', ''குறியீடுகளால்'' மட்டுமே ஆனது; அவற்

---

‡ லெனின், கட்டுரைத் தொகுதி, பாகம்: 4, பக்: 232 - 38

றின் நகல்களால் அல்ல என்று கூறுகிறுர்கள் யதார்த் தத்திற்கும், அவற்றிற்கும் எவ்விதமான பொருத்தமும் இல்லே. சித்திர எழுத்துக் கோட்பாடு விஞ்ஞான ரீதி யற்ற கான்ட்வகைக் கோட்பாடு என்பதை லெனின் எடுத்துக் காட்டுகிருர். ஏனெனில், நமது அறிவு யதார்த்தத்திற்கு இயைந்ததல்ல என்று வலியுறுத்து வதன் மூலம், அந்தக் கோட்பாடு உலகை அறிவதற் கான சாத்தியக்கூறுகளே மறுதலிக்கிறது.

லெனினது நூலில் ஒரு முக்கியமான பகுதி பொருள் பற்றிய பிரச்சனேக்கு ஒதுக்கப்பட்டுள்ளது. பொருளுக்கு, லெனின் கொடுத்த தத்துவஞான வரை யறையை, நாம், மூன்ருவது சொற்பொழிவில் எடுத்துச் சொன்னேம். ⊗ இந்த வகையை அவர் மீண்டும், மீண்டும் எடுத்துக்கொண்டு, அனேகமாக ஒவ்வொரு அத்தியாயத்திலுமே அதற்குப் புதிய, புதிய விளக்கங் களேத் தருகிருர். ‡

இயற்கை விஞ்ஞானத்தால் எழுப்பப்பட்ட தத்துவ ஞானப் பிரச்சனேகளேப் பற்றிக் கூறும் 5வது அத்தி யாயத்திற்கு, வாசகர்கள் தனிப்பட்ட கவனம் அளிக்க வேண்டும். பெளதீகத்தில் ஏற்பட்ட புரட்சியின் தன்மை என்ன? பெளதிகத்தில் தோன்றியுள்ள நெருக் கடியின் முக்கியமான அம்சங்கள் யாவை? அது எப் படித் தோன்றியது? நெருக்கடியிலிருந்து மீள்வதற்கு வழி என்ன? இதுபோன்ற பல கேள்விகளுக்கு அங்கு விடை காணலாம்.

---

⊗ இதே நூலில் பக்: 44 காண்க.

‡ லெனின், கட்டுரைத் தொகுப்பு: பாகம்: 11. பக்: 26, 27, 28, 29, 46,47,63,75,86, 92-93 146,274-77,179-2, 297-98,308,312-13 காண்க.

பௌதீகத்தில் புரட்சியை ஏற்படுத்திய கண்டு பிடிப்புகளே, அதில் தோன்றிய நெருக்கடிக்கும் காரண மல்ல என்பதை லெனின் எடுத்துக் காட்டினுர். இந்தக் கண்டுபிடிப்புகளிலிருந்து, பூர்ஷுவா தத்துவஞானிகள், எடுத்த கருத்து முதல் வாத முடிவுகளிஞலேயே நெருக் கடி தோன்றியது. உண்மை என்னவெனில், கருத்து முதல்வாதத் தத்துவார்த்திகளும், மாஷிஸ்டுகளும், அனுபவவாத விமர்சகர்களும், இயற்கை விஞ்ஞானத் தில் ஏற்பட்ட புரட்சியைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன் படுத்திக் கொள்ள முயற்சித்தனர். "பழைய விதி கள், அடிப்படைக் கொள்கைகள் ஆகியவற்றின் முறிவு மனதிற்கு வெளியே புறவயமான யதார்த்தம் இருப் பதை ஏற்றுக்கொள்ள மறுப்பது, அதாவது பொருள் முதல் வாதத்திற்குப் பதிலாகக் கருத்து முதல்வாதத் தையும், அறியொணுமை தத்துவத்தையும் வைப்பது, இவற்றில்தான் தற்கால பௌதீகத்தின் நெருக்கடியின் சாராம்சம் அடங்கியுள்ளது. இந்த நெருக்கடியைத் தோற்றுவித்தகேள்விகளைச்சார்ந்து ஏற்பட்டுள்ள அடிப் படையான, தனிப்பட்ட சங்கடத்தைப் பின்வருமாறு கூறலாம். "பொருள் மறைந்துவிட்டது,"† என்று லெனின் எழுதியபோது, பௌதீகத்தில் தோன்றிய புரட்சிக்கும், தத்துவஞானக் கருத்து முதல் வாதத்திற் குமிடையேயுள்ள இந்த இணைப்பைத்தான் எடுத்துக் காட்டினுர். "பௌதீகக் கருத்து முதல் வாதம்" எனும் பயங்கர நிகழ்வு இந்த அடிப்படையிலிருந்துதான் தோன்றியது. இதையே லெனின் விரிவான, விஞ் ஞான ரீதியான விமர்சனத்திற்கு உட்படுத்திஞர்.

---

† லெனின், கட்டுரைத் தொகுப்பு, பாகம். 14, பக்: 218

தற்கால மாஷிஸ்டுகள், கம்யூனிஸ எதிரிகள், எல்லா வகையான திருத்தல்வாதிகள், ஆகியவர்களுக்கு எதிரான போராட்டத்தில், லெனினின் இந்தப் புத்தகத்தைப் படிப்பது, மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

**தத்துவ ஞானக் குறிப்புகள்:** லெனினின் இந்த நூல் மாபெரும் தத்துவஞான அறிவுக் களஞ்சியமாகும். லெனின் இந்த நூலில் விரிவான பல பிரச்சனைகளைப் பரிசீலனை செய்கிறார் என்றால் அதற்குக் காரணம், இந்த நூலின் தன்மையே. அவர் பல்வேறு சமயங்களில், தத்துவஞான ஆராய்ச்சியில் ஆழ்ந்திருந்தபோது, பல்வேறு தத்துவஞான நூல்களிலிருந்து விரிவான பல குறிப்புக்களை எடுத்துள்ளார். லெனினின் ஆழ்ந்த விமர்சனக் குறிப்புகள், விளக்கங்கள், முடிவுகள், பொதுமைகள் ஆகியவை தனிப்பட்ட மதிப்புள்ளவை. 1914-16ல் அவர் தத்துவஞானப் பிரச்சனைகளைப் பற்றி மிகத் தீவிரமாக ஆராய்ச்சி செய்தார். லெனின் இந்த நூலில் பரிசீலனை செய்து, பகுத்தாராயாத எந்த ஒரு முக்கியமான தத்வது ஞானப் பிரச்சனையும் இல்லை.

பொருள் முதல்வாத முரண் தர்க்கத்தை மேலும் அபிவிருத்தி செய்யும் இந்த நூலின் மையமாக, முரண் தர்க்கம் சம்பந்தப்பட்ட பிரச்சனைகள் உள்ளன. முரண் தர்க்கத்தின் புறவயமான உட்பொருளை லெனின் நிர்ணயிக்கும் முறை, தத்துவரீதியில் பரந்த முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ''வஸ்துக்களின் முரண் தர்க்கம், கருத்துக்களின் முரண் தர்க்கத்தைத் தோற்றுவிக்கிறதே அன்றி, அதற்கு எதிர் மாறாக அல்ல'' என்பதை அவர் எடுத்துக் காட்டுகிறார்.‡ இயற்கையின் முரண்

‡லெனின், தொகுப்பு நூல்கள் பாகம்; 38, பக். 196.

தர்க்கத்தையும், சமூகத்தின் முரண் தர்க்கத்தையும், தத்துவ ஞானக் கருத்துக்களும், வகைகளும் பிரதிபலிக்கின்றன என்பதே இதன் பொருள். வஸ்துக்களின் முரண் தர்க்கத்தின், புறவய முரண் தர்க்கத்தின், பருப்பொருள் யதார்த்தத்தின் முரண் தர்க்கத்தின், பிரதிபலிப்பே கருத்துக்களின் முரண் தர்க்கம் (இதை அவர் தன்வய முரண் தர்க்கமென்று கூறுகிறார்) என்ற எங்கெல்ஸின் பிரசித்தி பெற்ற கருத்தை, இது மேலும் தூலமான முறையிலே சொல்கிறது.

முரண் தர்க்கம் பொருள் முதல்வாதம் இவற்றிடையே உள்ள பிரிக்க முடியாத ஐக்கியத்தை லெனின் மேலும் வெளிப்படுத்தி, பொருள் முதல் வாத முரண் தர்க்கந்தான் மார்க்ஸிஸத் தத்துவஞானத்தின் கவனத்திற்கு உரியது என்பதை வலியுறுத்துகிறார். ஹெகலை, அவரது முரண் தர்க்கத்தின், கருத்து முதல் வாதத் தன்மைக்காகக் கண்டித்து, லெனின், "பொருளிலிருந்து இயக்கத்திற்கு ஏற்படும் முரண் தர்க்க மாற்றத்தை, பொருளிலிருந்து தன்னறிவுக்கு ஏற்படும் மாற்றத்தை—குறிப்பாக இரண்டாவதை—முரண் தர்க்கத்தின் ஆதரவாளரான ஹெகலினால் புரிந்து கொள்ள முடியவில்லை. அந்த மறைபொருள் வாதியின் இந்தத் தவறை (பலஹீனத்தை?) மார்க்ஸ் திருத்தினார்", என்று எழுதுகிறார்.*

முரண் தர்க்கத்திற்கும், அப்பாலைக்குமுள்ள வேறுபாட்டை, இவ்விரு கருத்தோட்டங்களின் வளர்ச்சியைப் பற்றிப் பரிசீலனை செய்யும்போது, லெனின் ஆழ்ந்த உள்நோக்குடன் வெளிப்படுத்துகிறார். "முரண் தர்க்கம் எனும் பிரச்சனை பற்றி" என்ற பகுதியில் இது

* தொகுப்பு நூல்கள் பாகம் 38, பக். 283.

காணப்படுகிறது.⊗ இயற்கை நிகழ்வுகளது வளர்ச்சியின் அக மூலத்தானம் பற்றிய பிரச்சனையை இங்கு பகுத்தாயும் லெனின், இப்பிரச்சனை பற்றிய அவரது கண்ணோட்டம்தான், முரண் தர்க்கத்தையும். அப்பாலையையும் துல்லியமாகப் பிரித்து வைக்கிறது என்று எடுத்துக் காட்டுகிறார்.

பொருள் முதல்வாத முரண் தர்க்கத்தின் விதிகளுக்கு லெனின் மிகுந்த கவனம் அளிக்கிறார். நூல் முழுவதிலுமே, அவர் அவற்றைப் பற்றிக் கூறுகிறார். அடிப்படையான, மிக முக்கியமான, சில பிரச்சனைகளை மட்டுமே நாம் எடுத்துக் காட்டுவோம். எதிர் நிலைகளின் ஐக்கியமும், போராட்டமும் எனும் விதி, இந் நூலின் நடுநாயகமாக விளங்குகிறது. பல்வேறு விஞ்ஞானங்களது புள்ளி விவரங்களின் அடிப்படையில், இந்த விதியின் சர்வ வியாபகத் தன்மையை லெனின் வெளிப்படுத்துவதோடு, அக முரண்பாடுகள், உலக நிகழ்வுகள் அனைத்தின் தனிப்பட்ட தன்மையாக இருப்பதையும், அவற்றில் மாறுபட்ட அம்சங்களும், போக்குகளும், இருப்பதையும் எடுத்துக் காட்டுகிறார். "ஒரு முழுமையைப் பகுத்து, அதன் முரண்பட்ட பகுதிகளைப் புரிந்து கொள்வதுதான், முரண் தர்க்கத்தின் சாரம்", என்ற முக்கியமான முடிவை இங்கு அவர் எடுக்கிறார்.

லெனினது நூலின் இந்தப் பகுதியைப் படிக்கும் போது, மாறுபாடுகளது "ஐக்கியத்தின்" ஓரளவான தன்மை, "போராட்டத்தின்" முழு முதன்மையான தன்மை⊗ இவற்றைப் பற்றியும், வளர்ச்சியின் மூலத்

---

⊗லெனின் தொகுப்பு நூல்கள்; பாகம் 38 பக்கம் 359–63

* லெனின் தொகுப்பு நூல்கள் பாகம் 38. பக். 3 0.

தானமாக முரண்பாடுகள் இருக்கும் பிரச்சனையைப் பற்றியும்* வாசகர்கள் மேலும் விரிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

எண்ணியலான மாற்றங்கள் பண்பியலான மாற்றங்கள் ஆதல் எனும் விதியின் சாரத்தையும், இவ் விதியைப் பற்றிய, முரண் தர்க்கக் கண்ணோட்டத்திற்கும், அப்பாலைக் கண்ணோட்டத்திற்கும் இடையேயுள்ள வேறுபாட்டையும், மேற் கூறிய "முரண் தர்க்கப் பிரச்சனை பற்றி" என்ற பகுதியில் லெனின் விளக்குகிறார். "அதிகரிப்பாகவும், குறைப்பாகவும், அதாவது திரும்பத் திரும்ப நடைபெறும் நிகழ்ச்சியாகவே அப்பாலை, வளர்ச்சியைக் கருதுகிறது", என்று லெனின் கூறுகிறார்.† அது வளர்ச்சியின் மூலத்தானத்தைக் காண்பதில்லை.

ஆனால் முரண் தர்க்கம் எதிர் நிலைகளின் போராட்டமே, வளர்ச்சியின் மூலத்தானம் என்று குறிப்பிட்டுக் காட்டுவதன் மூலம், "பாய்ச்சல்களுக்கு, "தொடர்ச்சியின் முறிவுகளுக்கு" 'ஒன்று அதன் எதிர் நிலையாக மாறும் நிகழ்ச்சிக்கு', பழையது அழிந்து, புதியது வெளிப்படுவதற்கு' ஒரு காரணத்தைக் காட்டுகிறது"‡ பொருள் முதல் வாத முரண் தர்க்கத்தின் மிக முக்கியமான இரண்டு விதிகளுக்குமிடையே உள்ள தொடர்பை, அக ஒற்றுமையை லெனின் விரிவாக வெளிப்படுத்துகிறார் என்பது தெளிவாகத் தெரிகிறது.

பழைய பண்பு, புதியதாக மாறும் காலம், பாய்ச்சல் தான், என்பதைப் பற்றி ஆழ்ந்த கருத்துக்கள், இந்த நூலில் காணப்படுகின்றன. "பாய்ச்சல் இன்றி, படிப்

* லெனின், தொகுப்பு நூல்கள்; பாகம் 38 பக். 360

† ,, ,, ,, ,, ,,

‡ ,, ,, ,, ,, ,,

படியான தன்மை மட்டும் எதையும் விளக்குவதில்லை'', என்ற லெனினின் வாசகத்திற்குக் கவனம் அளிக்க வேண்டும்.* இதைப் பொறுத்துத்தான், "முரண் தர்க்க மாறுபாட்டை, முரண் தர்க்க மற்ற மாறுபாட்டிலிருந்து பிரித்துக் காட்டுவது எது'', என்ற லெனினின் கேள்வியையும், பாய்ச்சல், முரண்பாடு, படிப்படியான தன்மை, என்ற அவரது விடையையும் நாம் புரிந்துகொள்ள முடியும்.*

பொருள் முதல்வாத முரண் தர்க்கத்தின் இனங்களைப் பற்றிப் படிப்பதற்கு லெனினின் இந்த நூல், மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இந்த இனங்களின்—இவற்றை, புறவய உலகை அறிந்து கொள்வதில் பல நிலைகள் என்று லெனின் குறிப்பிடுகிறார்—தன்மையையும், முக்கியத்துவத்தையும் பற்றிய ஆழ்ந்த கருத்துக்களை இங்கு காணலாம்.

மனிதர்களால் அறிந்து கொள்ளப்படல், எனும் நிகழ்ச்சியின்போது, அந்த இனங்கள் எப்படி உண்டாக்கப்பட்டன, அவை விஞ்ஞானத்தின் வரலாற்றிலே எப்படி வளர்ச்சி அடைந்தன? அவற்றிற்குப் புறவயமான உட்பொருள் உண்டா? அவற்றிடையே உள்ள தொடர்பு என்ன? இந்தக் கேள்விகளுக்கு லெனினின் நூல் விரிவான விடைகளைத் தருகிறது. 'தர்க்க ரீதியான எண்களை, அவை ஒரு மூல சூத்திரத்தின் முக்கியத்துவத்தைப் பெறுவதற்காகப், பலகோடி முறைகள் திரும்பத்திரும்பக் கையாளும்படி மனிதனது தன்னறிவை, அவனது செயல்முறை நடவடிக்கைகள்

---

* லெனின் தொகுப்பு நூல்கள் பாகம் 38 – பக். 123

* ,, ,, ,, ,, பக். 284.

தூண்ட வேண்டியிருந்தது''*, என்று லெனின் எழுதுகிறார். உலகை அறிதல் எனும் வரலாற்றின் - மனிதர்களது செயல்முறையின் - விளைவே, முடிவே, அந்த இனங்கள் என்பது இதிலிருந்து தெளிவாகிறது. எனவே அவற்றிற்குப் புறவயமான ஒரு உட்பொருள் உண்டு. அவை மனிதனால், அவனது தன்னறிலிருந்து, எண்ணத்திலிருந்து, பெறப்படவில்லை. 'வசதி'க்காக அவை கற்பிதம் செய்து கொள்ளப்படவில்லை. இந்த சந்தர்ப்பத்தில் இனங்கள் பற்றிய கருத்து முதல்வாதக் கண்ணோட்டத்திற்கு லெனின் ஒரு விமர்சனம் தருகிறார்.*

தனிப்பட்ட இனங்களை ஆழ்ந்து, ஆராய லெனினின் இந்த நூல் நமக்கு உதவுகிறது. காரண காரியத் தொடர்பைப் பற்றிப் படிக்கும்போது ''சர்வ வியாபகமான பரஸ்பரத் தொடர்பின் ஒரு சிறுதுகளே காரணவாதம், என்ற முறையில்தான், சாதாரணமாக நாம் அதைப் புரிந்து கொள்கிறோம், ஆனால் அது புறவயமான, யதார்த்தத் தொடர்பின் ஒரு துகளே அன்றி தன்வயமான தொடர்பின் துகள் அல்ல''* என்ற லெனினின் கூற்றுக்குக் கவனம் அளிக்க வேண்டும்.

லெனினின் இந்தக் கருத்தை நாம் எப்படிப் புரிந்து கொள்வது? காரணத் தொடர்பு மிகவும் முக்கியமானது, அது சர்வ வியாபகமானது, உலகிலே அதற்கு அளவிறந்த முக்கியத்துவம் உண்டு. ஆனால் அது தான் தொடர்பின் ஒரே வகை என்று கருதக் கூடாது.

---

1 லெனினின் தொகுப்பு நூல்கள் பாகம். 38 பக். 190:

1 ,, ,, ,, ,, பக். 178, 206-0. 208-09.

1 ,, ,, ,, ,, பக். 160.

இயற்கை, சமூகம், இவற்றின் நிகழ்வுகளிடையேயுள்ள, சர்வவியாபகமான, பரஸ்பரத் தொடர்பு, காரணத் தொடர்பைக் காட்டிலும், விரிவானது, செழுமையானது. காரணத் தொடர்பு, சர்வவியாபகமான பரஸ்பரத் தொடர்பின் "சிறுதுகளே"யாகும்.

அவசியம், சுதந்திரம், ஆகிய இனங்களைப் பற்றிப் பரிசீலனை செய்யும்போது, மனிதனின் சுயேச்சையான, முடிவு கருதிச் செய்யப்படுகின்ற, செய்கைக்கு லெனின் தனிப்பட்ட கவனம் அளிக்கிறார்* "மனிதனுக்கு அவனது குறிக்கோள்கள், உலகுக்கு வெளியிலிருந்து எடுத்துக் கொள்ளப் பட்டவை போன்றும், உலகிலிருந்து சுயேச்சையாக இருப்பவை போன்றும் (சுதந்திரம்) காணப்பட்டாலும்."* அவனது குறிக்கோள்கள் விதியால் (Law) அவசியத்தால், நிர்ணயிக்கப்படுகின்றன. சமூக - அரசியல் நிகழ்வு என்ற முறையில் சுதந்திரத்தை அவர் பகுத்தாய்ந்திருப்பது, குறிப்பாக "சுதந்திரமான" முதலாளித்துவ சமூகம் பற்றிய பூர்ஷுவா கண்ணோட்டத்தை அவர் விமர்சித்திருப்பது, அளவிறந்த முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.*

முரண் தர்க்கத் தொடர்பை, உருவம், உட்பொருள் இவற்றின் ஒருமையை, லெனின் விளக்குகிறார். "உட்பொருள் இன்றியமையாதது. உட்பொருள், உருவடையச் செய்யப்படுகிறது. (உருவம்) ஏதோ ஒரு வழியில் உட்பொருளைச் சார்ந்துள்ளது......". என்று அவர் எழுதுகிறார்* உருவம், உட்பொருள் இவற்றின் ஒரு

---

* லெனின், தொகுப்பு நூல்கள் : பாகம். 38. பக். 187 188, 189.

* ,, ,, ,, ,, பக். 189.

* ,, ,, ,, ,, பக். 39.

* ,, ,, ,, ,, பக். 144.

மையை வெளிப்படுத்தும் போது, நாம் நிகழ்வுகளது சாரத்தின் ஆழ்ந்தஅடிப் பகுதிக்கே சென்று விடுகிறோம் என்பதை இது காட்டுகிறது.

சாரம், நிகழ்வுகள் என்ற இனங்களைப் பற்றிப் படிக்கும் போது, இவை பொருத்து கருத்து முதல் வாதத்தையும், அப்பாலையையும் பற்றி லெனின் செய்திருக்கும் விமரிசனத்தைத் தெளிவாகப் புரிந்துகொள்வது முக்கியமாகும்.* சாரம், நிகழ்வு இவற்றின் ஒருமையைப் பற்றிய லெனினின் பகுப்பாய்வும், "விதியும், சாரமும் ஒரே வகையான கருத்துக்கள் (ஒரே மட்டத்தைச் சேர்ந்தவை) அல்லது, ஒரே படித்தான கருத்துக்கள்; நிகழ்வுகள், உலகம் முதலியவற்றைப் பற்றி மனிதனது அறிவு ஆழமடைந்து வருவதை அவை வெளியிடுகின்றனர்" என்ற அவரது வாசகமும், மிகுந்த முக்கியத்துவம் உடையவை. சாரத்தின் ஒரு குறிப்பிட்ட அம்சத்தின் வெளிப்பாடே விதி, என்பது இதன் பொருள். நிகழ்வுகளின் சாரம், விஞ்ஞானத்தால் கண்டுபிடிக்கப் பட்ட தனிப்பட்ட விதிகளால் வெளியிடப் படுகிறது. விதியெனும் வகை, சாரத்தைத் தூலமாக்குகிறது.

சாரம், தோற்றம் (உருவொற்றுமை) ஆகிய இனங்களையும், லெனினின் இந்த நூலில் வாசகர்கள் காணலாம். அதன் (தோற்றத்தின்) பெயரே, குறிப்பிட்டுக் காட்டுவது போல, தோற்றம் (உருவொற்றுமை) யதார்த்தத்தின் தனித்தனி அம்சங்களின், சாரத்தின், வெளிப்பாடேயாகும். மனிதனது புலன் உணர்வால் உடனடியாக அறியப்படுவது இது. எனவே உருவொற்றுமையில் தன்வயத்தின் சாயை ஒன்று உண்டு.

---

1 லெனின் தொகுப்பு நூல்கள்: பாகம் 38: பக்: 92, 133-134

1 ,, ,, ,, ,, பக்: 152

ஆனால் லெனின் வலியுறுத்துவதுபோல இதுவும், ''அதி லுள்ள சாரத்தின் பிரதிபலிப்பே''யாகும்.⊗

'தத்துவஞானக் குறிப்பேடுகள்'' எனும் லெனினின் நூலில் கையாளப்படும் சில பிரச்சனைகளையே நாம் பரிசீலனை செய்துள்ளோம். எனினும், மார்க்ஸிஸ-லெனினிஸ தத்துவஞானத்தை ஆழ்ந்து படிக்க அவை அளவிறந்த முக்கியத்துவம் வாய்ந்தவை என்பது தெளிவாகிறது.

**போராட்ட ரீதியான பொருள் முதல்வாதத்தின் முக்கியத்துவம் பற்றி**

இதுதான் லெனின் எழுதிய கடைசித் தத்துவஞான நூல். அப்பொழுதுதான் ஆரம்பிக்கப் பட்டிருந்த மார்க்ஸிப் பதாகையின் கீழ் (போத் ஸ்னமெனம் மார்க்ஸிஸமா) என்ற பத்திரிகையின் ஆசிரியர் குழுவிற்கு எழுதிய கடிதத்தின் வடிவில் அது 1922ல் வெளியிடப் பட்டது. இது லெனினின் தத்துவஞான உயில் என்று பொருத்தமாகவே கூறப்பட்டுள்ளது.

இந்த நூல் போராட்ட ரீதியான பொருள் முதல் வாதத்தின் அற்புத விளக்கம், உண்மையான லெனினிஸ ஒருதலைச் சார்புக்கு ஒரு முன்மாதிரி, என்பதை நூலின் தலைப்பே காட்டுகிறது. ''மதபோதனை வாதத்தின் பட்டம் பெற்ற கைக்கூலிகளை'', அவர்கள் எந்த மாறு வேஷத்திற்குள் மறைந்திருந்த போதிலும், இரக்கமின்றி அம்பலப்படுத்த வேண்டுமென்ற அறைகூவல் நூல் முழுவதிலும் இழையோடுகிறது. பிற்போக்கான பூர்ஷுவா தத்துவஞான எதிர்ப்புப் போராட்டத்திற்கான, இந்தப் போராட்டத் திட்டம், இன்று மேலைநாடுகளில் நாகரீகமாகியுள்ள, பிற்போக்குத் தத்துவ

⊗லெனின், தொகுப்பு நூல்கள்; பாகம் 38 பக்: 133

ஞானப் போக்குகளை அம்பலப்படுத்துவதில் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததாகும். அயர்வற்று நாத்திகப் பிரச்சாரத்தைச் செய்தும், சோர்வற்று நாத்திகப் போராட்டத்தை நடத்தியும், போராட்ட ஆர்வமிக்க பொருள் முதல் வாதத்தின் பத்திரிகையாக விளங்க வேண்டிய பணியை, லெனின் அப்பத்திரிகைக்கு அளித்தார்.‡ மதத்தில் நம்பிக்கையுள்ளவர்களை "அவர்களது ஆர்வத்தைத் தூண்டக்கூடிய வகையிலும் பல்வேறு கோணங்களிலிருந்தும், பல்வேறு முறைகளாலும், அவர்களை அசைத்து, அவர்களை மதமயக்கத்திலிருந்து எழுப்பும் வகையிலும் அவர்களைப் பல வழிகளிலும் அணுகவேண்டும்." $ என்ற பிரசித்திபெற்ற வாசகத்தை இந்தக் கட்டுரையில்தான் லெனின் முன் வைத்தார்.

பூர்ஷுவா "சுதந்திரத்தையும்", "ஜனநாயகத்தையும்" பற்றி குறிப்பிடத்தக்க ஒரு விமர்சனத்தை லெனின் இங்கு அளிக்கிறார், "எதை போதிப்பது பூர்ஷுவாக்களுக்கு சாதகமாயிருக்குமோ அதை,—அதாவது, மிகப் பிற்போக்கான கருத்துக்கள், மதம், குழப்பவாதம், சுரண்டுபவர்களுக்கு ஆதரவான வாதம் ஆகியவற்றை—போதிப்பதற்கான சுதந்திரமே அன்றி அது வேறொன்றுமில்லை"* என்று அவர் கூறுகிறார்.

தத்துவார்த்திகளுக்கும் இயற்கை விஞ்ஞானிகளுக்கும் இடையே போராட்ட ஆர்வமிக்க கூட்டைத் தோற்றுவிக்கவேண்டிய பணியையும் லெனின்

---

1 லெனின்: மார்க்ஸ், எங்கெல்ஸ், மார்க்ஸியம், பக்: 571 காண்க.

1 ,, ,, ,, ,, பக்: 572

1 ,, ,, ,, ,, பக்: 175

முன்வைக்கிறார். "இயற்கை விஞ்ஞானி ஒரு நவீனப் பொருள் முதல்வாதியாக இருக்கவேண்டும். மார்க்ஸினால் பிரதிநிதித்துவப் படுத்தப்படும் பொருள் முதல் வாதத்தை, உணர்ந்து பின்பற்றுபவராக, அதாவது முரண்தர்க்கப் பொருள் முதல் வாதியாக இருக்கவேண்டும்"[1] என்று அவர் எழுதுகிறார். தற்கால இயற்கை விஞ்ஞானத்தின் புள்ளி விவரங்களைத் தத்துவஞான ரீதியில் பொதுமைப் படுத்துவதற்கு, லெனினின் இந்த அறைகூவல் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இந்த சந்தர்ப்பத்தில், வாசகர்களுக்கு ஏற்கனவே தெரிந்த ஒரு கருத்தை லெனின் மீண்டும் வலியுறுத்துகிறார். அதாவது: "தற்கால இயற்கை விஞ்ஞானத்தில் நடைபெறும், இந்தத் தீவிரமான கொந்தளிப்புத்தான் அனேக சந்தர்ப்பங்களில் பிற்போக்குத் தத்துவஞான பாணிகளையும் சிறு பாணிகளையும், போக்குகளையும், சிறு போக்குகளையும் தோற்றுவிக்கிறது." மார்க்ஸிஸ தத்துவார்த்திகளுக்கும், இயற்கை விஞ்ஞானிகளுக்கு மிடையே ஒரு கூட்டு இன்றியமையாதது ஆகும். ஏனெனில் லெனின் எடுத்துக் காட்டியதுபோல, "ஒரு உறுதியான தத்துவஞான அஸ்திவாரமின்றி, எந்த இயற்கை விஞ்ஞானமும், எந்தப் பொருள் முதல்வாதமும், பூர்ஷுவாக் கருத்துக்களின் தாக்குதலுக்கும், பூர்ஷுவா கண்ணோட்டத்தின் புத்துயிர்ப்புக்கும் எதிரான போராட்டத்தைச் சமாளிக்க முடியாது."

லெனினது கட்டளைகளால் வழிநடத்தப்பட்டு, சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சி, இயற்கை விஞ்ஞானத்தின் தத்துவஞானப் பிரச்சனைகளை விளக்குவதை ஒரு அவசரக் கடமையாகத் தனது திட்டத்தில் முன் வைத்

---

1 லெனின்: மார்க்ஸ், எங்கெல்ஸ், மார்க்ஸிஸம் பக்: 176

துள்ளது. லெனினது கருத்துக்கள் சரியானவைதான் என்பதை நிகழ்ச்சிகள் முழுமையாக உறுதிப்படுத்தி விட்டன. இன்றைய சித்தாந்தப் போராட்டத்தில் அவை துருவதாரகையாகத் திகழ்கின்றன.

நமது உரைகளின் முடிவிற்கு நாம் வந்து விட்டோம். பல பல முக்கியமான, சில சமயங்களில் சிக்கலான, ஆனால் எந்நேரமும் சுவையானபிரச்சினைகளை நாம் ஆராய்ந்தோம். அவற்றினின்றும் நீங்கள் கற்றுக் கொண்ட தென்ன? உங்கள் பார்வை வீச்சை அவை விரிவாக்கியுள்ளனவா? மனித எண்ணத்தின் சாதனைகள் உங்கள் சிந்தனையை வளமாக்கியுள்ளனவா? 'ஆம்' என்பதை நீங்கள் ஒப்புக் கொள்வீர்கள். எனினும், மார்க்சிஸ்டு தத்துவார்த்தத்தை கற்பதன் பொருள் இதில் மட்டுமே அடங்கி விடவில்லை.

நாம் ஏற்கனவே கூறியதைப் போன்று, மார்க்சிஸ்டுத் தத்துவார்த்தம், வாழ்க்கையில், யதார்த்தத்தில், நடைமுறையில் வேரோடி யுள்ளது. நன்கு போதிக்கப்பட்ட திசைகாட்டும் கருவி அது; தினசரி வாழ்விலும், யதார்த்தத்திலும் சிறந்த வழிகாட்டி.

———

## கலைச் சொற்கள்

இந்நூலில் உபயோகித்துள்ள சில அரும் பதங்களுக்கான ஆங்கிலச் சொற்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :

| | | |
|---|---|---|
| அப்பாலைத் தத்துவம் | — | Metaphysics. |
| அனுமானம் | — | Hypothesis |
| அழிவின்மை விதி | — | Law of conservation |
| அராஜக-தொழிலாளர் ஆட்சி முறை | — | Anarcho Syndicalism |
| அறியொண்ணாமைக் கொள்கைவாதிகள் | — | Agnostics |
| அறிதல் | — | Cognition |
| அனுபவ வாதம் | — | Empiricism |
| அளவு | — | Measure |
| ஆன்மீக | — | Spiritual |
| ஆக்கப்பண்பு | — | Creative nature |
| ஆன்மா | — | Soul |
| இயக்கவியல் | — | Dynamics |
| இருபொருள் வாதி (துவைதி) | — | Dualist |
| இன்மை வாதம் | — | Nihilism |
| இருத்தல் | — | Existence |
| இறவாமை | — | Immortality |
| இயற்கைத் தேர்வு | — | Natural Selection |
| உள்ளடக்கம் / உட்பொருள் | — | Content |

உருவ அளவை முரண்பாடுகள் — Formally logical Contradictions
உரு — Form
ஊகித்தல் — Deduction
ஊழ்வலிக் கொள்கை — Fatalism
எண்ணியலான — Quantitative
எதிர்நிலைகள் — Opposites
ஒருதலைச்சார்பு — Partisanship
ஒருமை அமைப்பு — Unitary system
ஒழுங்கமைப்புடைய பொருள் — Organised matter
ஒன்றேயான தன்மை — Identity
ஒருமை — Singular
கருத்து — Idea
கருத்து முதல்வாதம் — Idealism
கற்பனை சமதர்மம் — Utopian Socialism
கதி — Velocity
காரணம் — Cause
காரணவாதம் — Causality
காரியம் — Effect
காரியவாதம் — Pragmatism
குழப்பவாதம் — Obscurantism
குறிப்பிட்டவை — Particular
குறிக்கோள் தன்மை — Purposiveness
குறிக் கணக்கு — Algebra
கொச்சை — Vulgar
சந்தேகவாதம் — Scepticism
சர்வ வியாபகமான — Universal
சாத்தியப்பாடு — Possibility
சார்புச் சொற்கள் — Relative terms
சாராம்சம் — Essence
சார்புநிலை வாதிகள் — Relativists
சார்புக் கோட்பாடு — Theory of relativity
சித்தாந்தம் — Ideology

| | | |
|---|---|---|
| சிந்தனுர்த்தம் | — | Contemplative nature |
| சிந்தனையின் பருப்பொருள் கூடு | — | Material envelope of thought |
| சித்திர எழுத்துக்கள் | — | Hieroglyphic writings |
| சீர்திருத்தவாதம் | — | Reformism |
| சுருள் வளர்ச்சி | — | Development in Spiral |
| செயலாராய்ச்சி | — | Empirical |
| தன்னிச்சைச் செயல் கொள்கை | — | Voluntarism |
| தன்வயமாதல் | — | Assimilation |
| தன்னிச்சை இணைப்பு வாதம் | — | Eclecticism |
| தற்செயல் நிகழ்ச்சிகள் | — | Accidents |
| தனிவாதம் | — | Solipsism |
| தத்துவஞானம் | — | Philosophy |
| தத்துவம், கோட்பாடு | — | Theory |
| தன்னுணர்வு | — | Consciousness |
| தன்வயநிலை | — | Subjective |
| திருத்தல் வாதம் | — | Revisionism |
| திரிபுகள் | — | Distortions |
| திணிவு வேகம் | — | Momentum |
| தூண்டுதல் | — | Induction |
| தூண்டல் | — | Impulse |
| நடைமுறை | — | Practice |
| நாத்திகம் | — | Atheism |
| நிகழ்ச்சி | — | Events, Process |
| நிகழ்வு | — | Phenomenon |
| நிலப்பிரபுத்துவம் | — | Feudalism |
| நியதிவாதிகள் | — | Determinists |
| நியதியின்மை வாதம் | — | Indeterminism |
| நுண்துகழ்கள் | — | Microparticles |
| நெகிழ்வு | — | Flexisibility |
| நோக்கவியல் | — | Teleological |
| பலபடித்தான | — | Heterogenous |

| | | |
|---|---|---|
| பகைமையுள்ள | — | Antagonistic |
| பண்ணை அடிமை முறை | — | Serfdom |
| பண்பியலான | — | Qualitative |
| பண்பியலான கருத்து | — | Abstract thought |
| படிப்படியான தன்மை | — | Gradualness |
| பரவயமாதல் | — | Dissimilation |
| பரிணமம் | — | Evolution |
| பண்டம், வஸ்து | — | Matter |
| பகுத்தறிவு வாதம் | — | Rationalism |
| பகட்டு | — | Vanity |
| பாட்டாளி வர்க்கம் | — | Proletariat |
| பாய்ச்சல்கள் | — | Leaps |
| புறணி | — | Cortex |
| புள்ளிவிவர இயல் | — | Statistical |
| புலன் உணர்வுவாதம் | — | Sensualism |
| புறத்தோற்றம் | — | Appearance |
| புறவயமாக | — | Objective |
| பொருளாயத | — | Material |
| பொருள் முதல்வாதம் | — | Materialism |
| போலிவாதம் | — | Sophistry |
| போலி மனிதாபிமானம் | — | Pseudo humanism |
| மறுவினை | — | Reflex |
| மறுப்பு | — | Negation |
| மறைபொருள்வாதம் | — | Mysticism |
| மதம் | — | Religion |
| மதபோதனவாதம் | — | Clericalism |
| மானிடவாதம் | — | Anthropologism |
| முரண்தர்க்கம் | — | Dialectics |
| முதலாளித்துவம் | — | Capitalism |
| முறை | — | Method |
| முழுமுதற் கருத்து | — | Absolute idea |
| மூட நம்பிக்கை | - | Superstition |

| | | |
|---|---|---|
| மெய் நடப்பு | — | Actuality |
| யாந்திரீக | — | Mechanical |
| வகைகள் | — | Categories |
| வறட்டுத் தத்துவ வாதம் | — | Dogmatism |
| வறட்டுத் தத்துவம் | — | Dogmas |

## பிழை திருத்தம்

பக். 209: உபதலைப்பில் ''நிலையியல்'' என்றிருப்பதை ''புள்ளி விவர இயல்'' என வாசிக்கவும்.

## எமது சிறந்த நூல்

எல். லியான்டியாவ் எழுதிய

# மார்க்ஸீய அரசியல்
# பொருளாதாரத்தின் அடிப்படைகள்

இந்நூல் அரசியல் பொருளாதார அறிவைச் சிறந்த முறையில் வழங்குகிறது. இந்நூலில், சமூக விஞ்ஞானத்தில் அரசியல் பொருளாதாரம் என்பது எத்தன்மையைச் சார்ந்தது? உற்பத்தி, சமுதாய வாழ்க்கையில் எந்த இடத்தை வகிக்கிறது. உயிரின இயக்க இயலில் டார்வின் உண்டாக்கிய புரட்சியைப் போல் சமூக வியலில் மார்க்ஸீயம் உண்டாக்கிய புரட்சியின் சாரம் என்ன? என்பன போன்ற அரிய விஞ்ஞான கருத்துக்கள் எளிய முறையில் விளக்கப்பட்டுள்ளன. அனைவரும் படித்துப் பயனடைய வேண்டிய நூல்.

விலை ரூ. 1-00

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.
சென்னை - 2

எமது சிறந்த நூல்

எல். லியாண்டியாவ் எழுதிய

## மார்க்ஸீய அரசியல் பொருளாதாரத்தின் அடிப்படைகள்

இந்நூல் அரசியல் பொருளாதார அறிவைச் சிறந்த முறையில் வழங்குகிறது. இந்நூலில், சமூக விஞ்ஞானத்தில் அரசியல் பொருளாதாரம் என்பது எத்தன்மையைச் சார்ந்தது? உற்பத்தி, சமுதாய வாழ்க்கையில் எந்த இடத்தை வகிக்கிறது. உயிரின இயக்க இயலில் டார்வின் உண்டாக்கிய புரட்சியைப்போல் சமூக வியலில் மார்க்ஸீயம் உண்டாக்கிய புரட்சியின் சாரம் என்ன? என்பன போன்ற அரிய விஞ்ஞான கருத்துக்கள் எளிய முறையில் விளக்கப்பட்டுள்ளன. அனைவரும் படித்துப் பயனடைய வேண்டிய நூல்.

விலை ரூ. 1-00

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிட்.,
சென்னை-2

Jacket printed at the
Asian Printers, Madras-5.